

த.ந.உலகநாதர்



# உண்மை விளக்கம்

- மனவாசகம் கடந்தார்



உரை விளக்கம்

தவத்திரு
## தேமொழியார் சுவாமிகள்

ஓம்



திருசிற்றம்பலம்

திருவதிகை மனவாசகம் கடந்த தேவநாயனார்
அருளிய

# உண்மை விளக்கம்




தெளிவுரை
தவத்திரு தேமொழியார் சுவாமிகள்
அவர்கள்



வெளியீடு:
அருட்பண்ணை,
எழும்பூர் இல்லம், 91, கெங்கு சாலைச்சந்து,
எழும்பூர்,
சென்னை 600 008.
தொலைபேசி எண் 826 55 63

# நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **''உண்மை விளக்கம்''** |
| பதிப்புரிமை | : | **அருட்பண்ணை அறக்கட்டளை** |
| ஆசிரியர் | : | **தவத்திரு தேமொழியார் சுவாமிகள்** |
| மொழி | : | தமிழ் |
| முதற்பதிப்பு | : | கார்த்திகை, (திருவள்ளுவர் ஆண்டு) 2027 (நவம்பர் 1996) |
| வெளியீடு | : | **''அருட்பண்ணை அறக்கட்டளை''** 'எழும்பூர் இல்லம்' 91, கெங்கு சாலைச்சந்து எழும்பூர், சென்னை – 600 008. |
| எழுத்து | : | 12 புள்ளி |
| பக்கங்கள் | : | 378 |
| தாள் | : | 10.2 kg |
| நூல்கட்டு | : | 1600 |
| அளவு | : | கிரவுன் சைஸ் |
| நூல் விலை | : | 75/– |
| லேசர் அச்சு | : | **அருள் வேல் அச்சகம்** பழவந்தாங்கல், சென்னை – 600 114. போன் : 234 2854 |
| அச்சிட்டோர் | : | **அருள் வேல் அச்சகம்** பழவந்தாங்கல், சென்னை – 600 114. போன் : 234 2854 |

72-5



## அருட்பண்ணை நூல்கள் விற்பனைக்குக் கிடைக்குமிடங்கள்

**R. சீனிவாசன்**
15, 2 வது குறுக்குத் தெரு
பாரதிதாச்சன் நகர், பாண்டி – 605 004

**M. இரவிச்சந்திரன் பி.ஏ.பி.எல்.,**
9, A.L.C. காம்பஸ்
கடலூர் – 605 004. போன்: 210 10

**டாக்டர் P.M. பாஸ்கரன், எம்.எஸ்.,**
ஜே.எம் மருத்துவமனை
5, அல்லித்துறை சாலை
திருச்சி – 620 017. போன்: 25369

**T.A. சண்முகம்**
செயலாளர், அருள்ஞானப் பெருவெளி மன்றம
20, ஒற்றைவாடை பிராமணர் தெரு
திருவத்திபுரம் – 604 407.

**த. புண்ணியகோட்டி**
443, அறிஞர் அண்ணாநகர், திருவத்திபுரம் – 604 407.

**அருள் ஞானப் பெருவெளி அறக்கட்டளை**
32, தேவதாஸ் தெரு, வேதாசலம் நகர், செங்கற்பட்டு.

**ந.கணேசன்**
செயலாளர், சைதைத் தமிழ்ச்சங்கம்
77, சுப்பிரமணிய முதலி தெரு
சைதாப்பேட்டை, சென்னை – 600 015.

**டாக்டர்.மா.பழனிவேலு**
செயலாளர், ஸ்ரீபால சைவ சுத்த சன்மார்க்க சங்கம்
19, கலவை தெரு, சிந்தாதிரிப்பேட்டைசென்னை – 600 002.

# படையல்

அத்தன் அருளார்அருள்ஞான
அன்பர் சூழும் பெருவெளிக்குத்
தக்கத் தலைமைத் தாமேற்றுத்
தகவாம் பணிகள் பலபுரிந்தோர்
முத்து லிங்க மாமுனியாம்
முழுநீ றணிந்த முழுமணிக்குச்
சித்தம் விழைந்த இந்நூலைச்
செம்மை மனத்தால் படைக்கின்றோம்.

சிந்தைச் சிவமாய் செழித்தொளிறும்
சீரார் முத்து லிங்கரெனும்
முந்தை மரபோர் முழுமணியாம்
முழுநீ றணிந்த முழுமனிதர்
அந்த மனிதர் விழைந்தேங்கும்
அழகார் உண்மை விளக்கமிது
பந்தம் மிகுந்த கிருஷ்ணமூர்த்தி
பதிப்பால் படையல் செய்கின்றோம்.

நயப்பார் நயக்கும் நயமெல்லாம்
நாளும் வழங்கும் கயப்பாக்கம்
வயலார் குடியின் பெருவாழ்வாம்
வண்மை மிகுந்த முத்துலிங்கர்
முயல்வார்க் கெல்லாம் முதுகெலும்பாம்
மூத்த அறிவால் முன்நினைத்த
உயர்வாம் உண்மை விளக்கமிதே
உளத்தால் படைத்து மகிழ்கின்றோம்.

# 5

# உரையின் நோக்கம்

ஆசிரியர்

**உண்மை விளக்கம்** என்பது சைவசித்தாந்த சாத்திரங்களுள் ஒன்று. முழுதும் பொய் அகன்ற மெய். புனிதர் வாயிலாக வெளிப்பட்டது. மெய்ப்பொருளால் விளக்கப்பட்டது.

**உண்மை** என்பது போதம். **விளக்கம்** என்பது ஆனந்தம். அதை வெளியிட்டவர் **மனவாசகம் கடந்த தேவநாயனார்.** வெளியிடச் செய்தவர் மெய்கண்டார். மெய்கண்டார் உரைத்த நூலை மெய்கண்ட நூல் என்பர். அவை பதினான்கு. அவற்றுள் ஒன்று **'உண்மை விளக்கம்'.**

உள்ள உண்மை ஒன்றுதான். அது விளங்கும் வாயில்கள் பற்பல. அவற்றை விளங்கிக் கொள்ளும் பெரியோர் ஒரு சிலர். அவர்களும் பெற்ற கல்வி அறிவினால் மட்டும் உணர இயலாதது.

உண்மையை உரைக்க முயல்வோர்க்குத் திருவருள், அகத்தும் புறத்தும் நின்று உணர்த்தும். உணர்த்தும் உணர்வை உணரும் வல்லமை பெரியோர்க்கே உண்டு.

வல்லமையைத் தருவது அகப்புறத்தூய்மையாகும். புறத்தூய்மையாவது, உயிர்களிடத்து இரக்கம் கொள்வது. அகத்தூய்மையாவது தம் ஒத்த மக்கள் சிறப்புறத் தொண்டாற்றுவது. இத்தகுதி பெரியோர் பலருள்ளும் அமையும். உணர்ந்த ஒன்றை உரைக்கும் தகுதி சிலருக்கே அமையும்.

தகுதிகள் கல்வி மாட்சியாலும், ஒழுக்க மாட்சியாலும், பிறவி மாட்சியாலும் முதிர்ந்து மோனத்தில் முகிழ்வோர்க்கே அமையும். இவர்களை, **'அறிவறிந்த மூத்த அறிவுடையார்'** என்றது தமிழ் மறை. அந்த அறிவும் யாதொரு காரணம் பற்றியும் மகிழ்ச்சியில் மலராமலும், இகழ்ச்சியில் கூம்பாமலும் நிற்பதாகும். இதை **மலர்தலும், கூம்பலும் இல்லது அறிவு** என்றது தமிழ்மறை.

திருவருள் முன் நின்று உணர்த்த உணர்ந்த அனுபவங்களை உணர்ந்து உய்ய வழிகாட்டியாக வடித்து கொடுத்தனர். அவற்றைப் பொதுவாக நூல்கள் என்பர்.

மறைநூல், நிறைநூல், வரைநூல், கரைநூல் என நான்கு வகையாகப் பகுக்கலாம். **மறைநூல்** பயில்வோரின் மன மாசு அகற்றி ஒளி விளங்கச் செய்யும், வேட்கையை முழுவதும் தீர்க்கும். உறுதிப்பொருள் நான்கினை விளக்கும். **நிறைநூல்** எண்ணுவோர் எண்ணத்தில் ஏற்றம் தரும்; புலன்களை நல்வழி நிறுத்தும்; புனிதர் குலம் சேர்ப்பிக்கும்; அரும்பொருள் ஐந்தையும் விளக்கும். **வரை நூல்** முனைப்பை அடக்கும்; மூதறிவில் மூகிழச் செய்யும், நேய நிலையில் நிறுத்தும்; மும்மலத் தன்மையை விளக்கும். இவை இயல், அழுக்கு, நியதி என் மூன்றாகும். **கரைநூல்** மனிதர் குலத்தின் மயக்கத்தையும், தயக்கத்தையும் விளக்கும். அவற்றுள் அகப்பட்டு அல்லல் எய்தும் உயிர்கள் விடுபட முயற்சிக்கும் போது வழிகாட்டி விளக்கும்.

சுருங்கக் கூறின் **மறை** மனத் தூய்மையில் விளங்கும். **நிறை** புலன் தூய்மையில் விளங்கும். **வரை** உயிர்த் தூய்மையில் விளங்கும் **கரை** உணர்வுத் தூய்மையில் விளங்கும்.

இந்நூலில் இவை அனைத்தும் உணர்வோர் உணரும் வண்ணம் மிக நுட்பமாக் வீரி விளங்கி திகழ்கின்றன. இதை ஆன்ம தத்துவம், வித்யா தத்துவம், சுத்த தத்துவம், நடன தத்துவம் என விளக்கப்பட்டுள்ளன.

வாயில்கள், அறம், பொருள், இன்பம், வீடு என நான்கு.

எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என அரும் பொருள் ஐந்து. அரும் பொருளாவன:

மண், நீர், தீ, கால், வானம் என்பன இயற்கை. அது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி எனப் பயன்படும் பாங்கில் அமைந்தது. அதன் துணையால் இயற்கையை பயன் கொள்ளும் பாங்கில் அமைந்தவை மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவாகும்.

பயன்படும் வகையில் இயற்கையும், பயன்கொள்ளும் வகையில் புலன்களும், வழி நடத்தும் வகையில் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என அமைந்ததால் அரும்பொருளென விதந்து கூறினர்.

புறப்புறம் என்பது இயற்கை. புறம் என்பது உடம்பு. இதற்கிடையில் நின்று நலம்புரியும் காரணத்தால் தீவகமாக அரும்பொருள் ஐந்து என்றனர்.

இவ் உண்மைகளை ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு ஆண்டவன் ஒளி நிலை அடைந்தார்க்கு வெளியிட்டான். ஒளியில் திகழும் ஆச்சாரியன் உலகுக்கு வெளியிட்டான். இந்த உரையின் நோக்கமும் அதுவே. **அருட்பண்ணையின்** நோக்கமும் அதுவே.

முன்னவன் நோக்கத்தின் படியே அடியேன் உரையை ஒலிநாடாவில் பதிவு செய்தவர் அன்பர் திரு.ஏ.பாலசுந்தரம். அதைத் தட்டச்சு செய்தவர். அன்புக்குரிய திரு. ஆர். கோவிந்தராஜன். அப்படியை சரிப்படுத்தி முறைப்படுத்தி, ஒழுங்கு படுத்தியவர் புலவர் திரு.மா.அமிர்தலிங்கனார். இவர்கள் பெரும் பணியை பயன்படுத்தி **அருட்பண்ணை** அரிதான இந்நூலை வெளியிடுகிறது. இப்பணிகள் நடைபெறப் பெரிதும் உறுதுணையாக அமைந்த இடம் சென்னை, சிந்தாதிரிப்பேட்டை ஸ்ரீபால சைவசுத்த சன்மார்க்க சங்கம். இவர்கள் அனைவருக்கும் வளமும், நலமும் பெருக, வாழ்வாங்கு வாழ அம்பலவாணப் பெருமானின் அடிமலர் பற்றி வணங்குகின்றேன், வாழ்த்துகின்றேன்.

இங்ஙனம்
**தேமொழியார்**

# 8

# அருளுரை மாட்சி

செந்தமிழ் மக்களின் சிந்தனைத் தெளிவிலே பிறந்தது சைவ சித்தாந்தம். சமயங்கள் என்ற வகையில் சைவம் பிற சமயங்களோடு ஒருங்கு வைத்து எண்ணப்படுவதாயினும் அது சமயங்கடந்த, சமரச நிலையினை உடையது. உலகியலுக்கும், அறிவியலுக்கும் ஒத்து வருவது.

சைவத்தின் உயிர்நாடியாகத் திகழ்வன திருமுறைகளே. திருமுறைகளில் விரவியுள்ள புராண இலக்கியப் புனைவுகளைத் தவிர்த்து அடிப்படையான உண்மைகளை மட்டும் எடுத்துரைப்பனவே மெய்கண்ட நூல்கள். மெய்கண்ட நூற்பொருளை ஆராய்ந்தறிய முற்படுவார்க்கு ஒரு நுழைவாயில் எனத் திகழ்வது **உண்மைவிளக்கம்.**

ஆறாறு தத்துவங்களைப் பற்றிய விரிவான விளக்கமே இந்நூலின் தனிச்சிறப்பு. ஐந்தெழுத்துப் பற்றியும், இறைவனின் அருட்கருத்துப் பற்றியும் உண்மை விளக்கம் உரைக்கின்ற செய்திகள் திருமந்திரத்திலும் இடம்பெற்ற செய்திகளே. திருமந்திரப் பாடல்களும், உண்மை விளக்கப் பாடல்களும் பெரிதும் சொற்பொருள் ஒற்றுமை உடையன எனினும், உண்மை விளக்கப் பாடல்களே பலராலும் பல இடங்களிலும் மேற்கோளாகக் காட்டப் பெறும் சுருக்கமும், எளிமையும் உடையனவாகத் திகழ்கின்றன.

இங்ஙனம் மேற்கண்ட நூல்களுள் தனக்கென ஒரு தனியிடம் பெற்றுத் திகழும் உண்மை விளக்கம் பற்றித் தவத்திரு தேமொழியார் சுவாமிகள் தொடர்ந்து நிகழ்த்திய விரிவுரையே இப்போது நூல் உருவில் திகழ்கின்றது. தவத்திரு தேமொழியார் சுவாமிகள் திருவருள் நலம் கனிந்த சிந்தனையாளர். தேமொழியார் என்ற பெயருக்கு ஏற்பவே அவர்களுடைய அருள் மொழிகளும், சிந்தைக்கினிய, செவிக்கினிய சீர்மை உடையன. ஒளிநெறி காட்டும் தெளிவினை உடையன; ஈர்த்தெம்மை ஆட்கொள்ளும் ஏற்றம் உடையன. அவர்கள் விரிவுரை வித்தகராக மட்டும் விளங்காமல் சார்ந்தாரை நன்னெறிப்படுத்தும் ஆசிரியத் தலைமை ஏற்றுத் திகழ்பவர்கள். அருள்மொழிகள் கனிந்து, கனிந்து ஊற்றெடுக்க ஆனந்தத்

தவநிலையில் திகழும் அவர்கள், தம்மை மறந்து அருளமுதம் உண்டு தேக்கும் தகவுடையார்.

வடற்பெருவெளியினை உருவாக்கிய வள்ளற் பெருமான் அடிச்சுவட்டில், வடதிருச்சிற்றம்பலப் பெருவெளியை அறிமுகப்படுத்திய தவத்திரு அழகரடிகளாரைப் போன்றே, **அருள்ஞானப் பெருவெளி** என்ற பேரமைப்பினை உருவாக்கிய பெருமைக்கும், பேரருளுக்கும் உரியவர்கள். திருக்கூட்டம் ஒன்றையும் உருவாக்கியுள்ளார்கள். முன்னோர் மொழிப் பொருளைப் பொன்னே போல் போற்றிக் கொள்ளும் மரபிலிருந்து சிறிதும் மாறுபடாமலேயே, அந்த அடித்தளத்திலேயே பல புதிய முடிபுகளை ஆராய்ந்து வழங்குவது அவர்களது தனித்தன்மை. அவர்களது உண்மை விளக்கப் பேருரையும் பல புதிய விளக்கங்களுடன் திகழ்கின்றது. ஆங்காங்கு வரும் எடுத்துக் காட்டுகளால் அஃது ஒரு வாழ்வியல் விளக்கமாகவே மலர்ந்துள்ளது.

வேதம் பசு, ஆகமம் பால், திருமுறைகள் நெய், மெய்கண்டார் செய்த தமிழ் நெய்யின் உள்ளூறு சுவை என்று போற்றுவது மரபு. ஆனால் மெய்கண்டாரோ, காலத்தையும், ஞாலத்தையும் வெல்லும் பொது நூலைச் செய்தவர். கால இடஎல்லை கடந்த அடிப்படையான உண்மைகளை மட்டும் கூறியவர். எனவே வேதம், ஆகமம் என்ற பெயர்களைக் கூறாது, 'என்மனார் புலவர்'; இசைக்குமன் உலகே' என நூல் வழக்கு, உலக வழக்கு, ஆகியவற்றை மட்டுமே குறிப்பிட்டுச் செல்கின்றார். ஆனால் மனவாசகங்கடந்தாரோ 'வண்மைதரும் ஆகம நூல் வைத்த பொருள் வழுவாது உண்மை விளக்கம் உரைசெய்ததாகக்' கூறுகின்றார். எனவே, ஆகமநூல் பற்றிய சிந்தனையும், தவத்திரு தேமொழியார் சுவாமிகளின் பேருரையில் இடம் பெறுகின்றது.

வேதங்களும், வேள்விகளும் கடல் கொண்ட தென்னாட்டிலேயே கால்கொண்டுவிட்டன என்பதற்குப் 'பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியே' சான்றாக விளகுந்தலைக் காணுகின்றோம். வேதம் என்பது எது என்ற சிந்தனையும் தொல்காப்பியரிடமே தோன்றி விடுகின்றது. 'நிறைமொழிமாந்தர் உரைத்தனவே மறைமொழிகள்' என்ற தொல்காப்பிய முடிபினையே

திருவள்ளுவரும் வழிமொழிகின்றார். சேக்கிழார் பெருமான் திருமுறைகளே புதிய செந்தமிழ்ப் ப்ழமறை என்று கூறுகின்றார்.

தவத்திரு தேமொழியார் சுவாமிகளும் வேதம், ஆகமம் பற்றிய ஒரு தெளிவினை எடுத்துரைக்கின்றார்கள். என்றோ, எங்கோ எழுந்தன மட்டும் வேதங்கள் ஆகா. ஞான வேட்கை எழுகின்ற இடங்கள் தோறும் வேதங்கள் தோன்றும் என்பதே அவர்களது துணிபு.

ஆயிரம் ஆயிரம் முகங்களால் (வழிகளால்) இறைவனைத் தேடுகின்ற வேதங்களைத் திருவருள் அனுபவத்துக்குத் தோற்றுவாய் செய்யும் பாயிரம் என்றே கூறினார் வள்ளலார். வேதம் என்பது முன்னுரை, ஆகமம் என்பதே உள்ளுரை என்பது சுவாமிகளது முடிபு. ஆகமம் என்பதும் ஒரு நூல் என்றும் கொள்ளாமல் வேதநெறி நின்றவர்களின் அனுபவத் தெளிவு என்றே கருதுகின்றார்கள். ஆகமம் என்ற சொல்லுக்கே ஆன்மாவின் அனுபவ நிறைவு என்று பொருள் கொள்கின்றார்கள். வேதம் என்பது விதி. ஆகமம் என்பது விதிப்படி நிற்றல்; புராணம் என்பது விதிப்படி நின்ற திருத்தொண்டர்களின் வரலாறு என்பதே அவர்கள் தருகின்ற விளக்கம்.

சொற்பொருள் ஆய்வின் வாயிலாகப் புதிய கருத்துக்களை எடுத்துக்காட்டும் தனித்திறத்தினால் ஞானம் என்பது நடுநிலை நிற்பது எனவும்; ஐயர் என்பவர் ஐயம் தீர மெய்ப்பொருள் உணர்த்துபவர்என்றும்; தேசிகன் என்பவன் ஒளி உடையவன் எனவும் அவர்கள் கூறுகின்ற விளக்கங்கள் ஏற்றுப் போற்றுதலுக்குரியன. விந்தை – விந்து, முத்தி – முத்தீ போன்ற ஒற்றுமை உடைய சொற்களில் பொருட்பொருத்தம் காட்டுவதும்; ஒரு சொல்லுக்கு உரிய வெவ்வேறு பொருள்களையும் ஒருங்கு வைத்துக் கருத்துரைப்பதும் தவத்திரு சுவாமிகள் அவர்களுடைய ஆசிரியப்பிரானாகிய இராமநாத அடிகளாரது விரிவுரைப் பாங்கினை நினைவூட்டுவதாக உள்ளது.

இறைவன் புரிகின்ற ஐந்தொழில்களில் ஆக்கல், அளித்தல், அழித்தல் மூன்றும் உலகு, உடல் முதலிய அறிவற்ற (சடப்) பொருள்களிடத்தே நிகழ்வன. மறைத்தலும், அருளலும், உயிரின் அறிவினிடத்தே நிகழ்வன. ஆக்கல், அளித்தல், அழித்தல் மூன்றுமே புறத்தே நிகழ்வன. ஆக்கல், அளித்தல், இரண்டினையும்

விட அழித்தலே பெரிது. மெய்கண்டார் அழித்தலை ஒடுக்குதல் என்பார். அழித்தலைச் செய்யும் ஊழி முதல்வனைத் தாமத குணம் உடையவன் என்று பிறசமயத்தார் பழித்துரைக்க முற்பட்டனர். அப்போது அழித்தல் என்பது தாமத குணத்தால் நிகழ்வதன்று, அச்செயல் அருட்குணத்தால் நிகழ்வது, இறந்தும், பிறந்தும் இளைத்துக் களைக்கின்ற உயிர்களுக்கு இளைப்பாறுதல் தரவே பெருங்கருணையாளனாகிய இறைவன் அழித்தலைச் செய்கின்றான். அழிப்பு என்பது இளைப்பாற்றல் என்ற புதிய விளக்கத்தினை அருள்நந்தி சிவனார் எடுத்துரைத்தார். சைவசித்தாந்த அடித்தளத்திலேயே சமரச நிலை காண்கின்ற வள்ளல் பெருமான் அழித்தல் என்பதனை அடக்குதல் என்றே கூறுகின்றார். அங்ஙனம் அடக்குவதும் துரிசுகளையே என்று கூறியுள்ளார். நம்முடைய சுவாமிகளும் அழித்தலாவது தூய்மை செய்தல் என்று கூறியிருப்பது வள்ளற்பெருமான் வழிவந்த சிந்தனை என்றே கூறலாம். இவ்வாறே மறதியினால் வருகின்ற நலங்களை எல்லாம் மறைப்பாற்றலின் செயல் என்றே கூறுமிடத்து அவர்கள் தருகின்ற எடுத்துக்காட்டுகள் வாழ்வியலுக்கு உகந்தனவாகவே உள்ளன.

ஆறாறு தத்துவங்களை அடைவுபெறச் சொல்லுமிடத்து செய்யுளுக்குரிய சீரும், தளையும், எதுகையும் மோனையும் கருதி மனவாசகங்கடந்தார் சில அடைமொழிகளைக் கூறியுள்ளார். 'அந்த அடைமொழிகள் ஆழ்ந்த பொருளுடையன அல்ல; இணைப்புச் சொற்களே' என்று கூறுவது நூலாசிரியருக்குப் பெருமை தருவதாகாது' என ஆன்றோர் கூறுவர். அருள் நலங்கனிந்த புலமைத்திறம் உடையவர் வழங்கிய சொற்களில் பொருளற்ற சொற்கள் இருக்க முடியாதன்றோ? எனவே, ஊனமிகுபூதம், ஈனமாம் சத்தாதி, ஈனம்மிகும்தோல், ஊனப்பரிசம் என்னும் பொருள் மொழிகளுக்கெல்லாம் அவர்கள் ஆராய்ந்து அளித்திருக்கின்ற விளக்கங்கள் உணர்ந்து ஒழுகுதற்குரியன. ஊனம் மிகுந்த பூதங்களிடமாக ஈனத்தை நாடி அடையாது. ஞானத்தையே பெற வேண்டும் என்பதனையே அந்தச் சொற்களின் குறிப்பாக அவர்கள் உணர்த்துகின்றார்கள்.

உண்மை விளக்கம் வினாவிடை நூலாக அமைந்தது. மாணவர் ஆசிரியரை வேண்டிக் கொள்ளுகின்ற பாங்கிலும், ஆசிரியர் மாணவரை அழைக்கின்ற பரிவிலும் – பாடம் கேட்கும்

முறையும், பாடம் சொல்லும் முறையும், நிழலாடுவதனை அவர்கள் அழகுற விளக்கியுள்ளார்கள். இறைவன் வரைமகள் காண ஆடுகின்றான் என்ற அருளியல் செய்தியில் வாழ்வியலுக்கும், ஒரு குறிப்பினைக் காட்டுகின்றார்கள். எல்லோராலும் போற்றப்படுகின்ற சிலர் உடன் உள்ளவர்களால் புகழப்படுவதில்லை, வெளி உலகத்தில் பெருகின்ற புகழைவிட வீட்டில் உள்ளவர்களால் மதிக்கப்படுவதே உண்மையானது, உயர்வுடையது என்று அவர்கள் தரும் விளக்கம் இனிது எடுத்துக் காட்டுகின்றது.

அந்தக்கரணங்களை அடைவு பெறச் சொல்லும் முறையும், அவை செயல்படும் முறையும் வேறுபடும் என்பதனை விளக்குமிடத்து ஐம்பூதங்களைப் பற்றி ஆன்றோர்கள் கூறும் போதும் இங்ஙனம் எடுத்துச் சொல்லும் முறையில் மாறுபாடு காணப்படுவதனை அவர்கள் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

வானாகி, மண்ணாகி, வளியாகி, ஒளியாகி என்று மணிவாசகர் கூறும் முறைக்குப் புறநானூற்றுப் புலவர் முன்னரே இயைபு காட்டியிருத்தலைச் சுட்டிக் காட்டியுள்ளார்கள். திருவள்ளுவர் நீத்தார் பெருமை கூறுமிடத்து சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்று சுவை உணர்வை முன்வைத்துக் கூறுவதற்கும், இன்பியலில், கண்டுகேட்டு, உண்டு உயிர்த்து உற்று எனக் காட்சியினை முன்வைத்துக் கூறுவதற்கும் அவர்கள் காரணம் காட்டியிருப்பதும் உணர்ந்து மகிழ்தலுக்குரியது.

இங்ஙனம் அறிவுக்கும், அறிவாய், ஆய்வுக்கு விருந்து பயப்பதாய், உண்மைக்கு விளக்கமாய் உலகுக்கு வழி காட்டுவதாய், அமைந்துள்ள இந்நூல் செந்தமிழ் உலகுக்கு ஒரு புது வரவு; சிந்தனை உலகிற்கு ஒரு புது விருந்து; இத்தகைய மெய்யுணர்வுச் செல்வத்தை உலகுக்கு அளிக்கும் தவத்திரு. தேமொழியார் சுவாமிகள் அவர்களது அருளுரை மாட்சியும் அருள் நலங்கனிந்த பேருரைகளை அவர்கள் நிகழ்த்துவதற்கு வாயிலாக விளங்கும் அருள்ஞானப் பெருவெளித் தொண்டர்களின் புண்ணியப் பேறும், இவ்விரிவுரைச் செல்வத்தை ஏனோரும் பெற்றுப் பயனடையச் செய்யும். அருட்பண்ணையின் அளப்பரும் தொண்டும் நீள நினைந்து போற்றுதலுக்கு உரியன.

சித்தாந்த வித்யாநிதி
புலவர் மா. அமிர்தலிங்கம்.

காஞ்சிபுரம்
19.6.1996

13

# பதிப்புரை

உலக முதன் மொழியும் உயர்தனிச் செம்மொழியும் ஆகிய தமிழ் மொழியில் விளங்கும் சமயங்களில் காலத்தால் முற்பட்டதும், பிறவற்றிற்கு இல்லாத சிறப்பும் உடையது சைவ சமயமே என்று ஆன்றோர்கள் ஆராய்ந்து கூறியுள்ளார்கள். இச்சமயம் ஒரு காலத்து உலக முழுவதும் பரவி இருந்தது எனின் இதன் சிறப்பை என்னென்பது! தென்னமெரிக்க நாட்டில் பல ஆண்டுகட்கு முன்னர் சிவலிங்கம் கண்டுபிடிக்கப் பட்டதை எண்ணும் போது மேற்கூறிய கருத்துவலியுறும். சிவம் என்றாலே அன்பு என்பார் திருமூலர். இத்தகு சீர் மிகு சைவ சமயநூல்களை ஆன்றோர்கள் இருபிரிவாகக் கூறியுள்ளார்கள். அதாவது தோத்திரநூல்கள் சாத்திரநூல்கள் என்று, தோத்திர நூல்களாவனதேவாரம், திருவாசகம் முதலிய பன்னிரு திருமுறைகள். சாத்திர நூல்களாவன சிவஞானபோதம், சித்தியார், உண்மைவிளக்கம் முதலிய பதினான்கு நூல்கள்.

உண்மை விளக்கம் என்னும் இந்நூலை வினா, விடை வகையில் மனவாசகம் கடந்தநாயனார் இயற்றியுள்ளார் உண்மை விளக்கம் என்னும் இந்நூலுக்கு, நுண்மாண்நுழைபுலம் மிக்க தவத்திரு. தேமொழியார் சுவாமிகள் உண்மையான விளக்க உரை அளித்துள்ளார்கள். இது காலத்தால் அழியா ஒளிவிளக்காகும். உரையைப் படிக்குங்கால் சைவத்தின் உயிர்நாடி ஆங்காங்கு எழு ஞாயிறுபோல் தோன்றி மனத்துறு இருளையகற்றுகிறது. இத்தகைய அருளுரையை அளித்த தவத்திரு. தேமொழியார் சுவாமிகட்கு என்றும் மறவா நன்றியைத் தெரிவிக்கின்றனன்.

இந்நூலுக்கு அருளுரை மாட்சி அளித்த திருவாளர் ''சித்தாந்தகலாநிதி'' அமிர்தலிங்கனார் அவர்கட்கும் இந்நூல் நன்கனம் அமைய மெய்ப்புப் பார்த்த திருவாளர் ''சிவநெறிக்காவலர்'' பெரும்புலவர் இர.திருஞான சம்பந்தர் அவர்கட்கும் பிழை திருத்தம் செய்துதவிய திருவாளர்கள் புலவர் நல்லாசிரியர் வீ.தேவராசன் எம்.ஏ.,பி.எட். அவர் கட்கும் ஆசிரியர் துரை.சீனிவாசன் அவர்கட்கும், நன்றி உடையேன்.

இப்புத்தகம் வெளிவர உதவிபுரிந்த் திருச்சி டாக்டர்

பு.மு.பாஸ்கரன் எம்.எஸ். அவர்களுக்கும் திருமதி கௌரி பாஸ்கரன் அவர்களுக்கும் அருட்பண்ணை உளம்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறது.

சுவாமிகள் சொற்பொழிவை சிறந்த முறையில் ஒலிநாடாவில் பதிவு செய்து உதவிய நண்பர் திரு.பாலசுந்தரம் அவர்கட்கும், ஒலிநாடாவின் பதிவிலிருந்து, தட்டச்சு செய்து உதவிய நண்பர் திரு.கோவிந்தராசன் அவர்கட்கும் , திருவாளர் புலவர். சி.வெ.சுந்தரம் எம்.ஏ. அவர்கட்கும் என்றும் மறவா நன்றி பாராட்டும் கடப்பாடு உடையேன்.

இந்நூலை அழகிய முறையில் அச்சிட்டுதவிய அருள்வேல் அச்சகத்தார்க்கும் நன்றியைப் புலப்படுத்து கின்றனன்.

சைவ உலகம் இந்நூலை ஏற்றுப் போற்றி என்றும் போல் ஆதரவு தர வேண்டுகின்றனன்.

அன்பன்
**பு.மு.கிருஷ்ணமூர்த்தி**
நிறுவனர்
அருட்பண்ணை அறக்கட்டளை

# 15

# தவத்திரு தேமொழியார் சுவாமிகளைப் பற்றிய சில வரலாற்றுக்குறிப்புகள்

வைணவ மரபில் தோன்றிய தவத்திரு சுவாமிகள் பிறந்த ஊர் வரலாற்றுச் சிறப்பு மிக்க செஞ்சி வட்டத்தில் உள்ள **சொக்கப் பெருவளூர்.**

ஈன்ற தாய் நல்லம்மாள்; இனிய தந்தை **அரங்கசாமி.** உடன் பிறந்தோர் இருவர் — அன்பு அண்ணன் கோபால்; அருமைத் தங்கை பொருட்செல்வி.

சுவாமிகளின் தொட்டில் பெயர் செயராமன்; பேராசிரியர்திரு.வையாபுரிப்பிள்ளை அவர்கள் இட்ட திருப்பெயர் **தேமொழி.** இவர் தம் நற்பண்புகளால் தவத்திரு தேமொழியார் சுவாமிகள் என அன்புடன் அழைக்கப்படுகிறார்.

தமிழ் இலக்கிய, இலக்கண சாத்திரங்களை முறையாகப் பயில புலவரேறு திரு.ந.ரா.முருகவேள் அவர்கள் ஆசிரியராக அமைய இறையருள் கூட்டுவித்தது. நெறியான வாழ்வில் சிறக்க திருவள்ளுவரகம் குலசை திரு.ப.இராமநாத அடிகள் அடித்தளம் அமைத்தார். சீரிய சிந்தனைகளுக்கு அழகரடிகள் வித்திட்டார். சுவாமிகளை அறிந்த சான்றோர் பலர். அவர்களுள் இலக்கணத் தாத்தா, திரு.மே.வி.வே.மயிலை திரு.சிவமுத்து, டாக்டர் சுப. அண்ணாமலை, டாக்டர் சிதம்பரநாதன், டாக்டர் சுப. மாணிக்கம், திருக்குறள் முனுசாமி எனப்பட்டியல் நீளும்.

சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் 'இளம் சைவப் புலவர்.' 'சைவப் புலவர்' முதலான பட்டங்களைப் பெற்றதோடு அன்றி, சென்னைப் பல்கலைக் கழகத்தின் 'வித்வான்' பட்டமும் பெற்றவர். இவர் தம் பரந்த அறிவையும், நுண்மாண் நுழைபுலத்தையும், ஆழ்ந்த புலமையையும் உணர்ந்த மாம்பாக்கம் குருகுலம் அழகரடிகள் அவர் தம் தமிழ்க்கல்லூரியில் பணியாற்றிட அழைக்கவும் அவ்வழைப்பிற்கிணங்கி, கல்லூரி முதல்வராக நான்கு ஆண்டு காலம்

பணியாற்றியிருக்கின்றார். அன்றைய கல்லூரி மாணவர்கள் சுவாமிகளிடம் பேருவகையுடன் பாடம் கேட்ட விந்தையை இன்றும் பசுமையாக நினைவு கூறுகின்றனர்.

சுவாமிகள் உருவம் — கருமை நிறம், ஒளிசிறந்த முகம்; உள்ளம் அன்பில் தோய்ந்து விளங்கும்; மொழி — தூய்மையும், எளிமையும் நிறைந்த தெளிவான மொழி; சிந்தனை — அற்புதச் சிந்தனைகளை அள்ளி அள்ளி வழங்கும் ஞான நிலையம். மாற்றாரிடம் உள்ள நலத்தையும் பாராட்டும் பண்பாளர். நெறியுடன் வாழும் சிறந்த நெறியாளர்; கோட்பாடு — நாடு, இன, மத, மொழிக் காழ்ப்பில்லாமல்உதையும் நடுநிலைமையாகவும் அதே சமயம் இதமாகவும், பதமாகவும், தெளிவாகவும், நுட்பமாகவும், எளிமையாகவும் எடுத்துச் சொல்லும் இதயப்பாங்குடையவர்.

என்றும் வெள்ளை உடையையே உடுப்பார்; அஃதும் கீழ் ஒரு வேட்டி, மேல் ஒரு துண்டு எனக் காட்சிக்கு எளியர். கடுஞ்சொல் நீங்கியவர்; பல்வேறு துறைகளில் திறமும், பாண்டித்தியமும் உடையவர். ஆனால் அடக்கமானவர் . இகழ்ந்தாரையும் ஏற்றிப் போற்றும் மாண்புடையவர்; கற்றறிந்தோர் கருதாச் சிந்தனையாளர். கற்றவர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர். எங்கும் எதிலும் இறைவன் அருள் இயக்கத்தைக் காணும் இயல்புடையார். தீட்சை அளிக்கும் தெளிவுடையவர். இவர் தம் அருட் பார்வையால் நலமுற்றோர் பலர். இவரை அருட்குருவாக ஏற்றோர் எண்ணில் அடங்கார். சுவாமிகளின் அருமை பெருமைகளை விரிப்பின் பெருகும் என அஞ்சி இத்துடன் நிறுத்திக் கொள்கிறோம்.

சுவாமிகளின் வாழ்க்கைத் துணையாக அமைந்த திருமதி. **பத்மினி அம்மையார்** வெள்ளை உள்ளம் படைத்தவர்; கள்ளமற்ற சிந்தையர்; கரவற்ற நெஞ்சினர். இல்லறம் சிறக்க மூன்று நன்மக்களை ஈன்றெடுத்து சுவாமிகளின் அருள் தொண்டிற்குப் பேருதவி புரிந்து வருகின்றார். "பெய்யெனப் பெய்யும் மழை" போன்ற தொண்டு உள்ளம் படைத்தவர்.

கடந்த 35 ஆண்டுக் காலமாக சமய, இலக்கியப் பணிக்குத் தம்மை முழுவதுமாக அர்ப்பணித்துக் கொண்ட சுவாமிகள், மக்கள் மனம் செம்மைப்படவும், அவர்தம் வாழ்வு வளம் பெறவும், நாடு நலமெய்தவும், உலகம் அமைதியில் சிறக்கவும் நாளும்

சென்னையின் பல்வேறு இடங்களில் சொற்பொழிவு ஆற்றி வருகின்றார்.

1976 – ஆம் ஆண்டு **''அருள்ஞானப் பெருவெளி''** எனும் அருள் நலம் அளிக்கவல்ல ஆன்மீக அமைப்பை நிறுவி, அதன் மூலம் மனித இனம் சீரும்சிறப்பும் பொலிந்து விளங்க அருந்தொண்டாற்றி வருகின்றார். அவ்வமைப்பில் மாதந்தோறும் நிறை நிலா வழிபாடும், ஆண்டு தோறும் சித்திரைப் பெருவிழாவும் மிகச் சிறப்பாக நடந்து வருவது நம்முடைய பெரும்பேறு என்றே கூறலாம். மேலும் இவ்வமைப்பு குழந்தைகளுக்கென கோடைக்கால நல்லொழுக்கப் பயிற்சியையும் ஆண்டுதோம் அளித்து வருகிறது.

இவர்தம் அருமை பெருமைகளையும், அருள்திறத்தையும் உணர்ந்த 'இந்து' நாளிதழ் நிறுவனத்தார், அவர்களின் நாளிதழின் கடைசிப் பக்கத்தில் வரும் ஆன்மீகப் பகுதியில், சுவாமிகளின் சீரிய சிந்தனைகளைப் பல்லாண்டுகளாக வெளியிட்டு மக்கள் உய்யப் பேருதவி புரிந்து வருகின்றனர். சென்னை அகில இந்திய வானொலி நிலையமும் ''சான்றோர் வாக்கு'' நிகழ்ச்சிக்குப் பன்முறை அழைத்துப் பெருமை பெற்றது. திருஞானசம்பந்தப் பெருமானைப் பற்றி இலக்கியச் சொற்பொழிவு ஆற்ற சிறந்ததொரு வாய்ப்பை நல்கி பெருமை தேடிக் கொண்டது.

நம் நாட்டுக்கு பெருமை சேர்க்கும் வகையில் அமெரிக்காவில் உள்ள ''சிராகஸ் பல்கலைக் கழகம்'' சுவாமிகளை அழைத்து, மூன்று மாத காலத்திற்கு அமெரிக்காவிலேயே தங்க வைத்து, திருக்கோவையார் சிந்தனைகளைச் செவிமடுத்து, அதை (Love in South India) என்ற நூலாக வெளியிட்டுப் பெருமிதம் உற்றது.

திருமூல நாயனாரின் திருமந்திரத்தைச் சுவாமிகள் சுமார் 13 ஆண்டுகளாக நடத்தியதும், தெய்வச் சேக்கிழாரின் பெரிய புராணத்தைச் சுமார் 7 ஆண்டு காலம் நடத்தியதும், கந்த கோட்டத்தில் மூன்று ஆண்டு காலம் திருக்குறளைச் சிந்தித்ததும் சென்னை மாநகர் பெற்ற பெரும்பேறு என்றே கூறலாம். தற்சமயம் திருக்கோவையாரின் அருட் சிந்தனை களை வெளியிட்டு வருகின்றார்.

இவருடைய தொண்டினைப் பாராட்டி சைதைத் தமிழ்ச் சங்கம், ''செந்தமிழ் வித்தகர்'' என்றும், 'வள்ளுவர் வழி' ''திருக்குறள்

சீர் பரவுவார்'' என்றும், செங்கை இறையருள் மன்றம் ''சித்தாந்தப் பேரொளி'' என்றும், இவர்தம் ஆசிரியர் ''சிவஞானச் செல்வர்'' என்றும், தமிழக அரசோ ''திருக்குறள் நெறித் தோன்றல்,'' என்றும் பாராட்டியும், பதக்கம் அளித்தும் மகிழ்ந்தனர். பெரியோர் பலர் சுவாமிகளை 'அருட்சித்தர்' என்றும், 'இற்றை வள்ளலார்' என்றும் கூறுவது மிகவும் பொருத்தமே.

சுவாமிகளின் சிந்தனைகளை செவிமடுப்போர் தெளிவு பெறுவர் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. துன்பத்திலிந்து நிரந்தர விடுதலை பெறவும், என்றும் இன்பம் நம்மைவிட்டு நீங்காமலிருக்கவும், இவர்தம் அறிவார்ந்த சிந்தனைகளை வாய்ப்புள்ளபோதே கேட்டுப் பயன் பெறுவோம், நம்மைச் சார்ந்தாரையும் கேட்க வைத்துப் பயன்பெறச் செய்வோம். நிம்மதியைத் தேடி எங்கெங்கோ சென்று அலைய வேண்டாம். நம்மிடம் உள்ள நிம்மதியை நாம் உணர சுவாமிகளின் அருளாசியைப் பெறுவோம்; சீரும் சிறப்பும் பொலிய வையத்தில் வாழ்வாங்கு வாழ்வோம்.

நாளும் மாணவர்களைத் தாமே தேடிச் சென்று (கன்றைத் தேடி ஓடும் பசுவைப் போல) அவர்களது அறிவுப் பசியையும், சமய, சித்தாந்தங்களின் நுட்பங்களை எளிமையாக விளக்கி உள்ளத் தெளிவை ஏற்படுத்துவதிலும்; கைம்மாறு கருதாத் தொண்டாக இதனைப் பல்லாண்டு காலமாக இடையீடின்றித் தொடர்ந்து செய்து வருவதிலும்; அருள் ஞானப் பெரு வெளியெனும் அருளகத்தை நிறுவி அதன் பால் அனைவரையும் ஈர்த்து தாயுள்ளத்தோடு அருளாரமுதத்தை வாரி வாரி வழங்கியும், இறையருளைப் பெற்றிருந்தும் ஏதும் பெறாதார் போல எளிமையாக வாழ்ந்தும் வருவது நமக்கு நால்வர் பெருமக்களை நினைவூட்டுவதாக இருக்கிறது.

**டாக்டர் மா.பழனிவேலு**

சென்னை – 2

# அருட்பண்ணை அறக்கட்டளையின் வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| மாமறை பேசுகிறது | தொகுதி I | 22.00 |
| மாமறை பேசுகிறது | தொகுதி II | 20.00 |
| மாமறை பேசுகிறது | தொகுதி III | 23.00 |
| மாமறை பேசுகிறது | தொகுதி IV | 36.00 |
| தேனருவி (சிவபுராணம் விளக்கம்) | | 60.00 |
| திருமூலர் அருளுரை | தொகுதி I | 52.00 |
| காழிவேந்தன் கருணை | | 32.00 |
| தமிழ்நெறி | | 6.00 |
| வாசகர் கண்ட வடிவழகி | தொகுதி I | 50.00 |

**'அருட்பண்ணை'**

எழும்பூர் இல்லம், 91 – கெங்குசாலைச் சந்து,

சென்னை – 600 008.

தொலைபேசி : 8265563.

## தவத்திரு தேமொழியாரின்
## மனித இனம் மேன்மையுற
## சில அருளுரைகள்

மனிதனை ஒரு பழத்திற்கு ஒப்பிடலாம். பழத்தின் மேல் தோல், உட்தோல், கொட்டை, சக்கை, சாறு எபலவாருக இருக்கும். மனிதனிடத்திலலும் இவைகள்உள்ளன.எதை விடுத்து எதைகொள்வது என்று நீங்களே தீர்மானியுங்கள் சாறை விடுத்து சக்கையையும், தோலையும், கொட்டையையும் உட்கொள் வதற்குச் சமம், பிறரிடத்து உள்ள தீமைகளைச் சொள்வது. சாறை உண்டு நலம் பெறுவது என்பது, அவரிடம் உள்ள நன்மைகளைக் கண்டு, மற்றவர்க்கு கூறி மகிழ்வதே ஆழும்.

மனிதனால் பற்று இன்றி இருக்கவே முடியாது. ஏதேனும் ஒன்றைப் பற்றியே வாழ வேண்டும். அந்தப்பற்று உயர்ந் ததாகவும், சிறந்ததாகவும் இருக்கட்டுமே:

மனிதனை மழை நீருக்கு ஒப்பிடலாம். கங்கையில் விழுந்தால் புனிதமாகிறது; கிணற்றில் விழுந்தால் குடிநீராகிறது; சாக்கடையில் விழுந்தால் அதன் வண்ணமாகிறது. உயர்ந்ததைச் சாரந்தால் உயருவது திண்ணம்; தாழந்ததை நாடினால் தாழ்வும் நிச்சயம். ஆகவே படிக்கும் நூல்கள் ஞான நூல்களா கவே இருக்கட்டும்; சாரும் மனிதர்களும் நல்லவர்களாகவே இருக்கட்டும்

## அனைவரும் வருக ! அருளுரை பெறுக !

**''அருள் நூல்களில் உள்ளது செம்மைச் செய்தி
அதை உணர்ந்தோர் அடைவது உண்மை நிம்மதி''**

அருள் நலம் சான்ற பெரியீர்!

வணக்கம். 'அரிது அரிது; மானிடராய்ப் பிறத்தல் அரிது!'' அந்த பிறவியின் நோக்கத்தை அருளாளர்கள் தெள்ளத் தெளிவாகத் தெரிவித்திருப்பினும்; நம்மில் பலர் அதை அறியவும் முயலவில்லை; அறிந்த சிலரும் தெளிவதில்லை.

நம் வாழ்க்கையில் சீரும் சிறப்பும் பொலியவும், நலமொடு வளங்கள் அமையவும், நாம் செய்யக் கூடிய ஒரே ஒரு செயல் அருள் நூல்களை ஓதுதலும், உணர்தலும், பின்பற்றுதலுமே. நாம் அவற்றை நன்கு உணர்ந்து கொள்ளும் வகையில், வாழ்வியல் விளக்கங்களைக் கூறித் தெளிய வைக்கிறார் அருள்நலம் சான்ற பெரியார் தவத்திரு **தேமொழியார் சுவாமிகள்.**

இவர்தம் சொற்களில் எளிமை உண்டு; இனிமை உண்டு; அருள் நூல்களின் பிழிவை உணர்த்தும் ஆற்றல் உண்டு; நெறிமுறைகளைப் பின்பற்றும் உணர்வைத் தூண்டும் வல்லமை உண்டு.

தமிழகம் செய்த தவப்பயனாய் இவரது சொற்பொழிவுகள் பல **நூல்களாக** வெளிவந்துள்ளன.. **HINDU** நாளிதழ் கடந்த 15 ஆண்டுகளுக்கு மேலாக இவர்தம் அருட்பொழிவில் மலர்ந்த கருத்துக்களை வெளியிட்டு வருவது இவரது தகுதிக்குச் சான்று. **அமெரிக்க சிராகஸ் பல்கலைக் கழகம்** இவரை அழைத்து பெருமிதமுற்றது; இவரது உரையை **LOVE IN SOUTH INDIA** என ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து மகிழ்ந்தது.

இப்பெருந்தகையின் மூன்று நூல்கள் 7-12-1996 அன்று வெளிவர உள்ளன. அவை மூன்றுமே ஞானக் கருவூலங்களாகும்.

## மாமறை பேசுகிறது—தொகுதி 4

உலகப் பொதுமறையாய்த் திகழும் **திருக்குறளின்** நான்கு அதிகாரங்களுக்கு அற்புதமான அருளுரை வழங்கியுள்ளார் சுவாமிகள்.

**''இனியவை கூறல்''**. இந்தத் தலைப்பை சுவாமிகள் பிரிக்கும் முறையே அற்புதம். கற்றவர்களுக்குத் தேவை என்ன என்பதைத் தெளிய வைக்கிறார். 'சொல்லுதல்' என்னும் சொல்லின் பல பாகுபாடுகளைப் பொருளுடன் சிந்திக்க வைக்கிறார். செம்பொருளின் இலக்கணத்தை வரையறுத்தல் நனி சிறந்ததாய் உள்ளது. சொல் - மொழி - விளைவு - பயன் என்று கூறுபடுத்தும் திறம் உள்ளத்திற்கு உவகை அளிக்கிறது.

**செய்ந்நன்றியறிதல்** இதற்கு சுவாமிகள் காட்டும் பஞ்ச பூத உதாரணம் எவரையும் வியப்பில் ஆழ்த்தும். நம் உள்ளத்தில் தாய்மை உணர்வைத் தூண்டி செய்ந்நன்றி அறிதலுக்கு அடித்தளம் அமைக்கிறார். ஊன உணவு, ஞான உணவு என்ற பகுப்பு உள்ளத்தைத் தொடுகிறது. பயன் கருதா நன்மையின் பயனை விரிக்கும் பாங்கு சிந்திக்க வைக்கிறது; சிறப்பாய் உள்ளது.

**நடுவுநிலைமை** என்ற சொல் ஆராய்ச்சி அறிஞர் பெருமக்களையும் அதிசயிக்கச் செய்யும். 'எதுவும் நம்மால் முடியும்' என்ற உறுதியை ஊட்டும் வல்லமை நம் வளர்ச்சிக்கு உரமாக உள்ளது. நடுவு நிலைமைக்கு விளக்கம் கூறி நம்மை ஞான நிலைக்கு உயர்த்தும் பக்குவம் வாழ்த்தி வணங்குதற்கு உரியது.

**''அடக்க முடைமை''**யில் , அடக்கம் என்பது பிறரால் நமக்குக் கிடைத்த ஒப்பற்ற உடைமை என்று புதியதொரு கோணத்தில் பொருளைச் சிந்திக்க வைக்கிறார். அடக்கத்தின் மூலச் சொல்லை மிகத் துல்லியமாக உணர வைக்கிறார். சங்க நிதி பதுமநிதி விளக்கங்கள் எவரிடத்தும் கிடைக்காத பொக்கிஷங்கள். மலைக்கு இவர் தரும் விளக்கம் உண்மையிலேயே நம்மை மலைக்க வைக்கிறது.

## திருக்கோவையார் — வாசகர் கண்ட வடிவழகி

ஒளி நிலை அடைந்த மணிவாசகப் பெருமான், தன்னுடைய அருள் அனுபவங்களை எல்லாம் திரட்டி ஒரு கோவையாக, அதே சமயம் வாழ்வியல் முகமாக நமக்கு வழங்கியுள்ள அற்புதமே ''திருக்கோவையார்'' எனும் அருள் நூல்.

சைவம், அசைவம் இரண்டிற்கும் சுவாமிகள் தரும் விளக்கம் ஈடிணையில்லாதது. அன்பு சைவ நிலை; அவா அசைவ நிலை, அன்பு பிறர்க்கென வாழ்வது; அவா தனக்கென வாழ்வது. ஆஹா! எத்துணை அரிய எளிய விளக்கம். ''பயிர் செழிக்கக் களை எடுத்தல்; உயிர் செழிக்க மலம் அறுத்தல்'' என்ற உவமை எவரும் புரிந்து கொள்ளும் வகையில் உள்ளது. இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் என்பவைகளுக்கு இப்பெருந்தகை தரும் விளக்கம் – அருமையிலும் அருமை. ஐந்திணைகளுக்கும், ஐம்மலர்களுக்கும் வாழ்க்கை முகமாக இதுவரை யாரும் இத்தகையதொரு விளக்கத்தை அளித்ததே இல்லை. அனைத்தும் வியத்தகு பயனுள்ள குறிப்புகள். நம் வாழ்க்கை நன்கு மலர, மலர்ந்து மணம் வீசச் செய்யும் அருள் நலம் தோய்ந்தவை.

அச்சம், பயிர்ப்பு, நாணம், மடம் ஆகியவற்றுக்கும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றுக்கும் இவர்தரும் விளக்கம் தெவிட்டாத தெள்ளமுது; ஆம் ஞானக் கருவூலம்!

☆☆☆☆☆

நாமும் உயர்ந்து, நம்மைச் சார்ந்தோரையும் உயர்த்த வேண்டுமெனில், தவறாது நூல் வெளியீட்டு விழாவிற்கு வருகை தாருங்கள்; நிம்மதி நிரந்தரமாய் நம்மிடம் அமைந்திட நூல்களைப் பெற்றுச் செல்லுங்கள் என பணிவன்புடன் வேண்டுகிறோம்.

அன்புடன் **அருட்பண்ணை.**

**'அருள் நூல்களை வாங்கி உணர்ந்திடுவோம்;**

**அதன் பயனைத் துய்த்து உயர்ந்திடுவோம்!'**

## உண்மை விளக்கம்

திருவதிகை மனவாசகங்கடந்த தேவ நாயனாரின் அருள் உணர்வில் மலர்ந்ததே "உண்மை விளக்கம்" என்ற ஒப்பற்ற சாத்திர நூல். ஆறாறு தத்துவங்களைப் பற்றிய விரிவான விளக்கமே இந்நூலின் தனிச்சிறப்பு, தத்துவங்கள் ஓர் அற்புத அரண்மனை என்றால் இந்நூலே அதற்கு நுழைவாயில். ஐந்தெழுத்தைப் பற்றியும், இறைவனின் அருட்கூத்தைப் பற்றியும் உள்ள செய்திகள் அருளாளர் கூறியவையே.

பக்தி என்பதற்கு சுவாமிகள் தரும் விளக்கம் அருமையானது, புதுமையானது, வாழ்க்கைக்கு மிகமிகத் தேவையானது. "சித்தாந்தம் என்றால் இயற்கையின் பாகுபாடுகளை விரித்துக் கூறுதல்" என்று விளக்கங்கூறி உறங்கிக் கிடக்கும் சிந்தையைத் தூண்டுகிறார். தத்துவங்கள் தேவைதானா என்ற நம் போன்றோரின் வினாவிற்கு, "காய்கறிகள் தேவைதானா" என்று எதிர் வினா விடுத்து வாழ்வியலாக உணர வைத்து, தத்துவங்களைப் படிகளாக்கி, அவற்றின் மீது நம்மை ஏற்றி, உயர்நிலைக்கு அழைத்துச் செல்லும் அவர்தம் எளிமை நிறைந்த கருணையை எண்ணி வியக்காமல் இருக்க இயலவில்லை.

சிவபோதம், சீவபோதம் என போதத்திற்கு விளக்கம், தாய் குழந்தைக்கு உணவு ஊட்டுவதைப் போல் உள்ளது. இயக்கத்திற்கும் ஒலிக்கும் உள்ள தொடர்பை இவர் சுட்டுவதால்தான் அறிய முடிகிறது. பொறி, புலன், தன்மாத்திரை இவைகளை விளக்கும் விதம் ஒரு தனித்தன்மை வாய்ந்ததாக உள்ளது. பல அருள் நூல்களுடன் ஒப்பு நோக்கி, இந்நூல்களின் பெருமைக்கு அழகு சேர்க்கிறார்; கருத்துக்களின் ஆழத்தை உணர வைக்கிறார். சொற்பொருளையும், அது உணர்த்தும் உட்பொருளையும், அதன் மூலம் மெய்ப் பொருளையும் காண வழி வகுக்கிறார்.

ஓம்

திருச்சிற்றம்பலம்

தென்னாடுடையசிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும்இறைவா போற்றி

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

திருவதிகை மனவாசகங்கடந்த தேவநாயனார்

அருளிய

# உண்மை விளக்கம்

**முன்னுரை:-**

மெய்யன்பர்களே:

உலகம் கடவுளின் கருணை நிலையம். அங்கே கண்டெடுக்க எத்தனையோ முத்துக்கள் உண்டு. கடவுள் கடல் போன்றவன். அவன் தருகின்ற நலன்கள் அளவில்லாதன. அவை கங்கு கரை இல்லாத கடலில் கிடைக்கின்ற, கடலுள் விளைகின்ற பொருள்களைப் போன்றவை. உலக மக்கள் கடலுள் சென்று உணவுப் பொருள்களைத் தேடுகின்றார்கள். கடலுள் மூழ்கி முத்து, பவளம் போன்றவற்றையும் எடுக்கின்றார்கள். தேவையானவர்கள் அவற்றைச் சென்று எடுக்க முடிவதில்லை. துணிவு உடையவர்கள், திறமை உடையவர்கள் மட்டுமே அப்பொருள்களைக் கொண்டு

வருகிறார்கள். மற்றவர்கள் அதனை விலை கொடுத்து வாங்குகின்றார்கள். இப்படி அது பண்ட மாற்றாகவே முடிந்துவிடுகின்றது. தன்னலமாகவே அமைந்து விடுகின்றது. அப்படியே தெய்வ வழிபாடும், திருக்கோவில் வழிபாடும் கூடத் தன்னலமாகவே அமைந்துவிடக் கூடாது.

மேகமானது கடலில் இருந்து நீரை முகந்து கொண்டு வந்து உலகத்திற்குத் தரும். தனக்கு நீர் தந்த கடலுக்கேநீர்தரும். மழை கடலில் பெய்ய வில்லையென்றால் கடல் வளம் குறைந்துவிடும். மழை இல்லையென்றால் முத்தோ, மீனோ பெருகாது. தனக்கு நீர் தந்த கடலுக்கே வளத்தைச் சேர்க்கின்ற மழையைத் தர வல்லது மேகம் ஒன்றுதான். அது பொழிகின்ற மழை புல்லில் இருந்து அனைத்து உயிர்களுக்கும் மகிழ்ச்சியையும் மலர்ச்சி–யையும் தழைப்பையும், செழிப்பையும் உண்டாக்கு ம் மேகம் ஒன்றுதான் கைம்மாறு கருதாது அனைத்துக்கும் பயன் தந்து கொண்டிருப்பது. அதைப்போல் வேறு யாரையும் பார்க்க முடியாது என்று கூறி விடலாமா?

மாரிக்குப் பாரியை ஒப்பிடாது பாரிக்கு மாரியை ஒப்பிடுவார் கபிலர். அவ்வாறே ஞானிகளும் மாரியைப் போன்ற பேராற்றலும் பேரருளும் பெருங்கொ டையும் உடையவர் கடலில் படிந்து நீரை முகந்து மழையாகப் பொழிகின்ற மேகம் போலவே அவர்களும் இறைவன் திருவடியைப் படிந்து, ஞானமாகிய நன்மைகளை முகந்து கொண்டு வந்து, அருள் மழையாகப் பொழிவார்கள். அவை, படித்தாலும், கேட்டாலும், பயன்படும் வகையில் அமைந்திருக்கும். அந்த மொழி ஒன்றுதான் அனைத்து உயிர்களையும் வாழ்விக்கும். அதற்குப் பொருளே தெரிய வேண்டாம். அது காதுக்குள் போனாலே போதும். உள்ளே இருக்கும் அழுக்குகளை அகற்றிவிடும். இந்த உண்மையை வள்ளற்பெருமான் சொல்லுகிறார்.

வள்ளல்பெருமான் ஒரு கருத்தைச் சொல்லும்போது அது மிக வியப்பாக இருக்கும். பாடல்

எளிமையானதுதான். நமக்கெல்லாம் தெரிந்த பாடல்தான். சிந்தித்தால்தான் அதன் சிறப்புத் தெரியும்.

வாட்டமிலா மாணிக்க வாசகநின் வாசகத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளும்
மெய்ஞ்ஞான
நாட்டமுறும் என்னில்இங்கு நானடைதல்
வியப்பன்றே.

(ஆளுடைய அடிகள் அருள்மாலை-10).

என்பார். கீழ்ப்பறவைச் சாதி என்கிறார். அப்படியானால் மேல்பறவை சாதி என்று ஒன்று உண்டென்பது விளங்கும். அவையாவன: புறா, கிளி போன்றவை. கீழ்ப்பறவை சாதிகள் மலம், இறந்தவற்றின் ஊன் இவற்றை உண்பன. புலி, சிங்கம் முதலான விலங்குகள் வேட்டையாடியே உயிர் வாழ்வன. ஆனால், மாடு, ஆடு, மான் முதலான சாதுவான விலங்குகள் வேட்டையாடுவதில்லை. இவை உயர்சாதி விலங்குகள். கீழ்ப்பறவைச் சாதிகளும், பொல்லா விலங்குகளும்கூட பெருமானே உங்கள் வாசகத்தைக் கேட்டபொழுதில் ஞானநாட்டமுறும் என்றால் இங்கே நான் ஞான நாட்டம் அடைவதில் வியப்பில்லையல்லவா என்று உருக்கமாகக் கூறுகின்றார்.

ஞான நூல்களைப் படிக்கின்ற காரணத்தினாலும், தமிழ் என்ற காரணத்தினாலும் ஒருவனுக்கு நல்ல புத்தி வந்துவிடுவதில்லை. அப்படியானால் ஞானம் எப்படி வரும்? எழுதுவது எப்படியிருக்க வேண்டும்? எழுத்து எங்கு இருந்து வரவேண்டும்? என்ற இந்த மூன்று நிலையும் கடந்த நின்று நான்காவது நிலையில் விளங்கிய மணிவாசகப் பெருமான் வழங்கிய ஞானக்கொடை திருவாசகம். அது ஞான நூல்.

அது, வாசம், வாசகம், திருவாசகம் என விரியும். திரு-ஞானம்', வாசம்- மணம் ஞானமணம் கமழ்வது திருவாசகம். அந்த ஞானமணத்தை நமக்கு நூலாக்கித் தந்திருக்கின்றார் மணிவாசகப் பெருமான்.

இத்தகு நூல்கள் எல்லாம் நமக்குக் கிடைத்திருக்கும் மாபெரும் ஞானச் செல்வங்கள். இத்தகு செல்வம் உலகில்

வேறெதுவும் இல்லை. ஆனால் நாம் உலகியல் செல்வத்தைத்தான் பெருஞ்செல்வமாகக் கருதிக் கொண்டிருக்கின்றோம். காசும், பணமும் உலகியல் வாழ்க்கைக்குத் தேவை. ஆனால் இந்த உலக வாழ்க்கையில் தெளிவாக வாழ்வதற்கு ஞானம் தேவை. அவற்றை வழங்குவன ஞான நூல்கள். அவற்றை நாம் போற்றிப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். உதாரணத்திற்குப் பல செய்திகளைச் சொல்லலாம்.

ஒருவன் சிறு வயது முதல் தவறுகளையே செய்து பழகியிருப்பான். அவனிடம் பொருள் சேர்ந்தால் அவன் செய்து பழகிய குற்றங்கள் பெருகுமேயன்றி குறையாது நிலைக்கு ஏற்றவாறு இடம் மாறி உட்கார்ந்து செயல்படுவானே தவிர தரம் உயர்வதில்லை. செல்வம் வந்துவிட்டதால் அவனைப் பெரிய மனிதன் என்று சொல்லிவிட முடியாது. பொருளால் உயர்ந்தானே தவிர அறிவால் உயர்குணங்களால் உயர்வதில்லை. அது போன்று வறுமையின் கீழ் மட்டத்தில் உள்ள ஒரு ஞானி தவறு செய்வானா? செய்ய மாட்டான்.

உயர்வு, தாழ்வு என்பது ஞானிகளுக்கும், அஞ்ஞானிகளுக்கும் ஒன்றுதான். உயர்வு, தாழ்வு வந்தாலும், எக்காலத்தும் ஞானிகள் தங்கள் உயர் நிலையிலிருந்து தாழ்ந்துவிடுவதில்லை. தங்கள் தேவைகளைச் சுருக்கிக் கொண்டு, பிறருக்காகச் சேவை செய்வதே அவர்களுடைய குறிக்கோளாக இருக்கும். ஞானிகளிடத்தில் பொருள் சேர்ந்தால் அதனைத் தங்கள் தேவைகளுக்காகச் செலவழிக்க மாட்டார்கள். கல்வி மருத்துவம் என்று மக்களுக்குப் பயன்படுகின்ற வகையில் தொண்டுக்காக அப்பணத்தைச் செலவிடுவார்கள். எனவே உலகியல் செல்வம் ஞானிகளிடத்தும், ஞான நாட்டம் உடையவர்களிடத்திலும் மட்டுமே சேர வேண்டும். அஞ்ஞானிகளிடம் பொருள் சேரக் கூடாது. இது என்னுடைய சிந்தனை.

ஞானிகள் தங்களிடம் பொருள் சேர்ந்தால் அவற்றைத் தொண்டுக்காகச் செலவிடுவதுபோல ஞான

நாட்டம் உடையாரிடம் பொருள் சேர்ந்தால் அவர்களிடம் அறிவு பெருகப் பெருக, அவர்கள் தன்னையும் செழுமைப் படுத்திக் கொண்டு தன்னுடைய சூழலையும் செழுமைப்படுத்தி விடுவார்கள்.

ஔவைப்பிராட்டி ஒரு கருத்தைத் தெரிவிக்கின்றார். 'செல்வர்க்கு அழகுசெழுங்கிளை தாங்குதல்' என்பதே அது. இது அக்காலத்திய கல்வி. இப்போதைய கல்வி படம், பட்டம், மட்டம் என்று போகும் அவ்வளவுதான். அக்காலத்தில் 'அறம் செய விரும்பு' என்று ஆரம்பித்து, நீதி போதனைகளையே பெரும்பகுதியும் போதித்தனர். அவை மனதில் நிலை பெறுமாறும் செய்தனர்.

'செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்' என்ற இந்தச் சொற்றொடர் எத்தனை பொருள் பொதிந்தது எவ்வளவுபெரிய தத்துவத்தை உள்ளடக்கியிருக்கின்ற தென்று தெரியுமா? எளிமையான மொழியில் பெரும் தத்துவங்களை உள்ளே பொதிந்து, சுருக்கமாகத் தெரிவித்திருக்கின்றனர் நம் பெரியோர்.

ஒரு பெரிய மரம். அதில் பல கிளைகள். அக்கிளைகளுக்கு ஆதாரமாக இருப்பது அடிமரம். அடிமரம் போன்றவர் செல்வந்தர். கிளைகள் சுற்றத்தார். இந்தச் செல்வந்தர் சுற்றத்தாராகிய கிளைகளைத் தாங்க வேண்டும். பிறகு ஏன், 'கிளை' என்று சொல்லாமல் 'செழுங்கிளை' என்கிறார் ஔவையார். திறமையோடு இந்த உவமையைக் கையாள்கின்றார் ஔவையார். அவர்களாகவா கையாண்டார்கள், அது தானாகவே வந்து விழுந்தது.

மரத்தில் நாலாபக்கமும் கிளைகள் இருக்கும். அதில் ஒரு கிளை பட்டுப்போய் விட்டது. அப்படிப்பட்ட கிளையை அந்த மரத்திலேயே விட்டு வைக்கக்கூடாது. பட்டுப்போனவுடன் அந்தக் கிளையை அறுத்து அப்புறப்படுத்திவிட வேண்டும். ஏனென்றால் அந்த மரத்தில் அக்கிளை இருந்தால் அதன்மேல் விழுகின்ற மழைநீர் அந்தக் கிளைக்குச் சாக்காடு கொடுப்பதோடு அடி

மரத்துக்கும் சாக்காட்டைத் தந்துவிடும். அதனால் மரமே பட்டுப்போக வாய்ப்பிருக்கின்றது. அதனால் அந்த மரம் பட்டுப் போன கிளையைத் தாங்கக் கூடாது என்பது இதன் உட் பொருள்.

பட்டுப்போன கிளையில் பட்டை இருக்காது. அதனால் போரை விழுந்துவிடும். அந்தப் போரையில் பலவிதமான பூச்சிகள், பூரான், தேள், பறவைகள் என்று பல உயிரினங்கள் வந்து பொந்து வைத்து வாழ ஆரம்பித்துவிடும். அந்த மரத்தினடியில் யாராவது வந்தால் அவர்களுக்கு அந்தக் கிளை நிழல் தராது. மாறாக அதில் உள்ள பூரான், தேள் போன்றவை அவர்கள் மேல் விழ வாய்ப்பிருக்கும்.

பட்டுப்போன கிளை மீண்டும் எக்காலத்தும் தழைக்கப் போவதில்லை. அது மலர், காய், கனி என்று எந்தவிதப் பயனையும் இனி தரப்போவதுமில்லை. அப்படிப்பட்ட கிளையை அந்த மரம் தாங்கக் கூடாது. அதுபோல யாருக்கும் பயன்படாத, பிறருக்கு இடரை விளைவிக்கின்ற சுற்றத்தாரை ஒரு செல்வந்தர் காக்கக் கூடாது. ஆனால் நல்ல கிளைகள் போன்ற சுற்றத்தாரைக் காக்க வேண்டும். நல்ல கிளைகள் போன்ற சுற்றத்தார் தன்னிடத்திலிருந்து பெற்ற பயன்களைத் தனக்கு மட்டும் பயன்படுத்தாமல் மற்றவர்களுக்கும் பயன்படுத்துவர் பட்டுப்போன கிளை போன்ற சுற்றத்தார் தன்னிடம் பெற்ற பயன்களைத் தனக்கு மட்டும் பயன்படுத்துவதோடு, தனக்கே தீங்கு விளைவிப்பர். இவ்வளவு கருத்துக் களையும் உள்ளடக்கியுள்ளது இந்தப் பாடல்.

எனவேதான் தாழ்வான உணர்வுள்ள மக்களுக்கு பசிக்கு உணவு கொடுக்கலாம், உடை கொடுக்கலாம், ஆனால் பொருள் மட்டும் கொடுக்கக் கூடாது. இதற்கு உதாரணமாக ஒரு கதை இருக்கிறது. அதைச் சொன்னால் விளங்கிவிடும்.

ஒருவன் பசியோடு வந்தான். அவனைப் பார்த்த ஒரு செல்வந்தர் அவனுக்காக இரக்கப்பட்டு உணவு கொடுத்துப் பசியாற்றினார். பசியாறிய பின்னர் அவன்

அவரைப் பார்த்து, 'ஐயா, எனக்கு உணவு கொடுத்துப் பசி ஆற்றி என் உயிர் பிழைக்கச் செய்தீர்கள். நாளும் எனக்கு உணவு கொடுக்க உங்களால் ஆகாது. எனக்குத் தொழில் ஒன்று தெரியும். நாலணா கொடுத்தால் அதை முதலாகக் கொண்டு அந்தத் தொழில் செய்து நான் பிழைத்துக் கொள்வேன் என்றான். அவனுடைய ஊக்கத்தைக் கண்ட செல்வந்தர் அவனுக்குப் பணம் கொடுத்தார். அவன் அதைக் கொண்டு ஒரு தூண்டில் வாங்கி, மீன் பிடித்து வியாபாரம் செய்து வந்தான். சிறிது வசதி வந்ததும் படகு வாங்கி அதில் சென்று மீன் பிடித்து வியாபாரம் செய்தான். இன்னும் வசதி வந்ததும் பல படகுகள் வாங்கி, அவற்றில் ஆட்களை அமர்த்தி மீன் பிடித்து வியாபாரம் செய்து பெரும் பணக்காரனாகிவிட்டான்.

ஒருநாள் அவன் வீட்டைத் தேடி ஒரு பெரியவர், வறியவர், பசியோடு வந்தார். அவரைப் பார்த்ததும் அவன் அவரை அழைத்துச் சென்று உணவு கொடுக்கப் போனான். பேச்சுவாக்கில் ஒருவரை ஒருவர் அடையாளம் தெரிந்து கொண்டார்கள். தனக்குச் செல்வம் வந்த வழியை அந்தப் புதிய செல்வந்தன் சொன்னான். அதற்காக வந்த பெரியவரிடம் நன்றி பாராட்டினான். பெரியவர் அவனைக் கையெடுத்து வணங்கிவிட்டு, உன் வீட்டில் உணவு கொள்ளமாட்டேன் என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார் என்ன காரணம்? இவன் செய்த பாவச் செயல் அவருடைய செல்வத்தைத் தேய்த்துவிட்டது.

மீன் பிடிப்பது ஒரு தொழில்தானே என்று கேட்கலாம். அது தொழில் என்றாலும் பல உயிர்களை மாய்க்கின்ற கொடுமையான தொழிலாகும். ஆட்டை அறுப்பதும், மாட்டை அறுப்பதும், மீன் பிடிப்பதும் இன்றைக்குப் பாவமான செயல்களாகத் தெரியவில்லை. இது மட்டுமன்று. ஆளையே கழுத்தை அறுக்கின்றார்கள். அதையும் யாரும் பாவம் என்று எண்ணவில்லை. இன்றைக்குப் பாவம் எது, புண்ணியம் எது, செய்யத் தக்கது எது, தகாதது எது என்று அறிந்து கொள்ளாத மயக்க நிலையில், எதைச் செய்தால் பொருள் சேர்க்கலாம் என்ற மனநிலையில் மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள்.

எனவே பாவத் தொழிலுக்கு நம்முடைய பொருள் பயன்படக்கூடாது. அதானால்தான் ' தக்கார்கை பட்டக்கால் வான்சிறிதாய் போய்விடும்' என்றார். கொடுப்பது எதுவாக இருந்தாலும், அளவு எதுவாக இருந்தாலும், யாருக்குக் கொடுக்கின்றோம் என்று பார்த்துக் கொடுக்க வேண்டும். தக்கார், தகாதார் யார் என்று அறிந்து உதவி செய்ய வேண்டும்.

என்னுடைய பத்தாவது வயதிலே நான் சொன்ன ஒரு நீதி மொழி இப்போது நினைவுக்கு வருகின்றது.

தேடிய பொருள்கொண்டு தன்இல்நிலை சரியிட்டபின்
எஞ்சிய பொருள் ஈதலே அறம்.

ஊருக்கெல்லாம் கொடுப்பதற்கு நினைக்காதே. முதலில் உன்னையும், உன் சூழலையும் பார்த்துக் கொள். அதன்பின் மற்றவர்களைப் பார். மேலும்,

ஈதல் அறமேயாயினும் எவர்க்கேனும் ஈதல்
அறமாகா ஏற்போன் எந்நிலையில் உள்ளானெனக்
கொள்ளுதல் நிலையறிந்து ஈதலே அறம்.

என்றும் பாடியிருக்கின்றேன். இது சரியா, தப்பா, என்று அப்போது எனக்குத் தெரியாது. ஏற்றுக் கொள்கின்றவன் யார்? அவன் எந்த நிலையில் உள்ளான்? என்று அறிந்து, விளங்கிக் கொண்டு புரிவதே அறம்.

சில செய்திகளை அப்படித்தான் பார்க்க வேண்டும். அறவுரைகளை எல்லோர்க்கும் சொல்லிக் கொண்டே போகலாம். உணவு யார்க்கு வேண்டுமானாலும் கொடுக்கலாம். பாவிக்கும் கொடுக்கலாம். ஆனால் பாவிகளை நட்பாக்கிக் கொண்டு பொருள் கொடுத்து உதவக் கூடாது.

நம் பெரியவர்கள் இக்கருத்துக்களையெல்லாம் விளக்கிக் கொண்டு, நமக்கு மிகவும் அற்புதமான செய்திகளையெல்லாம் சொல்லி வைத்திருக்கிறார்கள். நமக்கு இந்த நூல்களையெல்லாம் ஆக்கித் தந்து, இத்தகு உண்மைகளையெல்லாம் விளங்கிக் கொள்ளுமாறு செய்திருக்கின்றார்கள். இவ்வளவு நூல்கள் இங்கே கிடைத்திருப்பது மிகவும் அற்புதமானது. இந்தநூல் களையெல்லாம் நாம் ஏன் நம்பவேண்டும் என்றால்,

உலகத்தில் பல சமயங்கள் இருக்கின்றன. அவற்றில் கிறித்துவ சமயம் இன்று உலகமெல்லாம் பரவியிருக்கின்றது. அதற்கு ஆள் சேர்க்கின்றார்கள். அது அவர்களுடைய இயற்கை. அது சரியா? தப்பா? என்று நாம் விமர்சனம் செய்யக் கூடாது. அந்தக் கொள்கையிலே இரண்டு நூல்கள் வைத்திருக்கிறார்கள். புதிய ஏற்பாடு, பழைய ஏற்பாடு என இரண்டு நூல்கள் உண்டு. அதை வேதாகமம் என்றே அவர்கள் சொல்லுகின்றார்கள். அதிலும் நமக்கு எந்தவிதமான மாறுபாடும் இல்லை. ஆனால் இந்த நூல்களை யார் செய்தார்கள் என்றால், ஏசுநாதர் சொன்னதாகச் சொல்கின்றார்கள்.

அந்த நூல் அவர் கைப்பட எழுதியதா? என்றால் அவரிடத்தில் மாணவர்களாக இருந்தவர்கள் கேட்டுக் கொண்டிருந்த செய்திகளைத் தொகுத்து வைத்திருக்கின்றார்கள். அவரிடத்தில் இருந்த மாணவர்கள் எல்லோருமே அவரை நம்பவில்லை. அவரை நம்பியவர்கள் 30 ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் இப்படிச் சொன்னார் என்று இந்த நூல்களை உருவாக்கியுள்ளனர் இது இயலுமா? நேற்று நான் சொன்னதை இன்றைக்குச் சொல்லுங்கள் என்றால் யர்ராவது முழுமையாகச் சொல்ல இயலுமா? 30 ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் சொன்ன கருத்துக்களைச் சொல்வது என்பது மிகவும் கடினமான செயல். அதில் சில திருத்தங்கள் இருக்கத்தான் செய்யும். ஆனால் அவர் சொன்ன சாயல்கள் அதில் இருக்கும். ஆனால் ஆசிரியர் சொன்ன கருத்துக்கள் முழுமையாக அதில் இருக்குமா என்றால் சந்தேகமே. ஆசிரியர் சொன்ன கருத்துக்களை மாணவனால் முழுமையாக அப்படியே சொல்ல முடியாது.

நான் படித்த காலத்தில் என் ஆசிரியர் எத்தனையோ கருத்துக்களைச் சொல்லியிருக்கின்றார். ஆனால் அத்தனை கருத்துக்களையும் என்னால் இன்றும் அப்படியே சொல்ல முடியவில்லை. மாறாக, என்னுடைய இயல்பிலே அக்கருத்துக்களைக் கொண்டு வந்து, கேட்பவரின் இயல்புக்கேற்றவாறுதான் இன்றைக்குச் சொல்லிக் கொண்டிருக்கின்றேன். இந்த நிலையில் சொல்லப்பட்டது தான் பழைய ஏற்பாடு. அதைக் கொஞ்சம் திருத்தி வந்தது

புதிய ஏற்பாடு. இனியும் ஒரு புதிய ஏற்பாடு வந்தாலும் வியப்படைவதற்கில்லை.

ஆனால் நம்முடைய நூல்கள் அப்படி வரவில்லை. திருக்குறள் என்றால் திருவள்ளுவரே தம் கைப்பட எழுதிக் கொடுத்த நூல். அதில் மாற்றங்களுக்கு இடமேயில்லை. மேலும் நம்முடைய நூல்கள் யாவும் யாப்பு நூல் முறையில் அமைக்கப்பட்டுள்ளன. யாப்பு என்றால் கட்டப் படுதல். யாப்பு நூலுக்கு என்னென்ன அமைப்பு இருக்க வேண்டுமென்று விதி இருக்கிறது. இந்த உடம்பை வைத்து அந்த இலக்கணம், வகுத்திருக்கிறார்கள். யாப்பு நூல் விதியாவன: எழுத்து, அசை, சீர், பந்தம், அணி, தொடை, பாகுபாடு என ஏழு விதிகள். நம் உடம்பும் ஏழு வகையான தாதுக்களால் அமைந்தது. இதே போலத்தான் பாட்டும் ஏழு வகையான தன்மையினாலே அமைய வேண்டுமென்று சொல்லியிருக்கின்றார்கள். வகுத்து வைத்திருக்கின்றார்கள். நம்முடைய பாடல்களில் உள்ள சொற்களை முன்னும், பின்னும் மாற்றியமைத்துவிட முடியாது. நம்முடைய நூல்கள் யாவும் அருளாளர்களால் பாடப்பெற்றவை. அவர்கள் இலக்கணத்தை வைத்துக் கொண்டு, எழுத்து எண்ணிப் பாடவில்லை. அவர்கள் பாடல்கள் யாவும் இலக்கணத்தை உள்ளடக்கி, அருள்மொழியாகவே அமைந்த பாடல்கள்.

உதாரணத்திற்கு இரண்டொரு கருத்துக்களைப் பார்க்கலாம். ஒரு குழந்தை இறந்துவிட்டது; அல்லது கணவன் இறந்துவிட்டான். குழந்தையை இழந்த தாயும், கணவனை இழந்த மனைவியும் அழுகின்ற போது கவனித்துப் பாருங்கள்.

பாசுமணி கோசுகட்டி பல்லக்குகள் இரண்டு கட்டி என்றெல்லாம் பாடுவார்கள். அழுது கொண்டே பாடுகின்ற பாடல்களில் எதுகை இருக்கும், மோனை இருக்கும், இன்னும் என்னென்ன இலக்கணங்கள் உண்டோ அத்தனையும் இருக்கும். உணர்ச்சிகள் பொங்கிவிடுமானால் பாட்டுக்கள் தாமாகவே எழும். இவை யாவும் கனிந்தெழுந்த பாட்டுக்கள். கட்டிய பாட்டுக்கள் அல்ல. ஒன்றை இழந்தபோதும் இத்தகைய

பாடல்கள் எழும். இறைவனைக் கண்டு மகிழ்ந்த போதும் பாடல்கள் எழும். உணர்வுகள்தான் இங்கே முக்கியம்.

இன்னொரு உதாரணம். இளமைக் காலம். ஓர் ஆணும் பெண்ணும் சந்தித்துக் கொண்டார்கள். இருவருக்குள்ளும் ஏற்பட்டது மன ஈர்ப்பு. இன்றைய மொழியில் காதல். அன்றைய மொழியிலும் காதல்தான். அப்படி ஈர்த்துக் கொள்ளப்பட்ட, காதல் வயப்பட்ட ஆணும் பெண்ணும் ஒருவருக்கு மற்றவர் எழுதும் மடல்களைப் பார்த்திருக்கின்றீர்களா? பெருங்கவிகள்கூட காதலர்களின் வர்ணனையும், காதல் மொழிகளையும் கண்டு மயங்கிவிடுவார்கள் அந்த அளவுக்கு அவர்கள் எழுதுவார்கள். 'நீ சிரிக்கின்ற போது முல்லை அரும்பியதுபோல இருக்கின்றது' என்றும் 'உன் முகத்தைப் பார்க்கின்றபோது முழுநிலவு தோன்றியது போல இருக்கின்றது' என்றும் வரிந்து வரிந்து எழுதுவான். அதுவே திருமணம் முடிந்த பின்பு, 'மூஞ்சியைப் பார்' என்றும், 'இளிக்காதே' என்றும் பேசுவான். அது வேறு செய்தி. ஆரம்ப வேகத்தில் வந்து விழும் சொற்கள் மிகவும் இனிமையாகவும், கிளர்ச்சியூட்டுவனவாகவும் இருக்கும்.

அப்படி, ஞான நிலையில் உயர்ந்துவிட்ட ஞானிகள் உள்ளம் கனிந்து இருக்கின்றபோது தெளிவாக இருக்கும். தெளிந்த இடத்தில் நீர் சுரப்பது போலப் பாட்டுக்கள் வெளிவரும். மணற்கேணியில் தண்ணீர் தானாகச் சுரப்பது போல. பற்றற்ற ஞானிகள் உள்ளத்தில் தெளிவாகச் செய்திகள் ஊறிக் கொண்டேயிருக்கும். எப்போதும் இயற்கையைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டேயிருப்பார்கள். அந்த இயற்கை வெளியிலே காணப்படுகின்ற அசைவுகளையெல்லாம் இறைவனாகவே காண்பார்கள். அப்படிக் கண்ட போது அவர்கள் உள்ளம் ஆச்சரியப்படும். அந்த ஆச்சரியத்தில் பதிந்த அவர்களது மனம் உணர்ச்சி வசப்பட்டு நிற்கும். அப்போது பாடுகின்ற பாடல்கள் யாவும் கனிந்தெழுந்த பாடல்கள். அவற்றை அவர்களேயும் எழுதலாம். அல்லது அவற்றைக் கேட்டுக் கொண்டிருப்பவர்களும் எழுதலாம். அக்காலத்தில் இருந்தவர்கள் ஆற்றல் நிரம்பப் பெற்றிருந்தார்கள். இப்போது நமக்கு வேகம் குறைந்திருக்கின்றது; மனிதத்

திறம்கூடக் குறைந்திருக்கின்றது என்றே சொல்லலாம்.

முன்பெல்லாம் ஒரு கணக்கைச் சொன்னவுடனே விடையைச் சொல்லி விடுவார்கள். அதற்கு மனக்கணக்கு என்று பெயர். அதற்குப் பின்னர், ஏடுகளும், எழுதுகோல்களும் வந்தன. அவற்றை வைத்துக் கொண்டு கணக்குப் போட ஆரம்பித்தார்கள். இப்போது கணிப் பொறி என்று வந்துவிட்டது. ஏடும் எழுதுகோலும் வந்த காலத்தில் மனக்கணக்குப் போடும் திறம் குறைந்தது. கால்குலேட்டர் வந்த காலத்தில் பேனா, பேப்பரை வைத்துக்கொண்டு கணக்குப் போடும் திறம் குறைந்தது. இப்படியே இப்போது பலவிதமான திறமைகள் குறைந்து கொண்டே வந்துவிட்டன.

எழுத்தாணியும் ஓலையும் கொண்டு பாடல் களை எழுதும்போது வேகமாக எழுதுவார்கள். சங்கிலி கோத்ததுபோல் தொடர்பாக எழுத்துக்கள் வந்து விழும். பாட்டாகப் பாடும்போது வேகம் அதிகமிருக்காது. இராகம் போட்டுப் பாடுவதால் அதை எழுதிக் கொள்ளுவதும் எளிதாக இருக்கும்.

சொற்பொழிவு செய்யும் போதும் அப்படி வேகமாக எழுதலாம். சிறிது சிரமமாக இருக்கும். பாடுகின்ற போது வேகமான பேச்சு இருக்காது. ஒரு சொல்லுக்கும் இன்னொரு சொல்லுக்கும் இடையே கால இடைவெளி சிறிது கூடுதலாகவே இருக்கும். அப்போது எளிதில் ஓலைகளில் பதிந்து வைத்துவிடலாம்.

ஒருவரை ஞானி என்றோ, பெரியவர் என்றோ கருதிவிட்ட பின்பு அவர்களது மொழிகளையெல்லாம் பொன்போல் கருதுவார்கள். அதனால் அவற்றை ஏட்டில் எழுதிக் கொள்வார்கள். அப்படிக் கருதி எழுதி வந்த சுவடிகள்தாம் இன்றைக்கு நமக்கு அருள் நூல்களாகக் கிடைத்திருக்கின்றன. அச்சுவடிகளில் பல இன்று செல்லரித்தும் போய்விட்டன. அழிவிலிருந்துதப்பி நமக்குக் கிடைத்தவைகளும் உண்டு.

இப்படிக் கிடைத்த அருள் நூல்களைப் படிப்போர், பாராயணம் செய்வோர், பாராட்டுவோர் பல்லோர். ஆனால் படித்ததை வைத்து வாழ்க்கையில் பயனடைந்தோர் சிலரே.

வள்ளல் பெருமான் தாம் இயற்றிய பாடல்கள் யாவற்றையும் தாமே தம் கைப் பட எழுதி வைத்திருக்கிறார். இதுபோல முன்னோர்களும் எழுதி இருப்பார்கள் என்று எண்ண வாய்ப்பிருக்கின்றது. ஒரே இரவில், அகவல் முழுமையும், அடித்தல் திருத்தல் இன்றி, எழுதி முடித்திருக்கின்றார். இது நம்மால் ஆகக்கூடிய காரியமா? எண்ணிப் பாருங்கள்! வியப்பாகத்தான் இருக்கின்றது.

இப்படிப்பட்ட அருள் நூல்களில் சித்தாந்த நூல்களும் அடங்கும். சித்தாந்தம் என்றால் இயற்கையின் பாகுபாடுகளை விவரித்துக் கூறுதல் ஆகும்.

நமக்குத் தத்துவங்கள் என்னத்திற்கு? பத்தியிருந்தால் போதாதா? என்ற எண்ணம் எழும். காய்கறியெல்லாம் எதற்கு? சாம்பார் மட்டும் இருந்தால் போதாதா? என்பது போன்றது இது. காய்கறி இருந்தால் தானே சாம்பார் வைக்க முடியும். எல்லாம் இருந்தும் சமைப்பது எப்படி என்று தெரியாத ஒருவன் சமைத்தால் எப்படியிருக்கும்? அதை உண்ண முடியுமா?

தத்துவங்கள் காய்கறி போன்றவை. அவற்றைத் தெரிந்து, வகைப்படப் பயன்படுத்துவது முறைப்படச் சமைப்பது போன்றது தத்துவ ஆராய்ச்சி. அப்போதுதான் அது வாழ்க்கை என்ற பொருளுக்குச் சுவை கூட்டுவதாக இருக்கும். ஆகவே, தத்துவங்கள் என்பவை தேவையற்றவையல்ல. தெரிந்து கொள்ள வேண்டியவை. 'சத் விசாரம்' என்றே வள்ளல் பெருமான் சொல்லுவார்.

ஒவ்வொருவரும் 'சத் விசாரம்' செய்ய வேண்டுமென்றே வற்புறுத்துவார். அறிவினால் அறிந்து அறியாமைக்கு இடம் கொடாமல் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லுவார்.



பக்தி என்பதா? பத்தி என்பதா? எது சரியான சொல். அச்சொற்களின் பொருள் என்னவென்று பார்ப்போம்.

பக்தி என்பது வேற்று மொழிச்சொல். பத்தி என்பது தமிழ்ச் சொல். பக்தி என்ற சொல்லிலிருந்துதான் பத்தி என்ற தமிழ்ச் சொல் வந்தது என்று வாதிடுவாரும் உண்டு. மேலும் அவர்கள் தமிழ் என்ற மொழியில் எந்தச் சொற்களுமேயில்லை; அவற்றில் இருப்பன யாவும் வேற்று மொழியில் இருந்துதான் வந்தன என்றும் சொல்லிக் கொண்டிருக்கின்றனர். அவர்களைச் சொல்லிக் குற்றமில்லை; அவர்களுக்குச் சொல்லிக் கொடுத்ததை அவர்கள் சொல்லிக் கொண்டிருக்கின்றார்கள்; அவ்வளவுதான்.

'பத்தியால் யான்உனைப் பலகாலும் ....' என்பார் அருணகிரிநாதர். 'பக்தி' என்று சொல்ல மாட்டார். அப்படியே 'முத்தி நெறி அறியாத மூர்க்கரோடு முயல்வேனை ....' என்ற பாடலில் 'பத்திநெறி அறிவித்து...' என்று பாடுவார் மணிவாசகர்.

பத்தி என்பதற்கு ஒழுங்கு நெறி என்றும், பத்தி நெறி என்பதற்கு அன்பு நெறி என்றும் பொருள். பக்தி என்பது மன நெகிழ்ச்சியைக் குறிக்கும் சொல்.

பத்தி – படிமுறை அல்லது படிநிலை என்று பொருள். வரிசையாக, ஒழுங்காகப் படிநிலையில் போவது என்று பொருள். கிராமங்களில் நடவு செய்யும் போது பத்தி பத்தியாக நடுங்கள் என்று சொல்லுவார்கள். பத்தி பத்தியாக என்றால் வரிசை வரிசையாக, ஒழுங்காக நடுதல் என்று பொருள். எனவே பத்தி நெறி என்பது ஒழுங்கு நெறி என்று பொருள்படும். பத்தி நெறியைக் கடைப்பிடித்தல் என்றால் ஒழுங்கு நெறியைக் கடைப்பிடித்தல் என்று பொருள் கொள்ளுதல் வேண்டும்.

ஒழுங்கு நெறி என்றால் என்ன? அதை எப்படிக் கடைப் பிடிக்க வேண்டும்? ஓர் உதாரணத்தின்மூலம் இதைப் பார்க்கலாம். விருந்துக்குப் போகின்றோம்.

போனவுடன் இலையிலா உட்காருகின்றோம். இல்லையே. முதலில் கையை அலம்பிக் கொள்கின்றோம். இது ஓர் ஒழுங்கு. அடுத்து இலை போடப்பட்டிருக்கும் இடத்தில் எங்கே வேண்டுமானாலும் உட்கார்ந்து விடக்கூடாது. நமக்கு முன்னே வந்து அமர்ந்திருக்கின்றவர்கள் பக்கத்தில் சென்று அமர வேண்டும். கண்ட இடத்தில் உட்கார்ந்தால் ஓர் ஒழுங்கு முறை இருக்காது. பரிமாறுபவர்களுக்கும் இடர்ப்பாட்டை உண்டாக்கும். இது இரண்டாவது ஒழுங்கு. மூன்று எல்லாப் பண்டங்களையும் பரிமாறுகின்றவரையில் பொறுமையாக அமர்ந்திருத்தல். இலையில் பரிமாறிக் கொண்டு இருக்கின்ற போதே எடுத்து உண்ணக் கூடாது. நான்கு எல்லோரும் சாப்பிடலாம் என்று சொன்ன பிறகே சாப்பிட வேண்டும். இப்பழக்கம் இன்றும் சில இடங்களில் கடைப்பிடிக்கப் பட்டு வருகின்றது. ஐந்தாவது நாம் துரிதமாகச் சாப்பிட்டு முடித்துவிட்டால் உடனே எழுந்து கை அலம்பப் போய்விடக் கூடாது. பக்கத்தில் அமர்ந்திருக்கின்றவரும் உண்டு முடிக்கின்ற வரையில் அமைதியாக இருந்து அவர் எழுந்ததும் எழுந்திருத்தல். பொது இடத்தில் சாப்பிடுவதிலேயே இவ்வளவு ஒழுங்கு முறைகளை நாம் கடைப்பிடிக்க வேண்டுமென்று நம் பெரியவர்கள் உணர்த்தியிருக்கின்றார்கள். அப்படியே வாழ்விலும் பலவிதமான ஒழுங்கு முறைகளை நாம் கடைப்பிடிக்க வேண்டியிருக்கின்றது. அப்படி முறையாக ஒழுகுவதற்குரிய நெறியே பத்திநெறி, அல்லது முத்தி நெறி என்று பெயர்.

பக்தி – மன நெகிழ்ச்சி, பத்தி – உயிர் நெகிழ்ச்சி. பக்தி கருவியின் பால் உண்டாகும் நெகிழ்ச்சி. பத்தி உயிரின்பால் உண்டாகும் நெகிழ்ச்சி. இரண்டுக்கும் பெருத்த வேறுபாடு உண்டு. மனம் என்பது 36 கருவிகளில் ஒன்று. மனதில் நெகிழ்தலாகிய தன்மை ஏற்பட்டு விடுமானால் அதற்குப் பக்தி என்று பெயர். அது முன் நிலை. கருவியில் நிகழ்வது.

பத்தி என்பது உயிர் நெகிழ்ச்சி. உயிர் கருவி, கரணங்களைக் கடந்தது. அதில் ஏற்படுகின்ற நெகிழ்ச்சிக்கு

அன்பு நெறி என்று பெயர். அன்பு நெறியால் உயிர் நெகிழும். பக்தி நெறியால் மனம் நெகிழும். இதில் எது சிறந்தது? அன்பு நெறியைத்தான் நம் பெரியவர்கள் பெரிது எனக் கடைப்பிடித்தனர். வாழ்வின் ஒவ்வொரு படியிலும் ஓர் ஒழுங்கு முறையை நம் பெரியவர்கள் கடைப்பிடித்து நமக்கும் வாழ்ந்து காட்டினார்கள்.

நாம் பெரியவர்கள் வாழ்ந்து காட்டிய பாதையில் போகாமல் எதற்கும் பிறர் கையை நம்பிக் கொண்டும், கதைகளையும், காலட்சேபங்களை யும் கேட்டுக்-கொண்டு, உண்டு உறங்கிக் காலத்தை வீணே கழித்துக் கொண்டிருக்கின்றோம். இன்றைய தலைமுறைக்கு முக்கியமாகத் தேவைப்படுவது விழிப்புணர்ச்சிதான். அதற்கு அருள்நூல்களைப் படித்து, அவை போதிக்கும் வழியில் ஒழுகுவதே சிறப்பாக அமையும்.

தத்துவங்கள் கடுமையானவை. அவை கடுமையாக இருக்கின்றனவே என்று நாம் விட்டுவிடுகின்றோம். அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறி விடுகின்றோம். தத்துவங்களைப் பயன்கொள்ளத் தெரியாமல் வாழ்க்கையை வீணடிக்கின்றோமே என்று நம்மைப் பார்த்து இரக்கப்பட்ட நம் பெரியவர்கள் தத்துவங்களின் நுட்பங்களை நமக்குச் சொல்லி வைத்தார்கள். அவை சிறு செய்திகளாயினும் அவற்றை விளக்கமாகச் சொல்லி வைத்துள்ளனர்.

தத்துவங்கள் யாவும் கடினமானவைதாம். அவற்றை நம்மால் தாண்டிவிட முடியாது. மாறாக அவற்றைப் படிகளாக்கிக் கொண்டால் அவற்றின் மீது ஏறி, உயர் நிலைக்குப் போய்விடலாம். நம்மை அழைத்துச் செல்ல இறைவன் எப்போதும் காத்துக் கொண்டிருக்கின்றான் என்பது நம் பெரியோர்களின் வாக்கு. படிகளைக் கடந்து மேலே போகப் போக எளிமையாகிவிடும். வேறு வகையாக இவற்றைப் பார்ப்போம்.

வீட்டுக்கு முன்னே இருக்கின்ற இடம் கொஞ்சம்

மண்ணாக இருக்கும். வீட்டிற்குள் வந்தால் கொஞ்சம் சுத்தமாகவும், நன்றாகவும் இருக்கும். அதுவே வழிபாட்டு அறைக்குள் பார்த்தால் இன்னும் சுத்தமாக இருக்கும். இப்படி இடங்களிலே இத்தனை மாற்றங்கள் தெரிகின்றது. நடை பாதையிலே இத்தனை மாற்றங்கள் இருக்கின்றன. அப்படியே தத்துவங்கள் ஒன்றுக்கொன்று நுட்பமாக விளங்குவனவாக இருக்கின்றன. உடம்பு நிரம்பவும் பெரிது.

மண் மிகவும் கடினமானது. தண்ணீர் அதைவிடக் கொஞ்சம் மென்மையானது. நெருப்பு அதைவிட மென்மையானது. காற்று அதைவிட நுட்பம். வான் மிக மிக நுட்பம். தரையைக் கொம்பால் அடித்தால் சத்தம் கேட்கும். தண்ணீரில் அடித்தால் சத்தம் கேட்கும். ஆனால் நெருப்பில் அடித்தால் சத்தம் கேட்குமா? கேட்காது. ஒன்றையொன்று நுட்பத்தில் விஞ்சியிருக்கும்.

தரையில் கொம்பால் அடிக்கும்போது சத்தம் உண்டாகும். ஆனால் தரைக்குள் கொம்பு போகாது. தண்ணீரை அடித்தால் சத்தம் கேட்கும். ஆனால் கொம்பு உள்ளேயும் போகும். நெருப்பில் அடிக்கும் போது சத்தமும் கேட்காது, தடையும் இருக்காது. கொம்பும் நெருப்பைத் தாண்டி அந்தப் பக்கம் போய்விடும். காற்றில் கொம்பை வீசினால் தடை தெரியும்; ஆனால் தடையாகவும் இருக்காது விட்டுவிடும். வானத்தைத் தொடவே முடியாது. எனவே ஐம்பூதங்களும் ஒன்றையொன்று நுட்பத்தில் விஞ்சியிருக்கும்.

அப்படியே பஞ்ச பூதங்களைவிட நம்மிடத்தில் அமைந்திருக்கும் மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து கருவிகளும் ஒன்றுக்கு ஒன்று நுட்பமாக அமைந்திருக்கும். இவற்றைக் கொண்டு நாம் மிக மெல்லிய பொருளைத் தேடி அலைதல் வேண்டும்.

மிக நுட்பமும், மிக மென்மையும், மிக மேலான தன்மையுடைய பொருள் எது என்றால், பஞ்சபூதங்களில் ஒன்றான வானம் தான். அது பரந்து கிடப்பது, அளவிட முடியாதது, தொட முடியாதது. அதன் தன்மைகளை

அறிந்து, அதைத் தொட்டுவிட்டால் அவன் கடவுளைப் பிடித்துவிட்டான் என்று பொருள்.

கடவுளைக் காண நம்மால் முடியுமா? மனிதன் முயன்றால் முடியாதது எதுவும் கிடையாது. அதற்கு என்ன வேண்டும்? கொஞ்சம் அறிவுதான் வேண்டும். அந்த அறிவோடு இயற்கையின் பாகுபாடும் தெரிந்திருக்க வேண்டும். அத்துடன் அது எப்படி இயங்குகின்றதோ அப்படியே நாமும் இயங்க வேண்டும். அதற்கு இயற்கையையே நாம் முன்னோடியாகக் கொள்ளுதல் வேண்டும்.

இந்த ஆன்மா தான் விரும்புகின்ற செய்திகளை யாராவது சொன்னால் கேட்டுக் கொள்ளுமே தவிர, மாறாகச் சொன்னால் ஏற்றுக் கொள்ளவே கொள்ளாது. அவர்கள் கூற்றில் அவநம்பிக்கையே கொள்ளும். உதாரணமாக,

ஓர் இளம் பெண், அப்போதுதான் ஒரு குழந்தையை ஈன்றெடுத்திருக்கின்றாள். மாம்பழம் கிடைக்கும் காலம். அவர்கள் வீட்டிலும் நிறைய மாம்பழங்கள் வாங்கி வந்திருக்கின்றார்கள். அவளுக்கு மாம்பழம் என்றால் உயிர். அதனால் ஒன்றிரண்டு மாம்பழங்களைச் சாப்பிடலாமே என்று எண்ணி எடுக்கின்றாள். வீட்டிலுள்ள மூத்தவர்கள் அவளைத் தடுக்கின்றனர். சாப்பிடக்கூடாது என்று அறிவுரை கூறுகின்றனர். அவளுக்கு மாம்பழம் சாப்பிட வேண்டுமென்ற அவா. ஆனால் பெரியவர்களோ தடுக்கின்றார்கள். தனக்கு மாம்பழம் சாப்பிடுவதில் விருப்பம் அதிகம் என்று தெரிந்திருந்தும் தன்னைச் சாப்பிட விடாமல் தடுக்கின்றார்களே, தனக்கு மாம்பழம் கொடுக்கக் கூடாது என்பதுதான் இவர்களது எண்ணம், அதனால்தான் தன்னைத் தடுக்கின்றார்கள் போலும் என்று எண்ணுகின்றாள். அவள் எண்ணியது சரியான எண்ணமா? இல்லை. அவள் மாம்பழம் சாப்பிடக் கூடாது என்று பெரியவர்கள் எண்ணவில்லை. குழந்தை பிறந்திருக்கின்ற அந்த வேளையில் அவள் மாம்பழம் சாப்பிடக் கூடாது என்றுதான் அவர்கள் எண்ணித் தடுத்தார்களே தவிர, அவள் சாப்பிடக்கூடாது என்று தடுக்கும் நோக்கம்

அவர்களுக்கில்லை. சரி, அந்த நேரத்தில் அவள் மாம்பழம் உண்டால் என்ன ஆகும்? இவள் மாம்பழம் உண்டால், அதில் உள்ள பொருள் அவள் பாலுடன் கலந்து, குழந்தைக்குப் பால் கொடுக்கும் போது குழந்தையின் வயிற்றுக்குச் சென்றால் மாந்தம் என்ற நோய் உண்டாகும். அதனால் குழந்தையின் உயிருக்கே ஆபத்து உண்டாகிவிடும் என்ற காரணத்தால் அவளைச் சாப்பிடக் கூடாது என்று தடுத்தார்களே தவிர அவளுக்கு மாம்பழத்தைக் கொடுக்கக் கூடாது என்பது அவர்களது நோக்கமன்று.

இப்படித்தான், ஒரு மாணவனும் ஆசாரியன் சொல்லுகின்ற நல்லுரைகளில் தனக்கு ஏற்புடையதாக இருந்தால் அவற்றை எடுத்துக் கொள்ளுகின்றான். ஏற்புடையதாக இல்லாவிட்டால் அதனை விட்டுவிடுகின்றான். ஆசாரியனையும் நிந்திக்கத் தொடங்கிவிடுகின்றான். ஆனால் ஆசாரியருடைய கடமை என்ன? மாணவனுடைய நன்மையைக் கருதி, இப்போது கசப்பாக இருப்பினும் பின்னால் அவனுக்கும் நன்மையை விளைவிக்கும் நன்மொழிகளைச் சொல்லிக் கொண்டிருப்பதுதான். அம்மொழிகள் இப்பிறவியில் மாணவனுக்குப் பயன்படவில்லையென்றாலும் பின்வரும்பிறவிகளிலேனும் அவனுக்குப் பயன்படும். அதுதான் உண்மையான ஆசாரியனின் தன்மை.

வீட்டில் தாயார் பாகற்காயும், உருளைக் கிழங்கும் சமைத்து வைத்து இருக்கின்றார்கள். பையன் பாகற்காயை விடுத்து, உருளைக் கிழங்கையே இன்னும் போடுங்கள், இன்னும் போடுங்கள் என்று சாப்பிடுகின்றான். இதில் உடலுக்கு நன்மை விளைவிப்பது எது? ஊறு விளைவிப்பது எது? என்று பையனுக்குத் தெரியுமா? தெரியாது. நாவுக்குச் சுவையானதை உண்ணுகின்றான், கசப்பாக உள்ளதைத் தள்ளுகின்றான். உருளைக்கிழங்கு உடலுக்கு ஊறு விளைவிக்கும் என்று தெரிந்து, தாயார் பாகற்காயையும் சமைத்து வைத்து அவனுக்கு ஊட்டுகின்றாள் பையன் தள்ளிவிடுகின்றான். இது உலகியல்.

அருளியலிலும் தாய்போன்ற ஆசாரியன்மார்கள் உண்மை விளக்கம் போன்ற நூல்களைச் சொல்லி வைத்திருக்கின்றார்கள். ஞான நூல்களைச் சொல்லி வைத்திருக்கின்றார்கள். தாய் தன் பிள்ளைகள் எப்போதும் நன்றாக இருக்க வேண்டும் என்று எண்ணுவது போன்று, ஞானிகள் இந்தச் சீவன்கள் எந்த நிலையில் இருந்தாலும், எப்படியாவது ஈடேற வேண்டுமே என்பதற்காகவே ஞான நூல்களையும், அருள் நூல்களையும் சொல்லி வைத்திருக்கின்றார்கள். அவர்கள் செய்கின்ற செயல்கள் யாவும் இறைவன் ஆணைவழி நின்று செய்வதேயாகும். அவர்கள் உயர்ந்ததுபோல, இவ்வுலகில் உள்ள பிற சீவன்களும் உயர வேண்டுமே என்பதற்காக அவர்களைத் தன் ஆணைவழி நிற்கச் செய்து, அவர்கள் மூலமாக மற்ற ஆன்மாக்களுக்கு உணர்த்துகின்றார் இதனை, ''எனதுரை, தனதுரை'' என்பார் திருஞான சம்பந்தர். ''நானுரைக்கும் வார்த்தையெல்லாம் நாயகன்தன் வார்த்தை'' என்பார் வள்ளல் பெருமான்.

அப்படியே மனவாசகங் கடந்தாரும் தற்போதமின்றி, அருள்வழி நின்று இந்த அருள் நூலை நமக்கு வழங்கியுள்ளார்.

சித்தாந்த நூல்கள் பதினான்கு. அவற்றுள் ஒன்றுதான் 'உண்மை விளக்கம்' என்ற இந்த நூல்.

இந்நூல் மெய்கண்டதேவ நாயனாரிடம் பாடம் கேட்டுக் கொண்ட ஒரு மாணவர் அருளியது. பாடம் கேட்டவர் மன வாசகம் கடந்தார். அவர் மனம், வாசகம் இரண்டையும் கடந்தவர். 'வாக்குமன மிறந்த வான் கருணையாளர்' என்று அவரைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்கள். இறைவன் வாக்கு, மனம் இரண்டும் கடந்தவன். அதைப்போலவே இந்நூலாசிரியரும் வாக்கு, மனம் கடந்து சிலவற்றைச் சிந்திக்கின்றார். எனவே அவருக்கு 'மனவாசகம் கடந்த தேவ நாயனார்' என்பது காரணப் பெயராக அமைந்துள்ளது.

மன வாசகம் கடந்தவர் என்று இவருக்குப் பெயர்

வரவேண்டும் என்றால் இவர் மனத்தையும், வாசகத்தையும் கடப்பதற்கு எவ்வளவு நாள்கள் ஆகியிருக்க வேண்டும்? நன்றாகப் படித்திருக்க வேண்டும்; படித்த வழி நின்றிருக்க வேண்டும்; நின்ற வழி ஒழுகியிருக்க வேண்டும்? அப்புறம் வாசகம் கடந்த இடத்தில் மனமும் அடங்கி நின்றிருக்க வேண்டும்.

**உண்மை விளக்கம்:–**

இந்நூலாசிரியர் மெய்கண்டாரை அணுகி, இயற்கையின் விளக்கங்களைக் கேட்க, அவர் தம் மாணவருக்கு அப்போது தேவையான கருத்துக்கள் சிலவற்றைத் தெரிவித்தார்.

இந்த உண்மை விளக்கத்தை ஒரே நாளிலும் விளங்கிக் கொள்ளலாம். நீண்ட நாட்கள் கேட்டாலும் விளங்காமலும் போகலாம். அது கேட்போர் உள்ளத்தைப் பொறுத்து அமையும்.

இந்நூலை நான்கு வகையாகப் பாகுபாடு செய்து சொல்லலாம் என்று எண்ணுகின்றேன்.

இந்த நூலின் பெயர் உண்மை விளக்கம் என்று பேசப்பட்டது. உண்மை விளக்கம் என்றால் என்ன?

உண்மை, பொய் என்று இரண்டு இருக்கின்றன. உண்மை நிலையானது; பொய் நிலையில்லாதது. பொய்யையே உண்மை என்று விளங்கிக் கொண்டிருக்கின்ற நமக்கு உண்மையை விளக்குதல் வேண்டும். ஆகவே உண்மையை விளக்க எழுந்த நூல் இது. மேலும் நிலையாக உள்ளது ஏதுவோ அது உண்மை. அதன் தன்மையை விளக்குவதற்கு எழுந்ததே இந்நூல். அதனால் இதற்கு உண்மை விளக்கம் என்று பெயர் வந்தது.

நிலையாக உள்ளது எது? நிலையில்லாதது எது?

நிலையாக உள்ளது மூன்று பொருள். கடவுள், உயிர், பாசம் என்பன. அதனை, பதி, பசு, பாசம் என்றும், இறை, உயிர், தளை என்றும் சொல்லலாம். இம்மூன்றும் எப்போதும்

நிலையாக உள்ளவை. இவற்றை விளக்க எழுந்ததே உண்மை விளக்கம். இதனை முப்பொருள் உண்மை என்றும் சொல்லலாம்.

இம்மூன்றும் நீங்கலாக மற்ற அனைத்தும் பொய் என்றே சொல்லலாம். பொய் என்றால் இல்லாதது அன்று. அழிந்து போவதும் அன்று. நிலையில்லாதது என்று பொருள். நிலையானது மூன்று பொருள். மற்றவையெல்லாம் நிலையில்லாதவை என்று பொருள். அவை நிலை மாறிக் கொண்டேயிருக்கும் தன்மையுடையன. முப்பொருள் எப்போதும் நிலை மாறாத் தன்மையுடையன.

ஒரு சின்ன விளக்கத்தையும் இங்கே தெரிந்து கொள்ள வேண்டும். முப்பொருளும் நிலையானவை. அதுபோலவே தத்துவங்களும் நிலையானவை. இப்படி இவைஇரண்டும் நிலையானவை என்றால் இரண்டுக்குமே உண்மை என்று தானே பெயர் அமைந்திருக்க வேண்டும்; ஏன் அப்படி அமையவில்லை?

ஒன்றை முப்பொருள் உண்மை என்றார்கள். மற்றதைத் தத்துவங்கள் என்று சொன்னார்கள். தத்துவங்கள் யாவும் நிலை மாறும் தன்மையுடையன. - நிலையாக இல்லாதன. முப்பொருள் என்பன நிலையாக உள்ளன. அதனால் அவற்றை முப்பொருள் உண்மை என்றார்.

உண்மை விளக்கம் என்ற சொல்லுக்கு இப்படியும் விளக்கம் கொள்ளலாம்.

பல சொற்களை நாம் சொல்லிக் கொண்டேயிருக்கின்றோம் ஆனால் அச்சொல்லினுடைய பொருள் என்னவென்று நமக்குத் தெரியாது.

உண்மை என்றால் உள்ளத்தால் உணரும் தன்மை என்று பொருள். 'உள்' என்பது உண் என வந்தது. 'மை' என்பது தன்மை விகுதியாக வந்தது. <u>**'உள்ளத்தால் உணரும் தன்மையுடையதை உண்மை என்றனர்.'**</u> அதனை நாம் விளக்குவதற்காக எடுத்துக் கொண்டிருக்கின்றோம் என்று பொருள். வெளியில் இருப்பதையே இன்னதென்று சொல்ல முடியாது. ஆனால் ஆசிரியர் உள்ளத்தால் உணரும்

தன்மையை விளக்கப் புகுந்திருக்கின்றார்.

எந்த ஒரு செய்தியையும் அறிவுக்கண் கொண்டு பார்க்க வேண்டும் என்பது நம் பெரியோர்களின் முடிவு. சித்தாந்த சாத்திரத்தின் தொடக்கத்திலே அடிப்படைகள் என்னென்ன என்று தெரிந்து கொள்ள வேண்டும் அதை அறிவோடு கூடிய விளக்கமாக வைத்துக் கொள்ள வேண்டும். இதைச் சொல்ல வருகின்ற போதே உண்மை விளக்கம் என்பார்.

உண்மையை விளக்குவது உண்மை விளக்கம். உள் உறையும் தன்மை உண்மை விளக்கம். பொதுவாக ஒரு பொருளைப் பார்க்கின்றோம். அந்தப் பொருள் உண்மை அல்ல. உதாரணமாக இந்த உடம்பு இருக்கின்றதே இதற்கு மெய் என்று சொல்லுகின்றோம். ஆனால் இந்த உடம்பு மெய்யல்ல. இதற்கு பொய் என்றுதான் பெயர். பொய்யை மெய்யாகச் சொல்லுவது வழக்கமாக இருந்து வருகின்றது. அது எப்படியெனப் பார்க்கலாம்.

இவ்வுடம்பு பருப்பொருளாகக் காணப்படுகின்றது. இந்த உடம்புக்குள்ளே ஒரு பொருள் இருக்கின்றது. அதற்குத்தான் உண்மை என்று பெயர். அது வெளிப்படையாக நம் கண்ணுக்குத் தெரிவதில்லை. ஆனால் இந்த உடம்புதான் ஒரு பொருளாக நம் கண்ணுக்கு தெரிகின்றது. பண்டமாகத் தெரிகின்றது. இதற்குள்ளே இருப்பது ஆன்மா; ஆன்மாவுக்குள்ளே இருப்பது இறைவன். இறைவன்தான் மெய். அவனுக்கு வைத்த பெயர் உயிருக்கு ஆகி, அது இந்த உடலுக்கு ஆகி வந்தது.

இப்படியே எந்த ஒரு பருப்பொருளை எடுத்துக் கொண்டாலும், அதன் உள்ளே ஒரு தன்மை இருக்கின்றது. அத்தன்மையை விளக்குவதற்கு 'உண்மை விளக்கம்' என்று சொன்னார்கள். அந்த உண்மையை, இயற்கைப் பொருள்களையும் இயற்கையையும் வைத்துக் கொண்டே பேசினார்கள். அந்த இயற்கை ஆயிரமாயிரமாக விரிந்திருந்தாலும், அவை யாவும் பஞ்ச பூதங்களுக்குள்ளே அடங்கிவிடுகின்றன.

உதாரணமாக, ஒரு குழந்தையைப் பார்க்கின்றோம். ''இவள் நிரம்பவும் கெட்டிக்காரி'' என்று சொல்லுகின்றோம். இதை எப்படிச் சொல்லுகின்றோம். கண் அழகாக இருக்கின்றதென்று சொல்லலாம்; மூக்கு அழகாக இருக்கின்றதென்று சொல்லலாம்; வாய் அழகாக இருக்கின்றது என்று சொல்லலாம்; சிரிப்பு அழகாக இருக்கின்றது என்று சொல்லலாம்; நடை அழகாக இருக்கின்றது என்று சொல்லலாம். இவையெல்லாம் புறத்தே நம் கண்ணுக்குத் தெரிகின்றது. அதனால் சொல்லலாம்.

இந்தக் குழந்தை என்பது புறக் கருவிகளால் மட்டும் சுட்டப்படுகின்றதா? இல்லை. அப்போது அதனுள்ளே ஏதோ ஒன்று இருக்கின்றது. அது என்ன? அது எதுபோல இருக்கின்றது? கண்போல இருக்கின்றதா? காது போல இருக்கின்றதா? இப்போது இளமையாக இருக்கின்றது அக்குழந்தை. எப்போதுமே இளமையாக இருக்குமா? சரி, அந்தக் குழந்தைக்குப் பெயர்வைத்திருக்கின்றோம். அது இந்த உடம்புக்கா? அல்லது உயிருக்கா? இந்தக் குழந்தைக்கு வைத்த பெயரைப் போலவே அப்பெயர் கொண்ட குழந்தைகள் பல இருக்கலாம். இந்தக் குழந்தை நடந்து கொள்வது போலவே மற்ற குழந்தைகளும் நடந்து கொள்ளுமா? இருக்காது.

இக்குழந்தை யார்? அதன் கண்ணா? அல்லது கண்போல ஒன்று உள்ளே இருக்கின்றதா. காதா? அல்லது காதுபோல உள்ளே ஒரு உருவம் இருக்கின்றதா? கையா? கைபோல உள்ளே ஒரு உருவம் இருக்கின்றதா? என்றால் புறத்தோற்றத்தால் எதையும் விளங்கிக் கொள்ள முடியாது. உண்மைகளை விளங்கிக் கொள்ள முடியாது. உண்மைகளை ஓரளவுக்கு அனுமானிக்க இவையெல்லாம் உதவும். ஆனால் உண்மைகளை வரையறுக்கப் புறக்கருவிகள் உதவா.

ஒருவர் கருணையோடு நம்மைப் பார்ப்பதுபோல இருக்கும். அந்தப் பார்வைக்குப் பின்னால் நம்மிடமிருந்து என்ன பறிக்கலாம் என்ற எண்ணம் இருக்கும். அந்த எண்ணம் நமக்குத் தெரியுமா? அந்த உண்மை நமக்குத் தெரியுமா? எனவே புறநிலை நிகழ்ச்சிகளாலே அகநிலை உணர்ச்சிகளை

நம்மால் உணர முடியாது. அதனால்தான் உள்ளத்தால் உணரும் தன்மையுடையது உண்மை விளக்கம். அது விளங்குவதனால் இதற்கு உண்மை விளக்கம் என்று பெயர் வந்தது.

சாத்திரம் என்பது சித்தாந்தம். அது அறிவியலை அடிப்படையாகக் கொண்டது. அதற்கு அடிப்படையாக விளங்குவது அனுபவம். அனுபவத்தால் அறியக் கூடிய ஒன்றை சித்தாந்தம் அல்லது ஆகமம் என்பார்கள். இரண்டும் ஒரு பொருளைக் குறிப்பன.

தான் இருந்து, கற்று, தெளிந்து, உணர்ந்து, அறிந்த அனுபவங்களை நமக்கு சொல்ல வந்தார். தமக்குள் எழுந்த ஐயங்களைத் தம் குருநாதனிடம் எழுப்பி, அவர் தெளிவிக்க, ஐயம் தெளிந்த பின், நமக்கு அதனைச் சொல்லுகின்றார். இதுவே இந்நூலின் அடிப்படை.

**நூல் மரபு**

கடவுள் வாழ்த்துப் பாடிய பின்புதான் நூலைத் தொடங்குவது என்பது பிற்கால மரபு. முற்காலத்தில் அப்படியில்லை.

**கடவுள் வாழ்த்து**

கடவுள் வாழ்த்து என்றால் என்ன? கடவுள் வாழ்த்து என்றால் விநாயகரை வாழ்த்துவது என்ற மரபு பின்பற்றப்பட்டு வருகின்றது. ஒரு நூல் செய்கின்ற போது விநாயகரை வாழ்த்திவிட்டு, "பெருமானே! நான் செய்கின்ற இந்நூல் உயர்ந்தது; இதை இயற்றுவதில் இடர் ஏதும் வாராமல் இருக்க அருள்க; என்று வேண்டிக் கொள்ளுவார்கள். அதே மரபைப் பின்பற்றி இந்நூலாசிரியர், 'தந்திமுகப் பெருமான் அடி போற்றி' இந்நூலைத் தொடங்குகின்றார்.

**விநாயகர் வழிபாடு**

விநாயகரைப் பற்றிய வழிபாடு நம்முடைய சிந்தனைக்கு உரியது. மிகவும் பழங்காலத்தில் விநாயகர் வழிபாடு இருந்ததாகத் தெரியவில்லை. அக்காலத்தில் இருந்தது முதல்வன் வழிபாடு. சுருக்கமாகச் சொன்னால் அம்மையப்பர்

வழிபாடுதான் இருந்தது. விநாயகர் வழிபாடு என்று ஒன்றும் கிடையாது.

இப்போது விநாயகர் வழிபாடு வேண்டாமென்றால் இவர் ஏதோ புதுமையாகச் சொல்லுகின்றார் என்று நினைப்பார்கள். சிறிது சிந்தித்தால் நான் சொல்வது புதிது அன்று; பழமையான செய்திதான்; ஆனால் கால ஓட்டத்தில் பிறழ்ந்து உணர்ந்து கொண்டிருக்கின்றோம் என்பதை உணரலாம்.

திருமந்திரம் சுமார் 7000 ஆண்டுகளுக்கு முற்பட்டது. அதிலும் விநாயகர் வழிபாடு இருக்கின்றதே. எனவே 7000 ஆண்டுகளுக்கு முன்னரே விநாயகர் வழிபாடு இருந்திருக்கின்றது என்று சொல்லுவதற்கு வாய்ப்பு இருக்கின்றது. இது பற்றி பின்னால் சிந்திக்கலாம்.

ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட திருக்குறளிலே விநாயகர் வழிபாடு இல்லை. சரி, அதற்கு முன்னும், பின்னும் இருக்கின்ற நூல்களிலும் விநாயகர் வழிபாடு இல்லையே. மாணிக்கவாசகப் பெருமான்தம் நூலில் விநாயகர் வழிபாட்டைச் சொல்லவில்லை. எடுத்தவுடனே பெருமானை, ''நமச்சிவாய வாழ்க; நாதன்தாள் வாழ்க'' என்று வாழ்த்திப் பாடுகின்றார். திருஞான சம்பந்தப் பெருமானும், ''தோடுடைய செவியன்...'' என்று தொடங்கித்தான் பாடுகின்றாரே தவிர, விநாயகரைப் பாடவில்லை.

அப்பர் பெருமானும், ''கூற்றாயினவாறு விலக்ககிலீர்...'' என்று தன் வயிற்று வலியைப் பற்றிப் பெருமானிடம் எடுத்துக் கூறுகின்றார். வயிற்று வலி வந்த நேரத்தில் கூடக் கடவுள் வாழ்த்துக் கூறிவிட்டுத்தான் பாடுவார்களா? சுந்தரமூர்த்தி சுவாமிகளும், ''பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா.... '' என்றே தொடங்குகின்றார். சங்க காலத்தில் இருந்த புலவர்கள்கூட கடவுள் வாழ்த்துப் பாடியதாகத் தெரியவில்லை. அப்படி எந்த வரலாறும் இல்லை.

ஐந்து கரத்தனை ஆனைமுகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக்கொழுந்தினை
புந்தியில் வைத்து அடி போற்றுகின்றேனே.

(திருமந்திரம்).

பிள்ளையார் யார் என்று கேட்டால் நந்தி மகன் என்று சொல்லுகின்றார். நந்தி என்றால், எந்த நந்தி? என்ற கேள்வி எழுகின்றது. பெரும்பகுதியான மக்களின் கருத்து என்னவென்று கேட்டால் ''நந்தி நாமம் நமச்சிவாயவே'' – ஐந்தெழுத்துக்குரியவனாக இருக்கின்றவன் சிவன் – சிவன் நாமம்தான் ஐந்தெழுத்து'' என்று சொல்லுகின்றார்கள். இன்னும் சிவனுடைய புதல்வன், விநாயகன் என்றும், அதுவே முழுமுதல் குழந்தை என்றும் சொல்லுகின்றார்கள். மேலும் முருகன், வீரபத்திரன் எல்லாம் சிவனுக்குக் குழந்தைகள் என்கின்றார்கள். தற்போது ஐயப்பனையும் சிவனுடைய குழந்தை என்கிறார்கள். இப்படிச் சிவபெருமானுக்குப் பல குழந்தைகள் இருப்பதாக பலவிதமான வரலாறுகளைச் சொல்லிக் கொண்டிருக்கின்றார்கள். இவையெல்லாம் பண்டைக் காலத்திலே இல்லை. அக்காலத்தில் இருந்த சில அடையாளங்கள் இன்னும் அப்படியே மாறாமல் இருக்கின்றன. அவற்றைக் கொண்டு உண்மைகளை அறிய முயற்சிக்கலாம்.

வீடு கட்டக் கடைக்கால் தோண்டப் போகின்றார்கள். அப்போது பிள்ளையார் வழிபாடு செய்கின்றார்கள். சாணத்தை உருண்டையாகப் பிடித்து விநாயகர் என்று வைக்கின்றார்கள். இரண்டு உருவங்களை வைக்கின்றார்கள். அப்படியே விவசாயிகள் நாற்று விடுகின்றபோது சனி மூலையில் பிள்ளையார் என்று சொல்லி மஞ்சளில் இரண்டு பிடி பிடித்து வைப்பார்கள். இவையெல்லாம் எதைக் குறிக்கின்றன? இவற்றுக்கு அம்மையப்பர் என்று பொருள். இரண்டை வைத்ததால் அம்மையப்பர் இந்த வழிபாடுதான் ஆதியிலிருந்து வருகின்றது. அதைப் பின்னால் வந்தவர்கள் எப்படியோ மாற்றி விநாயகர் வழிபாடு என்று கொண்டு வந்துவிட்டார்கள்.

சரி, எப்படியோ இச்சமுதாயத்தில் ஒரு பொருள் வந்துவிட்டது; அப்படி வந்துவிட்ட பொருளுக்கு ஒரு வரலாறும் சொல்ல ஆரம்பித்தார்கள். இப்படிப்பட்ட நிலையிலே விநாயகரை வணங்குவதாக இந்நூல்

சொல்கின்றது.

உண்மை விளக்கத்தை இந்நூலாசிரியருக்குச் சொன்னவர்மெய்கண்டார். அவர் செய்த நூல் 'சிவஞான போதம்'. சிவ ஞான போதம் என்னும் போதே அதன் பொருள் விளங்கிவிடும். ஞானத்தைப் போதிப்பது. போதம் என்றால் ஞானம் நிறைந்து விளங்குவது. சீவபோதமாக இருந்தவன் இப்போது ஞானம் விளங்கி சிவ ஞானபோதமாக விளங்குகின்றான்.

சீவபோதம் என்றால் தலைக்கனம் உள்ளவன் அல்லது ஆணவத்தோடு திகழ்கின்றவன் என்று பொருள். அவனைச் சீவபோதம் உடையான் என்பர். அடக்கமே வடிவமாக உடையவனைச் சிவபோதம் உடையான் என்பர். சீவபோதம் உடையான் தன் ஆணவத்தாலே பிறருக்கு தொல்லை கொடுத்துக் கொண்டிருப்பான். சூரபத்மன் அண்டங்களில் இருந்த அனைவருக்கும் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்ததைப் போல ஆணவம் உள்ளவன் எவ்வளவு கலைத்திறம், கல்வித் திறம், அல்லது எந்தத் துறையில் எந்தத் திறம் இருந்தாலும் தெளிவாக இருக்க மாட்டான். ஆணவம் இருப்பதால் பிறருக்கு எப்போதும் தொல்லை கொடுத்துக் கொண்டேயிருப்பான்.

ஆணவம் என்றேனும் ஒரு நாள் அழிந்துவிடும். சூரபத்மன் ஆணவத்தினால் எல்லாச் சீவர்களையும் அடக்கி ஆளும் பலம் பெற்றிருந்தும் கடைசியில் அழிந்துவிட்டான். அதற்குச் சீவபோதம் என்று பெயர்.

மணிவாசகர் சிவபோதம் பெற்று வாழ்ந்தவர். பால் குடித்தாலும் போதை வரும். கள் குடித்தாலும் போதை வரும். உணவு வகைகளை உண்டு போதை வந்தால் பரவாயில்லை. உடலுக்குக் கெடுதி இல்லை. ஆனால் கள் முதலான போதை தரும் பொருள்களை உண்டால் உடலுக்குக் கெடுதி வரும். அவ்விதம் சீவபோதம் வந்தால் கெடுதி. சிவபோதம் வந்தால் நன்மை. எனவே, சீவபோதம் அகல், சிவபோதத்தை, சிவஞான போதத்தை

நமக்குப் போதித்தவர் மெய்கண்டார். மிகச் சுருக்கமான நூலாக, 12 பாடல்களில் சொல்லியிருக்கின்றார். எல்லாம் மூன்று அடி நான்கு அடிப்பாடல்கள் மட்டுமே. பதி, பசு, பாசம் பற்றி தமிழிலே மிகசுருக்கமான நூல் அது ஒன்றுதான் அதைவிடச் சுருக்கமான நூல் தமிழில் கிடையாது. அவர் ஒரு காப்புச் செய்யுள் செய்திருக்கின்றார். அது விநாயகரைப் பற்றியது என்று பெருமக்கள் எல்லாம் உரையெழுதியிருக்கின்றார்கள்; இன்னும் சொல்லிக் கொண்டே இருக்கின்றார்கள். அதைப்பற்றிச் சிறிது சிந்திக்கலாம்.

சிவஞானத்தைப் போதிக்க வந்தவர் மூன்றாவது வயதிலேயே ஞானத்தைப் பெற்றுக் கொண்டார். அவர் திருவெண்ணெய்நல்லூரிலே வாழ்ந்தவர். அவ்வூரில் உள்ள பெருமானுடைய அருளைப் பெற்றிருந்தவர். அக் குழந்தை மூவாண்டிலேயே சிவஞானத்தைப் பெற்றிருந்தும், தனியே ஒரு வணக்கம் பாடுமா? அதுவும் ஒரு விநாயகனைப் பற்றி பாடுமா?

சிவஞான போத மங்கல வாழ்த்துப்பா குறளடிப் பாவில் பாடப் பட்டிருக்கின்றது. இரண்டு இரண்டு சீரால் பாடினால் குறளடி என்றும், மூன்று சீரால் வந்தால் அதற்குச் சிந்தடி என்றும், நான்கு சீரால் அமைந்தால் அளவடி என்றும்; ஐந்து சீரால் அமைந்தால் நெடிலடி என்றும், ஆறுசீர் அல்லது அதற்கு மேல் போனால் கழிநெடிலடியெனவும் யாப்பிலக்கணம் பேசும். திருஞானசம்பந்தர் பாடிய திருவிருக்குகுறளும் இந்தக் குறளடிகளால் பாடப்பட்டதே.

கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே

என்பது சிவஞான போதத்தின் கடவுள் வாழ்த்துப்பா. இதனை விநாயகர் வழிபாடு என்று எல்லோரும் எழுதியும், சொல்லியும் வருகின்றார்கள்.

சிறிது சிந்தித்துப் பார்க்கலாம்.

கல்லால் நிழல் – கல்லால மரத்தின் நிழலிலே அமர்ந்தவன்.

மலைவில்லார் – மலையை வில்லாகக் கொண்டவன்.

அருளிய – அருளிச் செய்த

இணைமலர்பொல்லார் – பொள்ளாப் பிள்ளையாரின் இணைமலர், பொள்ளாப் பிள்ளையார் – உளி கொண்டுசெதுக்காத, திருநாரையூரில் எழுந்தருளியிருக்கின்ற பிள்ளையாருக்குப் பொள்ளாப் பிள்ளையார் என்று பெயர், அவருடைய திருவடி மலர்களை,

நல்லார் புனைவரே – நல்லவர்கள் முடியில் குடிக் கொள்ளுவார்கள்.

கல்லால் மரத்தின் கீழ் அமர்ந்தது ஞானத்தை உபதேசிக்க; மலையை வில்லாக வளைத்தது முப்புராதிகளை எரிக்க; அவன் அருளால் வந்த பிள்ளையாரின் திருவடிகளைத் தம் முடி மீது வைத்து வணங்குவார்கள் என்று உரை சொல்லியிருக்கின்றார்கள்.

பொல்லார் என்பதற்கு விநாயகர் என்று பொருள் சொல்லியிருக்கின்றனர். பொள்ளார் என்ற சொல் இருக்க வேண்டும். அதற்குப் பொள்ளப்படாத பிள்ளையார் என்ற கருத்துத்தான் சரி என்றும் தோன்றும். ஆனால் பொல்லார் என்றுதான் இங்கே பாடலில் இருக்கின்றது.

இதைச் சற்று வேறு கோணத்தில் இருந்து எண்ணிப் பார்த்தால் உண்மை விளங்கும் என்று எண்ணுகின்றோம். கல்லால் நிழல் – கல்லால மரத்தின் நிழலிலே, கல் என்பது உறுதியைக் குறிக்கும்; உறுதிப் பொருளைத் தருகின்ற ஒரு மரத்தின் நிழலிலே அமர்ந்து இருப்பவர்; அவர் மலைவில்லார் – மலைவில்லாதவர், மலையை வில்லாகக் கொண்டவர். (நமக்கெல்லாம் மலைவு உண்டு. பெருமானுக்கு மலைவு என்பதே இல்லை; அவன் எதைக்

கண்டும் மலைப்பதில்லை.) அப்படி மலைவு ஏதுமில்லாதவர் அருளிய; (அவர் என்ன அருளினார்? யாருக்கு அருளினார்?) பொல்லார்க்கு அருளிய பொல்லாதவர்களாகிய முப்புராதிகள், அவர்கள் உயிர்களையெல்லாம் துன்புறுத்தியவர்கள், துன்புறுத்து கின்றவர்கள்; அத்துன்பத்தினின்றும் உயிர்களைக் காக்க மலைவில்லாதவன் மலையை வில்லாக எடுத்தான். எதற்காக? அவர்களை அழிப்பதற்காக அல்ல: முப்புராதிகளுக்கு அருளுவதற்காக மலையை வில்லாக எடுத்தான். பொல்லார் – அன்பில்லாதவர்; தீப்பணி செய்வோர் என்று பொருள்படும்.

இந்தப் பொல்லார் என்ற சொல் எப்படி வருகின்றது என்று பார்க்கலாம். யாப்பருங்கலக்காரிகை என்ற நூலிலே, ''பொல்லாக் கருங் காக்கை ....'' என்று வரும். காக்கை என்று சொல்லு கின்ற போது பொல்லாக் கருங்காக்கை என்று சொல்லு வார்கள். ஏன் அப்படிச் சொன்னார்கள்? உடலைத் தூய்மையாக வைத்துக் கொள்ளக் குளிக்கவும் செய்யும்; வயிற்றுப் பசியைப் போக்கிக் கொள்ள மலத்தையும் தின்னும் இயல்புடையது காக்கை. கரைந்து உண்ணும்; களவும் செய்யும்.

அதனால்தான் பொல்லாக் கருங்காக்கை என்றார்கள். எனவே பொல்லா என்பதற்குத் தீங்கு செய் வது, சரியில்லாதது; முறைகேடானது என்றெல்லாம் பொருள். இங்கே பொல்லார் என்று சொல்லுகின்ற போது பொல்லாதவர்கள் என்றே கொள்ளலாம். அப்படிப் பொல்லாதவர்களுக்கும் மலைவில்லாமல் அருள் செய்த பெருமானுடைய இணை மலரடியை நல்லாராகிய ஞானியர் தம் தலை மேல் சூடுவர் என்று பொருள் கொள்ள வேண்டும்.

கல்லால் மரத்தின் நிழலில் இருந்து மலைவில்லாமல் அமர்ந்து, மலையை வில்லாகக் கொண்டு, பொல்லாதவர்களாகிய முப்புராதிகளுக்கும் அருள் செய்த பெருமானுடைய இணையடியை நல்லாராகிய ஞானியர் தங்கள் தலைமேல் வைத்து

வழிபாடு செய்வர் என்பது இதன் கருத்து. கொண்டு கூட்டல் என்ற இலக்கண விதிப்படி இப்பாடலுக்குப் பொருள் கொள்ளுதல் வேண்டும். அப்போது பொருள் சரியாக இருக்கும் கல்லால மரத்தின் கீழிருப்பவன் யார்? சிவபரம்பொருளேயல்லவா; இக்கருத்தைக் கொண்டு பார்த்தால் இது முதல்வன் வழிபாடேயன்றி, பிள்ளையார் வழிபாடல்லவே;

சிவஞானபோதம் பிற்காலத்தில் வந்த நூல். இதற்கு முன்னே தோன்றிய திருமந்திரம் 7000 ஆண்டுகளுக்கு முன்னே தோன்றியதாயிற்றே. அதில் கூட பிள்ளையார் வழிபாடு இருக்கின்றதே என்ற ஐயப்பாடு எழக்கூடும். அதற்கு என்ன பொருள் சொல்லப் போகின்றீர்கள் என்று கேட்கலாம்.

திருமந்திரத்தில் ''ஒன்றவன்தானே ...'' என்று தொடங்கும் பாடல் தான் முதல் பாடல். அதற்கு முன்னே இருப்பது பாயிரம். அது திருமூலரால் செய்யப்பட்டதா? அல்லது வேறு யாராவது செய்து சேர்த்தார்களா? பாயிரம் செய்வதற்குரியவர்கள் யாரென்பதற்கு இலக்கணம் உண்டு

தன் ஆசிரியன் தன்னோடு கற்றோன்
தன்மா ணாக்கன் தகும்உரை காரனென்று
இன்னோர் பாயிரம் இயம்புதல் கடனே.
(நன்னூல். 50).

திருமந்திரம் இயற்றப்பட்ட பின், பல காலத்திற்குப் பின்னே, இந்நூல் தகுதியானது என்று உணர்ந்தவர்கள், அவர்களோடு பயின்று வந்தவர்களுள் இப்படி யாரேனும் பாயிரத்தை இயற்றியிருக்கக்கூடும். அப்படிச் செய்தவர்கள் காலம் பிற்பட்டது என்பதை அவர்கள் செய்த விநாயகர் வழிபாட்டைக் கொண்டே அறிந்து கொள்ளலாம். அவர்களுக்கு விநாயகர் வழிபாடு இல்லாமல் ஒரு நூல் இருப்பது ஒரு குறைபாடாக இருந்திருக்கும். அதனைப் போக்க எண்ணி விநாயகர் வழிபாட்டைச் சேர்த்திருப்பார்கள். இப்படிக் குறையாக இருக்கின்றதென்று கூடச் சேர்த்திருப்பார்களா? இப்படிச் செய்வார்களா? என்றால் அது பற்றிச் சிறிது சிந்தித்துப் பார்த்தால்விளங்கிவிடும்.

சங்க காலத்தில் புலவர்கள் பாடல்கள் பாடியிருக்கின்றார்கள். துண்டு துண்டாகப் பாடியிருப்பார்கள். அவற்றைப் பிற்காலத்தில் வந்தவர்கள் பத்துப் பாட்டு என்றும், எட்டுத் தொகை என்றும், பதினெண்கீழ்க்கணக்கு என்றும் வகுத்தார்கள். பதினெண்கீழ்க்கணக்கு என்று இருந்தால் பதினெண் மேல் கணக்கு என்றும் இருக்க வேண்டுமன்றோ? ''எழுதும் கீழ்கணக்கு இன்னம் பரீசனே'' என்று அப்பர் சுவாமிகள் பாடுவார். அப்படியானால் மேல் கணக்கு என்பது யாது? பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்று இரண்டையும் சேர்த்தால் பதினெட்டு ஆகின்றதல்லவா? அதுதான் பதினெண்மேல்கணக்கு. இவற்றைத் தொகுத்தும் வகுத்தும் வைத்த பெருமக்கள் அதில் கடவுள் வாழ்த்தையும் செய்து சேர்த்து வைத்தனர். அவற்றைச் செய்தவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். அதில் வரும் கடவுள் வாழ்த்தையும் செய்து சோர்ந்து வைத்தனர். அவற்றைச் செய்தவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். அதில் வரும் கடவுள் வாழத்துப் பாடல், ''கண்ணிகார் நறுங் கொன்றை'' என்று தொடங்கும் . சிவபெருமான் தலைமாலை அணிந்து, மார்பிலும் கொன்றை மாலையும் அணி ந்திருக்கின்றானாம். அவன் பக்கத்தில் இருப்பது சக்தி. சக்தி சில நேரங்களில் வெளிப்படவும் செய்யும். சில சமயங்களில் தன்னோடு கலக்கினும் கலக்கும்; மற்றும் சில நேரங்களில் அடக்கி வைப்பான் என்று வாழ்த்துப் பாடினார்.

விநாயகர் வாழ்த்து, பிற்காலத்திய மரபு. முற்காலத்தில் இல்லை. பரஞ்சோதி (சிறுத்தொண்டர்) வாதாபி வரை சென்று போர் செய்தார். போரின் நடுவே அவர் திகைத்து நின்றபோது வாதாபியில் இருந்த கணபதி அவருக்கு உற்சாகம் தந்தார். போர் செய்யத் தூண்டினார். தாம் தளர்ந்த போது உற்சாகம் தந்த வடிவம் கணபதி வடிவம். அதை வாதாபியிலிருந்து கொண்டு வந்தார். அதனால் அதற்கு வாதாபி கணபதி என்று பெயர். இப்படிப் பல வரலாறுகளைச் சொல்லுகின்றார்கள். அதன்பின் கோயில்களிலும் சிலைகளைச் செய்து வைத்துவிட்டார்கள்.

இந்தக் கருத்துக்களைச் சொன்னால்கூட இப்போது ஏற்பாரில்லை. ஏதோ ஒரு மாதிரியாகப் பேசுகிறார் என்று மக்கள் நினைக்கக்கூடும். சில நேரங்களில் உண்மையைச் சொல்லக்கூடப் பயப்பட வேண்டியிருக்கின்றது இந்தக் கருத்துக்கள் புதுமையாகத் தெரியும் , நம்முடைய மரபு தெரியாதவர்களுக்கு. நம்முடைய மரபு இப்போது காணாமல் போய்விட்டது. கிராமத்தார் சொல்லுகின்ற மரபாகப் போய்விட்டது. உதாரணமாக முன்பெல்லாம் குடுமி வைத்திருந்தார்கள். குடுமியில் பலவகை இருக்கும் நாளாக நாளாகக் குடுமி நகரத்தில் இருந்து மறைந்தது; பின்னர் கிராமத்தில் இருந்தும் மறைந்து; கோயில் பூசை செய்யும் மரபினரும் குடுமி வைக்க மறந்து கிராப்பு வைத்துக் கொண்டுவிட்டனர். இப்படித்தான் நம் மரபுகளும் எதையோ பார்த்து மாறிக் கொண்டே வந்திருக்கின்றது.

பண்டைக் காலங்களில் கோவில்களில், அதுவும் சிவன் கோவில்களில் நவக்கிரகம் வைத்து வழிபடுவதில்லை. இன்றைக்கும் சில சிவன் கோவில்களில் நவக்கிரகம் இல்லை. இன்றைக்கு எல்லாக் கோவில்களிலும் நவக்கிரகம் வைத்து வழிபடுகின்றார்கள். இப்படிச் செய்வது சரியில்லை. இதனைச் சொன்னால் எத்தனைபேர் ஏற்றுக் கொள்ளுவார்கள்.

அதேபோல கழுத்து வரையில் வைத்து ஒரு அம்மனை வழிபடுகின்றார்கள். ரேணுகாதேவி என்று அதற்குப் பெயர். பழங்காலக் கோவில்களில் கழுத்து வரையில் வைத்து வழிபட்டதில்லை. முழு வடிவமாகத்தான் இருக்கும் அது ஒரு முனிவருடைய மனைவி. அதற்கும் ஒரு கதை உண்டு. சமதக்கினி முனிவர் தன் மனைவிமேல் சந்தேகப்பட்டுவிட்டார். தன்னுடைய பிள்ளை பரசுராமரை அழைத்துத் தாயின் தலையை வெட்டிவிடச் சொல்லுகின்றார். எவ்வளவு அக்கப்போரான கதை பாருங்கள். பரசுராமனும் 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்று எண்ணி அக்காரியத்தை நிறைவேற்றப் போகின்றார். "நான் சொன்னதை நிறை

வேற்றிவிட்டு வந்தால் நீ கேட்ட வரத்தைக் கொடுக்கின்றேன்'' என்று தந்தை வாக்களிக்கின்றார். அப்படியே இவர் தாயைக் கொன்றுவிட்டு வந்து ஒரு வரம் கேட்டார். தன் தாயை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும் என்பதுதான் அந்த வரம். சரி என்று வரம் கொடுக்கின்றார். தாயை வெட்டிய இடத்திற்குப் போகின்றார் பரசுராமர். அங்கே தாயின் தலை மட்டும் இருக்கின்றது. உடலைக் காணவில்லை. மாறாக மற்றொரு பெண்ணின் உடல்தான் அங்கே இருந்தது. இவர் அது தெரியாமல் தலையையும், உடலையும் ஒட்ட வைத்து உயிர் கொடுக்கின்றார். தலை ஒருவருடையது, உடல் வேறு ஒருவருடையது என்ற செய்தி பின்னால்தான் தெரிகின்றது. அதற்குப் பின்னர் அந்த அம்மையாரை கழுத்து வரையில் வைத்து வழிபட்டுக் கொண்டு வருகின்றார்கள்.

இந்த நாட்டின் நிலையைப் பார்த்தீர்களா? கெட்டுப்போனவள் என்று ஒரு முனிவரால் நினைக்கப்பட்ட பெண்ணை வைத்து நாம் வழிபட்டுக் கொண்டிருக்கின்றோம். கெட்டுப் போனவர்களை வழிபடுவதுதான் இந்த நாட்டின் தலையெழுத்தாக இருக்கின்றது. அதேபோலக் கெட்டுப்போனவர்களைத்தான் பாராட்டிக் கொண்டும் இருக்கின்றோம்.

பத்து ஆண்டுகளுக்கு முன் வரையிலும் கோயில்களில் ஐயப்பனை கண்டதில்லை. இப்போது அதுவும் வந்தாயிற்று. அந்தக் கதையும் ஒரு அவக்கதை. சிவபெருமானுக்கு இழுக்கு தேடித்தரும் கதை.

இப்படியெல்லாம் சொல்லுவதால் தவறாக நினைக்கக் கூடாது. சிந்தித்துப் பார்க்க வேண்டும். நமது மரபுக்கு மாறாக எப்படியெல்லாம் வழிபாடுகளும், கதைகளும், புராணங்களும் இயற்றப்பட்டுள்ளன; அவற்றை எல்லாம் நம்பிக் கொண்டிருக்கின்றோம் நாம். ஏன் இந்த அவல நிலை? பக்தர்களாக இருங்கள். ஆனால் கண்முடித்தனமான பக்தர்களாக இருக்காதீர்கள். சிந்தித்துப் பாருங்கள்.

இந்தக் கருத்துக்களைச் சொன்னால்கூட இப்போது ஏற்பாரில்லை. ஏதோ ஒரு மாதிரியாகப் பேசுகிறார் என்று மக்கள் நினைக்கக்கூடும். சில நேரங்களில் உண்மையைச் சொல்லக்கூடப் பயப்பட வேண்டியிருக்கின்றது இந்தக் கருத்துக்கள் புதுமையாகத் தெரியும் , நம்முடைய மரபு தெரியாதவர்களுக்கு. நம்முடைய மரபு இப்போது காணாமல் போய்விட்டது. கிராமத்தார் சொல்லுகின்ற மரபாகப் போய்விட்டது. உதாரணமாக முன்பெல்லாம் குடுமி வைத்திருந்தார்கள். குடுமியில் பலவகை இருக்கும் நாளாக நாளாகக் குடுமி நகரத்தில் இருந்து மறைந்தது; பின்னர் கிராமத்தில் இருந்தும் மறைந்து; கோயில் பூசை செய்யும் மரபினரும் குடுமி வைக்க மறந்து கிராப்பு வைத்துக் கொண்டுவிட்டனர். இப்படித்தான் நம் மரபுகளும் எதையோ பார்த்து மாறிக் கொண்டே வந்திருக்கின்றது.

பண்டைக் காலங்களில் கோவில்களில், அதுவும் சிவன் கோவில்களில் நவக்கிரகம் வைத்து வழிபடுவதில்லை. இன்றைக்கும் சில சிவன் கோவில்களில் நவக்கிரகம் இல்லை. இன்றைக்கு எல்லாக் கோவில்களிலும் நவக்கிரகம் வைத்து வழிபடுகின்றார்கள். இப்படிச் செய்வது சரியில்லை. இதனைச் சொன்னால் எத்தனைபேர் ஏற்றுக் கொள்ளுவார்கள்.

அதேபோல கழுத்து வரையில் வைத்து ஒரு அம்மனை வழிபடுகின்றார்கள். ரேணுகாதேவி என்று அதற்குப் பெயர். பழங்காலக் கோவில்களில் கழுத்து வரையில் வைத்து வழிபட்டதில்லை. முழு வடிவமாகத்தான் இருக்கும் அது ஒரு முனிவருடைய மனைவி. அதற்கும் ஒரு கதை உண்டு. சமதக்கினி முனிவர் தன் மனைவிமேல் சந்தேகப்பட்டுவிட்டார். தன்னுடைய பிள்ளை பரசுராமரை அழைத்துத் தாயின் தலையை வெட்டிவிடச் சொல்லுகின்றார். எவ்வளவு அக்கப்போரான கதை பாருங்கள். பரசுராமனும் 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்று எண்ணி அக்காரியத்தை நிறைவேற்றப் போகின்றார். '' நான் சொன்னதை நிறை

வேற்றிவிட்டு வந்தால் நீ கேட்ட வரத்தைக் கொடுக்கின்றேன்'' என்று தந்தை வாக்களிக்கின்றார். அப்படியே இவர் தாயைக் கொன்றுவிட்டு வந்து ஒரு வரம் கேட்டார். தன் தாயை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும் என்பதுதான் அந்த வரம். சரி என்று வரம் கொடுக்கின்றார். தாயை வெட்டிய இடத்திற்குப் போகின்றார் பரசுராமர். அங்கே தாயின் தலை மட்டும் இருக்கின்றது. உடலைக் காணவில்லை. மாறாக மற்றொரு பெண்ணின் உடல்தான் அங்கே இருந்தது. இவர் அது தெரியாமல் தலையையும், உடலையும் ஒட்ட வைத்து உயிர் கொடுக்கின்றார். தலை ஒருவருடையது, உடல் வேறு ஒருவருடையது என்ற செய்தி பின்னால்தான் தெரிகின்றது. அதற்குப் பின்னர் அந்த அம்மையாரை கழுத்து வரையில் வைத்து வழிபட்டுக் கொண்டு வருகின்றார்கள்.

இந்த நாட்டின் நிலையைப் பார்த்தீர்களா? கெட்டுப்போனவள் என்று ஒரு முனிவரால் நினைக்கப்பட்ட பெண்ணை வைத்து நாம் வழிபட்டுக் கொண்டிருக்கின்றோம். கெட்டுப் போனவர்களை வழிபடுவதுதான் இந்த நாட்டின் தலையெழுத்தாக இருக்கின்றது. அதேபோலக் கெட்டுப்போன வர்களைத்தான் பாராட்டிக் கொண்டும் இருக்கின்றோம்.

பத்து ஆண்டுகளுக்கு முன் வரையிலும் கோயில்களில் ஐயப்பனை கண்டதில்லை. இப்போது அதுவும் வந்தாயிற்று. அந்தக் கதையும் ஒரு அவக்கதை. சிவபெருமானுக்கு இழுக்கு தேடித்தரும் கதை.

இப்படியெல்லாம் சொல்லுவதால் தவறாக நினைக்கக் கூடாது. சிந்தித்துப் பார்க்க வேண்டும். நமது மரபுக்கு மாறாக எப்படியெல்லாம் வழிபாடுகளும், கதைகளும், புராணங்களும் இயற்றப்பட்டுள்ளன; அவற்றை எல்லாம் நம்பிக் கொண்டிருக்கின்றோம் நாம். ஏன் இந்த அவல நிலை? பக்தர்களாக இருங்கள். ஆனால் கண்முடித்தனமான பக்தர்களாக இருக்காதீர்கள். சிந்தித்துப் பாருங்கள்.

இந்தக் கருத்துக்களைச் சொன்னால்கூட இப்போது ஏற்பாரில்லை. ஏதோ ஒரு மாதிரியாகப் பேசுகிறார் என்று மக்கள் நினைக்கக்கூடும். சில நேரங்களில் உண்மையைச் சொல்லக்கூடப் பயப்பட வேண்டியிருக்கின்றது இந்தக் கருத்துக்கள் புதுமையாகத் தெரியும , நம்முடைய மரபு தெரியாதவர்களுக்கு. நம்முடைய மரபு இப்போது காணாமல் போய்விட்டது. கிராமத்தார் சொல்லுகின்ற மரபாகப் போய்விட்டது. உதாரணமாக முன்பெல்லாம் குடுமி வைத்திருந்தார்கள். குடுமியில் பலவகை இருக்கும் நாளாக நாளாகக் குடுமி நகரத்தில் இருந்து மறைந்தது; பின்னர் கிராமத்தில் இருந்தும் மறைந்து; கோயில் பூசை செய்யும் மரபினரும் குடுமி வைக்க மறந்து கிராப்பு வைத்துக் கொண்டுவிட்டனர். இப்படித்தான் நம் மரபுகளும் எதையோ பார்த்து மாறிக் கொண்டே வந்திருக்கின்றது.

பண்டைக் காலங்களில் கோவில்களில், அதுவும் சிவன் கோவில்களில் நவக்கிரகம் வைத்து வழிபடுவதில்லை. இன்றைக்கும் சில சிவன் கோவில்களில் நவக்கிரகம் இல்லை. இன்றைக்கு எல்லாக் கோவில்களிலும் நவக்கிரகம் வைத்து வழிபடுகின்றார்கள். இப்படிச் செய்வது சரியில்லை. இதனைச் சொன்னால் எத்தனைபேர் ஏற்றுக் கொள்ளுவார்கள்.

அதேபோல கழுத்து வரையில் வைத்து ஒரு அம்மனை வழிபடுகின்றார்கள். ரேணுகாதேவி என்று அதற்குப் பெயர். பழங்காலக் கோவில்களில் கழுத்து வரையில் வைத்து வழிபட்டதில்லை. முழு வடிவமாகத்தான் இருக்கும் அது ஒரு முனிவருடைய மனைவி. அதற்கும் ஒரு கதை உண்டு. சமதக்கினி முனிவர் தன் மனைவிமேல் சந்தேகப்பட்டுவிட்டார். தன்னுடைய பிள்ளை பரசுராமரை அழைத்துத் தாயின் தலையை வெட்டிவிடச் சொல்லுகின்றார். எவ்வளவு அக்கப்போரான கதை பாருங்கள். பரசுராமனும் 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்று எண்ணி அக்காரியத்தை நிறைவேற்றப் போகின்றார். '' நான் சொன்னதை நிறை

வேற்றிவிட்டு வந்தால் நீ கேட்ட வரத்தைக் கொடுக்கின்றேன்'' என்று தந்தை வாக்களிக்கின்றார். அப்படியே இவர் தாயைக் கொன்றுவிட்டு வந்து ஒரு வரம் கேட்டார். தன் தாயை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும் என்பதுதான் அந்த வரம். சரி என்று வரம் கொடுக்கின்றார். தாயை வெட்டிய இடத்திற்குப் போகின்றார் பரசுராமர். அங்கே தாயின் தலை மட்டும் இருக்கின்றது. உடலைக் காணவில்லை. மாறாக மற்றொரு பெண்ணின் உடல்தான் அங்கே இருந்தது. இவர் அது தெரியாமல் தலையையும், உடலையும் ஒட்ட வைத்து உயிர் கொடுக்கின்றார். தலை ஒருவருடையது, உடல் வேறு ஒருவருடையது என்ற செய்தி பின்னால்தான் தெரிகின்றது. அதற்குப் பின்னர் அந்த அம்மையாரை கழுத்து வரையில் வைத்து வழிபட்டுக் கொண்டு வருகின்றார்கள்.

இந்த நாட்டின் நிலையைப் பார்த்தீர்களா? கெட்டுப்போனவள் என்று ஒரு முனிவரால் நினைக்கப்பட்ட பெண்ணை வைத்து நாம் வழிபட்டுக் கொண்டிருக்கின்றோம். கெட்டுப் போனவர்களை வழிபடுவதுதான் இந்த நாட்டின் தலையெழுத்தாக இருக்கின்றது. அதேபோலக் கெட்டுப்போன வர்களைத்தான் பாராட்டிக் கொண்டும் இருக்கின்றோம்.

பத்து ஆண்டுகளுக்கு முன் வரையிலும் கோயில்களில் ஐயப்பனை கண்டதில்லை. இப்போது அதுவும் வந்தாயிற்று. அந்தக் கதையும் ஒரு அவக்கதை. சிவபெருமானுக்கு இழுக்கு தேடித்தரும் கதை.

இப்படியெல்லாம் சொல்லுவதால் தவறாக நினைக்கக் கூடாது. சிந்தித்துப் பார்க்க வேண்டும். நமது மரபுக்கு மாறாக எப்படியெல்லாம் வழிபாடுகளும், கதைகளும், புராணங்களும் இயற்றப்பட்டுள்ளன; அவற்றை எல்லாம் நம்பிக் கொண்டிருக்கின்றோம் நாம். ஏன் இந்த அவல நிலை? பக்தர்களாக இருங்கள். ஆனால் கண்முடித்தனமான பக்தர்களாக இருக்காதீர்கள். சிந்தித்துப் பாருங்கள்.

அரசனைத் தெய்வமாக மதிக்க வேண்டும் ஏன்? கடவுளை நம்மால் பார்க்க முடிவதில்லை. அவனுடைய நீதியை இந்த உலகத்தில் அரசன்தான் செலுத்திக் கொண்டிருக்கின்றான். அதனால் அரசனைக் கடவுளாகக் கருத வேண்டுமென்ற ஒரு விதி வைத்திருக்கின்றார்கள். துவாரகையை ஆண்டவன் கண்ணன் என்ற அரசன். அவனைக் கடவுளாக எண்ணி வணங்க ஆரம்பித்தனர். இன்றைக்கு அவனுக்கு நாடெல்லாம் கோவில் எழுப்பியிருக்கின்றார்கள். அடுத்து,

அத்தினாபுரம் என்ற நாட்டில் நடந்த கதை. ஒரு முனிவர். நீண்ட காலம் தவமிருந்துவிட்டுக் கண்விழிக்கின்றார். விழித்தவுடன் பெண் வேட்கை மிகுந்து காணப்படுகிறது. யாராவது தன்னைத் தழுவிக் கொள்ளுவார்களா என்றுபார்க்கின்றார். இதைப் பார்த்த ஒருவர் தன் இரு மகள்களையும் அவருக்குத் தானமாகக் கொடுக்கின்றார். தந்தை கொடுத்தபின் பெண்கள் ஏதும் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. மூத்தவளிடம் செல்லும்போது, அவள் அவருடைய அருவருப்பான தோற்றத்தைக் கண்டு கண்ணை மூடிக்கொண்டு அவரைக் கலந்து கொள்ளுகின்றார். அப்போது கருவுற்றுப் பிறந்தவன்தான் திருதராட்டிரன். அவனுக்குக் கண்ணில்லை. அடுத்து, அவளுடைய தங்கையைத் தழுவிக் கொள்ளச் செல்லுகின்றார். அவள் இவரைப் பார்த்துக் கையைக் காலை முடக்கிக் கொள்கின்றாள். அப்போது அவளுடன் கலந்து பிறந்தவன் தான் பாண்டு. சரி, இது இப்படி இருக்க, இருவருக்கும் திருமணம் நடக்கின்றது. பாண்டுவுக்குப் பிள்ளைப்பேறு இல்லையென்று ஆகிவிடுகின்றது. ஆனால் குந்திக்குப் பிள்ளை வேண்டுமென்று நினைக்கின்றாள். என்ன செய்வது? மனுஸ்மிருதி என்ற நூலிலே ஒரு விதி சொல்லப்பட்டு இருக்கின்றதாம். தன் கணவனோடு கலந்து குழந்தை பெற்றுக் கொள்ள வாய்ப்பில்லாதவர்கள் பிற ஆடவனோடு கலந்து குழந்தை பெற்றுக் கொள்ளலாம். உடம்பெல்லாம் நெய் பூசிக்கொண்டு அவனோடு கலந்து கொண்டால் அதில் தவறில்லை என்று சொல்கின்றது அந் நூல் ஏன்? ஈமக்கடன் செய்ய ஒரு பிள்ளை வேண்டும். இல்லாவிட்டால் அது வாழ்க்கையாகாது என்றும் ஒரு விதி.

இதெல்லாம் வடக்கே நடந்த கதை. அந்த விதி நமக்குப் பொருந்தா.

குந்தி சின்ன வயதாக இருக்கும்போது ஒரு முனிவருக்குப் பணிவிடைகள் செய்ததால் அவர் அவளுக்குச் சில மந்திரங்களைச் சொல்லிக் கொடுத்தார். அந்த மந்திரங்களைச் சொன்னால் உயர்ந்த குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளலாம் என்றும் தெரிவிக்கின்றார். இதைக் கேட்டுக் கொண்டவுடன் அவள் அந்த மந்திரத்தின் ஆற்றலைத் தெரிந்து கொள்ள எண்ணி ஒரு மந்திரத்தைச் சொல்லுகின்றாள். சூரியன் அவள் முன் தோன்றி, அவளைக் கலந்துகொள்ள ஒரு குழந்தையும் பிறந்துவிட்டது. அவன்தான் கர்ணன். உலகப் பழிக்கு அஞ்சி அக்குழந்தையை ஆற்றில் கொண்டுபோய் விட்டுவிட்டாள். இது திருமணம் ஆவதற்கு முன்பு. திருமணம் ஆன பின்பு, ஐந்து மந்திரங்களைச் சொல்லி ஐந்து குழந்தைகளைப் பெற்றுக் கொண்டாள். ஐவரும் தன் சிற்றப்பனுக்குப் பிறந்தவர்கள் இல்லை. அதனால் அவர்களுக்குச் சொத்தில் பங்கில்லை என்று சொல்லிவிடுகின்றான் துரியோதனன். அடுத்து ஒரு பெண்ணை ஐந்து பேர் மணந்து கொள்கின்றார்கள். இருக்கலாம், தவறில்லை, அந்தப் பெண்ணுக்குத் திரௌபதி அம்மன் என்று பெயரிட்டு, கோவில் கட்டிக் கும்பிட்டுக் கொண்டும் இருக்கின்றார்கள். இப்படிப்பட்ட வரலாறுகள்தாம் நமக்குக் காலம் காலமாக வழங்கிக் கொண்டிருக்கின்றன.

நாடு முழுக்க இப்படிப்பட்ட வரலாறுகள்தாம் பரவியிருக்கின்றதே தவிர, தமிழக வரலாறு வடநாட்டில் அவ்வளவு தூரம் பரவியிருக்கவில்லை. 63 நாயன்மார்களைப் பற்றிய வரலாறு தமிழகத்திற்கு அண்டை மாநிலமான ஆந்திராவில் கூட யாருக்கும் தெரியாது. இமயம் முதல் குமரி வரை இந்த அறியாமை நிறைந்த கதைகள்தாம் தெரிந்திருக்கின்றதே தவிர, நல்ல கதைகளை நாட்டில் யாரும் பாராட்டுவதும் இல்லை; கடைப்பிடிப்பதும் இல்லை. அநியாயம் என்பதைத்தான் அனைவரும் கடைப்பிடிக்க வேண்டுமென்று விடாப் பிடியாகச் சொல்லிக் கொண்டும், கேட்டுக் கொண்டிருக்

அரசனைத் தெய்வமாக மதிக்க வேண்டும் ஏன்? கடவுளை நம்மால் பார்க்க முடிவதில்லை. அவனுடைய நீதியை இந்த உலகத்தில் அரசன்தான் செலுத்திக் கொண்டிருக்கின்றான். அதனால் அரசனைக் கடவுளாகக் கருத வேண்டுமென்ற ஒரு விதி வைத்திருக்கின்றார்கள். துவாரகையை ஆண்டவன் கண்ணன் என்ற அரசன். அவனைக் கடவுளாக எண்ணி வணங்க ஆரம்பித்தனர். இன்றைக்கு அவனுக்கு நாடெல்லாம் கோவில் எழுப்பியிருக்கின்றார்கள். அடுத்து,

அத்தினாபுரம் என்ற நாட்டில் நடந்த கதை. ஒரு முனிவர். நீண்ட காலம் தவமிருந்துவிட்டுக் கண்விழிக்கின்றார். விழித்தவுடன் பெண் வேட்கை மிகுந்து காணப்படுகிறது. யாராவது தன்னைத் தழுவிக் கொள்ளுவார்களா என்றுபார்க்கின்றார். இதைப் பார்த்த ஒருவர் தன் இரு மகள்களையும் அவருக்குத் தானமாகக் கொடுக்கின்றார். தந்தை கொடுத்தபின் பெண்கள் ஏதும் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. மூத்தவளிடம் செல்லும்போது, அவள் அவருடைய அருவருப்பான தோற்றத்தைக் கண்டு கண்ணை மூடிக்கொண்டு அவரைக் கலந்து கொள்ளுகின்றார். அப்போது கருவுற்றுப் பிறந்தவன்தான் திருதராட்டிரன். அவனுக்குக் கண்ணில்லை. அடுத்து, அவளுடைய தங்கையைத் தழுவிக் கொள்ளச் செல்லுகின்றார். அவள் இவரைப் பார்த்துக் கையைக் காலை முடக்கிக் கொள்கின்றாள். அப்போது அவளுடன் கலந்து பிறந்தவன் தான் பாண்டு. சரி, இது இப்படி இருக்க, இருவருக்கும் திருமணம் நடக்கின்றது. பாண்டுவுக்குப் பிள்ளைப்பேறு இல்லையென்று ஆகிவிடுகின்றது. ஆனால் குந்திக்குப் பிள்ளை வேண்டுமென்று நினைக்கின்றாள். என்ன செய்வது? மனுஸ்மிருதி என்ற நூலிலே ஒரு விதி சொல்லப்பட்டு இருக்கின்றதாம். தன் கணவனோடு கலந்து குழந்தை பெற்றுக் கொள்ள வாய்ப்பில்லாதவர்கள் பிற ஆடவனோடு கலந்து குழந்தை பெற்றுக் கொள்ளலாம். உடம்பெல்லாம் நெய் பூசிக்கொண்டு அவனோடு கலந்து கொண்டால் அதில் தவறில்லை என்று சொல்கின்றது அந் நூல் ஏன்? ஈமக்கடன் செய்ய ஒரு பிள்ளை வேண்டும். இல்லாவிட்டால் அது வாழ்க்கையாகாது என்றும் ஒரு விதி.

இதெல்லாம் வடக்கே நடந்த கதை. அந்த விதி நமக்குப் பொருந்தா.

குந்தி சின்ன வயதாக இருக்கும்போது ஒரு முனிவருக்குப் பணிவிடைகள் செய்ததால் அவர் அவளுக்குச் சில மந்திரங்களைச் சொல்லிக் கொடுத்தார். அந்த மந்திரங்களைச் சொன்னால் உயர்ந்த குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளலாம் என்றும் தெரிவிக்கின்றார். இதைக் கேட்டுக் கொண்டவுடன் அவள் அந்த மந்திரத்தின் ஆற்றலைத் தெரிந்து கொள்ள எண்ணி ஒரு மந்திரத்தைச் சொல்லுகின்றாள். சூரியன் அவள் முன் தோன்றி, அவளைக் கலந்துகொள்ள ஒரு குழந்தையும் பிறந்துவிட்டது. அவன்தான் கர்ணன். உலகப் பழிக்கு அஞ்சி அக்குழந்தையை ஆற்றில் கொண்டுபோய் விட்டுவிட்டாள். இது திருமணம் ஆவதற்கு முன்பு. திருமணம் ஆன பின்பு, ஐந்து மந்திரங்களைச் சொல்லி ஐந்து குழந்தைகளைப் பெற்றுக் கொண்டாள். ஐவரும் தன் சிற்றப்பனுக்குப் பிறந்தவர்கள் இல்லை. அதனால் அவர்களுக்குச் சொத்தில் பங்கில்லை என்று சொல்லிவிடுகின்றான் துரியோதனன். அடுத்து ஒரு பெண்ணை ஐந்து பேர் மணந்து கொள்கின்றார்கள். இருக்கலாம், தவறில்லை, அந்தப் பெண்ணுக்குத் திரௌபதி அம்மன் என்று பெயரிட்டு, கோவில் கட்டிக் கும்பிட்டுக் கொண்டும் இருக்கின்றார்கள். இப்படிப்பட்ட வரலாறுகள்தாம் நமக்குக் காலம் காலமாக வழங்கிக் கொண்டிருக்கின்றன.

நாடு முழுக்க இப்படிப்பட்ட வரலாறுகள்தாம் பரவியிருக்கின்றதே தவிர, தமிழக வரலாறு வடநாட்டில் அவ்வளவு தூரம் பரவியிருக்கவில்லை. 63 நாயன்மார்களைப் பற்றிய வரலாறு தமிழகத்திற்கு அண்டை மாநிலமான ஆந்திராவில் கூட யாருக்கும் தெரியாது. இமயம் முதல் குமரி வரை இந்த அறியாமை நிறைந்த கதைகள்தாம் தெரிந்திருக்கின்றதே தவிர, நல்ல கதைகளை நாட்டில் யாரும் பாராட்டுவதும் இல்லை; கடைப்பிடிப்பதும் இல்லை. அநியாயம் என்பதைத்தான் அனைவரும் கடைப்பிடிக்க வேண்டுமென்று விடாப் பிடியாகச் சொல்லிக் கொண்டும், கேட்டுக் கொண்டிருக்

கின்றார்கள்.

தமிழர்கள் பண்பாட்டை, நால்வர் பெருமக்கள் வளர்த்த பண்பாட்டைப் பற்றித் தெரிவிக்க இங்குள்ளவர்கள் யாருமே முன்வருவது இல்லை. எந்த இடத்திற்குப் போனாலும், பாகவதம், இராமாயணம், பாரதம் என்று இந்த அவக்கதைகளைத்தான் சொல்லிக் கொண்டிருக்கின்றோம். கேட்டுக் கொண்டிருக்கின்றோம். இவையெல்லாம் நீதிக்கதைகள் என்று கொண்டாலும் அந்த நீதியை நாம் கடைப்பிடிக்க வேண்டுமில்லையா? நம்முடைய பெண் திருமணத்திற்கு முன்னரே ஒரு குழந்தையை வயிற்றில் சுமந்து கொண்டு வந்தால் அவளைக் கெட்டிக்காரி என்றா பாராட்டுவோம்; இச்செய்தி தெரிந்ததும் வீட்டிற்குள் என்னென்ன போராட்டங்கள் நடக்கும்? எவ்வளவு மன வருத்தப் படுவோம். ஆனால் கதையைக் கேட்கின்றோம். மகிழ்கின்றோம். விட்டு விடுகின்றோம். அவ்வளவுதான். அதைப் பற்றிச் சிந்திப்பார் யாருமில்லை ஏன்? அது ஊர்க்கதை. நம்முடைய கதையல்ல என்பதால் தான் இந்த மனநிலை.

ஊர்க்கதை கேட்பது என்றால் மக்களுக்கு என்றுமே விருப்பம் அதிகம். அப்படிப்பட்ட கதைகளைச் சொல்கின்றவர்களுக்குத்தான் நாட்டில் வரவேற்பு, மரியாதை. பணத்தைக் கொட்டிக் கொடுப்பார்கள் அவர்களுக்கு . அதுவே தமிழக மரபைப் பற்றிப் பேசினாலும், தமிழர் வரலாறுகளைப் பேசினாலும் அதற்கு மரியாதையோ, வரவேற்போ இருக்காது. இப்படித் தமிழர் சமுதாயம் மரபு கெட்ட செய்திகளை மரபாக எடுத்துக் கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கிறது.

இப்படித்தான் கடவுள் வழிபாடும் மாறி, மாறி, விநாயகர் வழிபாடும் வந்தது. இல்லையில்லை, திருஞானசம்பந்தரும், ''பிடியதன் உருஉமைகொள'' என்ற ஒரு பாடல் விநாயகரை வாழ்த்திப் பாடியிருக்கின்றார் என்பார்கள். ஆனால் சைவப் பெருமக்கள் அது விநாயகர் வழிபாடு இல்லை என்றால் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். (இப்பாடலுக்கு விளக்கம் ஒரு கட்டுரையாக எழுதி வெளி

யிட்டிருக்கின்றேன். அதில் காண்க).

விநாயகர் வரலாறு என்னவென்று கேட்டால். ஒருநாள் பரமேசுவரனும், பரமேசுவரியும இமயமலைச் சாரலில் உலா வந்து கொண்டு இருந்தார்கள். அப்போது ஆண் யானை ஒன்றும், பெண் யானை ஒன்றும் காதல் உணர்வு ஏற்பட்டுக் கலந்து பழகின. இதை இருவரும் பார்த்தனர். பெருமாட்டிக்கு ஓர் எண்ணம் வந்ததாம். நாம் பெண் யானையாகி, பெருமான் ஆண் யானையாகிக் கலந்து பழகினால் எப்படியிருக்கும் என்று எண்ணினாளாம். பரமேசுவரிக்கு இப்படி ஒரு அற்பமான ஆசை வருமா? அப்படி வந்தால் அவள் பரமேசுவரியா? அவர் கடவுளா? கடவுள் என்றால் எல்லாம் கடந்து நிற்பவர் அன்றோ;

மற்றொரு கதை. கஜமுகாசுரன் என்று ஒருவன் இருந்தான். அவனை வதைத்துவிட்டு வர மூத்த குழந்தையான விநாயகரை அனுப்பினார்கள். அவன் இந்தக் குழந்தையின் தலை வேறு, உடல் வேறாகச் செய்துவிட்டான். அதற்குப் பிறகு சிவ பெருமான் வந்து யானைத் தலையைக் கொண்டு வந்து பொருத்தினார் என்றும், அதனால் யானை முகத்தோடு விளங்குகின்றார் விநாயகர் என்று ஒரு கதை.

அடுத்து, உமாதேவியார் குளிக்கப் போனார்கள். குளிக்கப் போகும் போது யாராவது வந்துவிடப் போகின்றார்களே என்று காவலுக்கு யாரும் இல்லாததால் தன் உடம்பில் இருந்த அழுக்கை உருட்டி வைத்து அதற்கு உயிரும் கொடுத்தார்களாம். அதுதான் பிள்ளையாராம். அப்படியானால் அவர்கள் எவ்வளவு நாள்கள் குளிக்காமலிருந்திருந்தால் அவ்வளவு அழுக்கு அவர் உடலில் சேர்ந்திருக்கும்? சைவர்கள் வணங்குகின்ற கடவுள் இவையெல்லாம்.

எவ்வளவு அசிங்கமான செய்திகளையெல்லாம் கேட்டுக் கொள்ளுகின்றோம். சிந்தித்துப் பார்க்கின்ற ஆற்றலே நம்மிடத்தில் சுத்தமாக மறைந்து விட்டது என்றே தோன்றுகின்றது. உள்ளே வருகின்றவர்கள் யாராக

இருந்தாலும், 'உள்ளே யார்' என்று கேட்க மாட்டார்களா? அல்லது குளிக்கின்றபோது தண்ணீர் ஊற்றுகின்ற சத்தம் கேட்காதா?

இந்த நாட்டில் கண்ணன் கதையும், இராமன் கதையும் நுழைந்து, இராமாயணமும் மகாபாரதமும் நுழைந்து சைவத்திலும் தாறுமாறான கதைகளை உருவாக்கி வைத்துவிட்டார்கள். நாமும் இவற்றையெல்லாம் கதை கேட்டால் புண்ணியம் என்று கேட்டுக்கொண்டிருக்கின்றோம்.

இந்த வரலாறுகளையெல்லாம் 'ஒரு மாதிரியாக' நான் விளக்குவதாக உங்களுக்குள் ஓர் எண்ணம் தோன்றக்கூடும். 'நாம் இந்தக் கடவுள்களையெல்லாம் வணங்கக்கூடாது என்ற காழ்ப்புணர்ச்சியில் இப்படியெல்லாம் சொல்கின்றார்' என்று எண்ணக்கூடும். நீங்கள் எந்தக் கடவுள்களை வேண்டுமானாலும் வணங்கிக் கொள்ளுங்கள். அதில் யாருக்கும் எந்தப் பிரச்சனையும் இல்லை. ஆனால் இவர்கள் எப்படியெல்லாம் வந்தார்கள்; அவர்கள் வரலாறுகள் என்ன? அது அறிவுக்குப் பொருத்தமாக இருக்கின்றதா? என்று கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள். அது போதும்.

இப்படித்தான் முதல்வன் வழிபாடு என்பது மறைந்து, விநாயகர் வழிபாடு என்று ஏற்பட்டுவிட்டது. பல செய்திகளை பலபடியாகப் பலர் சொல்லி வைக்க, அவற்றை நம்முடைய சமயமும் ஏற்றுக் கொண்டுவிட்டது. அப்படி ஏற்றுக் கொண்டதால் எது உண்மையான தமிழர் மரபு, எது பின்னால் சேர்த்துக் கொள்ளப்பட்ட மரபு என்று பிரித்துப் பார்க்க முடியாமல் மக்கள் திகைக்க வேண்டிய நிலைக்கு வந்துவிட்டது. உண்மைக்கு மாறான செய்திகளை உண்மையாகக் கருதி வாழ்வது எப்போதுமே நம்முடைய மரபாகிவிட்டது. ஆகவே, அப்படிப்பட்ட விநாயகரை இந்நூல் ஆசிரியரும் வணங்காமல் இல்லை.

    

<u>கடவுள் வாழ்த்து:</u>
**(விநாயகர் வணக்கம்)**

வன்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள்வழுவா

உண்மைவிளக்கம் உரைசெய்யத் – திண்மதம்சேர்
அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற்று ஐங்கரனைப்
பந்தம்அறப் புந்தியுள்வைப் பாம்.

இப்போது விநாயகர் வழிபாடு என்பது வழக்கத்தில் வந்துவிட்டது. இன்னும் பழைய கதைகளையே சொல்லிக் கொண்டிருந்தால் எப்படி என்ற ஐயம் உங்கள் உள்ளத்தில் எழக்கூடும். அதனால் இந்த வழிபாடு எப்படி வந்தது? விநாயகர் என்ற உருவத்தின் உட்பொருள் என்ன? என்று சிறிது சிந்திக்கலாம்.

பஞ்ச பூதங்கள் திரண்டு ஒரு வடிவமானால் அது ஐந்து கரத்துடன் விளங்கும். அதுவே பிரணவ வடிவம். ஓங்கார வடிவம். ஓங்காரத்தில் ஐம்பூதங்களும் அடங்கியிருக்கின்றன. பிரணவம் என்பது ஐந்து பூத வடிவம்.

விலங்கில் உயர்ந்தது யானை. அது ஞான விலங்கு. அதன் தலையையும், மனித உடலையும் இணைத்து விநாயகராக உருவாக்கினார்கள். இது உலகத்திலே விலங்கு உணர்வும், மனித உணர்வும் கலந்து விளங்குகிறது என்பதைக் குறிக்கும்.

விநாயகரின் நிறம் செவ்வானம் போன்றது. செம்மைத்தன்மை உடையவன் என்பது அதன் பொருள். தொந்தி வயிறு செழுமையைக் குறிக்கும். செழுமையாக இருப்பவர்களுக்குத்தான் தொப்பை விழும்.

இத்தகு பிரணவ வடிவத்தைத் தான் சொல்லப் போகும் நூலுக்குக் காப்பாக இருக்குமாறு வேண்டிக் கொள்கின்றார். உலக மக்கள் உய்யுமாறு தான் கண்ட, கேட்ட உண்மையைச் சொல்லப் போகின்றார். அப்போது அதில் தவறு ஏற்பட்டு விடக்கூடாது என்றும், தன்னிடத்தில் இருக்கும் பற்று (அழுக்கு) அதில் பதிந்துவிடாமல் இருக்கும் படிக்கும் காப்புச் செய்யுமாறு வேண்டிக் கொள்கின்றார். ஒரு கருத்தை ஆராய்கின்றபோதோ, அல்லது ஒரு பொருளை ஆராய்கின்ற போதோ, பற்று

வைத்து செயல்புரிதல் கூடாது. பற்றின்றி செய்தால்தான் அதில் உண்மை விளங்கும். விருப்பும் வெறுப்பும் கொள்வது மனிதனின் குணம். எனவே விருப்பு வெறுப்பற்ற தன்மையை நல்குமாறு வேண்டுதல் வேண்டாமை இலாத பெருமானாகிய, பிரணவ வடிவத்தினிடம் வேண்டிக் கொண்டு நூல் செய்யத் தொடங்குகின்றார்.

பற்று வைத்துச் செய்கின்ற செயல்கள் சிலகாலம் நன்மை போல் இருந்து பலகாலம் துன்பத்தை விளைவித்துவிடும். பற்று அறச் செய்கின்ற செயல்கள் சிலகால் துன்பமாக இருப்பினும் பலகால் இன்பத்தை அளிக்கும்.

<u>வண்மை தரும் ஆகம நூல்</u>

ஆகமம் என்பது அநுபவ நூல். வளம் தரும் அனுபவ நூல். ஆன்மாவுக்கு வளம் தரும் நூல், ஆகம நூல். அனுபவம் ஆன்மாவைச் சிறக்கச் செய்யும். அந்த அநுபவம் அன்புவழி மலர்ந்திருக்க வேண்டும். சுருக்கமாகச் சொன்னால் அன்பு நூல் எதுவோ அதுவே ஆகம நூல்.

நூல் என்பது ஆகமந்தான். வேதம் அதற்குப் பாயிரமாகும். அதனை அறிவு நூல் என்று சொல்லலாம்.

ஆகமம் முப்பொருள் உண்மைகளைச் சொல்ல வந்தது. வேதம் அதற்கு முன்னுரை போன்றது.

அநுபவம் என்பதற்குத் தந்நகர 'ந' போட வேண்டும். அநுபவம் என்பது பட்டறிவு. அறிவு இருவகைப்படும். அவை பட்டறிவு சுட்டறிவு எனப்படும். பிறரால் சுட்டி அறியப்படுவதுசுட்டறிவு. பட்டறிவு என்பது தானே அநுபவத்தால் அறிகின்ற அறிவு. நூலறிவு உணர்த்துவதைவிடப் பட்டறிவினால் உணர்வது மிகவும் சிறப்பு. எனவே ஆகமநூல் என்பது வளம் தரும் நூல். எனத் தெரிவிக்கின்றார்.

<u>நூல்</u>

நூல் இருவகைப்படும். படிக்கின்ற நூல் ஒன்று. பஞ்சினால் நூற்கப்படுகின்ற நூல் மற்றொன்று.

நூல் என்று சொல்லுவது என்ன காரணத்தினால் நூல் நூற்கப்படுகிறது? யாரால் நூற்கப்படுகிறது? பெரிதும் பெண்களால் நூற்கப்படுவது. காந்தியடிகள் காலத்தில் வேண்டுமானால் எல்லோரும் நூல் நூற்றனர். ஆனால் பெரிதும் பெண்களாலேயே நூல் நூற்கப்பட்டு வந்தது.

பஞ்சிதன் சொல்லால் பனுவல் இழையாக
செஞ்சொற் புலவனே சேயிழையா – எஞ்சாத
கையே வாயாக கதிரே மதியாக
மையிலா நூல் முடியும் ஆறு.

என்பது இலக்கணம்.

செஞ்சொல் புலவனாலே இழைக்கப்படுகின்ற நூல் தான் நூலாகும். நூல் நூற்பதற்கு ஆதாரம் பஞ்சு. அந்தப் பஞ்சு தூய்மையாக, இலேசாக, மென்மையாக இருக்கும். அப்போது நாம் எப்படி எப்படியெல்லாம் இழுக்கின்றோமோ அப்படியெல்லாம் மெல்லிய நூலாக வரும். நூல் நூற்கின்றவர்களும் மென்மையாக இருந்தால்தான் செம்மையாக நூலை நூற்க முடியும். அதனால்தான் பெண்கள் நூல்நூற்றனர்.

படிக்கின்ற நூல் மனத்தில் இருக்கின்ற கோணலை நேர்படுத்த உதவும். எப்படி? மரங்கள் நேராக வளராது. கோணல் மாணலாகத்தான் வளரும். மரத்தை பலகைகள், சட்டங்கள் என்று அறுத்துப் பயன்கொள்ள நினைப்பவர்கள் நூல் தட்டி, அதன் பின்னர்தான் அறுப்பார்கள். நூல் தட்டாமல் அறுத்தால் கோணலாகப் போய்விடும்.

அப்படியே நல்ல குடும்பத்தில், நல்ல சூழலில் பிறந்திருந்தாலும் மனக் கோணலை நேராக்க அநுபவ நூல்கள் தேவை. சுருக்கமாகப் பார்த்தால் நூல் என்பதற்கு நேர்படுத்துதல் என்று பொருள்.

நூல் தானாக நம்மை நேர்ப்படுத்திவிடுமா? நூலை நாமே முயன்று நேர்ப்பட்டுவிட முடியாது. அதற்கோர் ஆசாரியனின் துணை தேவை. ஆசாரியன் வழி காட்ட, அந்நெறியில் நின்று ஒழுகினால் நேராகிவிடுவோம்.

வளம் எதற்கு ஏற்படப் போகின்றது? இந்த உடம்புக்கா? உயிருக்கா? உலகியல் வாழ்க்கைக்கா? அக இயல் வாழ்க்கைக்கா?

உடல் நலம் உயிர் நலத்தால் விளைவிக்கப்படும். வாழ்வு நலம் என்பதும் உயிர் நலத்தால் அமைவது. இதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும். நம்முடைய மனம் சரியாக அமைய வில்லையென்றால் புற வாழ்க்கையும் நன்றாக அமையாது. அக வாழ்க்கையும் சரியாக அமையாது.

சீவன் வளமாக இருந்தால்தான் இகநிலை, பரநிலை வாழ்வுகள் வளமாக அமையும். இந்த அநுபவம் என்பது சீவனுக்குத்தான் ஏற்பட வேண்டும். சீவனுக்குத்தான் வளம் கிடைக்க வேண்டும். சீவன்தான் வளமாக வாழ வேண்டும். இல்லை இல்லை உடல் வாழ்ந்தால் போதும் என நினைப்பது பிழை. எத்துணை வாழ்வியல் வசதிகள் இருப்பினும் உயிர் வளமாக இருந்தால்தான் அவற்றை அநுபவிக்க முடியும்.

வளம் என்பது துன்பமின்மை, செழுமை. துன்பமில்லாமல் வாழ்கின்ற உயிர்க்கு வண்மையான உயிர் அல்லது வளமையான உயிர் என்று பெயர்.

அநுபவம் என்பது ஆன்மாவுக்கு ஏற்படுகின்ற அநுபவ முதிர்வு (அ) நடைமுறை அறிவு.

ஆகமங்கள் ஆன்மாவை நோக்கியே சொல்லப்பட்டவை. ஆன்மா வளமாக, வண்மையாக வாழ அவை வழிமுறைகளைச் சொல்லும்.

ஆகமத்தை எப்படி கற்க வேண்டும்? எப்படி விளங்கிக்

கொள்ள வேண்டும்? எப்படி ஒழுக வேண்டும் என்று விளக்கங்கள்தருவனஆயிரம்வேதங்கள். வேதம்விளக்க நூல். ஆகமம்அநுபவ நூல். ஆகமம்தான்உயிருக்கு வண்மை தரும்.

**உண்மை விளக்கம்**

உண்மை என்பது முப்பொருள் உண்மையே. அதைப் பற்றி விளக்கவே இந்நூல் உரைக்கப்பட்டது.

உண்மை விளக்கத்தை எழுத என்று சொல்லாமல் உண்மை விளக்கம் உரை செய்ய என்று ஏன் சொன்னார்? உரை – உரைத்தல் – சோதித்துப் பார்த்தல் என்று பொருள். ஒரு பொருளை வாங்குகின்றோம். அதன் தரத்தை, உண்மைத் தன்மையைச் சோதித்துப் பார்த்துத்தானே வாங்குகின்றோம். அப்படி நான் சொல்லப் போகின்ற இந்நூலைநீங்கள் உரைத்துப் பார்த்து சோதித்துப் பார்த்து, இதன் தரத்தை நிர்ணயித்து ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று எண்ணுகின்றார். தான் சொல்லுகின்ற ஒவ்வொரு சொல்லும் பத்தரை மாற்றுத் தங்கம் போல் இருக்க வேண்டும். தர்க்கத்தால் உரைத்தாலும் நிற்க வேண்டும்; இலக்கணத்தால் உரைத்தாலும் நிற்க வேண்டும், இலக்கியத்தால் உரைத்தாலும் நிற்க வேண்டும்; நடைமுறையால் உரைத்தாலும் நிற்க வேண்டும். தங்கத்தை எப்படி உரைத்தாலும் அதன் தரம் நிலைத்து நிற்பது போல, நான் சொல்லுகின்ற உண்மைகள், என் வாக்கிலிருந்து வரும் உண்மைகள், என் உள்ளத்திலிருந்து வருகின்ற உண்மைகள், இலக்கண, இலக்கிய, தர்க்கம் முதலானவற்றைக் கொண்டு எப்படி ஆய்ந்து பார்த்தாலும் நிறைவு உடையதாக இருக்கும். அதனால்தான் 'உரைசெய்ய' என்று சொன்னார்.

**திண்மதம்சேர் அந்திநிறத் தந்திமுகத் தொந்தி வயிற்று ஐங்கரனை**

யானைக்குள்ள மதங்கள் மூன்று. அவை கன்ன மதம், கபோல மதம், பீஜ மதம் என்பன. யானையினுடைய சக்தி கூடுகின்றபோது கன்னங்களில் தானே மதம் பொழியும். அதற்கு மதநீர் என்று பெயர். இன்னும் சக்தி அதிகமாகப் போனால் கபோலத்திலிருந்து நீர் பெருகும். இன்னும் அதிகமாகப் போனால் உயிர் நிலையில் (பீஜத்தில்) இருந்து தானே வெளிப்படும்.

நம்மிடத்தில் உள்ள ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களைஅழிக்கஅவன்'திண்மைசேர்' மதங் கொண்டான்.

செந்நிறத்தன் என்பது சிவனையே குறிக்கும். சிவனையே வணங்கிப் பழக்கப்பட்டவர். அக்கருத்தை மாற்றிக் கொள்ள விருப்பமில்லை. இருப்பினும் புதிதாக ஒரு கொள்கை வந்துவிட்டபின் அதனைத் தள்ளவும் விருப்பமில்லை. எனவே, இரண்டையும் இணைத்து, இங்கே அந்தி நிறத்தன் என்கிறார். அந்தி நிறம் – செம்மை நிறம். செம்மை என்பது வளம். ஆன்மாக்களுக்குச் செம்மை கிடையாது. இறைவனிடம் மட்டுமே செம்மை உண்டு. எனவே என்னிடத்தில் இல்லாத செம்மையை நீ கொடு என்று கேட்கின்றார்.

தந்தி – என்பது கொம்பினை உடையது என்று பொருள் தரும் யானையைக் குறிக்கும். ஆன்மாக்களிடத்தில் முதிர்ச்சி கிடையாது. இறைவன் முதிர்ச்சியுடையவன். அதனால் ஆன்மாக்களை பெத்த நிலையிலிருந்து எடுத்து ஆண்டு முத்தி நிலையைத் தருபவன் என்பதைக் குறிக்கத் தந்திமுகம் என்று குறிப்பிட்டார்.

தொந்தி – செழுமையைக் குறிக்கும். ஆன்மாக்கள் செழுமையில்லாதன. எனவே அவன் அவற்றிற்குச் செழுமை வழங்க வல்லவன் என்பதைக் குறிக்கத் தொந்தி வயிற்றை வைத்துக் காட்டினார். எப்போதும், பசியோடும், பட்டினியோடும் வயிறு ஒட்டிக் கிடக்கின்றவன் எவ்வளவு உயர்வான செய்தி சொன்னாலும் ஏற்றுக் கொள்ள மாட்டான். முதலில் பசி போக்க வேண்டும். அதன் பொருட்டே தொந்தி வயிற்று ஐங்கரனை வணங்குகின்றார்.

மும்மலங்களை அகற்றி, செம்மையைத் தந்து, என் குறைகளை அகற்றி, நிறைகளைச் சேர்த்து ஐவகையான தொழில்களைச் செய்து கொண்டிருக்கின்ற பெருமான்தான் என்னிடம் இருக்கின்ற பந்தத்தை அகற்ற முடியும். அதனால் அவனுடைய திருவடியை என் புந்தியில் வைத்து

வாழ்த்துகின்றேன் என்பது இதன் சுருக்கக் கருத்து.

☼ ☼ ☼ ☼ ☼

வந்த பொருளை வாழ்த்துவதும், முந்தைய பொருளுக்கு மாறாக எண்ணாமலும் இருப்பது இந்நாட்டு மக்களின் மரபாக அமைந்திருக்கின்றது. ஏன் இப்படிச் சொல்லுகின்றேன் என்றால் சைவர்களிலே வீர சைவர் என்ற ஒரு பிரிவு உண்டு. அவர்கள் சிவனைத் தவிர வேறு யாரையும் வணங்க மாட்டார்கள். சிவனை மட்டுமே வணங்குவார்கள்; வாழ்த்துவார்கள் அந்த மரபிலே வந்தவர் சிவப்பிரகாசர். முருகனை வாழ்த்துகின்றார். வீரசைவர்கள் வேறு கடவுளை ஏற்றுக் கொள்வதில்லை. இருப்பினும் இம்மண்ணில் பிறந்துவிட்ட காரணத்தால் வந்து விட்ட பொருளை ஏற்றுக் கொண்டதுபோலப் பாடி வைத்தார். அதுதான் இந்த மண்ணில் உள்ள பண்பாடு.

இங்கே நான் பாடம் நடத்திக் கொண்டிருக்கின்றேன் நீங்களும் கேட்டுக் கொண்டிருக்கின்றீர்கள். சில நேரங்களில் ஐயப்பனைப் பற்றிக் கடுமையாக விமர்சிக்கின்றேன். அப்படி விமர்சிக்கின்றபோது பத்து ஐயப்பப் பக்தர்கள் வந்து உட்கார்ந்து விடுகின்றார்கள் என்று வைத்து கொள்ளுவோம். அந்த நேரத்தில் என்னுடைய விளக்கம் எப்படி அமைய வேண்டுமென்றால், ஐயப்பனை எப்படி நாம் உணர்ந்து கொள்ள வேண்டும் என்று இருக்க வேண்டுமே தவிர வேறு வகையில் அமையக் கூடாது. ஏன்? அவர்கள் ஏதோ ஒரு வகையில் அந்த நம்பிக்கையில் ஈடுபாடு கொண்டு நம்புகின்றார்கள். அதனால் அது பற்றிய விளக்கத்தைத் தர வேண்டுமே தவிர, அதைப் பற்றிக் கடுமையாக விமர்சிக்கக் கூடாது. அப்படி யாரும் செய்யவும் மாட்டார்கள். வழக்கில் வந்துவிட்ட ஒரு பொருளைத் தாழ்த்தி விளக்கம் சொல்லுதல் முறையன்று. அவர்கள் மனம் புண்படுமாறு பேசுதல் கூடாது. அவர்கள் எப்படி அந்த வழிபாட்டை மேற்கொள்ள வேண்டும்; எப்படி வணங்குதல் வேண்டும்; அந்த வழிபாட்டின் உட்பொருள் என்ன? என்பது பற்றியெல்லாம் விளக்கிச் சொல்லுதல் வேண்டும். அப்படித்தான் நம் பெரியவர்களும், வந்த பொருளுக்கு ஒரு விளக்கத்தைச்

சொல்லி, இருந்த பொருளை அதிலே இணைத்து ஒரு காப்புச் செய்தார்கள்.

இந்நூலாசிரியரும் இந்த மரபில் வழுவாமல், தான் சொல்ல வந்த ஆகம நூலில் முப்பொருளின் உண்மையை விளக்கும்போது அதில் வழு ஏற்படாமல் இருக்கவும் இடர்ப்பாடுகள் ஏதும் ஏற்படாமல் இருக்கவும், தன் உள்ளத்தில் இருக்கும் மாசுகள் அகன்று தூய்மையான நிலையில் அப்பேரருளை விரித்துச் சொல்லவும், தனக்குச் செம்மையும், செழுமையும் தந்து, இந்நூலை நிறைவாகச் செய்வதற்கும் பெருமானே நீ காப்பாக இருக்க வேண்டுமென்று அவன் திருவடிகளைத் தன் புந்தியில் வைத்து வணங்குகின்றார்.



இந்நூல் வினா, விடை நூலாக அமைந்திருக்கின்றது. வினா, விடையாகப் படிப்பது மிகவும் நல்லது. அப்படிப் படித்துக் கொண்டு வந்தால் மனதில் தெளிவு வந்துவிடும். வினா எழாமலே படித்தால் ஐயமும் வராது; மனதில் தெளிவும் வராது.

தெளிதல் இன்றியமையாத ஒன்று. எனவே மாணவர் தன்னுள் எழுகின்ற ஐயங்களை ஆசாரியனிடத்தில் எழுப்புகின்றார்.

ஆசாரியனிடத்தில் ஒரு மாணவன் வினா எழுப்புவதற்கு முன்னே ஆசாரியனை மாணவன் வணங்குதல் வேண்டும். எப்போதும் ஒரு நூலைப் படிப்பதாக இருந்தாலும், ஒரு நூலைப் பற்றிய விளக்கம் கேட்பதாக இருப்பினும் குருவை வணங்கிவிட்டு, இறைவனைத் தொழுதுவிட்டுப் பின்னர் படிப்பது அல்லது கேட்பதுதான் மரபு.

இத்தகைய மரபை இன்றும் வைணவர்கள் கடைப்பிடித்து வருகின்றார்கள். சைவர்களிடத்தில் இப்பழக்கம் காணப்படவில்லை. இன்றைக்கும் இராமாயணம், மகாபாரதம் பற்றி விரிவுரை நடக்கின்ற இடங்களுக்குச் செல்கின்றவர்கள், விரிவுரையாளர் உட்கார்ந்திருக்கின்ற மேடையைத் தொட்டு

வணங்கிவிட்டுத்தான் அமர்கின்றார்கள். அமர்ந்து சொற்பொழிவைக் கேட்கின்றார்கள். இதற்கு என்ன பொருள் என்றால் நான் மாணவன், எனக்கு நீங்கள் சொல்லுவது விளங்க வேண்டும் , என் உள்ளத்தில் தெளிவை ஏற்படுத்த வேண்டும் என்று வேண்டிக் கொண்டு பின்னர் குரு சொல்கின்ற மொழியைக் கேட்பதாகப் பொருள். இந்த மரபை எல்லோரும். கடைப் பிடிக்க வேண்டும்.

இம்மரபை இந்நூலாசிரியர் இங்கே நினைவுபடுத்துகின்றார். குருமுதல்வரை மாணவர் வணங்கிய பின்னர் வினா எழுப்புதல் வேண்டும்.

ஆசாரியனிடத்தில் மாணவன் எப்படி இருந்து பாடம் கேட்க வேண்டும்? ஆசாரியனைத் தெய்வமாக எண்ணி வணங்கி, ஐம்புலனும் அடங்கி செவியே வாயாக இருந்து மன்னுதல் வேண்டும். ஆசாரியன் இடத்தில் கேட்கத் தகுந்த பொருள் என்ன? உண்மையைக் கேட்டு அறிதல் வே.ண்டும்.

அப்படி இந்நூலாசிரியர் அருளாசிரியரை வணங்கி, ''ஐயா, ஒரு விண்ணப்பம்; எனக்குப் பொய் எது; பொய்யின் தன்மை இன்னது என விளக்குங்கள் என்றும்; பின்னர் மெய்யை விளக்குங்கள் என்றும் கேட்டுக் கொள்கின்றார். ஏன்? எடுத்தவுடனேயே மெய்யைப் பற்றிச் சொல்லுங்கள் என்று கேட்கக் கூடாது.



1. பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதஆனந்தப் பொருளாம்
மெய்காட்டும்மெய்கண்டாய்; விண்ணப்பம் – பொய்காட்டா
மெய்யா: திருவெண்ணெய் வித்தகா! சுத்தவினா
ஐயாநீ தான்கேட் டருள்.

ஆசாரியனை வணங்குகின்றபோது, எதற்காக

வணங்குகின்றோம் என்பதனையும், தனக்குள்ள ஐயத்தைப் பற்றியும், தெளிவான மொழியில் வினா எழுப்புகின்றார்.

முதலில் ஆசாரியனைப் பற்றி தான் தெரிந்து கொண்டதைச் சுட்டிக் காட்டுகின்றார். குருவை 'மெய் காட்டும் மெய்யா' என்று விளிக்கின்றார். அச்சொல்லிலேயே, குருநாதன் மெய்யானவன் என்றும், அவன் மெய்யைக் காட்டக் கூடியவன் என்றும் உணர்ந்து சொல்லுகின்றார்.

ஆசாரியனிடத்தில் ஒரு மாணவன் எப்படி நடந்து கொள்ள வேண்டும்; எப்படிக் கேள்விகள் கேட்க வேண்டும்; எப்படி அவன் சொல்லுகின்றவற்றைக் கேட்டுக் கொள்ள வேண்டும் என்பதற்கு இவர் எழுப்புகின்ற வினாக்கள் ஒரு முன்னுதாரணமாக இருக்கின்றது. அதை நாமும் கடைப்பிடித்து ஒழுகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

கோயிலுக்குச் செல்கின்றோம் இறைவனை வணங்குகின்றோம். அப்போது நாம் இறைவனிடத்தில் என்ன கேட்கவேண்டும்? எதைக் கேட்கவேண்டும்? அதை எப்படிக் கேட்க வேண்டும்? நமக்கு என்ன வேண்டுமோ அதையெல்லாம் கேட்கலாமா? நாம் எண்ணுவதை யெல்லாமா கேட்பது.

இறைவனை வேண்டுகின்றபோது நாம் கேட்க வேண்டிய நலம்: '' இறைவா! என்னிடத்தில் இருக்கின்ற குற்றங் குறைகளை அகற்று; ஆசைகளை அகற்று; என்னுடைய பிறவி அற வேண்டும்; என் பிறவிக்குக் காரணமாக இருக்கும் ஆசைகள் அற வேண்டும்; ஆசைக்குக் காரணமாக இருக்கின்ற மாயை அற வேண்டும்; இதன் விளைவாகச் சேருகின்ற வினைகள் அறவேண்டும்; என்று வேண்டிக் கொள்ள வேண்டும். என்னிடத்தில் உள்ள குற்றங் குறைகள், மாசுகள், யாவும் அகன்ற பின் எனக்கு நலத்தைக் கொடு என்று கேட்டுக் கொள்ள வேண்டும்.

இப்படிக் கேட்காமல் எடுத்த எடுப்பிலேயே நமக்கு

வேண்டிய நலங்களைக் கொடு என்று கேட்கக் கூடாதா? அப்படிக் கேட்டால் இறைவன் கொடுக்க மாட்டானா? என்ற ஐயங்கள் வரும்.

"வேண்டத் தக்கது அறிவோய் நீ, வேண்ட முழுதும் தருவோய் நீ" என்பது மணிவாசகரின் மணிவாக்கு. இறைவன். நாம் கேட்டதையெல்லாம் கேட்டவாறே வழங்கிவிடுவான். ஆனால் நமக்கு எது தேவை, எது தேவை அற்றது என்பது தெரியாமல் கேட்டு விடுவோம். கேட்டதைக் கொடுத்த பின்னர் அதைத் துய்க்கின்ற போது நாம்தான் துன்பத்துக்கு ஆளாகிவிடுவோம். எப்படியென்றால், பால் வாங்கி வைக்கின்றோம் ஒரு பாத்திரத்தில். எந்தப் பாத்திரத்தில் வேண்டுமானாலும் பாலை வாங்கி வைத்துவிடுவோமா? களிம்பு ஏறக்கூடிய பாத்திரத்திலோ, தூய்மையற்ற பாத்திரத்திலோ பாலை வாங்கி வைப்போமா? மாட்டோம். முதலில் வாங்கி வைக்க வேண்டிய பாத்திரம் நல்ல பாத்திரமாக இருக்கின்றதா என்று பார்ப்போம். பின்னர் அந்தப் பாத்திரத்தைத் தூய்மை செய்த பின்னர்தான் அதில் வாங்குவோம். ஏன்? அப்படி பார்க்காமல் வாங்கிவிட்டால் பால் கெட்டுவிடும். அது கெட்டுவிட்டது தெரியாமல் துய்த்துவிட்டால் பின்னர் உடல் நலனுக்கு ஊறு விளைவித்துவிடும். எனவே முதலில் மனத்தூய்மை, பின்னர் கருவி கரணங்களில் தூய்மை எனத் தூய்மை செய்து கொண்டபின் இறைவன் நலங்களைப் பெற்றுத் தேக்கிக் கொள்வதுதான் சிறப்பு.

இவை யாவும் தெரிந்த வள்ளல் பெருமான், "பொய்யாத மொழியும், மயல் செய்யாத மனமும், புந்தி தளராத நிலையும் ...." வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுவார். ஏன் பொய்யாத மொழியும், மயல் செய்யாத மனமும் வேண்டுமென்று கேட்கின்றார்? நான் அந்த நூல் படிக்க வேண்டும், இந்தக் கல்வி எனக்கு வேண்டும், எனக்கு அது வேண்டும், இது வேண்டுமென்று எல்லாம் கேட்கவில்லை? ஆசையினால் மயக்கம், மயக்கத்தினால் தெளிவின்மை, தெளிவின்மையினால் இன்னது வேண்டுவது என்று தெரியாத நிலையில் நாம் வேண்டிக் கொண்டால்

பின்னர் அதுவே நமக்குப் பெருந்துன்பமாக முடிந்துவிடும் என்பதால்தான்.

எனவே முதலில் பொய் இன்னதென்று கேட்கின்றார். பின்னர் அப்பொய்யை என்னிடமிருந்து அகற்றுங்கள்; பின்னர் மெய் எதுவெனக் காட்டுக என வேண்டிக் கொள்கின்றார்.

பொய் எது? நிலையில்லாதது; துன்பம் தருவது.
மெய் எது? ஆனந்தம் தருவது; நிலையானது,
போதானந்தப் பொருள்.

பொய்யையும், மெய்யையும் நமக்கு உணர்த்தக் கூடியவர் யார்? பொய்யை அகற்றி, மெய்யை உணர்ந்தவர்கள் ஞானிகள். அவர்கள்தாம் நமக்கு வழிகாட்டக் கூடியவர்கள்.

சிலர் பொய்யையே மெய்போலக் காட்டுவார்கள். நமக்குப் பொய்யும் தெரியாது; மெய்யும் இன்னதென்று தெரியாது. எனவே அவர்கள் என்ன சொல்லுகின்றார்களோ அதையே மெய்யென்று நம்புவோம். 'கடல் மீனுக்கு நுளையன் இட்டதே பெயர்' என்பார்கள். மீனைப் பிடித்து வருபவன் என்ன பெயர் சொல்லுகின்றானோ அதைத்தான் நாம் நம்புவோம்.

உதாரணமாக: எங்கள் வீட்டிற்கு ஒரு அன்பர் வந்திருந்தார். காபி கொடுத்தேன். காபியில் என்னவோ வாசனை வருகின்றதே என்றார். ஒன்றுமில்லை தண்ணீர் அடிபிடித்துவிட்டது; அதுதான் ஒரு மாதிரி வாசனை வருகின்றதென்று சொன்னேன். நம்பிக் காப்பியைக் குடித்துவிட்டார். அந்த அன்பர் நன்கு படித்தவர். வயதும் முதிர்ந்தவர். இருந்தும் தண்ணீர் அடிபிடித்துவிட்டது என்று சொன்னதை நம்பிவிட்டார். பால்தான் அடி பிடிக்கும். தண்ணீர் எங்கேனும் அடி பிடிக்குமா? வயதாகியிருந்தும், கல்வி கற்றிருந்தும் அநுபவமில்லாததால் நீர் அடி பிடித்தது என்று சொன்னதை நம்பிவிட்டார்.

இப்படித்தான் பொய்யை மெய்போல், அழுத்தம் திருத்தமாகச் சொல்லிவிட்டால் நாமும் நம்பிவிடுவோம். அவர்களுக்குத் தெரியாததைத் தெரிந்ததுபோலச் சொல்லுவார்கள்.

எனவே தான் ஆசிரியரை நோக்கி, 'பொய் காட்டா மெய்யா' நான் பொய்யை விரும்பவில்லை, எனக்கு மெய்யைத் தவிர வேறெதையும் காட்டாதே என்று குறிப்பாகவே உணர்த்துகின்றார்.

**வித்தகா என்று அருளாசிரியரை அழைக்கின்றார்:**

வித்து என்ற அடிப்படைச் சொல்லிலிருந்து வந்த வார்த்தை வித்தகன். வித்துவான் என்பன. வித்தகர் என்றால் சதுரப்பட வாழ்பவர் என்று பொருள். சதுர்நான்கு. நான்கு என்றால்எல்லாம்என்று பொருள். 'நாலும்தெரிந்தவர்' என்றால் அனைத்தும் தெரிந்தவர் என்று பொருள். நாலும் என்றால் நான்கே நான்கு என்று எண்ணிக்கையாகக் கொள்ளக் கூடாது.

வித்து – குரு. இத்தமிழ்ச் சொல் மலையாளத்தில் ஒரு கொட்டைக்குப் பெயராக அமைந்திருக்கிறது. வித்துக்குக் குரு என்று ஏன் பொருள் சொன்னார்கள்?

வித்துக்குள், மரம், கிளைகள், இலைகள், பூக்கள், காய்கள், கனிகள் எனப் பல நலங்கள் புதைந்து கிடக்கின்றன. ஒரு வித்தை மண்ணில் ஊன்றிவிட்டால் அது முளைத்துப் பல்வேறு நலங்களை நமக்கு தந்து கொண்டிருக்கின்றது. அதுபோலப் பல நலங்களை உள்ளடக்கியவன் ஆசாரியன். வித்தைப் போன்றவன். அவன் மீது மாணவனுடைய அன்பு படுமானால் அந்த அன்பை ஏற்று அவன் விளைவைத் தருகின்றான். அப்படி விளைந்தது கற்பகத் தரு போன்று அனைத்து நலங்களையும் மாணவனுடைய வாழ்வில் சேர்த்துவிடுவான். அவன் எப்போதும் அருகில் இருந்து கொண்டே நலங்களைச் செய்து கொண்டு இருக்க வேண்டுமென்பதும் இல்லை. எண்ணத்தால், மொழியால்,அணுக்கத்தால் எப்போதும் மாணவனுடன் இருந்து கொண்டே நலங்களைச் செய்து கொண்டிருப்பான். ஆசாரியனுடைய உணர்வு எப்போதும் மாணவனுடன் இருந்து கொண்டேயிருக்கும்.

புணர்ச்சி பழகுதல் வேண்டாம் உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்.

என்பது திருவள்ளுவரின் திருவாக்கு. நெருங்கிப் பழகித்தான் நலம் செய்ய வேண்டுமென்பதில்லை; உணர்வினாலும் மாணவனுக்கு நலங்களை விளைவிக்கலாம். அப்படி மாணவனுக்கு எல்லா நலங்களையும் விளைவிக்கின்றவன் எவனோ அவனுக்கு வித்தகன் என்று பெயர். எனவேதான் தம் ஆசாரியரை நோக்கி 'வித்தகா' என்று விளிப்பதோடு, தாம் தம் ஆசாரியரை உணர்ந்து கொண்டதைக் குறிப்பால் உணர்த்துகின்றார்.

அடுத்துத் தாம் வினவுவதனைச் சுத்த வினா என்று கூறுகின்றார்:

ஆசாரியர் நிலையற்றதை நீத்து, நிலை பெற்றதான போதானந்தப் பொருளை உணர்ந்தவர். அவரிடத்தில், தனக்குள்ளே இருக்கும் நிலையற்றதான உணர்வில் (உள்ளத்தில்) நிறைந்திருக்கும் அழுக்குகளைப் போக்கி, போதானந்தப் பொருளைத் தேக்குவதற்குண்டான வழிகளைச் சொல்லுமாறு கேட்டுக் கொள்கின்றார். உள்ளம் என்பது உணர்வு. அதில் அழுக்குகள் நிறைந்திருக்கும். அவற்றை அகற்றுமாறு வேண்டிக் கொள்கின்றார். ஆசாரியரை ஐயா என்று அழைக் கின்றாரே. ஏன்?

ஐயா என்றால் பெரியவர் என்று பொருள். ஐயா என்பது விளி. ஐயர் என்பவர் ஐயப்பாடு நீங்கியவர், ஐயப்பாடு இல்லாதவர், தலைமைப்பாடு உடையவர். தெளிவு உடையவர். ஐயம் அகன்றவன் தெளிவுடையவன். அவன் செய்கின்ற செயல்கள் யாவும் தெளிவான செயல்களாகவே இருக்கும். தெளிவில்லாதவர்கள் செய்கின்ற செயல்கள் யாவும் துன்பம் தருவனவாகவும், தெளிவில்லாமலும் இருக்கும்.

ஐயர் என்பது இப்போது ஒரு குறிப்பிட்ட சாதியின் பெயராகிவிட்டது. பிறப்பினால் யாரும் ஐயர் என்றோ, சாதியினால் ஐயர் என்றோ எண்ணி விடக் கூடாது. இந்தப் பிழையான கருத்து பின்னால் வந்தது.

நைமிசாரண்யத்தில் வாழ்ந்தவர்கள் பெரியவர்கள். அவர்கள் சொன்னது வேதம். சாதி என்று எடுத்துக் கொண்டால் அவர்களில் யாரும் ஐயர் இல்லை. திராவிடர்கள். வேதங்களைச் செய்த வேத வியாசர் 'ஐயர்' என்ற சாதியைச் சேர்ந்தவர் அல்லர். அவருடைய பிறப்பைப் பற்றி உங்களுக்கெல்லாம் தெரியும்.

சிறந்தவர்கள், ஐயம் தவிர்ந்தவர்கள் எவரோ அவர்களே ஐயர். கீழ்ப்பால் ஒருவன் கற்பின் மேற்பாலுள்ளவன் அவன் வழி நிற்பான் என்பது புறநானூற்றுக் கருத்து. மேலும் ஐயர் என்பவர் மேல் சாதி என்றும் ஒரு கொள்கை இருக்கின்றது. ''மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர், கீழிருந்தும் கீழல்லார் கீழல்லர்'' என்ற திருவள்ளுவரின் வாக்கினாலும், மேல் கீழ்என்பது பிறப்பினால் அன்று சிறப்பினால் வருவது என்பதனை உணரலாம்.

ஐயா என்றால் தலையாயவர், ஐயம் அற்றவர், அழகியவர், இறைநலம் நிறைந்தவர் என்றெல்லாம் பொருள். இவை அனைத்தும் நிறைந்தவன் இறைவன் ஒருவன்தான். அவனைத்தான் 'ஐயா'என்றும், 'ஐயர்' என்றும் அழைக்க வேண்டும். இதை நான் சொல்லவில்லை. வேதங்கள் சொல்லுகின்றன. 'வேதங்கள் ஐயா! என ஓங்கி' என்ற சிவபுராணம் வரிகள் நினைவுபடுத்தும். இறைவனுக்குள்ள தகுதிகள் அருளாசிரியரிடத்திலும் இருப்பதால் 'ஐயா' என அழைத்து தம் ஐயங்களைத் தெளிவு செய்யுமாறு கேட்டுக் கொள்ளுகின்றார்.

    

2. ஆறாறு தத்துவம் ஏது? ஆணவம் ஏது? அன்றேதான்
மாறாவினை ஏது மற்றிவற்றின் – வேறு ஆகா
நான் ஏது? நீ ஏது? நாதன் நடம், அஞ்செழுத்துத்
தான் ஏது? தேசிகனே சாற்று.

என்று வேண்டுகின்றார்.

தேசிகன் என்றால் ஒளிபொருந்தியவன். தே – ஒளி, தெய்வம், தேவு, தேவே, தேவுதல் எனவரும் தேவுதல் என்றால் தேடுதல், ஆன்மா எங்கே இருந்தாலும் அதனைத் தேடி எடுத்துக் கொள்வது தெய்வம். அழுக்கினால் மூடப்பட்டுக்கிடக்கின்றது இந்த ஆன்மா. இதனைத் தேவித்தேவி அழுக்குகளை அகற்றி அகற்றி எடுத்துக் கொள்கின்றவன் தேசிகன். 'தே' என்ற சொல்லோடு 'ன்' என்ற எழுத்தைச் சேர்த்தால் 'தேன்' என்று வரும். தேன் தானும் கெடாது, தன்னிடம் சேர்ந்த பொருளையும கெடாமல் காக்கும் தன்மை உடையது. 'தேன்' என்ற சொல்லுடன் 'மொழி' என்ற சொல் சேர்ந்தால் தேன்மொழி என்று ஆகும். அதற்குச் சுவையான மொழி என்றுபொருள் அந்த மொழி என்ன செய்யும்? தானும் சிறப்புடையதாக இருக்கும் கேட்போருக்கும் சிறப்பினை அளிக்கும்.

தேன்மொழி என்பதைத் தேமொழி என்றும் சொல்லலாம். இரு சொற்களுமே ஒரு பொருள் குறிப்பன என்றும் 'தேன்மொழி' என்பதில் 'ன்' குறைந்து 'தேமொழி' என வந்தது எனவும் புலவர்கள் கூறுவார்கள்.

தேன்மொழி என்பது வேறு, தேமொழி என்பது வேறு தேமொழி என்றால் ஒளி மொழி என்று பொருள். அது கேட்போர் உள்ளத்துள் இருக்கும் அழுக்கை அகற்றுவது. அழுக்கினை அகற்றி நன்னெறியில் உய்த்து உயர்த்தும் மொழி, இந்த நுண்ணிய வேறுபாட்டினை அறிந்து பொருள் கொள்ளுதல் வேண்டும். தேமதுரத் தமிழ் என்ற சொல்லையும் இவ்வகையில் பொருள் கொள்ளுதல் சிறப்பு. முதலில் அழுக்கை முயன்று அகற்ற வேண்டும். பின்னர் தான் அதில் ஒளி பதியும். அழுக்கு துணிக்கு நீலம் போட்டால் அதில் ஒட்டாது. நன்றாக துவைத்து, அழுக்கு நீங்கிய பின்னர் போட்டால் நீலம் நன்கு பதிந்துவிடும். அதுபோல மாணவன் அழுக்குடையவன். ஆசாரியன் ஒளி உடையவன். ஆசாரியனுடைய ஒளி

மாணவனிடம் அழுக்குள்ளவரை பதியாது. அழுக்கு நீங்க ஆசாரியனுடைய ஒளி மொழிகளை பலகால் மாணவன் கேட்க வேண்டும்.

தேசிகனே சாற்று என்கின்றார். ஆசாரியனிடத்தில் 'சொல்' என்று கேட்கக் கூடாது. 'சாற்று' என்றுதான் கேட்டுக் கொள்ள வேண்டும். சாற்றுதல் என்றால் பறை சாற்றுதல் – பல்கால் எடுத்துச் சொல்லுதல் – என்று பொருள். ஏன் பல்கால் எடுத்துச் சொல்ல வேண்டும். பறைசாற்றுகின்ற போது, மக்கள் பலரும் பலவிதமான அலுவல்களில் ஈடுபட்டிருப்பார்கள். அவர்கள் அனைவரது கவனத்தையும் ஈர்த்து, அவர்கள் சொல்லவந்த செய்தி மனதில் பதியுமாறு செய்தல் வேண்டும். அது போன்றே ஆசாரியனாகிய தாங்கள் எனக்கு ஒளி மொழிகளைப் பலகால் எடுத்துச் சொல்லுதல் வேண்டும், என்று கேட்டுக் கொள்கின்றார்.

மாணவன் பாடம் கேட்க வேண்டிய முறையைக் கூட இங்கே சொல்கின்றார் எனலாம். ஆசானைச் சார்ந்து, அமைதியாக அமர்ந்து, வேறெந்த செய்திகளையும் கேட்டுக் கவனத்தைச் சிதறவிடாமல், ஆசாரியனுடைய மொழிகளையே செவிமடுக்க வேண்டும். அப்படிக் கேட்டபோதிலும் மாணவனுடைய மனதில் கால் கூறுதான் பதிந்திருக்கும். தம்மோடு ஒரே ஆசாரியனிடத்தில் பயின்று கொண்டிருக்கின்ற மாணவர்களோடு கேட்ட செய்திகளை மாணவன் பகிர்ந்து கொள்ள வேண்டும். தடைகளை எழுப்பியும், விடைகளைக் கூறியும் ஒருவருக்கொருவர் அளவளாவுதல் வேண்டும். மேலும் ஒரு முறைக்கு இருமுறை கேட்டால் ஓரளவுக்குப் பிழையில்லாமல் தெரிந்திருப்பதாகக் கொள்ளலாம். மூன்று முறை கேட்ட பின்புதான் பாடம் கேட்ட செய்திகளைப் பிறர்க்கு எடுத்துரைக்க இயலும். இதன் பொருட்டே தேசிகன் (ஆசாரியன்) பெருமையை உணர்ந்து, தன்னுடைய சிறுமையையும் உணர்ந்து, அவரைப் பல்கால் அணுகித் தனக்குப் போதிக்க வேண்டுமென்று வேண்டிக் கேட்டுக் கொள்கின்றார்.

36 தத்துவங்கள் என்றால் என்ன? ஆணவம் என்றால்

என்ன? மாறாத வினைகள் என்றால் என்ன? இவற்றோடு கலந்து நிற்கும் நான் ஏது? நீ ஏது? நாதன் நடம் ஏது? அஞ்செழுத்து என்பது ஏது? என்று மாணவர் ஆசாரியரிடம் கேட்கின்றார். இதன் மூலம் மாணவரின் மொழி, உள்ளம், குறிக்கோள் அனைத்தும் தெரிந்தது. அதற்குக் குருநாதர் என்ன பதில் சொல்கின்றார் என்று பார்க்கலாம்.

❋ ❋ ❋ ❋ ❋

3. உள்ளபடி இத்தை உரைக்கக்கேள்! உன்தனக்கு
வள்ளல்அரு ளால்அன்று வாய்மலர்ந்து –
தெள்ளியசீர்

ஆகமங்கள் சொன்ன அடைவிலே ஆனந்த
யோகம் நிகழ்புதல்வா! உற்று.

ஆனந்தயோகம் நிகழ் புதல்வா என்று மாணவரை அழைக்கின்றார். ஆனந்தயோகம் என்பதனால் ஆனந்தம் இல்லாதயோகம் என்று ஒன்று உள்ளது என்பதும் தெரிகிறது.

ஏன் மாணவரை மகன் என்கின்றார்? குருவுக்கு மாணவன் மகன். தான்சேர்த்து வைத்திருக்கும் அனைத்தையும் தன் மகனுக்குக் கொடுக்கவே எந்தத் தந்தையும் விரும்புவான். அதேபோல தான் பெற்ற அனுபவத்தை, ஞானத்தைத் தன்னுடைய மகனாக்கிக் கொண்ட மாணவனிடத்தில் கொடுக்க விரும்புகின்றார் இந்த ஆசிரியரும்.

இராமகிருஷ்ணரிடம் ஏராளமான மாணவர்கள் இருந்தனர். இருப்பினும் அவர்களை எல்லாம் அவர் புதல்வனாக ஏற்றுக் கொள்ளவில்லை. ஏன்? ஒவ்வொருவரும் ஒவ்வொரு நிலையினர். விவேகானந்தர் ஒருவரைத்தான் அவர் தன் புதல்வனாக ஏற்றுக் கொண்டார். அவர் பிறந்த குடிக்கும், இவர் பிறந்த குடிக்கும் எந்தவிதமான சம்பந்தமுமில்லை. இருப்பினும் விவேகானந்தரை மட்டுமே அவர் புதல்வனாக ஏற்றுக் கொண்டார். அப்படி ஏற்றுக் கொண்டதற்கு மற்றொரு நிகழ்ச்சியைச் சொன்னால் விளங்கிவிடும்.

அமெரிக்க நாட்டில் நடந்த மதாச்சார்யார்களின் கூட்டத்தில் விவேகானந்தர் பேசினார். பின்னர் பல நிகழ்ச்சிகளிலும் பேசினார். தன்னுடைய கொள்கைகளைத் திறம்பட விளக்கினார். ஆனால் அவர் அப்படிப் பேசிய எந்தக் கூட்டத்திலும், நிகழ்ச்சிகளிலும் தன் குருவைப் பற்றி எந்த இடத்திலும் குறிப்பிட்டுப் பேசவேயில்லை.

இதை இராமகிருஷ்ணரிடம் அவருடைய மற்ற மாணவர்கள், ''விவேகானந்தர் எல்லாம் தமக்குத் தெரிந்ததுபோலவே பேசிக் கொண்டிருக்கின்றாரே தவிர, உங்களிடம் அவர் பயின்றார் என்பதை எங்குமே அவர் குறிப்பிடவேயில்லை'' என்று கோள் சொல்லுவதுபோலச் சொன்னார்கள். அதற்கு இராமகிருஷ்ணர், ''அவன் எங்கே பேசினான், நான்தானே பேசினேன், நான் பேசும் போது என்னைப் பற்றியே நான் பெருமையாகச் சொல்லிக் கொள்ள முடியுமா'' என்று பதில் சொன்னாராம். இதிலிருந்து விவேகானந்தரை அவர் முழுமையாகத் தன் மகனாக ஏற்றுக் கொண்டார் என்று தெரிகின்றது. மாணவன் எதைச் சொன்னாலும் அது ஆசாரியரின் உணர்வின் வெளிப்பாடுகளேயன்றி பிறிதில்லை. ஆகவே மெய்கண்டார் அவரை புதல்வர் என்று அழைக்கின்றார்.

தம் ஞானப்புதல்வனை நோக்கி மகனே; நீ பெற வேண்டிய ஆனந்த யோகத்தை, போதானந்த யோகத்தைப் பற்றி, உள்ளதை உள்ள வண்ணம், நான் அறிந்த வண்ணம், அனுபவித்தவண்ணம்; இயல்பாக உள்ளவண்ணம் சொல்லப் போகின்றேன். அதனைக் கவனமாகக் கேள் என்று கூறுகின்றார். இப்படிச் சொல்லுவதற்கு ஒரு பெரிய அனுபவம் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் முடியாது. அதிலும், நான் அறிந்தபடி சொல்லுகின்றேன் என்று சொல்லவில்லை. வள்ளல் அன்று தனக்கு வாய்மலர்ந்து சொன்னதை அப்படியே உள்ளதை உள்ளபடியே உனக்குச் சொல்லுகின்றேன்; நீ அதனைக் கவனமாகக் கேட்டுக்கொள் என்கின்றார்.

ஆகமங்கள் என்று பன்மையில் சொல்லுகின்றார். மேலும் வள்ளல் வாய் மலர்ந்து அருளியது என்றும் சொல்லுகின்றார். வள்ளல் என்பவர் யார்? இறைவன்தான் வள்ளல். அவன் வாய் மலர்ந்தவைதான் ஆகமங்கள். அம்மை கேட்க ஆகமங்களை திருவாய் மலர்ந்தருளினான் அப்பன் ஆகமங்கள் இறைவன் சொன்னது என்றால் வேதங்களைச் சொன்னது யார்? அவற்றையும் அவன்தான் சொன்னான்.

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் வேதத்திற்கும், மணிவாசகர் அருளிய திருவாசகத்திற்கும் ஓர் ஒப்புமை சொல்லுவார்:

விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரணன் உரையெனும் ஆரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூர் அண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்தது என்குவீர் ஆயின்
வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சம் நெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவா சகம் இங்கு ஒருகால் ஓதின்
கருங்கல் மனமும் கரைந்து கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை உலகில் மற்றையர் இலரே.

வேதங்கள், ஆகமங்கள் அனைத்தையும் இறைவன், உமாதேவியார் கேட்கச் சொன்னார்.

இருப்பினும் சிலர், வேதங்களையும், ஆகமங்களையும் தங்கள் மொழியில், தங்களுக்காக மட்டுமே சொல்லியிருக்கின்றான், என்று சொல்லிக் கொண்டு வருகின்றார்கள். இது பிழையான கருத்து.

எல்லா மதத்திலும், எல்லா மொழியிலும் இரண்டு வகையான வேதம் உண்டு; இரண்டு வகையான ஆகமம் உண்டு. இக்கருத்தைநாம் மனதில் நிலையாக இருத்திக் கொள்ள வேண்டும். இறைவன் உணர்த்த, ஞானிகள்

உணர்வால் உணர்ந்து வெளிப்படுத்திய வேதாகமங்கள் ஒரு வகை. ஞானிகள் செய்வதைப் பார்த்துத் தானும் அதைப்போலவே நூல்கள் எழுதி வைப்பது மற்ற வகை. ஞானிகள் செய்தவை அருள் நூல். மனிதன் தன் ஆணவத்தால் செய்தவை ஆணவ நூல். ஞானிகள் செய்தவை உலக நலம் கருதி, தன்னலம் சிறிதுமற்று செய்யப்பட்டவை. ஆணவநூல் தன்னை வியந்து கொண்டு, தனக்கும், தன்னைச் சார்ந்தார்க்கும் நன்மை விளையவேண்டுமென்பதற்காகச் செய்யப்பட்ட நூல்களாகும். ஞானானுபவத்தில் மிதப்பவர்கள் எழுதப்படிக்கத் தெரியாதிருப்பினும் தாமே எழுதிவிடுவார்கள். ஆனால் ஞானியரைப்போன்று நடிப்பவர்கள் அவர்களைப்போலவே எழுத வேண்டுமென்று முனைந்து எழுதுவர். அவற்றில் அடித்தல், திருத்தல், பிழைகள் மலிந்து காணப்படும். ஞானிகள் சொன்னது அருள் வேதம்; அருள் ஆகமம். ஆணவத்தால் செய்தது ஆணவ வேதம்; ஆணவ ஆகமம். வள்ளல் பெருமான் எழுதிய பாடல்களில் எங்கேனும் அடித்தல், திருத்தல்களைப் பார்த்திருக்கின்றீர்களா? அது கனிந்தெழுந்த பா. கட்டிய பாவில் அடித்தல், திருத்தல்கள் இருக்கும்.

கடவுள் இயற்றிய வேதத்தில், ஆகமத்தில் எந்த மக்களையும் வேறுபடுத்தாது , எந்த நிலையினரும், எந்த மொழியினரும், எந்த நிறத்தவரும் உயருவதற்குரிய வழிவகைகள் சொல்லப்பட்டிருக்கும். அதை கடைப்பிடிப்போர் உயர்வதற்கு வாய்ப்புகள் இருக்கும். அந்த வேதத்தை இன்னார்தான் படிக்க வேண்டும், இன்னார் படிக்கக் கூடாது என்ற பாகுபாடுகள் ஏதும் கிடையாது. பின்னால் வந்தவர்கள் இறைவன் செய்த வேதாகமங்களைப் போலவே தாங்களே முயன்று சிலவற்றைச் செய்து வைத்துக் கொண்டு, அதுதான் வேதமென்றும், அதைத்தவிர வேறு வேதமில்லையென்றும், அதைப் படிக்கும் அல்லது ஓதும் தகுதியுள்ளவர்கள் இன்னின்னார் என்றும் முறைகளை வகுத்துக் கொண்டும், பேதங்களைச் செய்து கொண்டும், உயர்வுதாழ்வுகளைக் கற்பித்துக் கொண்டும் இருந்ததைப் பார்த்துத்தான், "ஆரண மொழியோ" என்று கேட்கின்றார்

சிவப்பிரகாசர் .

இப்படிப்பட்ட குறுகிய மனப்பான்மை உடையவர்கள் தங்கள் வேதங்களை யாரும் படிக்கக்கூடாது என்றும், தாங்கள் அவற்றை ஓதும்போதும் யாரும் கேட்கக் கூடாது என்றும், அப்படி யாரேனும் தப்பித் தவறிக் கேட்டுவிட்டால் அவர்கள் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்ற வேண்டுமென்றும், அந்த வேதங்களை படித்தால் அவர்களது நாக்கை அறுக்க வேண்டுமென்றும் விதிமுறைகளை வகுத்துக் கொண்டார்கள். இப்படியெல்லாம் சொன்னதே பின்னர் பெரும் பேதங்களையும், பிளவுகளையும் ஏற்படுத்தி

மாறாக, மணிவாசகர் இயற்றிய திருவாசகம் என்னும் வேதத்தை யாரும் ஓதலாம். ஓதி உருகலாம். ஆனால் ஆணவத்தால் செய்யப்பட்ட வேதங்களைக் கேட்போர் உள்ளம் உருகாது. ஏனெனில் முன்னது அருள் நூல். பின்னது ஆணவ நூல். அருள் உருகும் தன்மையுடையது. ஆணவம் கல் போன்றது. அதில் உருக்கம் என்பதே இராது.

மேலும் சிவப்பிரகாசர் வேதத்திற்கும், திருவாசகத்திற்கும் ஓர் ஒப்புமை சொல்லுவார்: வேதம் மண்குடம் போன்றது. திருவாசகம் பொன் குடம் போன்றது. மண் குடம் இழிந்தோர் தொட்டால் தீட்டாகும்.குடம் உடைந்தால் உடைந்ததுதான் மீண்டும் ஒட்டாது. மாறாக பொன்குடம் யார் தொட்டாலும் தீட்டாவதில்லை; உடைந்தாலும் மீண்டும் அதனைச் செப்பமாக்கிவிடலாம்.

எனவே ஆணவத்தால் செய்யப்பட்ட வேதங்கள், ஆகமங்கள் என்றும், இறைவன் சொன்ன வேதங்கள், ஆகமங்கள் என்றும் இருவகைகள் உண்டு. எனவே இறைவன் எனக்கு உணர்த்திய ஆகமங்களின் உண்மைகளை அவன் உணர்த்தியவாறே, முறை பிறழாமல் உனக்கும் உணர்த்தப் போகின்றேன். அவற்றைக் கவனமாகக் கேட்டுக்கொள் என்று மாணவனுக்கு அறிவுறுத்துகின்றார்.

மற்றொரு கருத்தும் உண்டு. 28 ஆகமங்கள் சமஸ்கிருத மொழியில் மட்டுமே உண்டு என்றும், தமிழிலே ஆகமங்களே இல்லையென்றும் சொல்வாரும் உண்டு. அது எந்த அளவுக்கு

உண்மையோ சிந்தனையில் தெளிவுள்ளவர்கள் இதனை ஏற்றுக்கொள்ளுவார்களா? என்பதும் ஐயமே.

ஏனெனில் அறிவு வேட்கையும், அனுபவ வேட்கையும் வருகின்ற போது, அவர்கட்கு ஆண்டவனே முன்னின்று உணர்த்துகின்றான். வேட்கை வந்த வழி இறைவனும் வருகின்றான். உணர்த்துகின்றான். எப்போது ஏக்கம் வருகின்றதோ அந்த ஏக்கத்தின் தாக்கம் இறைவனைக் கொண்டு வந்து சேர்த்துவிடும். நல்ல ஆசாரியனாக வந்து உணர்த்திவிடுவான். அதற்கு இனம், மரபு, மொழி, நிறம் என்ற பாகுபாடுகள் இல்லை. இனம், மரபு, மொழி, உயர்வு, தாழ்வு இவற்றில் நம்பிக்கை வைக்கின்றவர்கள் அழிந்தே போகின்றார்கள்.

உதாரணத்திற்கு ஒன்றைச் சொல்லுகின்றேன். நான் பிறந்தது ஒரு சின்ன கிராமம். இன்றைக்கும் அந்த ஊருக்கு பேருந்து போவதில்லை. அவ்வளவு சிறிய கிராமம். மிகவும் வறண்ட பகுதி. அந்த கிராமத்தில் பிறந்த என் கொள்ளுத் தாத்தாவுக்கும் கல்வியில்லை. என் தாத்தாவுக்குக் கல்வி இல்லை. என் தந்தைக்கும் கல்வி இல்லை. என் தாயாருக்கும் கல்வி அறிவு இல்லை. ஏதோ சுமாராகப் படிப்பார்கள். என் உடன் பிறந்தார்க்கும் என்னொத்த கல்வி, அனுபவம் இல்லை. ஏதோ சிறிது முயன்றார்கள். அவ்வளவுதான். எங்கள் பங்காளி வர்க்கத்தில் பிறந்த அனைவருக்கும் இந்த அளவுக்குக் கல்வி இல்லை. சமயக் கல்வியோ, சமய ஞானமோ, வேறு விதமான கல்வியோ கிடையாது. தெய்வ சிந்தனையும் கிடையாது. ஆடு வெட்டு, கோழி வெட்டு என்று சொல்லுகின்ற தெய்வ சிந்தனை இருக்கலாம். அதில் எந்த மாறுபாடும் இல்லை. பாஞ்சாலி வழிபாடு என்றும், குந்தி வழிபாடு என்றும், சிறு தெய்வ வழிபாட்டில் நின்றிருக்கலாம். என்னுடைய நிலையில் இருந்து பார்க்கின்றபோது அப்படி யாரும் உயர்ந்த நிலையில் இருப்பதாகத் தெரியவில்லை. எனவே இன்னின்ன மரபுக்குத்தான் இப்படிப்பட்ட ஞானம் வரும் என்பதில் எனக்கு ஒப்புதல் இல்லை. ஏக்கங்களும், தாக்கங்களும் வருகின்றபோதே இறைவன் தானே அதற்குரியவனாக

வந்துவிடுகின்றான் அப்படி வந்து சொல்லுகின்ற நிலை இருக்கின்றதே அதுதான் வேதம். அதை நாம் மனதில் வைத்துக் கொண்டால் போதும். அப்போது எந்தச் சமயத்திற்கும் உண்மையான வேதம் உண்டு, உண்மையான நிலை உண்டு என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

மற்றோர் உதாரணம்: இறைவனே வந்து ஒருவரைக் கையைப் பிடித்துத் தன் பக்கத்தில் இருத்திக் கொண்டான். யார் அவர்? கண்ணப்பர். கண்ணப்பர் பிறந்ததோ வேடர் குலத்தில். அவருடைய குலம் கருதி இறைவன் அவரை நோக்கியிருந்தால் அவருக்கு அருகில்கூட வந்திருக்கக் கூடாது. ஆனால் அவனோ அவரைத் தன் பக்கத்திலேயே இருத்திக் கொண்டான். என்ன காரணம்? அவரது அன்பின் நிலையைக் கண்டான். இருத்திக் கொண்டான். ''அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்?'' பேதம் பார்ப்பது மனித இயற்கை. இறைவன் பேதம் பார்ப்பதுமில்லை; யாரிடத்தும் பேதம் காட்டுவது மில்லை.

ஆர்வம் பிறந்து, முதிர்ந்து அன்பு முதிர்கின்ற போது ஆண்டவன் வருகின்றான். இதனைத் தெளிவுபடுத்திக் கொண்டால் போதும்.

மற்ற மொழிகளில்வேதங்கள், ஆகமங்கள் இருப்பது வரவேற்கத் தக்கதுதான். ஆனால் அதைத் தவிரவேதமில்லை; ஆகமமில்லை என்பது மனம் வளர்ச்சி குன்றியிருப்பதையும், கருத்துத் தெளிவின்மை யையும்தான் காட்டுகின்றது.

தமிழ் மொழியில் 14 ஆகமங்கள் சித்தாந்தம் என்று வகுக்கப்பட்டுள்ளன. பன்னிரு திருமுறைகளும் வேதங்களாக அமைந்திருக்கின்றன. பன்னிரு திருமுறைகளில் பத்தாம் திருமுறையாக விளங்கும் திருமந்திரத்தை வேதமாகவும் கொள்ளலாம்; ஆகமமாகவும் கொள்ளலாம். **14 ஆகமங்கள் என்பதைவிட, ஒன்பது ஆகமங்கள் என்று கொள்ளுவது சிறப்பாக**

இருக்கும் என்பது என்னுடைய சிந்தனை.

திருமந்திரத்தில் உள்ளவை ஒன்பது தந்திரங்கள். அவை ஒன்பதும் ஒன்பது ஆகமங்கள். ஆகமம் என்றாலும், அனுபவம் என்றாலும், மெய்ப்பாடு என்றாலும் ஒன்றே. உள்ளத்தில் ஏற்படுகின்ற உணர்ச்சிகள்தானே மெய்ப்பாடுகள். அவை ஒன்பது இடங்களில், ஒன்பது நிலையங்களில் வெளிப்படுவன. ஆறு நிலையங்களில் ஏற்படும் மெய்ப்பாடுகள் நம்மால் உணரக் கூடியன. ஏழாவது எட்டாவது நிலைகளில் ஏற்படும் உணர்ச்சிகள் மிகவும் நுட்பமானவை. இவற்றையும் ஓரளவுக்கு உணர்ந்து கொள்ளலாம். ஆனால் ஒன்பதாவது நிலையில் ஏற்படும் உணர்வுகள் எல்லாவற்றையும் கடந்த நிலை. அதனைச் சொல்ல முடியாது. உணர்ந்தோம் என்று கூடத் தெரியாத நிலை அது. தொல்காப்பியர், ''மெய்ப்பாடுகள் எட்டுவகை' என்று சொல்லுவார். இப்படி உள் நிகழும் மெய்ப்பாடுகளையே ஒன்பது தந்திரங்களாக வகுத்துத் திருமந்திரத்தில் சொல்லியிருக்கின்றார் திருமூலர்.

எனவே தான் உணர்ந்த, இறைவனால் தனக்கு உணர்த்தப்பட்ட ஆகமங்களை, அதே முறைப்படி உனக்கு உணர்த்துகின்றேன். கவனமாகக் கேட்டுக் கொள் என்று மாணவனுக்குப் போதிக்கின்றார் ஆசிரியர்.



4. நாற்கோணம் பூமி, புனல் நண்ணும்மதி யின்பாதி
ஏற்கும்அனல் முக் கோணம் எப்போதும் – ஆர்க்கும்
அறுகோணம் கால்வட்டம் ஆகாயம் ஆன்மா
உறுகாயம் ஆம்இவற்றால் உற்று.

பாடம் கேட்கும் மாணவன் ஏற்கும் மனத்தோடும், சிதறாத கவனத்துடனும், உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆர்வத்தோடும் கேட்க வேண்டும். அப்போது சொல்கின்ற ஆசாரியரும் அவற்றை விளக்கமாகவும், தெளிவாகவும் முழுமையாகவும் சொல்லுவார். ஏனோதானோ என்று வந்து கேட்டால் விளக்கங்களும் அப்படித்தான் அமையும்.

36 தத்துவங்களில் முதலில் இருக்கின்ற தத்துவங்கள்

ஐந்து. அவை பஞ்ச பூதங்கள். பஞ்ச பூதங்களுக்கும் வண்ணங்கள், வடிவங்கள் உண்டு. இவற்றையெல்லாம் திருக்கோயில்களில் அமைத்துக் காட்டியிருக்கின்றார்கள்.

இவற்றை ஏன் பூதம் என்று சொன்னார்கள்? அளவில், ஆற்றலில் பெரியவை என்று குறிப்பிடுவதற்காகப் பூதம் என்று பெயர் சொன்னார்கள். இவற்றில் முதலாவதாக இருப்பது மண் தத்துவம். அடுத்து நீர், அடுத்து தீ, அடுத்து காற்று, அதற்கடுத்து வான். இவற்றின் தன்மைகளில் நாம் ஆட்பட்டுவிட்டால் இவை நம்மை விழுங்கிவிடும்.

மாறாக, இவற்றிற்கு நாம் ஆட்படாமல் வாழ்ந்தால் அவற்றிடமிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொண்டோம் என்று பொருள்.

மண்ணுக்கு அடையாளம் நாற்கோணம். பூமியை அளக்கின்ற போது நான்கு கோணங்களில்தான் அளக்கின்றோம். வீடு கட்டுகின்ற போதும் நான்கு பக்கங்கள் வைத்துத்தான் வீடு கட்டுகின்றோம்.

நீரின் வடிவம் இரு கோணம் உடைய பிறைமதி வடிவம். இதை எப்படிக் கண்டார்கள்? நம்மை மூன்று பக்கங்களிலும் கடல் சூழ்ந்து கொண்டிருக்கின்றது. அதனால் நீர் பிறை வடிவம் கொண்டது என்று வரையறுத்தார்கள்.

தீயில் எதைப்போட்டாலும் தள்ளாமல் ஏற்றுக் கொள்ளும். அதனால் 'ஏற்கும் அனல்' என்று அடைமொழி போட்டுச்சொன்னார்கள். ஈரக் கட்டையைப் போட்டாலும் எரிக்கும்; அழுக்குகளைப் போட்டாலும் எரிக்கும்; நல்லவர்கள் போட்டாலும் எரிக்கும்; பொல்லாதவர்கள் போட்டாலும் எரிக்கும்; யார் எதைப் போட்டாலும் எரிக்கும். தீ எரிகின்ற போது அடிப்பக்கம் அகன்றும் நுனி குறுகியும், முக்கோண வடிவில் தான் எரியும்.

காற்று எப்போதும் ஒலித்துக் கொண்டே

இருக்கும் அதனால்அதனை 'ஆர்க்கும் கால்' என்றனர். அது நம் கண்ணுக்குத் தெரிவதில்லை. அதன் வடிவம் அறுகோணம். அறிவியலாரும் காற்றைக் குறிக்க ஆறு புள்ளிகளைப் போட்டுக் காட்டியுள்ளனர்.

ஆகாயம் வட்டமாக இருக்கும். இது நம் கண்ணுக்கே தெரியும்.

இந்தப் பஞ்ச பூதங்களினால் தான் ஆன்மா நிலைத்திருக்கின்றது. இந்த உடம்புக்குள்ளே இருந்து கொண்டு ஆன்மா அனுபவங்களைப் பெற்றுக் கொண்டிருக்கின்றது.

மேற்சொன்ன ஐந்து பூதங்களும் பருப்பூதங்கள். அடுத்து நுண் பூதங்கள் ஐந்துள்ளன. அவையும் இந்த உடலுக்கும், உயிருக்கும் ஆதாரமாக விளங்குகின்றன.

மண்ணில் திண்மை, நீரில் குளிர்ச்சி, நெருப்பில் வெம்மை, காற்றில் ஊக்கம், வானில் கலப்பு ஆகியவற்றை இறைவன் வைத்துள்ளான்.

ஐம்பூதங்களால் ஆன இந்த உடம்பிற்குக் காயம் என்று பெயர். ஆன்மாவுக்கு இந்த உடம்புதான் நிலைக்களம். இவ்வுடம்பு நாற்கோணம், பிறைவடிவம், முக்கோணம், அறுகோணம், வட்டம் என்ற ஐவகையான கோணங்களில் இருந்து இயங்கிக் கொண்டிருக்கின்றது. இத்தனை கோணங்கள் நம்மிடத்தே இருக்கின்றன. இக்கோணங்கள் யாவும் நம்மை விட்டு நீங்க வேண்டும்.

ஒத்த கோணத்தில் இருந்தால்தான் இருவர் ஒத்துப் போக முடியும். மாறான கோணத்தில் இருப்பவர்கள் ஒத்துப் போக முடியாது.நாற்கோணத்தில் இருப்பவர்கள் மந்தமாக இருப்பார்கள். கடினமாக இருப்பர். அறுகோணத்தில் இருப்பவர்கள் சுறுசுறுப்பாக இருப்பார்கள். ''ஒவ்வொரு வரும் ஒரு கோணத்தில் இருக்கிறார்கள்; நான் மட்டும் என்ன செய்வது'' என்று சலித்துக் கொள்வதைக் கேட்டிருக்கிறீர்கள். இது அனுபவ

மொழி. கோணம் என்பது பக்குவம்.

* * * * *

5. பொன்பார் புனல்வெண்மை பொங்கும் அனல்சிவப்பு
வன்கால் கருமைவளர் வான்தூமம் – என்பார்
எழுத்து லவரயஅப் பாராதிக்கு என்றும்
அழுத்தமதாய் நிற்கும் அது.

இனி ஐம்பெரும் பூதங்களுக்குரிய வண்ணங்களைப் பற்றியும், அவற்றுக்கு உரிய எழுத்துக்களைப் பற்றியும் கூறுகின்றார். பார் என்றால் பூமி. அது பொன்னிறம் உடையது. இந்த மண்ணால் தான் இந்த உடம்பு வந்தது. இது பொன்னாக இல்லையே; பொன்னிறமாக இல்லையே; ஏன்? பொன் என்பதற்கு அழகு என்று மற்றொரு பொருளும் உண்டு.

நீரின் நிறம் வெண்மை. ஆனால் தூரத்திலிருந்து பார்க்கின்றபோது நீர் பச்சையாகத் தோன்றினாலும் நீரைக் கையில் எடுத்துப் பார்த்தால் வெண்மையாகத்தான் இருக்கும். தீ சிவந்த நிறமுடையது. அது எப்போதும் மேல்நோக்கி எரியும் தன்மையுடையது (நீருக்குப் பசுமையும், தீயினில் வெண்மையும் உண்டு என்பார் வள்ளலார்).

வலிமை பொருந்திய காற்று கருமை நிறம் உடையது. அதன் வலிமை நமக்குத் தெரிவதில்லை. அது ஆணவத்தைப் போன்றது. ஆணவம் தன்னையும் காட்டாது. தன்னை சார்ந்திருக்கும் சீவனையும் காட்டாது. ஆணவத்தின் நிறமும் கறுப்புத்தான். இருளின் நிறமும் கறுப்புத்தான். ஆணவம், இருள், காற்று மூன்றும் ஒரே தன்மையுடையன. அதனால் இவற்றைக் குறிக்கக் கருமை நிறத்தைக் குறித்தார்கள்.

வானம் தூம நிறம் (அழுக்கு நிறம்) உடையது. எல்லாவற்றிலும் இருக்கும் அழுக்கு வானத்தில் சேர்ந்து, வானம் அழுக்கு நிறமாகத் தோற்றமளிக்கின்றது. அதனால் வான்தூமம் என்று குறிப்பிட்டார்கள்.

இது உண்மையா? அன்றி அனுமானமா? என்ற ஐயம் எழும். இது உண்மை. எப்படி? உண்மைப் பொருளை அனுமானத்தால் அறியலாம் என்பது விதி. காற்றும், வானமும் உருவப்பொருள் அல்லவே, ஆதலின் அவற்றுக்கு நிறம் கூறக்கூடாது என்று சிலர் கருதுவர். காற்று நம்மேல் படுவதை நாம் அறிகின்றோம். ஆதலின் அதற்கு உருவம் உண்டு என்பது உண்மையே. அதனால் நிறம் கூறுவதும் பொருத்தமே. அவ்வாறே காற்றின் கலப்பினால் வானத்துக்கும் நிறம் கூறுவது தவறாகாது. சிலர் வானத்திற்குப் படிக நிறம் என்பர். வானத்தின் இயல்பு படிகம் போல இருப்பதானாலும் படிகத்தில் மற்ற நிறங்கள் தோன்றுவதுபோல் காற்றின் கலப்பினால் வானத்தில் புகை நிறம் தோன்றுவதும் பொருத்தமே என்று சித்தியார் உரையாசிரியர் கூறியுள்ளார். வள்ளலார் வானத்துக்கும், காற்றுக்கும் நிறம் கூறவில்லை.

இந்த நிறங்களுக்கு ஒளி என்று பெயர். ஐம்பூதங்களுக்கும் நிறம் இருப்பது போல் அவற்றை இயங்கச் செய்யும் எழுத்துக்களும் உண்டு. அந்த எழுத்துக்கள் ஒலிக்கவில்லையென்றால் அப்பூதம் எழுந்து இயங்காது. எழுத்து ஒளிமயமானது. அது ஒலிக்க ஆரம்பித்தால்தான் பூதம் இயங்கும்.

எழுந்து இயங்கச் செய்வதனால் எழுத்து என்று பெயர். உலகையும், பூதங்களையும், நம்மையும் இய கொண்டிருப்பவை எழுத்துக்கள்தாம்.

ஒளிக்கும், ஒலிக்கும் உள்ள வேறுபாட்டைத் தெரிந்துகொள்ள வேண்டும். ஒளி இருந்து செயல்படுவது. ஒலி எழுந்து செயல்படுவது. ஒலி எழுந்தால்தான் ஒளி இயங்கும். ஒரு இயக்கம் நிகழ வேண்டுமானால் அதற்குரிய ஒலி இருந்து கொண்டே இருக்கவேண்டும். எந்த இயக்கத்துக்கும் ஓர் ஒலி உண்டு. அந்த ஒலியின் வாயிலாகத்தான் தோற்றங்கள் நிகழும்.

உதாரணமாக ஒரு வித்தை எடுத்துக் கொள்வோம். அதில் எந்த விதமான ஒலியும்இருக்காது. ஆனால் அதைத்

தண்ணீரில் ஊறவைத்த பின்பு காயவைத்தால் ஒலிகள் எழும். அப்படியே முளைக்கின்ற போதும் அதில் ஒலிகள் எழும். அந்த ஒலிகள் சாதாரணமாக இருக்கும்போதோ, அல்லது நீரில் இருக்கும்போதோ எழா.

இதனால் இயக்கத்துக்கும், ஒலிக்கும் உள்ள தொடர்பு தெரிகின்றது. இந்த பூதங்களை இயக்குகின்ற எழுத்துக்கள் என்ன என்று பார்க்கலாம்.

| | |
|---|---|
| மண்ணுக்குரிய எழுத்து | ல |
| தண்ணீருக்குரிய எழுத்து | வ |
| நெருப்புக்குரிய எழுத்து | ர |
| காற்றுக்குரிய எழுத்து | ய |
| வானுக்குரிய எழுத்து | அ (ஹ) |

இவற்றுக்கு பூத இயக்க எழுத்துக்கள் என்று பெயர். இந்த எழுத்துக்கள் இயங்காத வழி பூதங்கள் இயங்கா. இதேபோல சீவ இயக்க எழுத்துக்களைப் பற்றியும் பின்னால் சொல்லப் போகின்றார். அது பஞ்சாட்சரம். அப்படியே உலகை இயக்குகின்ற எழுத்துக்களும் உண்டு. அவை 12. சீவ இயக்கத்துக்குரிய எழுத்துக்கள் 5. பூத இயக்கத்துக்கு உரிய எழுத்துக்கள் 5. இவை ஒன்றுக்கொன்று தொடர்புடையன. இவை ஒவ்வொன்றுக்கும் எழுத்துக்கள் வேறு வேறு. ஒலிகள் வேறு வேறு. எல்லாம் மாறி மாறி இருக்கும். ஒன்று போல இருப்பதில்லை.

மண்ணை இயக்குகின்ற ஒலி வேறு. அதன் அசைவுகள் வேறு. நீரின் அசைவுகள்வேறு. அதை இயக்கும் ஒலி வேறு. தீயின் அசைவுகள் வேறு. அதை இயக்கும் ஒலி வேறு. காற்றின் ஒலி வேறு. அதை இயக்கும் ஒலி வேறு. வானின் அசைவுகள் வேறு. அதை இயக்கும் ஒலி வேறு. வேறு வேறு அசைவுகளைக் கொண்டு ஒலிகள் இந்த உலகை இயக்கிக் கொண்டு இருக்கின்றன.

மேற்சொன்ன எழுத்துக்கள் வித்து எழுத்து அல்லது மூல எழுத்து எனப்படும். இவை யாவும் தமிழ் எழுத்துக்கள்தாம். தமிழாக இருக்கின்ற போது இவற்றிற்குப் பொருள் உண்டு. இவையே மந்திர எழுத்துக்களாக ஒலிக்கின்ற போது இவற்றிற்குப் பொருளில்லை. ஏன்?

ஒலியாக எழுகின்ற போது இவற்றிற்கு ஆற்றல் உண்டு; ஆனால் பொருள் இல்லை. பொருள் காணுகின்றபோது இவற்றுக்கு ஆற்றல் வேறு வகையாக அமைந்திருக்கும். எனவே இவற்றை மந்திர எழுத்துக்களாகவும் கொள்ளலாம். இந்த எழுத்துக்களைப் பற்றி ஆகமங்கள் யாவும் அழுத்தமாய்ச் சொல்லும். எனவே, பூத இயக்க வித்தெழுத்து அல்லது பூத இயக்க மந்திர எழுத்து எனவும் குறிப்பிடலாம்.

மேலே சொன்ன அத்தனை குறிப்புகளும் வெளியில் மட்டும் நிகழ்வன அல்ல. நம் உடம்பிலேயும் நிகழுகின்றன.

இனி, ஐம்பூதங்களின் அடையாளங்களைச் சொல்லுகின்றார்.

✻ ✻ ✻ ✻ ✻

6. குறிகுலிசம் கோகநதம் கொள்சுவத்தி குன்றா
அறுபுள்ளி ஆர்அமுத விந்துப் – பிறிவுஇன்றி
மண்புனல்தீக்கால்வானம் மன்னும் அடைவேஎன்று
ஒண்புதல்வா; ஆகமம் ஓதும்.

இப்பாடலில் மாணவரை ஒண்புதல்வா என்று அழைக்கின்றார். ஒளி பொருந்திய ஒட்பம் உடைய ஞானப் புதல்வனே; என்று அழைக்கின்றார். மாணவனுக்குரிய அடையாளமே ஆசாரியர் தெளிவாகச் சொன்னாலும், தெளிவில்லாமல் சொன்னாலும், மாணவன் தன் புத்தியினாலே உய்த்து உணர்தலினால் உணர்ந்து கொள்ள வேண்டும். உய்த்துணர்தலே மாணவனுடைய அறிவை மாட்சிமைப்படுத்தும். எல்லாவற்றையும ஆசிரியரே சொல்லிவிடுவாரேயானால் மாணவன்பிறகு எதனையும் சிந்தித்து உணர்ந்து அறியமாட்டான். அருளாசிரியர் சொல்வதை மட்டுமன்றி, சொல்லாமல் விட்டதையும் உய்த்துணர்ந்து கொள்ளும் திறனுடைய மாணவனை ஆசாரியர் 'ஒண்புதல்வா' என்று அழைக்கின்றார்.

குலிசம் என்னும் வச்சிராயுதம் மண்ணுக்குரிய

அடையாளமாகும். தாமரை நீருக்குரிய அடையாளம். சுவத்திகம் என்பது (ஸ்வஸ்திக்) தீயின் அடையாளம். காற்றுக்கு அறுபுள்ளி அடைய்ாளமாகும். வானத்திற்கு அமுதவிந்து அடையாளம்.

அமுத விந்து, வானத்திலிருந்து வரும் மழைக்கு விந்து அல்லது வானமிழ்தம் என்று பெயர். ''தானமிழ்தம் என்றுணரற்பாற்று'' என்பார் திருவள்ளுவர். இங்கே ஆரமுதம் என்று சிறப்பு அடைமொழி கொடுத்திருக்கின்றார். கிணற்று நீரும், ஆற்று நீரும் கடல் நீரும் அனைவருக்கும் பயன் தருமா? பயன் தராது. இவையெல்லாம் அவற்றின் அருகில் இருப்பார்க்கே பயன் தருவனவேயன்றி, தூரத்தில் இருப்பார்க்கும், அல்லது பரந்த இந்த உலகத்தில் உள்ள எல்லோர்க்கும் பயன்தருவனவாகா. ஆனால் மழை அப்படியன்று. அது உலக மக்கள் அனைவருக்கும், பேதமின்றி ஒரே மாதிரியான பயன் தந்து கொண்டிருப்பதனாலே அதற்கு ஆரமுதம் என்று அடைமொழி தந்திருக்கின்றார்.

பயிரிடும்போது நிலத்திற்குக் குளத்து நீரோ, ஏரி நீரோ, கிணற்று நீரோ, அன்றி ஆற்று நீரோ பாய்ச்சிப் பயிரிடுகின்றோம். ஆனால் அவை முழுமையான விளைவைத் தருவதில்லை. மழை நீர் மட்டுமே முழுமையான விளைவைத் தருவது. அக்காரணத்தால்தான் வான் மழையை வான் அமிழ்து ஆரமுது என்றெல்லாம் சொல்லுகின்றார். பயிர்களை மட்டுமின்றி அனைத்து உயிர்களையும் வான்மழையே வாழ்வித்துக் கொண்டிருக்கின்றது.

பசுமை என்பது ஒரு வகையான ஆற்றல். இதனை இக்காலத்தில் யூரியா அல்லது பயிர்ச்சத்து என்கின்றனர். அப்பயிர்ச்சத்து எல்லா உயிர்களுக்கும் தேவைப்படுகிறது. மழையில் பயிர்ச்சத்து, மணிச்சத்து, சாம்பல் சத்து, மற்றும் பயிருக்குத் தேவையான எல்லா வகைச் சத்துக்களும் நிறைந்திருப்பதால் ஆரமுதம் என்றார். மழையில் எப்படி இவ்வளவு சக்திகள் நிறைந்திருக்கின்றது?

விந்து என்றால் ஒளி. அந்த ஒளி மழை நீரில் கலந்து

வந்து அனைத்து உயிர்களுக்கும் ஒளி தந்து கொண்டிருக்கின்றது. தாவர சங்கமங்கள் அதனால் புதுமை பெறுகின்றன. அதனால்தான் 'ஆரமுத விந்து' என்று மிக நுட்பமாகச் சொன்னார்.

❋ ❋ ❋ ❋ ❋

7. பார்ஆதி ஐந்துக்கும் பன்னும் அதி தெய்வங்கள்
ஆர்ஆர் அயன்ஆதி ஐவர்ஆம் – ஓர்ஓர்
தொழில் அவர்க்குச் சொல்லுங்கால் தோற்றமுதல் ஐந்தும்
பழுதுஅறவே பண்ணுவர்காண் பார்.

இப்பூதங்களுக்குத் தனிதனி ஆற்றல்கள் உண்டு. ஆற்றலைத் தெய்வம் என்பர். ஐம்பூதங்களுக்கும் அதிதெய்வங்கள் உண்டு. அவர்கள் அயன், மால், உருத்திரன், ஈசர், சதாசிவர் என ஐவர். அவர்களில் அயன் படைத்தலையும், திருமால் காத்தலையும், உருத்திரன் துடைத்தலையும் (சுத்தம் செய்தல்) ஈசர் மறைத்தலையும் சதாசிவர் அருளலையும் செய்து கொண்டிருக்கின்றார்கள்.

❋ ❋ ❋ ❋ ❋

8. படைப்பன் அயன், அளிப்பன் பங்கயக்கண் மாயன்
துடைப்பன் உருத்திரனும் சொல்லில்திடம்பெறவே
என்றும் திரோபவிப்பர் ஈசர், சதாசிவரும்
அன்றே அநுக்கிரகர் ஆம்.

நிலம், நீர், தீ, காற்று, வானம் இவற்றில் பிரிவின்றிக் கலந்து நின்று அவற்றை இயக்கிக் கொண்டிருக்கும் அதி தெய்வங்கள் யார் யார்?

மண்ணுக்கு நான்முகன், நீருக்குத் திருமால், நெருப்புக்கு உருத்திரன்' காற்றுக்கு ஈசன்; வானுக்குச் சதாசிவர். இவர்கள் யாவரும் அதி தெய்வங்கள்.

பரம் பொருளின் ஆணைவழி நின்று செயல்படுகின்றவர்கள் ஆவர். இவர்கள் எல்லாம் முழுமுதற் பரம்பொருள் அல்லர். நாம் சொல்லும்

பரம்பொருள் அன்று. பிரமர்களும், நாரணர்களும், உருத்திரர்களும், ஈசர்களும், சதாசிவர்களும் அளவிடமுடியாத அளவில் இருக்கின்றார்கள். நூறுகோடி பிரமர், ஆறுகோடி நாரணர் என்று இருக்கின்றனர். ஈறிலாதவன் ஈசன் ஒருவனே. அவனுக்கு ஆரம்பம், நடு, முடிவு என்று எதுவும் கிடையாது. அவன் முழுமுதற் பரம்பொருள். அவன் பெயரை இவர்கள் வைத்துக் கொண்டிருக்கின்றார்கள் . உதாரணத்திற்கு, திருக்கழுக் குன்றிலே, 'உருத்திரகோடீசுவரர்' என்று ஒரு லிங்கத்தை வைத்திருக்கிறார்கள். அந்த லிங்கத்தை கோடி உருத்திரர்கள் வந்து வழிபட்டார்கள் என்பது வரலாறு.

இன்னும் சற்று விளக்கினால்தான் இது தெளிவாகும் என எண்ணுகின்றேன். பருப்பூதங்களின் பிழிவே பொறிகளாகும். பொறிகள் புலன்களாயின; புலன்கள் தன்மாத்திரைகள் ஆயின. ஐம்பூதங்களிலும் இத்தனை பாகுபாடுகள் உள்ளன.

இந்தப் பாகுபாடுகளை மனதில் வைத்துக் கொண்டு இப்போது தெய்வங்கள் எத்தனை என்று சிந்திப்போம். பஞ்சபூதமும் இந்த உடம்பில் இருக்கின்றன; பஞ்ச பூத வடிவமும் இந்த உடம்பில் இருக்கின்றன. பஞ்ச பூதங்களின் நிறங்களும் இந்த உடம்பில் இருக்கின்றன. பஞ்ச பூத எழுத்துக்களும் இந்த உடம்பில் இருக்கின்றன. இந்த உடம்பை பெற்ற ஆன்மாவானது இதனுள்ளே – 36 தத்துவங்களாலாகிய இக்கூட்டுக்குள்ளே– குடியிருக் கின்றது. இந்த உடம்பிற்குள் இருப்பது ஒரே ஒரு சீவன்தான்.

''இன்றைக்கு நன்றாகப் பேசினீர்கள்''; என்றும் ''உங்கள் பார்வை படவேண்டும்'' என்றும், ''இந்தச் செய்தியை நீங்கள் கேட்க வேண்டும்'' என்றும் சொல்கின்றோம். அப்படியானால் இவற்றையெல்லாம் யார் செய்கின்றார்கள். கண் பார்க்கின்றது; கை கொடுக்கிறது அல்லது ஒரு செயலைச் செய்கின்றது. காது கேட்கின்றது; கால் நடக்கின்றது; இருந்தபோதும் 'நீங்கள் செய்ய வேண்டும், நீங்கள் பார்க்க வேண்டும், நீங்கள் கேட்க வேண்டும், நீங்கள் வர வேண்டும் என்றெல்லாம்

சொல்கின்றார்கள், அது ஏன்? யாரைச் சொல்கின்றார்கள் இந்த 'நீங்கள்' என்பது யாரைக் குறிக்கும். 'நீங்கள்' என்பது ஆன்மாவைத்தான் குறிக்கும். அந்த ஆன்மா ஐம்பொறிகளின் வாயிலாகச் செயல்படுகின்றது. அப்படியே ஐம்பூதங்களும் செயற்படுவது ஒரே கடவுளின் ஆற்றலால்தான். ஒவ்வொரு பூதமும் ஒவ்வொரு செயலை ஒவ்வொரு அதி தெய்வத்தின் இயக்கத்தால் செய்கின்றபோது அந்த அதி தெய்வத்திற்கு ஒரு பெயர் கிடைக்கிறது.

மண்ணில் செயல்படுகின்றபோது பிரம்மா என்றும், நீரில் செயல்படுகின்ற போது திருமால் என்றும், தீயில் நின்று தூய்மை செய்கின்றபோது உருத்திரன் என்றும், காற்றில் நின்று செம்மையைத் தருகின்றபோது ஈசன் என்றும், வானில் நின்று செயல்பட்டு நலத்தைக் கொடுக்கின்ற போது சதாசிவம் என்றும் பெயர் பெறுகின்றான்.

இத்தனையும் செய்கின்றவன் ஏன் தன் பெயரை வைத்துக் கொள்ளவில்லை என்றால் அவன் தன் பெயரை முன் நிறுத்துவதைவிடத் தான் முன் நின்று செய்வதைவிட, ஒரு தூய உயிரை முன்நிறுத்தி, அத்தூய உயிரின்பால் நின்று செயல்படுகின்றான். அவர்களுக்கு முதன்மை கொடுக்கின்றான்.

ஆகவே இந்த அதி தெய்வங்கள் யாவும் உயர்ந்த தவத்தினாலே முதிர்ந்து, உயர்ந்த சீவன்களேயன்றி முழுமுதற் பரம்பொருள் அல்லர். இவர்களை அதிதெய்வங்கள் என்பர்.

படைப்பவன் நான்முகன், நான்முகன் என்றால் 'நான்' என்ற எண்ணம் உடையவன். படைப்பவர்கள் எப்போதும் அறிவாளிகளாக இருப்பார்கள். அறிவாளிகள்தாம் எதையும் செய்ய முடியும். அறிவுள்ள வர்களுக்கு எப்போதும் 'நான்' என்ற முனைப்பு இருந்து கொண்டேயிருக்கும்.

அப்படி அவன் படைக்கின்ற யாவற்றையும் ஒருவன் காக்க வேண்டும். மண்ணிலே ஒரு செடி

முளைக்கின்றதென்றால் அதைக் காக்க வேண்டும். அந்தச் செடியைக் காப்பது எது? நீர், 'நீரின்றி அமையாது உலகெனின்.....' என்பார் திருவள்ளுவர். இல்லாவிட்டால் எதுவும் தழைக்காது. அப்படிக் காக்கின்றவனைத் திருமால் என்றார்கள். நீருக்கு நீல நிறம். திருமாலுக்கும் நீல நிறம். காக்கும் ஆற்றலுக்குத் திருமால் என்று பெயர்.

உருத்திரன் நெருப்புக்கு அதிதெய்வம். இதன் தொழில் எதையும் சுத்தம் செய்வதாகும். ஆன்மாவில் உள்ள குற்றங்களைத் தூய்மை செய்யும். சூரிய ஒளி இருந்தால்தான் செடி, கொடி முதல் அனைத்து உயிர்களும் தழைக்க முடியும். அதன் வெப்பமில்லாவிட்டால் எதுவும் தழைக்காது. துடைத்தல் என்றவுடன் அழித்தல் என்று பொருள் கொள்வார்கள் பலர். அழித்தல் என்ற பொருளில் இங்கே சொல்லப்படவில்லை. துடைத்தல் என்பது தூய்மை செய்தல் என்று பொருள் பெறும். ''சிவன் கோவிலுக்கா போகின்றீர்கள், துடைத்துவிடுவானே! '' என்று பயமுறுத்துவாரை இன்றைக்கும் பார்க்கலாம். அவன் அழிப்பன் அல்லன். நம்மிடம் இருக்கின்ற அழுக்கைத் துடைப்பவன் துடைத்தால் தூய்மை பெறுவோம். மேல்நிலைக்குச் செல்லலாம். துடைக்காமல் விட்டுவிட்டால் அழுக்கு மேன்மேலும் சேர்ந்து கீழ்நிலைக்குப் போய்விடுவோம். எனவே, நம் ஆன்மாவில் இருக்கின்ற அழுக்கைத் துடைக்க வேண்டுமென்றால் சிவன் கோவிலுக்குத்தான் போக வேண்டும்.

இந்த உடம்பெனும் கூட்டுக்குள்ளே இருக்கின்ற சீவன் செய்த, செய்கின்ற தவறுகளையெல்லாம் மறைத்து நிற்கும் ஆற்றலுக்கு ஈசர் என்று பெயர்.

எல்லா இடத்திலும் நிறைந்து நின்று அருள் செய்து கொண்டிருக்கும் ஆற்றலுக்குச் சதாசிவன் என்று பெயர். சதா, சிவம் – எங்கும் இருக்கும் சிவம். நாமும் சதா சிவனை நினைத்துக் கொண்டிருந்தால் நாமும் சதாசிவன் ஆகிவிடலாம்.

திடம் பெறவே என்றும் திரோபனிப்பவர் ஈசர் –

திடம்பெறவே என்ற சொல்லை ஏன் சொன்னார்? ஈசர் மறைத்தல் தொழிலைச் செய்து கொண்டிருக்கின்றார். இதற்குத் திரோதானம் அல்லது மறைப்பு ஆற்றல் என்றும் சொல்லலாம். நாம் பிறவிகள்தோறும் செய்த தீச்செயல்கள் பல. இப்பிறவியிலும் சிறு வயதிலிருந்தே பல செயல்களை, நாணப்படும்படியான செயல்களைச் செய்திருப்போம். திரோதானம் என்ற இந்த மறைப்பு ஆற்றல் மறைத்து வைக்கவில்லையென்றால் நம்மால் மன நிம்மதியோடு செயல்பட முடியாது. எந்நேரமும் வருந்திக் கொண்டேயிருப்போம். அதனால் பலவற்றை மறைத்தும், சிலவற்றை மட்டும் நினைவில் நிறுத்தியும் இந்த ஆற்றல் நமக்கு உதவிக் கொண்டு இருப்பதால், ஆன்மா திடப்பட்டு மேற்கொண்டு செயல்புரிய உதவிக் கொண்டிருப்பதால், 'திடம்பெறவே' என்ற அடைமொழியைப் போட்டிருக்கின்றார்.

அந்த ஆற்றல் உறுதிப் பரம்பொருளான இறைவனை திரைபோட்டு மறைத்து வைத்திருக்கின்றது. இந்த உயிரானது இறைவனைச் சென்று அடைகின்ற வரையிலும் இது தன் தொழிலைச் செய்து கொண்டே யிருக்கும். மறைத்து வைத்தால்தான் உயிர் செயல்பட்டுத் தேடிச் செல்லும். இல்லாவிட்டால் சோர்ந்துபோய் இருந்த இடத்திலேயே இருந்துவிடும்.

மற்றொரு காரணம்: நாமெல்லாம் இங்கே கூடியிருக்கிறோம். பாடம் கேட்கிறோம். இப்படி நாம் கூடியிருப்பதற்கு ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டும்; ஏதோவொரு தொடர்பிருக்க வேண்டும்; ஏதோ ஒரு மரபு இருக்க வேண்டும்; இல்லாவிட்டால் இப்படிக் கூட முடியாது. அந்த உறவு என்ன? அந்தத் தொடர்பு என்ன? என்று இப்போது நினைவுபடுத்தினால் இப்போது நம்மால் சிறப்பாகச் செயல்பட முடியாது.

முற்பிறவியில் எனக்குத் தந்தையாக இருந்த சீவன் இப்பிறவியில் பிச்சை எடுத்துக் கொண்டு போகின்றது; முற்பிறவியில் எனக்கு மனைவியாக இருந்த உயிர் இப்போது இன்னொருவருக்கு மனைவியாக

இருக்கிறார்கள். எனக்கு இப்போது முற்பிறவியின் நினைவு வந்துவிட்டால் எப்படியிருக்கும்? என் தந்தையா இப்படிப் பிச்சை எடுக்கின்றார்! என்ற ஆற்றாமை எழும். அவர் பிச்சை எடுக்கலாகாது என்று தடுக்க முயல்வேன். என் மனைவியா இன்னொருவருக்கு மனைவியாவது என்ற ஆத்திரம் வரும்; பொறாமை வரும்; அவர் மேல் ஆசை வரும். இந்த ஆற்றாமையினாலும், ஆசையினாலும்; அவர்களோடு தொடர்புபடுத்திக் கொள்ள முயல்வேன். இதனால் இப்பிறவியில் நான் பெற வேண்டிய அனுபவங்களை நானும், அவர்கள் பெற வேண்டிய அனுபவங்களை அவர்களும் பெற முடியாது தடைபட்டுவிடும். அதனால்தான் பெருமான் முற்பிறவியில் நடந்த செய்திகளை மறைத்து அருளுகின்றான். எனவேதான் மறைப்பாற்றல் மிக மிக அவசியமானதாகக் கருதப்படுகின்றது. திருவள்ளுவரும், ''நன்றல்லது அன்றே மறப்பது நன்று'' என்பார்.

இத்திரோதானம் என்னும் அருட்சக்தி மற்றோர் செயலையும் செய்து கொண்டே இருக்கின்றது. பெரிய அறிவுரைகளைத் தொடர்ந்துசொல்லிக் கொண்டே யிருக்கும். ''நான் முன்னால் நிற்கின்றேன்; எனக்குப் பின்னாலே நீ அடைய வேண்டிய மகத்தான ஒரு பொருள் இருக்கின்றது; ஆனால் அப்பொருளை அடைவதற்குரிய தகுதியை இன்னும் நீ பெறவில்லை'' என்ற இத்திரோதான சக்தி நமக்கு சொல்லிக்கொண்டேயிருக்கும். ஏன்? நாம் தேடுகின்ற பொருளிலே நமக்குப் பற்று வரவேண்டும். அந்தப் பொருளை உறுதியாக அடைதல் வேண்டும். அப்படி அடைகின்ற எண்ணம் தொய்ந்து விடாமல் இருக்க, உறுதி பெற, அந்த உறுதிப் பொருளை மறைத்து நின்று கொண்டு,அதனை அடைவதற்குரிய அறிவுரைகளையும், .வழிகளையும் சொல்லிக் கொண்டேயிருக்கும்.

இத்திரோதானம் ஒன்றுதான் நாம் இறைவனிடத்தில் போய்ச் சேருகின்ற வரையிலும் நமக்கு முன்னிருந்து கொண்டு இறைவனை மறைத்து மறைத்து, அவன் மேல் பற்றை அதிகரிக்கச் செய்து கொண்டேயிருக்கும். கிட்டாத பொருள்போல ஒரு சமயம்

காட்டும்; மற்றொரு சமயம் எளிதில் இறைவனை அடைந்துவிடலாம் போல் தோற்றுவிக்கும். ஏன்? எந்த ஒரு பொருளையும் எளிதில் அடைந்துவிட்டால் அதன்மேல் பற்று வராது. கிடைக்காத பொருள் கிடைத்துவிட்டது போன்ற ஒரு சூழ்நிலையை உருவாக்கி, அந்தப் பொருளைப் பெரும்துன்பத்திற்குப் பின்னர் கிடைக்குமாறு செய்தால் அதனைப் போற்றிப் பாதுகாத்து வைத்துக் கொள்வோம். எக்காலத்தும் அதனைவிட்டுப் பிரியாத நிலையை எய்துவோம். முன்செய்த வினைகள் நமக்குத் தெரிந்துவிட்டால் நாம் முன்னோக்கிச் செல்லாமல் இருந்த இடத்திலேயே தயங்கி நின்றுவிடுவோம். இந்த எடுத்துக்காட்டுக்கள் உங்களுக்கு விளங்குகின்றதோ இல்லையோ தெரியாது இருப்பினும் இராமாயணத்தில் இருந்து ஒரு காட்சியைச் சொன்னால் விளங்கி விடலாம் என்று எண்ணுகின்றேன். இந்த மறைப்பாற்றல் எவ்வளவு முக்கியம் என்பது அதிலிருந்து விளங்கும்.

இந்திரசித்தும், இல்க்குவனும் போர் செய்கின்றார்கள். இலக்குவன் இந்திரசித்தனின் தலையைத் துண்டித்துவிடுகின்றான். அவன் இறந்துவிடுகின்றான். அவனுடைய மனைவி போர்க்களத்தில் வந்து இந்திரசித்தனின் வீரத்தையும், புகழையும், யாராலும் வெல்ல முடியாத நீ இப்படி இறந்துபட்டாயே என்றும் சொல்லி மிகவும் வருந்தி அழுகின்றாள். அப்போது இந்திரசித்தனின் தலை மட்டும் இறங்கி வந்து தன் மனைவிக்கு ஆறுதல் சொல்கின்றது: ''பெண்ணே! நீ ஆதிசேடனின் மகள். உன்னை நான் சிறையெடுத்து வந்து மணந்து கொண்டேன். உன் தந்தை என்னோடு எதிர்த்துப் போர் செய்தார். அவரால் என்னை வெற்றி கொள்ள முடியவில்லை. அதனால் அந்தண வேடத்தில் வந்து என் உயிரை யாசகமாகக் கேட்டார். நான் போர்க்களத்தில் என் உயிரை எடுத்துக் கொள்ளுங்கள் என்று சொன்னேன். அதனால் அவர் இப்போது இலக்குவனாக வந்து நான் கொடுத்த வாக்கின்படி என் உயிரை எடுத்துக் கொண்டார். அதனால் நீ வருந்தற்க!'' என்கின்றது. இந்த வரலாற்றை இலக்குவனும் கேட்டுக் கொண்டிருக்கின்றான். அவனுக்கு முன் நினைவு வருகின்றது. தவறு செய்துவிட்டோமே என்று வருந்துகின்றான். தன் கையினாலேயே தன்

மருமகனைக் கொன்று தன் மகளை விதவைக் கோலத்துக்கு ஆளாக்கிவிட்டோமே என்று வருந்துகின்றான். கையிலிருந்து வில்லையும், அம்பையும் கீழே போட்டுவிட்டுச் சோர்ந்துஉட்கார்ந்து விடுகின்றான். இந்தச் செய்தியை இராமரிடம் போய்ச் சொல்ல அவர் இலக்குவன் இருந்த இடத்திற்கு வருகின்றார். மறைப்பாற்றலைத் தருகின்றார். முன் நினைவு நீங்கிவிடுகின்றது. முன் நினைவு நீங்கியதும் இலக்குவன் மீண்டும் வில்லெடுத்துப் போர் செய்கின்றான். மறதி என்பது தான் வந்த காரியத்தைச் செவ்வனே செய்து முடிப்பதற்கு ஏதுவானது. எனவேதான், 'திடம்பெறவே என்றும் திரோதிப்பர் ஈசர்'' என்று சொன்னார்.

எனவே இந்த ஐந்து அதி தெய்வங்களும் ஐந்து தொழில்களைச் செய்து கொண்டிருக்கின்றார்கள். இவர்கள் இறைவன் ஆணை வழியே நடந்து கொண்டு இருப்பவர்கள். இவர்களுக்கென்று சொந்த விருப்பு வெறுப்பு மற்றும் அதிகாரம் எதுவுமே கிடையாது. அவரவர் தொழிலையே அவரவர் செய்து கொண்டிருப்பர். ஒருவர் தொழிலை மற்றவர் மாற்றிச் செய்யவும் முடியாது. உதாரணமாக, கண் கேட்காது, காது பார்க்காது, வாய் மணத்தை நுகராது, மூக்கு சுவையை உணராது. ஒரு கருவி மற்ற கருவியின் வேலையைச் செய்யாது.

* * * * *

அடுத்து ஐம்பூதங்களின் இயல்பினைக் கூறுகின்றார்.

9. மண்கடின மாய்த்தரிக்கும் வாரிகுளிர்ந்தே பதம்ஆம்
ஒண்கனல் சுட்டு ஒன்றுவிக்கும் ஓவாமல் –
வண்கால்

பரந்துசலித்துத் திரட்டும் பார்க்கில் ஆகாயம்
நிரந்தரமாய் நிற்கும் நிறைந்து.

மண் கடினமாய் உள்ளது. ஏன்? எல்லாவற்றையும் தாங்குவதனால் கடினமாய் உள்ளது.

வாரி என்ற சொல் கடல், மேகம், தண்ணீர் என்றெல்லாம் பொருள் தரும். கிருபானந்தவாரி என்றால் ஆனந்தத்தை வாரி வழங்குபவர், கடல் போன்ற

ஆனந்தத்தை வாரி வழங்குபவர் என்று பொருள். ''வாரி வளம் குன்றிக்கால்'' என்ற திருவள்ளுவரின் வாசகத்திற்கு நீர் என்று பொருள். நீரானது கடினமான பொருளோடு சேர்ந்து அதனைப் பதமாகவும், மென்மையாகவும் ஆக்கிவிடும். தண்ணீரால் பல பண்டங்கள் பதமாகின்றன. எனவேதான், 'நீரின்றி அமையாது உலகு' என்பார் திருவள்ளுவர். நீர் இல்லாவிட்டால் உலகத்தில் உள்ள பண்டங்களால் எந்தவிதமான பயனும் இருக்காது. அதன் இன்றியமையாத் தன்மையை நோக்கியே

''துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூ உம் மழை'' (12)

என்றார் பொய்யாமொழியார். மண் இளகவும், பயிர் முளைக்கவும், முளைத்த பயிர் வளரவும், விளைந்த பயிரைக் கொண்டு வந்து சமைக்கவும், சமைத்த பொருளை உண்ணவும், உண்டபின் கைகழுவவும், உண்ட பொருள் செரிக்கவும் நீர் இன்றியமையாததாகிறது. எனவே நீரின்றி எந்தப் பொருள் இருந்தும் பயன் இல்லை.

ஒண்கனல்சுட்டு ஒன்றுவிக்கும் கனல் என்றால் நெருப்பு. நெருப்பு தூய்மைக்கு அடையாளம். எல்லாவற்றையும் தூய்மைப்படுத்தி ஒன்றாக்கிவிடும். நம்மிடத்தில் அறிவு இருக்கிறது அல்லது ஓர் ஆற்றல் இருக்கின்றது என்றால் எல்லாவற்றையும் முதலில் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். நெருப்பில் பல பொருட்களைப் போட்டாலும் அவற்றையெல்லாம் சுட்டபின் எஞ்சியிருப்பது சாம்பர்தானே. அப்படி எப்பொருளாயினும் அவற்றையெல்லாம் சுட்டு ஒன்றுவிக்கும் தன்மை நெருப்புக்கு மட்டுமே உண்டு. எந்நிலையில் உள்ள உயிர்களையும் இறைவன் கடைசியில் தன் திருவடியில் ஒன்றுவிப்பதனால்தான் அவனைத் தீயின் வண்ணமாகச் சித்தரித்தார்கள் நம் பெரியோர்.

ஓவாமல் – இடைவிடாமல், வண்கால் – வளம் பொருந்திய காற்று, பரந்து சலித்துத் திரட்டும் – எங்கும் பரவிப் பொருள்களை ஒன்று சேர்க்கும். மேலும் எல்லாவற்றையும் கெடாமலும் பார்த்துக் கொள்ளும். நமக்கு ஊக்கமளிப்பதும் காற்றுதான். '' காலில் ஊக்கம்

வைத்தோன் காண்க'' என்பார் மணிவாசகர். ஊக்கம்தான் வளம். காற்று இல்லாவிட்டால் ஊக்கம் இருக்காது. ஊக்கமில்லாவிட்டால் வளமும் இருக்காது.

பார்க்கில் ஆகாயம் நிரந்தரமாய் நிற்கும் .நிறைந்து – சிந்தித்துப் பார்த்தால் ஆகாயம் மட்டும் நிரந்தரமாய் அசையாமல் நிற்கும்; நிறைந்து இருக்கும்; எல்லாவற்றிற்கும் நிறைவைத் தந்து கொண்டிருக்கும் தன்மையது ஆகாயம். இவ்வளவு செய்திகளையும்

பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி

ஒன்று திரட்டித் தருகின்றார் மணிவாசகர். இதன் விளக்கம் என்னவென்றால், மண்ணிலே ஐந்து பூதங்களின் குணங்கள் உண்டு; நீரிலே நான்கு பூதங்களின் குணம் உண்டு; நெருப்பில் மூன்று பூதங்களின் குணங்கள் உண்டு; காற்றிலே இரண்டு பூதங்களின் குணங்கள் உண்டு; வானில் ஒரே ஒருபூதத்தின் குணம் மட்டுமே உண்டு.

இந்தப் பூதங்கள் நம்மை விழுங்கி விடக் காத்திருக்கின்றன. நாம் சற்று ஏமாந்தாலும் நம்மை இவை விழுங்கிவிடும். எனவே விழிப்புடன் இருந்து நாம் நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். இதற்குச் சான்றாக ஒரு கதை உண்டு.

நக்கீரர் இறைவனுடைய கோபத்துக்கு ஆளாகிச் சாபம் பெற்று வட கைலையை நோக்கிப் போய்க் கொண்டிருக்கின்றார். வழியில் ஓர் ஆற்றங்கரையில் இருந்து கொண்டு சிவ வழிபாடு செய்து கொண்டிருக்கின்றார். வழிபாடு செய்யும் போது வழிபாட்டில் மட்டுமே கவனம் செலுத்த வேண்டும். பராக்குப் பார்க்கக் கூடாது. எந்த நோக்கத்தில் உட்கார்ந்திருக்கின்றோமோ அந்த நோக்கத்தில் கவனம் இருக்க வேண்டும். கவனம் சிதறக் கூடாது. நக்கீரர்

பெரியவர். சங்கப் புலவர். சங்கப் புலவர்களின் தலைவர். இறைவனோடு போட்டியிடும் ஆற்றல் பெற்றவர். அவரே பராக்குப் பார்த்தார். அவரே பராக்குப் பார்க்கும்போது நாம் பார்த்தால் என்ன என்ற எண்ணம் எழும். பின்னால் ஏற்பட்ட விளைவை அவரால் தாங்கிக் கொள்ள முடிந்தது. அப்படி நம்மால் தாங்கிக் கொள்ள இயலுமானால் நாமும் பராக்குப் பார்க்கலாம். ஆனால் நடைமுறையில் நம்மால் அந்த விளைவுகளைத் தாங்கிக் கொள்ள முடியாது என்பதற்காகவே இக்கதை எழுந்தது.

அவர் வழிபாடு செய்து கொண்டிருக்கும்போது அரச மரத்திலிருந்து ஓர் இலை கீழே விழுந்தது. விழுந்த இலை ஒரு பாதி நீரிலும், ஒருபாதி நிலத்திலும் விழுந்தது. நீரில் கிடந்த பகுதி மீனாகவும், தரையில் கிடந்த பகுதி பறவையாகவும் மாறியது. பறவை ஒரு பக்கமும், மீன் மறு பக்கமும் இழுத்துக் கொண்டு ஒரு விசித்திரமான நிலையை ஏற்படுத்தியிருந்தது. இருவேறு தன்மையுள்ள இரண்டு உருவங்கள் ஒன்றாக இணைந்து நிற்பதைப் பார்த்து ஆச்சரியப்பட்டார். வழிபாட்டிலிருந்த கவனம் சிதறியது. வழிபாட்டை மறந்தார். பூதத்தில் மாற்றம் வந்தவுடனே (இவை பூதப் பொருள்கள்தானே) வேடிக்கை பார்த்தார். உடனே அவரைப் பூதம் தூக்கிப் போய்விட்டது. அப்படியே இவ்வுலகத்தில் பிறந்திருக்கின்ற, வாழ்ந்து கொண்டிருக்கின்ற நாம் உலகியலில் கவனம் செலுத்தி, இறைவனை மறந்தால் நம்மையும் பூதம் விழுங்கிவிடும் என்பதுதான் இக்கதையின் தத்துவம்.

தனியே பூதம் என்று இல்லை. மண், நீர்,தீ, காற்று, வான் என்ற இவ்வைம்பூதங்களில் ஏதேனும் ஒன்று நம்மை விழுங்கிவிடும். அதற்கு அடையாளம் என்ன? நாம் அலைந்து கொண்டேயிருப்போமே தவிர, நமக்கும் நிறைவு இருக்காது , நம்மைச் சார்ந்தார்க்கும் நிறைவு இருக்காது.

உதாரணமாக, பாம்பு தேரையைப் பிடித்துக் கொண்டதென்றால் தேரை அமைதியாகவா இருக்கும்? 'பாம்பின் வாய்த் தேரை போலப் பலபல நினைக்கின்றேனை' என்பார் அப்பர் சுவாமிகள். ஆசை

என்ற பூதங்களின் வயப்பட்ட இச்சீவன், பாம்பின் வாயில் அகப்பட்ட தேரை துடிப்பதுபோலத் துடித்துக் கொண்டிருக்கும். அதனால் அப்பூதங்கள் நம்மைப் பிடிக்காமல் இருக்க நாம் இறைவனைப் பிடித்துக் கொள்ள வேண்டுமென்றுஅறிவுரை சொல்லுகின்றார்.



10. உள்ளபடி மாபூதம் ஓதினோம் உன்தனக்குக்
கள்ளமிகும் ஐம்புலனும் கட்டுரைக்கில் –
மெள்ளவே
ஓசை பரிசம் உருவம் சுவைநாற்றம்
ஆசைதரும் ஐம்புலனே ஆம்.

இதுவரையிலும் பூதங்களைப் பற்றிச் சொல்லிக் கொண்டு வந்தார். பருப்பூதம், நுண்பூதம், மிகுநுண்பூதம், அவற்றின் நிறம், வடிவம், வண்ணம் இயக்கம், இயக்க ஆற்றல், தன்மைகள் என இத்தனையும் சொல்லிக் கொண்டு வந்தார். அடுத்து இந்த உடலைப் பற்றிச் சொல்லப் போகின்றார்.

நம்முடைய உடல் பஞ்சபூதங்களினால் ஆனது. மேலே சொல்லப் பட்ட அனைத்துத் தன்மைகளும் இவ்வுடலிலும் இருக்கும். ஐம்பூதங்களின் பிழிவே ஐம்புலன்கள். இரும்பை உருக்கி கருவிகளை எப்படிச் செய்கின்றோமோ அப்படி இறைவன் ஐம்பூதங்களை பிழிந்து நமக்குக் கருவிகளாகச் செய்து கொடுத்திருக்கின்றார். இந்த ஐம்பூதங்கள் எப்படிப்பட்டவை?

திருட்டுத்தனம் மிகுந்தவை ஐம்புலன்கள். நேர்மையாக இருக்கவே இருக்காது. நாம் இவற்றை நேர்மையானவை என்று எண்ணி ஏமாந்து கொண்டிருப்போம். சிறிது சிந்தித்துப் பார்த்தால்தான் அவற்றின் திருட்டுத் தனங்கள் என்னென்ன என்று தெரியும். இவற்றின் தன்மை தெரிந்து, இவற்றைப் பற்றி நமக்கு எச்சரிக்கை செய்யவே,

"சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு" (37)

என்று தெளிவுபடுத்துகின்றார். இவை நம்மை எப்படி ஆட்படுத்துகின்றன என்று ஒரு சிறு உதாரணத்தின் வாயிலாகப் பார்க்கலாம்.

ஆரம்பத்தில் காபி சாப்பிடுவதில்லை என்று இருப்போம். பின்பு ஒரு வேளை காபி சாப்பிட்டால் தவறில்லை என்று ஆரம்பிப்போம். பிறகு ஒருவர் வீட்டுக்குப் போகின்றோம். அங்கே அன்றைக்குச் சாப்பிட வேண்டிய ஒரு வேளைக் காபியைச் சாப்பிட்டு விடுவோம். மற்றொரு அன்பரை அன்றே சந்திக்க வேண்டிய சூழல். அவர் வீட்டிற்குப் போகின்றோம். அவர் வீட்டிலும் காபி சாப்பிடச் சொல்லி உபசரிக்கின்றார்கள். "இல்லை, நான் ஒரு நாளைக்கு ஒரு வேளைதான் காபி சாப்பிடுவது வழக்கம்; இன்றைக்குச் சாப்பிட வேண்டிய காப்பியை அவர் வீட்டில் சாப்பிட்டு விட்டேன்" என்போம். உடனே அந்த அன்பர், "அவர் வீட்டில் சாப்பிட்டீர்கள், எங்கள் வீட்டில் சாப்பிட மறுக்கிறீர்கள், நாங்கள் என்ன பாவம் செய்தோம், எங்கள் வீட்டிலும் கொஞ்சமாவது சாப்பிட்டால்தான் ஆயிற்று" என்பார். அவருடைய கட்டாயத்திற்கு ஆட்பட்டு அன்றைக்கு இரண்டு வேளை காபியாகிவிடும். இப்படி ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இடம் கொடுத்து, காபி குடியர்களாகவே ஆகிவிடுவோம். ஒரு குறிப்பிட்ட காலம் கடந்தவுடன், 'காபி ஏன் சாப்பிடவில்லை' என்று அப்புலன் தூண்ட ஆரம்பித்து விடும். பின்னர் மெள்ள மெள்ள நம்மை அப்பழக்கத்திற்கு அடிமையாக்கி விடும். இப்படி நாவுக்கு மட்டும் அடிமைப்படுவதன்று. மற்ற புலன்களும் இப்படித்தான் நம்மை மெள்ள மெள்ள ஆசை காட்டி அழைத்துச் சென்று பின்னர் மீளாதபடி நம்மை அவற்றிலேயே அழுத்திவிடும். மீண்டும் மீண்டும் அப்பொருளைத் துய்க்கத் தூண்டிக் கொண்டேயிருக்கும்.

சினிமா பார்க்கின்றோம். அதிலிருந்து என்ன

தெரிந்து கொண்டு விட்டோம். நமக்குத் தெரியாத செய்திகளையா திரைப்படத்தில் காட்டுகின்றார்கள்? இல்லையே. அப்படியிருக்கின்ற போது மீண்டும் மீண்டும் திரைப்படங்களை ஏன் பார்த்துக் கொண்டிருக்கின்றோம். பழக்கத்திற்கு நம்மை ஆட்படுத்தி விடுகின்றது கண் என்ற புலம். அதிலும் இன்னொரு பழக்கத்திற்கும் அது ஆட்படுத்துகின்றது. காட்சிக் கொட்டகையில் போய்ப் பார்த்துக் கொண்டிருக்கின்றோம். தொலைகாட்சிப் பெட்டியிலும் திரைப்படங்களைக் காட்டுகின்றார்கள். ஆனால் காட்சிக் கொட்டகையில் போய்ப் பார்க்கின்ற நிறைவு தொலைக்காட்சிப் பெட்டியில் பார்க்கின்றபோது ஏற்படுவதில்லை. ஏன்? உருவங்கள் பெரிது பெரிதாகப் பார்த்துப்பழகிவிட்ட காரணத்தால் சிறிய உருவங்களாகத்தெரியும் தொலைக்காட்சியில் பார்க்கும் திரைப்படம் சுவைப்பதில்லை. புலன்கள் நம்மை இப்படித்தான் ஒரு பழக்கத்திற்கு ஆட்படுத்தி விட்டு, பின்னர் அதிலேயே நம்மை அழுத்திக் கொண்டேயிருக்கும். அதிலிருந்து என்றைக்கு மீண்டு வருகின்றோமோ அன்றைக்குத்தான் அவற்றின் கள்ளத்தனத்தில் இருந்து நாம் மீண்டோம் என்று பொருள்.

பொழுது போக்குவதில்தான் பழக்கம் என்று இல்லை. பக்தி செய்யும் போதும் இப்படி பழக்கத்திற்கு ஆட்பட்டுவிட்டோம் என்றால் அதிலிருந்து விடு படுவதில்லை. உதாரணமாக, வழிபாடு செய்கின்றபோது ஊதுவத்தி கொளுத்தி வைக்கின்றோம். கற்கண்டு வைக்கின்றோம். மலர்களை அலங்காரமாகச் சூட்டுகின்றோம்; பிரசாதம் வைக்கின்றோம். இவற்றில் ஏதேனும் ஒன்று குறைந்துவிட்டாலும் நம் மனதிற்குள் ஒரு குறை வந்துவிடுகின்றது. அப்படியானால்நம் மனம் வழிபாட்டில் ஈடுபடுவதில்லை. இந்தஅலங்காரப் பொருள்களில்தாம் ஈடுபட்டிருக்கின்றது என்று பொருள். யார் ஒருவர் இப்படி வெளி மயக்கில் ஈடுபடாமல் இறைவன் திருவடிகளில் மனம் ஒன்றுகின்றார்களோ அவர்கள் புலன்களின் மயக்கத்திலிருந்து விடுபட்டவர்கள் என்று பொருள்.

அப்படியானால் அப்பர் பெருமான் போன்றவர்கள் அப்படியில்லையா? என்றால் அவர் எதையும் எடுத்துப் போனதாகத் தெரியவில்லை. அப்படியே எடுத்துப் போயிருந்தாலும், அந்த மலரையோ அல்லது வழிபாட்டுக்குரிய பொருளையோ இறைவனாகவே கண்டவர் அவர். மலரை இறைவன் என்று கண்டபின் மலரில் மணம் தெரியாது; பண்டங்களில் இறைவனைக் கண்ட பின்னர் அதில் சுவை தெரியாது; பண்டங்களில் காணுகின்ற சுவை, மணம், இன்பம் இவற்றையெல்லாம் மறந்து இறைவனுடைய கருணையையே அவற்றில் கண்டால் அந்தக் கருணையிலேயே தோய்ந்துவிடுவோம். **அழகையும், சுவையையும், மணத்தையும் காணுகின்ற போது அன்பின் வயப்படுவோம். வாழ்க்கையில் கூட மனைவியை இறைவன் படைப்பாக, நமக்கு அன்பினால் அமைந்த துணையாகப் பார்க்கத் தெரிந்து கொண்டால் காமம் அகன்றுவிடும். காதல் பிறந்துவிடும். மாறாக அவளை நமக்குப் பயன்படுகின்ற பண்டமாக, போகப் பொருளாக நினைக்கின்ற போது காமம் வெளிப்பட்டு துன்பத்தில் ஆழ்த்திவிடும்.** மனைவி நமக்குப் பயன்பட வந்த பொருள்தான். மறுக்கவில்லை. ஆனால் அந்த உருவத்தில் ஆண்டவனின் உருவத்தையும், அவன் அன்பின் பெருக்கையும், அவனுடைய கருணையையும், நமக்கு நலம் செய்ய வேண்டுமென்று எண்ணி நமக்கு அவளைத் தந்திருக்கின்ற உருக்கத்தையும எண்ணிப் பார்த்தால் மனைவியின் மேல் அன்பு மேலும் மேலும் எழும். மாறாக அவளை அனுபவிக்க மட்டுமே நமக்காகத் தந்தான் என்று எண்ணினால் ஆசைகள் மிகுந்து கொண்டே போய் பின்னர் மீளாத் துன்பத்தில் ஆழ்த்திவிடும்.

**ஓசை:** செவியின் தன்மை என்ன? கேட்பது. ஓசையைக் கேட்கும். அப்படிக் கேட்கின்ற ஓசைகளில் சில ஓசைகள் நமக்கு மிகவும் இனிமை தருவனவாகவும், பிடித்தமானவையாகவும் இருக்கும். அவற்றையும இச்செவிகள் கேட்கும். சில ஓசைகள், பாடல்கள், இசைகள் நமக்குப் பிடிக்காமலும் இருக்கும். இருப்பினும் அவற்றையும் இச்செவிகள் கேட்கும். நம்மையும கேட்குமாறு தூண்டும்.

**பரிசம்:** பரிசம் என்றால் தொடு உணர்ச்சி. அழகான பொருளாக இருப்பின் யாரும் அதனைத் தொட்டுப் பார்க்க எண்ணுவர். தொட்டும் பார்ப்பர். ஆனால் அதற்கு என்ன காரணம் என்று தெரியாது. அவர்கள் விரும்பாவிட்டாலும், அந்தப் புலன் அவர்களை இயக்கித் தொட்டுப் பார்க்கச் செய்யும். அப்படிச் செய்வதன் நோக்கம் என்னவென்று தெரியாமலேயே அதனைச் செய்யத் தூண்டும்.

**உருவம்:** கோவில்களில் பல சிலைகள் இருக்கும். அவற்றைப் பார்க்கின்றவர்கள் அதனைத் தொட்டுப் பார்க்க எண்ணுவார்கள். அறிவுபூர்வமாகப் பார்த்தால் அது சிலைதான். பெண்ணல்ல. இருப்பினும் ஏன் தொட்டுத் தொட்டுப் பார்க்கின்றான். அந்த அழகு அவனைக் கவர்கின்றது. அதனால் அதனைத் தொட்டுப் பார்க்கின்றான். இந்தப் புலன் அவனைத் தொட்டுப் பார்க்குமாறு இட்டுச் செல்கின்றது.

இப்படியே மலர்களையும், தளதள வென்றிருக்கும் செடிகளையும், அழகான எந்தப் பொருளையும் தொட்டுப் பார்க்க வேண்டுமென்ற அவாவினை எழச் செய்து அவற்றைத் தொட்டுப் பார்க்கச் செய்வது கண்.

**சுவை:** பணடங்களைச் சுவைத்துப் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் இருக்கும். அது வேண்டிய பொருளாக இருந்தாலும் சரி, வேண்டாத பொருளாக இருந்தாலும் சரி, அவற்றைச் சுவைத்துப் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் இருந்து கொண்டேயிருக்கும். இது எல்லோர்க்கும் உள்ள இயல்பு. யாரும் விதிவிலக் கல்ல. அதைச் சுட்டிக் காட்டி நுட்பமாகச் சொல்லுவர் பெரியவர்.

**நாற்றம்:** விதை முளைக்கின்றபோது ஒருவித மணம் வரும். மலர் மலர்கின்றபோது மணம் வரும். இப்படி ஒவ்வொரு பொருளிலும் ஏதோ ஒரு வகையான மணம் இருந்து கொண்டேயிருக்கும். சில மணங்கள் நமக்குப் பிடித்தமானதாக இருக்கும். சில பிடிக்காத மணங்களாக இருக்கும். நாசி இரண்டு வகையான மணங்களையும்நுகர்ந்து கொண்டேயிருக்கும்.

ஒரு பொருளை நுகர்கின்றோம். அதில் சுவைதட்டியபின் மீண்டும் மீண்டும் அதனை நுகர வேண்டுமென்று அவாவிக் கொண்டேயிருப்போம். அதனால்தான் 'ஐவாய் வழிசெல்லும் அவா...' என்றார். அவா, ஐம்புலன்களின் வாயிலாகப் பண்டங்களைத் துய்க்கும். துய்க்கத் துய்க்க அவா பெருகிக்கொண்டே இருக்கும். முடிவே இருக்காது. காரணம், ஐம்பொறிகள். பொறிகளின் தன்மை என்ன? அவற்றின் அருகில் வரும் எதையும் பற்றிக் கொள்ளும் தன்மையன. உதாரணம் எலிப்பொறி. எலியைப் பிடிக்க அக்கருவியை வைக்கின்றோம். எலி அதில்உள்ள பொருளைப் பற்றியவுடன் பொறி அதனைப் பிடித்துக் கொள்ளும். அப்படித்தான் விஷய சுகங்களை அவாவி நிற்கின்றபோது இப்பொறிகளும் நம்மைப் பற்றிக் கொள்ளுகின்றன. பின்னர் நம்மை மீளாத் துன்பத்தில் ஆழ்த்தி விடுகின்றன.

ஆனால் இந்த ஆசைகள் ஒரே நாளில், ஒரே பொழுதில் நம்மைப் பற்றிக் கொள்ளுவதில்லை. மெள்ள மெள்ள நாம் ஏமாந்திருக்கும் நேரம் பார்த்து நம்மைப் பற்றிக் கொண்டு, பேராசைக்காரர்களாக நம்மை ஆக்கிவிடும். அதனால்தான் இதனைக் கள்ளப் புலன்கள் என்றார்கள்.

இப்படியே ஒவ்வொரு புலனும் தங்களது செயலைச் சீவன் அறியாமலே அதனைச் செய்யத் தூண்டிக் கொண்டிருக்கும் இயல்புடையன.

இந்தக் கள்ளத்தனம் யாருக்கு இருக்கின்றது? இந்தப் புலன்களுக்கா? அன்றி இந்த உயிருக்கா? புலன்கள் எதனையும் நுகருவதில்லை. நுகர்ச்சிக்கு வாயிலாக அமைந்தவையே புலன்கள். ஆனால் உயிர்தான் கள்ளத்தனம் உடையது.

* * * * *

11. ஞானேந் திரியங்கள் நன்றா உரைக்கக் கேள்
ஊனம் மிகுபூதம் உற்றிடமா – ஈனமாம்
சந்தாதி யைஅறியும் தானம் செவிதோல்கண்
அத்தாலு மூக்கென் றறி.

ஞானேந்திரியங்கள்

மேற்சொன்ன ஐம்புலன்களுக்கும் இந்திரியங்கள் என்று பெயர். இந்திரியம் என்றால் இயங்குவது. ஒரு புத்தகம் இருக்கின்றது. அதை அப்படியே மூடி வைத்திருந்தால் நமக்கு அறிவு வருமா? வராது. அப்புத்தகத்தோடு சேர்ந்து பழக வேண்டும். பழகுதல் என்றால் இயங்குதல் என்று பெயர். அப்படி இயங்குவதால் இயந்திரம் எனப் பெயர் வந்தது. நம் வீட்டில் மாவரைப்பதற்காக ஒரு கல் வைத்திருக்கிறோமே; அதற்கு என்ன பெயர் தெரியுமா? இயந்திரம். செயல்படுகின்ற பொருளுக்கு இயந்திரம் என்று பெயர். இயந்திரம் என்ற சொல் மருவி, பழக்கத்தில் எந்திரம் என்று சொல்ல ஆரம்பித்தோம். எந்திரம் என்ற சொல் மிகப் பழமையானது. அதன்பால் இயங்குகின்ற ஆற்றலுக்கு இந்திரன் என்று பெயர். இந்திரன் என்றால் இயக்குவோன். ஞானேந்திரியம் என்றால் ஞானம் தர இயங்குவது. ஞானத்தால் இயங்குவது என்று பொருள்.

இனி, இப்புலன்களுக்கு என்று ஓர் அளவு இருக்கின்றது. அந்த அளவில் (அந்த அளவுக்குள்) நின்று அறிந்தால் அறிவு வரும். அதன் அளவுக்கு மேல் போய் அறிந்தால்அறிவு இருக்காது. ஓர் அளவுக்கு மேல்போனால் பொறிகளால் எதையும் அறிய இயலாது. அறிவு, ஞானம் என்பது ஒரு பொருள் குறிக்க வந்த சொற்கள். அறிவு எப்போது வரும்? இயக்கத்தினால் அறிவு வரும்.

புலன்களுக்குள்ள அளவைக்குறிக்கும் கலைச்சொல் 'தன்மாத்திரை'. இந்த இடத்தில்தான் சித்தாந்திகளுக்கும் எனக்கும் சிறு வேறுபாடு வருகிறது. இதுவரையில் சொன்னதில்அவர்களுக்கும் எனக்கும் எந்தவிதமான மாறுபாடும் இல்லை. இனி சொல்லப்போவதில் அவர்களுக்கும் எனக்கும் உள்ள மாறுபாட்டைச் சொல்கின்றேன்.

தன்மாத்திரை என்றால் தன் அளவு. இமை, நொடி, மாத்திரை ஒரு பொருள் தரும் சொற்கள். தன்மாத்திரை என்பது தன்னுடைய அளவு. வாயின் அளவு. செவியின் அளவு, மூக்கின் அளவு என ஒவ்வொரு புலனின் அளவு. வாயில் ஒரு பொருளைப் போடுகின்றோம். அது

கொள்ளும் அளவுக்குத்தானே போடுகின்றோம். அதற்கு மேல் போட்டால் அதில் கொள்ளுமா? கொள்ளாது. அளவுக்கு அதிகமாகப் போனால் வாயினால் செயல்படவும் முடியாது. அதற்குத்தான் அளவு என்று பெயர். காது ஓரளவுக்குத்தான் கேட்கும். அளவுக்கு விஞ்சிய ஓசை காதில் புகுந்தால் காது செவிடாகிவிடும். இப்படி ஒவ்வொரு பொறிக்கும் ஒரு கொள் அளவு, அல்லது செயல்பாட்டு அளவு என்று ஒன்று இருக்கின்றது. அதற்குத்தான் தன்மாத்திரை என்று பெயர்.

ஞானேந்திரியம் என்றாலும் அறிவுப் பொறி என்றாலும் ஒன்றுதான். அறிவுப் பொறிகள் ஐந்து உண்டு. அவை கண், காது, மூக்கு, செவி, தோல் என்பன. இவை ஞானத்தைப் பெறுவதற்குரிய எந்திரங்கள்.

ஞானம் என்றால் அறிவு. நடுநிலைமையான அறிவு. ஞாலம், ஞாலுதல் என்றால் தொங்குதல். இவ்வுலகம் மேலும், கீழும் எதிலும் ஒட்டாமல் தொங்கிக் கொண்டிருக்கின்றது. இதை எந்த அறிவினால் தமிழர்கள் கண்டு சொன்னார்கள் என்று தெரியவில்லை. அப்படியே மேலும், கீழும் ஒட்டாமல் இயங்கிக் கொண்டிருப்பதற்கு 'நா' என்று சொன்னார்கள். மணிநாமணியின் நாக்கு தொங்கிக் கொண்டிருப்பதால் அப்படிப் பெயர் கொடுத்தனர்.

ஐம்பூதங்களை இடமாகக் கொண்டு ஐம்புலன்களும் ஓசை முதலானவற்றை அறியும். செவி சத்தத்தை அறியும். தோல் தொடு உணர்வை, பரிசத்தை அறியும். கண் உருவத்தை, ஒளியை அறியும். நாக்கு சுவையை அறியும். மூக்கு நாற்றத்தை, மணத்தை அறியும் என்று கூறுகின்றார்.

தால் என்பது நாக்கு. நாக்கினால் ஒலி எழுப்பிக் குழந்தையைத் தூங்க வைப்பதால் அதற்குத் தாலாட்டு என்று பெயர்.

இப்புலன்கள் அளவில் நின்று அறிந்தால் அறிவு. அவற்றின் அளவில் விஞ்சிப்போய் அறிகின்ற போது அறிவு இருக்காது. ஏன்? அந்த அனுபவத்தை அவற்றால் தாங்க

முடியாது., அதனால்தான் இவற்றை அறிவுக் கருவிகள் என்று கூறினார்கள். கருவிகளின் (கொள்) அளவுக்குத் தன்மாத்திரை என்று பெயர் கொடுத்தனர்.

தன்மாத்திரை என்றால் தன் அளவு என்று பொருள். ஏன் தன் மாத்திரை என்று சொன்னார்கள்? 'அதன்' என்ற சொல்லின் முன் எழுத்து குறைந்து 'தன்' என்ற வந்திருக்கிறது. அதன் அதன் அளவைக் குறிக்கும். அதன் மாத்திரை என்பது முன்னெழுத்து குறைந்து தன்மாத்திரை என்று சொன்னார்கள். இந்த இயைபு தெரியாமலே 'அதுவே துய்ப்பாகும்' என்று உரை சொல்லுகின்றார்கள். இரண்டு சிட்டிகை சர்க்கரையை வாயில் போட்டால் அதன் சுவையை நன்கு உணர முடியும். ஒரு கரண்டி நிறைய அள்ளி வாயில் போட்டுக் கொண்டால் சிறிது சிரமப்பட்டுத்தான் அதன் சுவையை உணர முடியும். அதுவே வாய் நிரம்பப் போட்டுவிட்டால் சுவையை உணர முடியுமா? சுவை தெரியுமா அதன் அளவு தெரிந்து இட்டால்தான் இக்கருவிகள் எதையும் அறியும். அப்படி அறிவதே அறிவு. அந்த அறிவைப் பெறுவதற்காக அமைந்தவையே இந்த அறிகருவிகள் (ஞான இந்திரியங்கள்).

இந்திரியங்களைப் பொறி என்று சொல்லுகின்றோம். 'பொறி என்று ஏன் பெயர் வந்தது? பொறிகள் பற்றிக் கொள்ளும் தன்மை வாய்ந்தவை. உதாரணமாக எலிப்பொறி என்கிறோம். அக்கருவி எலியைப் பற்றிக் கொள்ளும். அவ்வாறே பொறிகள் புலன்களைப் பற்றிக் கொள்கின்றன.

இங்ஙனம் புலன்களைப் பற்றிக் கொள்ளும் ஞானேந்திரியங்களைப் பற்றிச் சொல்ல வந்தவர் இப்பாடலில் ஞானம், ஊனம், ஈனம் என்ற மூன்று சொற்களைச் சொல்லுகின்றார். ஞானேந்திரியங்கள் ஊனத்தை மிகுவிக்கும்; பூதங்களை இடமாகப் பற்றிக் கொள்ளும். அவற்றைப் பற்றினால் வருவது ஈனம்தான். ஈனத்தைத்தான் அவை எடுத்துக் கொள்ளும் என்று கூறுகின்றார்.

ஊனம் வேறு. ஈனம் வேறு. ஒருவருக்கு ஊனம் இருக்கலாம். ஆனால் அவரிடத்தில் ஈனம் இருக்கக் கூடாது.

ஈனம் என்பது என்ன? ஒருவரை மற்றவருக்குப் பிடிக்காமல் இருக்கலாம். அது கருத்து வகையினாலோ, காசு வகையினாலோ, அன்றி மற்றெந்த வகையினாலோ இருக்கலாம். அப்படிப் பிடிக்காவிட்டால் அவரை எந்த வகையிலாவது கெடுத்துவிட வேண்டுமென்ற எண்ணம் வரும். அந்த எண்ணத்தைத்தான் ஈனம் என்பர்.

'ஏனய்யா, உமக்கு இந்த ஈனபுத்தி' என்று சாதாரண வழக்கில் சொல்லுவதைக் கேட்கலாம்.

ஊனம் என்பது குறைபாடு. ஈனம் என்பது ஒரு காரியம் செய்ய விடாமல் தடுப்பது, உண்மை நிகழ விடாமல் தடுப்பது.

'பொறியின்மை யார்க்கும் பழியன்று' என்பார் பொய்யாமொழியார். பொறியின்மை என்பதற்கு விதி இன்மை என்றும் பொருள் கூறுவார்கள். பரிதியார் 'மெய், வாய், கண், மூக்குச் செவி குறைதல் என்று பொருள் கூறியுள்ளார்கள். உறுப்புக் குறை இருக்கலாம். உள்ளக்குறை இருக்கக்கூடாது.

ஈனம் என்பதைப் பற்றி ஒரு விளக்கத்தைச் சொன்னால் புரிந்துவிடும் அக்காலத்தில் சமணர்கள் இருந்தார்கள். அவர்களது கொள்கைகளும், செல்வாக்கும் மதுரையில் கொடிகட்டிப் பறந்து கொண்டிருந்தன. சமுதாயத்திற்கு எவை ஒத்து வராதனவோ, எவை நல்லன அல்லவோ அவற்றைத் தங்கள் கொள்கைகளாகக் கொண்டு, அவற்றையே உயர்வாகப் பேசுகின்றவர்கள் சமணர்கள். அக்கொள்கைகளை அரசனுக்கும் போதித்தனர். அரசனும் அதனைக் கேட்டு மயங்கிவிட்டான். எப்போதும் உண்மையைவிடப் பொய் அதிகக் கவர்ச்சியாக இருக்கும். அந்தப் பொய்மையினால் கவரப்பட்டு மன்னன் சமணன் ஆனான். அவனைக் கண்டு மக்களும் சமண சமயத்தைத் தழுவினர். உண்மையில் நிலைபெற்ற இரண்டு பேர் மட்டும் மன்னனைத் திருத்த எண்ணினார்கள். அவர்களே பாண்டிமாதேவியும், குலச்சிறையாரும். அவர்கள் திருஞானசம்பந்தரை மதுரைக்கு அழைக்க வேண்டு மென்று முடிவு எடுத்தனர். அவரை அழைத்துவரவும் செய்தனர்.

அவர் ஞான சம்பந்தம் உடையவர். பெயரும் ஞானசம்பந்தர். ஞான சம்பந்தம் உடையவர்கள் வந்தால் தங்கள் இருட்கொள்கைகள் எங்கே அடிபட்டுப்போய்விடுமோ, என்றும், அதனால் தங்கள் செல்வாக்கு பறிபோய்விடுமோ என்றும் சமணர்கள் அஞ்சினர். பொதுவாக மாறுபட்ட கருத்து உடையவர்கள் இருக்கின்ற இடத்திற்கு மாற்றுக் கொள்கைகள் உடையவர்கள் வரவேண்டுமானால் மிகவும் துணிச்சல் உள்ளவர்களால்தான் வரமுடியும். வந்தவரோ மிகவும் சிறிய குழந்தை. இருந்தும் வயதில் மூத்தவர்களான, செல்வாக்கில் சிறந்தவர்களான சமணர்கள் அஞ்சினர்.

அந்த பயத்தினால் அவர் தங்கியிருந்த இடத்துக்கு தீ வைத்து அவரை அழித்துவிட நினைத்தார்கள். அவர்கள் நேர்மையானவர்கள், அறிவுடையவர்கள் என்றால் அறிவைக் கொண்டும், தங்கள் கொள்கையின் உறுதிப்பாட்டைக் கொண்டும் அவரோடு வாதிட்டு அவரை வெற்றி பெற நினைத்திருக்க வேண்டும். மாறாக அவர் தங்கியிருந்த திருமடத்திற்குத் தீ வைத்து விட்டார்கள். அவர்கள் வைத்த தீயினால் திருஞானசம்பந்தருக்கு ஒன்றும் ஆகவில்லை. இச்சம்பவம் மெய்யோ பொய்யோ என்று ஐயுறுவாரும் இருக்கலாம். நம் காலத்தில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைச் சொன்னால் ஒரு வேளை ஒப்புக் கொள்ளலாம்.

பேரறிஞர் அ.ச.ஞானசம்பந்தன் அவர்கள் இந்த அரிய செய்தியைச் சொன்னார்கள்.

திருவொற்றியூரில் சிவக்கவிமணி என்ற பெரியார் பெரியபுராணச் சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டிருந்தார்களாம். ஒரு நாள் திருஞான சம்பந்தர் மதுரையில் வந்து மடத்தில் தங்கியிருந்த பகுதியைப் பற்றி விரிவுரை நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். இச்சமயத்தில் யாரோ விரிவுரை நிகழ்த்துவதற்காகப் போடப்பட்டிருந்த பந்தலுக்குத் தீ வைத்து விட்டார்கள். பந்தல் எரிந்து கொண்டிருந்தது. அன்பர்கள் சிலர் ஓடி வந்து 'ஐயா, பந்தலுக்கு யாரோ தீ வைத்து விட்டார்கள்' என்று சொன்னார்களாம். விரிவுரையாளர் அமைதியாக, 'தீ

வைக்கட்டுமே, அதனால் என்ன? திருஞானசம்பந்தர் இருக்கின்ற இடத்தில் தீ என்ன செய்யும்' என்று சொல்லிவிட்டு எதுவுமே நடக்காததுபோலத் தொடர்ந்து விரிவுரை செய்து கொண்டிருந்தார்களாம். எரிந்து கொண்டிருந்த தீயும் மேலும் பரவாமல், யாரும் அணைக்காமல் தானே அணைந்துவிட்டதாம்.

அ.ச.ஞானசம்பந்தம் அவர்கள் பெரியபுராணத்தின் சிறப்பு என்ற பொருள் பற்றிப் பேசுகின்ற போது தெரிவித்த செய்தி இது. இந்த நூற்றாண்டிலேயே இப்படி நடந்திருக்கின்றதே என்று அவர்கள் வியந்து பேசினார்கள்.

இப்படிக் குழந்தை இருக்கின்ற இடத்தில் தீ வைத்த செயல்தான் ஈனச் செயல். கொள்கையில் மாறுபாடு இருக்கலாம். அதில் தவறில்லை. ஆனால் ஆளையே அழிக்க வேண்டுமென்று எண்ணினார்கள் அல்லவா, அதுதான் தவறானது; ஈனமானது.

சமணர்கள் தீச்செயல்கள் புரிவார்கள் என்றும், மந்திரதந்திரங்களில் வல்லவர்கள் என்றும், இத்தகைய கொடுஞ்செயல்களில் அகப்பட்டு ஞானக் குழந்தையை அழித்துவிடுவார்களோ என்று பாண்டிமாதேவி அஞ்சுகின்றார். அப்போது திருஞானசம்பந்தர், 'ஈனர்கட்கு எளியேன் அலேன் திரு ஆலவாயரன் நிற்கவே' (மானினேர் .. என்றும் தொடங்கும் பாடல்) என்று பாண்டிமாதேவிக்கு ஆறுதல் கூறுகின்றார். இவ்விடத்தில் திருஞானசம்பந்தர் 'ஈனம்' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றார். ஈனம் என்பது பிறர்க்குத் தீங்கு செய்வது, பிறர்பால் காழ்ப்புணர்ச்சி கொள்வது என்று பொருள் பெறும்.

ஓசை, உருவம், பரிசம், சுவை, மணம் என்பனவற்றை ஈனம் என்றும், அவற்றுக்கு இடமான பூதங்களை ஊனமிகும் பூதங்கள் என்றும் கூறுகின்றார்.

இவற்றை ஈனம் என்று ஏன் சொன்னார்? இப்பொறிகளால் உணர்கின்ற உணர்வுகள் சீவனுக்கு ஈனத்தை உண்டாக்குவன. தாழ்வான சுவைகளைச்

சுவைக்க வைத்து, அதற்கேற்ற குணங்களை உண்டாக்கி, ஈனச் செயல்களைச் செய்யுமாறு செய்வதால் 'ஈனமிகு சத்தாதி' என்றார். அது எப்படி?

உணவுதான் உணர்வைக் கொடுக்கின்றது. அதே உணவுதான் உணர்வைக் கெடுக்கவும் செய்கின்றது. ஈனத்தைத் தருகின்றது. நாளும் நாளிதழ்களில், 'எட்டுப்பேர் வெட்டிக் கொலை' என்பது போன்ற செய்திகளைப் பார்க்கின்றோம். இச்செயல்கள் எங்கே நடைபெறுகின்றன. அறியாமை மிகுந்து ஒத்துணர்வு இல்லாதவர்களிடமே இச்செயல்கள் நடை பெறுகின்றன. இதற்கு அடிப்படை என்ன? பெரிதும் அவர்கள் உண்ணும் உணவே காரணமாகிவிடுகின்றது. அவர்கள், உண்பது பெரிதும் புலால் சேர்ந்த உணவுதான். புலால் சாப்பிடுவோர்க்கு நல்ல உணர்ச்சியில் மனம் ஊக்காது. 'நன்று ஊக்காது ஒன்றன் உடல்சுவை உண்டார் மனம்' என்பது தெய்வ வாக்கு. புலால் உண்பவர்கள் நன்னெறியில் காலடி எடுத்து வைக்கவே மாட்டார்கள்.

கும்பம் போடுகின்றார்களே, அது தெய்வ காரியம் இல்லையா என்றால் அங்கேயும் உயிர்ப்பலி கொடுத்துத்தானே கும்பம் போடுகின்றார்கள். அது எப்படித் தெய்வ காரியமாகும்;

திருவள்ளுவருக்குமேல் நாம் அறிவாளிகள் ஆகமாட்டோம். அறிவு உள்ளவர்கள், ஞானிகள் சொல்கின்ற சொற்களையேனும் ஏற்றுக் கொள்ளு கின்றோமா என்றால் அந்தப் புத்தியும் நம்மிடத்தில் இல்லை. இவை எல்லாம் சிந்திப்பதற்குரியன. எனவே ஈனத்தைத் தரவல்ல உணவுகளை நீக்கி, நல்லுணர்வுகளையும், ஞானத்தையும் தரவல்ல உணவுகளையே ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இப்படியே காணுகின்ற காட்சிகளும் மனிதனை ஈனம் உடையவனாக்கி விடுகின்றன. ஒரு கொலையாளி. பயங்கரமான கொலைகளைச் செய்தவன். அவனிடம் ஏன் இக்கொலைகளைச் செய்தாய் என்று கேட்டதற்கு ஒரு

குறிப்பிட்ட திரைப்படத்தைப் பல முறை பார்த்தேன்; அதில் வருவதுபோலச் செய்தால் என்ன என்று எண்ணிச் செய்தேன் என்றான். கண் தீமையைப் பார்த்துக் கொண்டே இருக்குமானால் அது தீய செயலைச் செய்கின்றது. எனவே இந்த ஐந்து பொறிகளும் ஈனத்தைத்தான் எடுக்கும். ஞானத்தை எடுக்காது. ஞானேந்திரியங்கள் என்று பெயர் இருந்தாலும் இந்த உலகத்தில் ஈடுபடுகின்ற போது ஊனம் மிகு பூதங்களை உற்று அறியும்போது ஈனமாம் தன்மைகளைத்தான் அவை எடுக்கும். ஞானத்தை அறிவதில்லை. ஆனால் நாம் அறிய வேண்டியது ஞானம்.

சுருக்கக் கருத்து: பொறி என்பது கருவி. பொறி தொழில்படும்போது தொழிற்கருவி. நுகரும்போது புலன். நுகரும் அளவு தன்மாத்திரை எனப்படும்.

அறிவுக்கருவிகளைப்பற்றிக் கூறிய ஆசிரியர் அக்கருவிகள் எந்தெந்தப் பதங்களை இடமாகக் கொண்டு என்னென்ன அறியும் என்பதனைக் கூறுகின்றார்.

12. வான்இடமாய் நின்று செவி மன்னும் ஒலியதனை
ஈனமிகும் தோல்கால் இடமாக – ஊனப்
பரிசந் தனைஅறியும் பார்வையின்கண் அங்கி
விரவிஉரு வம்காணு மே.

13. நன்றாக நீர்இடமா நாஇரதம் தானறியும்
பொன்றா மணம்மூக்குப் பூஇடமா – நின்று அறியும்
என்றுஓதும் அன்றே இறைஆகமம் இதனை
வென்றார்சென் றார்இன்ப வீடு

வானத்தை இடமாகக் கொண்டு செவி ஒலியை அறிகிறது. காற்றை இடமாகக் கொண்டு தோல் பரிசத்தை (தொடுவதை) உணர்கிறது. நெருப்பை இடமாகக் கொண்டு கண் உருவங்களை அறிகின்றது. நீரை இடமாகக் கொண்டு நாக்கு சுவையை அறிகிறது. மண்ணை இடமாகக் கொண்டு மூக்கு மணத்தை அறிகின்றது.

இங்ஙனம் பொறிகளின் வழிநின்று புலன்களைப் பற்றுகின்ற மாந்தர் உரன் என்னும் தோட்டியினால்

(அங்குசத்தினால்) ஓரைந்தும் காப்பார்களானால் தம்மை மயக்கும் புலன்களை வென்று விடுவார்களானால் அவர்கள் இன்ப வீட்டினைச் சென்று அடைவார்கள் என்று கூறுகின்றார்.

வானத்தை இடமாகக் கொண்டு செவி ஒலியைக் கேட்கின்றது. தொழிற்கருவிகளில் ஒன்றாகிய வாக்கும் வானத்தையே இடமாகக் கொள்ளும். சொல்லுகின்ற ஒவ்வொரு சொல்லும் வானத்தை இடமாகக் கொண்டே செவியினை வந்து சேர்கின்றது. ஒலியானது வானத்தை இடமாகக் கொள்ளவில்லை என்றால் செவியினால் ஒலியைக் கேட்க முடியாது. சொல்லும் ஒவ்வொரு சொல்லும் வானத்திற்குச் சென்று பின்னர் காதுக்கு வருவதென்றால் நீண்ட நேரம் ஆக வேண்டுமே; உடனே நம் காதுக்குக் கேட்கின்றதே என்று கேட்கத் தோன்றும். இது உடன் நிகழ்ச்சியாக நடைபெற்றுக் கொண்டு இருக்கின்றது. இது அன்றைய அறிவியல். இன்று அதனையே மீண்டும் கண்டு பிடித்திருக்கின்றார்கள். காதை வைத்துத்தான் வானொலியைக் கண்டு பிடித்தார்கள். வான் வழியாகச் செய்தியை அனுப்பினார்கள். செவி வழியாகக் கேட்டுக் கொண்டார்கள். ஒன்றைப் பார்த்து ஒன்றைச் செய்தார்கள்.

அடுத்து பரிசத்தை அறியும் தோலை ஈனமிகும் தோல் என்றார். பரிசம் என்பது தொடு உணர்ச்சி. இரண்டு மணி நேரம் வெயிலில் சுற்றி விட்டு வந்தால் யாரும் பக்கத்தில் நிற்க முடியாதபடி துர்நாற்றம் வீசும். இவ்வளவு துர்நாற்றம் வீசுகின்ற தோலைப் பார்த்துத்தான் 'என்ன அழகு' என்று வியக்கின்றோம். ஏன் நமக்கு உண்மை தெரியவில்லை? உண்மையை விளக்க வந்த ஆசிரியர் உள்ளதை உள்ளபடியே கூற வேண்டியதனால் ஈனமிகும் தோல் என்றார். இத்தோல் உணருகின்ற பரிசத்தை ஊனப்பரிசம் என்றார். தொடு உணர்ச்சி நமக்குப் பல தொல்லைகளைக் கொடுப்பது. எனவேதான் ஈனம்மிகு தோல் ஊனப் பரிசத்தை அறியும் என்றார்.

தோல் பரிசத்தை அறிவதற்கு வாயிலாக இருப்பது

காற்று. 'என்னங்க அனல் காற்றாக வீசுகிறதே;' என்றும், 'ஆ எப்படிச் சில்லென்று காற்று வீசுகிறது;' என்றும் 'என்ன அருமையான தென்றல் காற்று பார்த்தீர்களா;' என்றும் சொல்லுகின்றோம். இதனை அறிவது எப்படி; காற்றை இடமாகக் கொண்டுதானே!

அடுத்தது உருவத்தை அறிதல். பார்வையினால் (பார்க்கும் செயலால்) கண் நெருப்போடு கலந்து உருவத்தைக் காணும். பாட்டின் இறுதியில் நிற்கும் ஏ (ஏகாரம்) அசை என்று கூறுவார்கள். பயனில்லாமல் ஒரு எழுத்தை -சொல்லைப் பயன்படுத்த மாட்டார்கள் நம் பெரியோர். 'ஏ'காரம் இங்கே தேற்றம் தெளிவிப்பது, உறுதி செய்வது என்ற பொருளில் கையாண்டிருக்கின்றார்கள்.

நீரை இடமாகக் கொண்டு நாக்கு சுவையை அறியும். மூக்கு பூமியைஇடமாகக் கொண்டு மணத்தினை அறியும். இவற்றை ஆகம நூல் சொல்லும் என்று கூறுகின்றார்.

ஐம்புலன்களைப்பற்றியும், அவற்றை அறியும் அறிவுக் கருவிகளையும் பற்றிக் கூறிய ஆசிரியர் அவற்றை வெல்ல வேண்டும் என்பதனையும் கூறுகின்றார். ஐம்புலன்களை வென்றவர்களே பேரின்ப வீட்டினை அடைவார்கள். வெல்ல மாட்டாதவர்கள் ஈனத்தை, ஊனத்தையே அடைவார்கள் என்பதனைத் தெரிவிப்பதற்காகவே பூதங்களுக்கும், பூதங்களின் பிழிவாகிய புலன்களுக்கும் ஈனத்தையும், ஊனத்தையும், அடைமொழியாக்கிக் கூறியுள்ளார்.

இவ்வாறு ஐம்புலன்களும் எது எதைக் கொண்டு எதை எதை அறியும்; அறிந்து எப்படி ஆசையைப் பெருக்கிக் கொள்ளும் என்று அதன் வழிகளைச் சொன்னார்.

அறிவுக் கருவிகளைப் பற்றிக் கூறியவர் அடுத்து தொழிற்கருவிகளைப் பற்றிக் கூறுகின்றார்.

☆ ☆ ☆ ☆ ☆

14. கண்ணுதல்நூல் ஓதியிடும் கன் மேந் திரியங்கள்
எண்ணும்வச னாதிக் கிடமாக – நண்ணியிடும்
வாக்குப்பா தம்பாணி மன்னு குதம்உபத்தம்
ஆக்கருதும் நாளும் அது.

கண்ணுதல் பெருங்கடவுளாகிய இறைவன் அருளிய ஆகமநூல் கூறுகின்ற தொழில் கருவிகள் உரை, நடை, கொடை, போக்கு, இன்பம் என்று எண்ணப்படுகின்ற வசனம் முதலானவற்றுக்குரிய இடமாகப் பொருந்துகின்ற வாக்கு, பாதம், பாணி, எருவாய் (மலக்கருவி) கருவாய் (சிறுநீர்க்கருவி) என்பவை. நாள்தோறும் இச்செயல்கள் பொறிகளின்பால் பொருந்தி நிகழும்.

ஆகமங்கள் கூறும் தொழிற் கருவிகள் ஐந்தினைப் பற்றியும் கூறும்போது ஆகமங்களைப்பற்றியும் ஒரு குறிப்பினைக் கூறுகின்றார். ஆகமங்களைக் கண்ணுதல் நூல் என்றார். நுதல் என்றால் நெற்றி. இறைவன் நெற்றியில் கண் உடையவன். கண்நுதல் என்ற தொடர் நெற்றிக் கண்ணை உடைய சிவபெருமானுக்குப் பெயராக அமைகிறது. வீட்டின் முன் இடத்தை 'இல்முன்' என்று கூற வேண்டும். அத்தொடர் முன்இல் என்று மாறி முன்றில் என்று வழங்குகின்றது. அப்படியே, கால்வாய் என்பதும் வாய்க்கால் என்று சொல்லப்படுகிறது. அவ்வாறே நுதற்கண் என்பது கண்ணுதல் என்று மாறி இறைவனுக்குப் பெயராக வழங்குகின்றது.

ஆகமத்தைக் கண்ணுதல் நூல் என்று ஏன் கூறினார்கள்? நம்முடைய பொறிகளாலே கண்டு, கேட்டு, உணர்ந்து சொல்லுவதற்கு ஆகமம் என்று சொல்ல முடியாது. நெற்றிக் கண்ணைத் திறந்து நெற்றிக் கண் வழியாக உணர்ந்து சொல்லுகின்ற நூலுக்கு கண்ணுதல் (அ) ஆகமம் என்று பெயர். அதாவது ஞானத்தால் உணர்ந்த அல்லது உணர்த்துகின்ற நூலுக்கு ஆகமம் (ஞானநூல்) என்று பெயர். புலன்களாலே உணர்ந்து சொல்வதற்கு பாசநூல் (அ) ஊனநூல் என்று பெயர். ஞானம் பெற்றவர்கள் சொன்ன நூலுக்கு ஆகம நூல் அல்லது ஞான

நூல் என்று பெயர். ஆகம நூல் என்றாலும், ஞான நூல் என்றாலும், கண்ணுதல் நூல் என்றாலும் ஒரு பொருள் உடையது.

அதனால் கற்பதும் கேட்பதும் மட்டும் போதாது சிந்திக்க வேண்டும். அது சரிதானா? இது சரிதானா? என்று கேள்வி கேட்டுக் கொண்டேயிருந்தால் அந்த வினாவுக்கு விடை சொல்லுகின்ற ஒரு பொருள் புருவங்களின் இடையே நின்று ஒளியில் ஒளியாகி உணர்வூட்டி, உணர்வில்தெளிவு செய்யும். அப்படித் தெளிவு செய்த உணர்வுக்கு ஆகமநூல் என்று பெயர். அந்த நூலை உணரலாம்; உணர்ந்து உணர்த்தலாம். ஒரு முறை உணர்த்திவிட்டால் மீண்டும் உணர்த்த முடியாது. இந்த நூலைக் கேட்டுக் கொண்டு சென்றவர்களும் உணர்வார்களே தவிர, எடுத்து உரைக்க அவர்களாலும் முடியாது.

உதாரணமாக, இங்கே பாடம் கேட்கின்ற பல அன்பர்கள், ''பாடம் முடிந்த பின்பு இங்கே என்ன கருத்துக்கள் சொல்லப்பட்டன என்று கேட்டால், பாடம் நன்றாக இருந்தது, கேட்க மிகவும் சுவையாக இருந்தது'' என்று சொல்வார்களே தவிர, என்ன சொல்லப்பட்டது என்று சொல்ல மாட்டார்கள். ''ஐயா, நன்றாகப் பாடம் நடத்தினார்கள்'' என்று மட்டுமே சொல்வார்கள். 'உணர்ந்தார்க்கு உணர்வறியோன்'' என்பது போல உணர்ந்தாரும் உணரமுடியாது உணர்வுக்கு அப்பாற் பட்டது. அதுதான் ஆகம நூல். இருப்பினும் அது எப்படியேனும் மக்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகச் சொல்லி வைத்திருக்கின்றார்கள்.

தொழிற் பொறிகள் ஐந்து உண்டு. அவற்றைப் பற்றிச் சொல்லப் போகிறேன். அவற்றின் வழியும ' ஞானம் நிகழ்ந்துவிடாது. ஞானத்தைப் பெறுவதற்குரிய அடிப்படையை நிகழ்த்தும். அவ்வளவுதான்.

அறிவுக் கருவிகளும் தொழில்புரிகின்றன. ஆனால்அவை ஒலி, ஒளி, முதலானவற்றை அறிகின்றன. தொழில் கருவிகள் புரியும் தொழில்வேறு வகையானது. அறிவுக் கருவிகள் வெளியில் உள்ள பொருள்கள்,

நிகழ்கின்ற செயல்கள்இவற்றை நமக்கு அறிவிக்கின்றன. அதன் காரணமாக நம்மிடம் நிகழும் பேசுதல், நடத்தல் முதலான செயல்களைத் தொழில் கருவிகள் செய்கின்றன .

அறிதல் வேறு; தொழில் செய்தல் வேறு. தொழில் செய்வதற்கு அறிவு வேண்டாம். எந்திரங்கள்வேலை செய்கின்றன; அவற்றிற்கு என்ன அறிவா இருக்கின்றது? அதன் பாட்டுக்கு இயங்கிக் கொண்டேயிருக்கின்றது. சில செய்திகளுக்கு அறிவு தேவையில்லை. ஓடிக் கொண்டிருக்கின்றோம். துணி அவிழுகின்றது. கை தானாகச் சென்று கட்டிக் கொள்ளும். அப்போது கை சிந்திப்பதில்லை. தானாகச் செயல்படும். அதற்கு என்ன அறிவா இருக்கின்றது. பழக்கத்தினால் செய்து கொண்டிருக்கின்றது. அதற்குத் தொழிற் பொறி என்று பெயர். தொழிற் பொறிகள் ஐந்து.

உரைத்தல், நடத்தல், கொடுத்தல், வேண்டாதன வற்றை விடுதல், இன்பத்தைச் செய்தல் என்னும் ஐந்து தொழில்கள் தவிர, புருவம் நெறித்தல், பல்லைக் கடித்தல், தலையை அசைத்தல்போன்ற செயல்களும் நிகழ்வதனால் தொழில் ஐந்து, தொழிற்கருவி ஐந்து என்று கூறுவது எப்படிப்பொருந்தும் என்றால் எல்லாத் தொழில்களும் இந்த ஐந்து கருவிகளுக்குள் அடக்கிக் கூறலாம் என்று கூறியுள்ளார் சிவஞான முனிவர்.

வாக்கு என்பது பேசுகின்ற கருவி. வாய் பேசிக் கொண்டே . இருக்கும். 'அவர் வாய் சும்மா இருக்காதுங்களே' என்பார்கள். வாய் கன்மேந்திரியங்களிலே ஒன்று. மெய், வாய், கண், மூக்குச் செவி என ஐம்பொறிகளில் ஒன்றாகவும் உள்ளது. வாய் அறிவோடு கூடியதாகவும் இருக்கிறது. ஞானேந்திரியமாகவும் இருக்கிறது. கன்மேந்திரியமாகவும் இருக்கிறது. இந்த ஐந்து கருவிகளும் இயல்பாகவே செயல்பட்டுக்கொண்டிருக்கும். அதனால் இவற்றுக்குத் தொழிற்கருவிகள் என்று பெயர். இவற்றை ஆகம நூல்கள் ஓதும் என்கின்றார்.

தொழிற்கருவிகள் ஐந்து என்று சொன்னவர் அவை என்ன என்ன செய்யும் என்றும், அவற்றுள் சின்னச் சின்ன வேறுபாடுகள் எப்படி அமைந்திருக்கின்றன என்றும் அடுத்த பாடலில் சொல்லுகின்றார்.



15. வாக்கு ஆகா யம்இட மா வந்துவச னிக்கும் கால்
போக்கு ஆகும் காற்றுஇடமாய்ப் புல்கிஅனல் – ஏற்கும்
இடும்கை குதம்நீர் இடமா மலாதி
விடும்பார் இடம் உபத்தம் விந்து.

**வாக்கு**

வாக்கு ஆகாயத்தை இடமாகக் கொண்டு 'வந்து வசனிக்கும்'. முன்னே, ''வானத்தை இடமாகக் கொண்டு செவி ஒலியதனை மன்னும்'' என்று பார்த்தோம். இப்பாடலில் வாக்கு ஆகாயத்தை இடமாகக் கொண்டு பேசும் என்கின்றார். நாம் சொல்லுகின்ற ஒவ்வொரு வார்த்தையும் வானத்தை இடமாகக் கொண்டு வெளிப்படுகின்றது. அது எப்படி? நாம் என்ன பேசினாலும் அது வான்வெளியில்தான் உலாவிக் கொண்டு இருக்கின்றது. எந்த ஒலியும் ஓசையும் வான் தலத்தில் உலாவிக்கொண்டு இருக்கும். இன்றைய அறிவியலாரும் ஒரு குறிப்பைச் சொல்லியிருக்கின்றார்கள். ஒரு மனிதன் இரண்டு விரலை ஒன்றாக வைத்து ஒரு சிட்டிகை போட்டுவிட்டு, மீண்டும் அந்த இரண்டு விரல்களும் சேருவதற்குள் அவன் எழுப்பிய ஒலி இந்த உலகத்தை ஏழுமுறை சுற்றி வந்து விடுகின்றது'' என்று கண்டுபிடித்திருக்கின்றனர். அப்படியென்றால் அதன் வேகம் எவ்வளவு இருக்கும் என்று பார்த்துக் கொள்ளுங்கள். அதைவிட வேகமுடையது ஒலி. இந்த ஒலியின் வேகத்தை ஒளிதான் உண்டாக்குகின்றது. ஆகவே இந்த ஒலிகளெல்லாம் வான் வெளியிலே நின்று பேச நினைப்பாருடைய நினைப்புக்கு ஏற்றவாறு பேச்சுக்கள் அமைகின்றன. எனவே வாக்கு ஆகாயத்தை இடமாகக் கொண்டு வசனிக்கும் என்றார்.

பல்வேறு வகைச் சுவைகள் உண்டு. பழங்கள், கிழங்குகள், காய்கள், மற்றும் பல்வேறு வகை உணவுப் பண்டங்களை நாளும் உண்ணுகின்றோம். இவையாவும் தனித்தனிச் சுவைஉடையன; சக்தி உடையன. இவை யாவற்றுக்கும் வளம் தந்தது எது? நலம் தந்தது எது? மண்தான். ஒரே தோட்டத்தில் மாமரமும் வளருகின்றது; தென்னை மரமும் வளருகின்றது, எட்டி மரமும் வளருகின்றது. இவை ஒவ்வொன்றும் பக்கத்தில் பக்கத்தில்தான் வளருகின்றன. ஆனால் இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வகையான வளம் இருக்கின்றது. நலம் இருக்கின்றது; சுவை இருக்கின்றது. இவற்றையெல்லாம் வழங்கிக் கொண்டிருப்பது இந்த மண்தானே; அப்படியானால் இத்தனை வகையான ஆற்றல்களை பெற்றிருக்கின்றது இம்மண்என்பது இதனைப் பார்க்கின்ற போது நமக்குத் தெரிகின்றதா? இல்லை. மண்வெளியிலே ஆற்றல்கள் தேங்கி, மரங்களுக்கும், செடிகளுக்கும் கொடிகளுக்கும் ஏற்றவாறு அதனதன் தன்மைகளுக்கு ஏற்றவாறு வளங்களையும் நலங்களையும் தருவது போல, வான் வெளியிலே ஒலிகள் மன்னி நின்று, சிந்திப்பாருடைய சிந்தனைக்கு ஏற்றவாறு, அந்த ஒலியும், கருத்தும் அவர்களுக்குக் கிடைக்கின்றது.

ஒருவன் ஞான நாட்டம் உடையவனாக இருப்பானேயானால், ஞானச் செய்திகளைச் சொல்ல வேண்டும் என்று நினைப்பானேயானால், ஞானிகளின் ஒலி வானில் தங்கி இவன் நினைக்கின்றபோது அங்கிருந்து வந்து இவனுக்குப் பயன்படுகின்றது. அவனுடைய சொல்லையும், நினைவையும் அவை வளமாக்கி, அவ கும், அவனால் பிறருக்கும் வளம் சேர்க்கும். அப்படியே ஊனமானவன் பேச நினைக்கின்றபோதும், சொல்ல நினைக்கின்ற போதும் அவனுக்கேற்ற ஒலிகள் வானில் இருந்து வந்து அவனை வளப்படுத்தும். எனவே ஞானத்துக்கும், ஊனத்துக்கும் உண்டான ஒலிகள் வான் வெளியில்தேங்கி இருக்கின்றன. ஆனால் ஞானத்துக்கும், ஊனத்துக்கும் (மொழிக்கு) ஒன்றுக்கு ஒன்று சம்பந்தம் கிடையாது. ஞான ஒலிகள் தனியே இருக்கும்; ஊன மொழிகள் தனியே இருக்கும். ஒட்டுதல் கிடையாது.

அதனதன் தரங்களிலே தனித்தனியே இருக்கும். நாம் ஞானநாட்டத்தோடு சிந்திக்கின்றபோது நம் சிந்தனைக்கு ஏற்றவாறு, நம்முடைய தரத்துக்கு ஏற்றவாறு வசனமாக நம் வாய் வழியே வெளிப்படும். அந்த வாக்கு வானத்தை இடமாகக் கொண்டு செயல்படும் என்கின்றார்.

**கால் காற்றிடமாக நடத்தலைச் செய்யும்**

கால் என்றால் காற்று, மூச்சு என்று இருபொருள். மூச்சு, காற்றை இடமாகக் கொண்டுதான் நடந்து கொண்டிருக்கின்றது. ஒரு பந்திலே நிரம்பக் காற்று இருக்கின்ற வரையிலும் எளிமையாக ஓடிக் கொண்டேயிருக்கும். காற்றுக் குறையக் குறைய அதிகமாக ஓடாது. சுத்தமாகக் காற்று போய்விட்டால் போட்ட இடத்திலேயே கிடக்கும். ஆகவே காற்றை இடமாகக் கொண்டுதான் இயக்கங்கள் நடந்து கொண்டு இருக்கின்றன. அப்போது இந்த கால் எதனால் நடந்து கொண்டிருக்கின்றது என்று சொன்னால் அவர்களுடைய வலிமையினாலே நடக்கவில்லை; உள்ளே காற்று நுழைந்து நிரம்பியிருக்கின்றது. தேவையான காற்று உள்ளே இருக்கின்றது. அது காலுக்குப் பயன்பட்டுக் கால் நடந்து கொண்டிருக்கின்றது. எனவேதான், கால் என்றும் பெயர் வந்தது.

இந்தக் 'கால்' என்பதுடன் 'இ' சேர்த்து, 'காலி' என்று தெலுங்கில் வழங்கிவருகின்றது. 'காலி' என்பதற்குக் காற்று என்று பொருள்.

ஒரு உதாரணம் சொன்னால் விளங்கும். பாதங்களிலே, ஐந்து விரல்களிலும் காற்று இல்லாவிட்டால் இரத்த ஓட்டம் சரியாக இருக்காது. உணர்ச்சிகள் மாறும். மருத்துவரிடம் போய்க் கேட்டால் இது நரம்புத் தளர்ச்சி என்று சொல்லுவார். நரம்பு ஏன் தளர்ந்தது? காற்றுப் போன பந்து தளர்ந்து போய்த்தானே இருக்கும். காற்று இயங்காமையினாலே கால் தளர்ந்து போய் விடுகின்றது. காலை எங்கே வைக்கின்றோம் என்று தெரியாது. நோக்காடு இருக்கும். நரம்புத் தளர்ச்சி என்றால் உள்ளே காற்று சரிவர இயங்கவில்லை என்று பொருள்.

பாதத்தில் காற்று சரியாகப் போய், இயங்கிக் கொண்டு இருந்தால் நன்றாக நடக்க முடியும். ஆகையால் பாதத்துக்குக் கால் என்றே பெயர் சொல்லி நமக்கு உண்மையை விளக்கினார்.

## அனல் ஏற்கும் இடும் கை

இந்தக் கை இருக்கின்றதே, இது அனலை இடமாகக் கொண்டு இடும். அனல் என்றால் தீ. 'அங்கியிலே சங்காரம்' என்று இவரே பின்னால் ஒரு பாடலில் சொல்லுவார். பெருமானின் கையில்தீயை வைத்திருக்கின்றான். அதனால் இவ்வான்மாக்களைத் தூய்மை செய்கின்றான். சங்காரம் என்றால் அழித்தல் என்று பொருளன்று. தூய்மை செய்தல் என்று பொருள். நெருப்பை இடமாகக் கொண்டு கண் பார்க்கின்றது என்று சொன்னார். இங்கே நெருப்பை இடமாகக் கொண்டு கை கொடுக்கும் தொழிலைச் செய்கின்றது. கை என்றால் ஒழுக்கம். ஒழுக்கத்தை ஏற்கும் இயல்புடையது கை. ஒருவருக்கு நன்மை செய்யப் பழகுவது தான் ஒழுக்கம். கெடுதி செய்வது அல்ல. நன்மைதான் ஒழுக்கம்.

## குதம்

அடுத்தது குதம் என்ற உறுப்பு. இது மலம் விடும் வழி. எருவாய் என்றும் குறிப்பிடுவர். குதம் நீர் இடமா மலாதி விடும் என்று கூறுகின்றார் மல ஆதி என்பதனால் நீர் விடுதலும் கொள்ளப்படும். உடம்புக்கு வேண்டாத பொருள்களை அகற்றுவதற்கு நீர் ஆகிய முதற்பொருள் இடமாக அமைகிறது.

இன்பத்தைச் செய்கின்ற கருவி உபத்தம் எனப்படும். உபத்தம் என்பது கருவாய். நீர் விடும் வழியும் இதுவே. நாக்கு சுவை அறியும கருவியாகவும், பேசுகின்ற கருவியாகவும் அமைவது போலவே கருவாய் என்ற கருவியும் நீர் விடும் கருவியாகவும், இன்பத்தைச் செய்வதாகவும் உள்ளது. அதற்கு இடமாக அமைவது பார் என்னும் பூதம். பார் இடமா உபத்தம் விந்துவிடும் என்று கூறுகின்றார். விந்து என்பது சீவ ஆற்றல்.

எருவாய், கருவாய் என்ற இரண்டும் நீரையும், பாரையும் இடமாகக் கொண்டு செயல்படும். இதற்கு என்ன முக்கியம்? இதனால் ஒரு இன்பம் இருக்கின்றது. ஏதோ சாதாரணமாக நிகழ்கின்றது என்று எண்ணக் கூடாது. மலமும், நீரும் கழிவதனாலே, இந்த உடம்பும் ஆரோக்கியமாக இருக்கின்றது; அதனுள் வாழும் உயிரும் மகிழ்ச்சியாக இருக்கின்றது. இரண்டு நாளைக்கு நீர், மலம் போகவில்லையென்றால் உடலும் துடிக்கும், உயிரும் துடிக்கும். இவையிரண்டும் பிரிவதனாலே உயிருக்கும், உடலுக்கும் ஒருவிதமான மகிழ்ச்சி ஏற்படுகின்றது. நலமும் இருக்கின்றது.

இந்த ஐந்து கருவிகளும் தம்தம் வேலைகளைச் செய்து கொண்டு இருக்கும்போதுதான் இந்த உடலும், உயிரும் நலமாக இருக்கின்றன. இவ்வைந்து செயலாலும் சீவன் ஒருவகையான இன்பத்தை அடைந்துகொண்டிருக்கின்றது. அவை செயல்படுவதற்கு அறிவு இருக்கின்றதா? இல்லையா? என்று தெரிவதில்லை. மலமும், நீரும் சேர்ந்துவிட்டபின் அவற்றை வெளியேற்றிய பின்புதான் ஒரு மகிழ்ச்சி ஏற்படும். அப்படியே மனதிலே இருப்பதை வாயால் சொல்லி விடவேண்டும். அப்படிச் சொல்லிவிட்டால் பாதி சுமை குறைந்தது என்போம். இவ்வைந்து கருவிகளும் செயல்படுகின்றபோது ஒருவகையான சுமை குறைகின்றது; ஒருவகையான விடுதலை வருகின்றது; இந்தச் சீவன்இன்பத்தைப் பெறுகின்றது; மகிழ்ச்சியடைவதற்குரிய செயல்களாக அவை அமைகின்றன. இதற்கு மேலும் இன்னொரு சுவை இருக்கின்றது. விந்துவிடுதல் மேலும் ஒரு வகையான இன்பத்தைத் தருகின்றது. அதுவே ஒரு இன்பத்தையும், ஒருதுன்பத்தையும்தருவதாகும். அதுவும்கழிய வேண்டிய பொருள்தான். உடலிலேயே இருக்க வேண்டிய பொருளல்ல. அதனை அப்படியே நிறுத்திக் கொள்ளலாமா – என்றால் நிறுத்திக் கொள்ளக் கூடாது. அப்படி யாராவது நிறுத்திக் கொள்ளலாம் என்று சொன்னால் அது பொய்யான மொழியாகும். யோகிகளாக இருந்தாலும் கூட அவை கழிந்தே தீரும். ஒரு பொருள் நிரம்பிவிட்டால் கழிந்தேயாக வேண்டும். கழிவுப் பொருள்தான் அதுவும். ஆனால் உடம்புக்குள்ளே மிகவும்உயர்ந்த பொருளாக இருப்பது இந்த

விந்து அல்லது சீவ ஆற்றல். அது மண்ணிலே எப்படித் தங்கம் இருக்கின்றதோ அப்படிப் பட்டது. மண்ணில் இருக்கும் தங்கம் எப்படி உயர்ந்ததோ அப்படிப் பட்டது. அளவாக இருக்கும்போது இறுகும். அளவுக்கு விஞ்சியதும் கழிந்துவிடும். வைரம்போல் இறுகும்; வைரம்போல்ஒளிவிடும். அதனால்தான் ஆண்டுகள் பல கழிந்தவர்களுக்குப் பொன்விழா, வைரவிழா, பவளவிழா என்றெல்லாம் கொண்டாடிக் கொண்டிருக்கின்றோம். அறுபதாம் கல்யாணம் செய்து கொள்கின்றார்களே, அது சராசரி மக்கள் செய்து கொள்கின்ற கல்யாணம் அன்று. ஒருவரைப் பார்த்து இன்னொருவர் இப்படிச் செய்து கொள்கின்றார்கள்.

வெள்ளிவிழாக் கண்டவர்கள் விந்து என்ற சீவ ஆற்றலை விடாமல் நிறுத்தியவர்கள்.அதாவது ஒரு குளத்தில் இருக்கின்ற நீரை வெளியில் விடாமல், குறையாமல் பார்த்துக் கொள்வது போல, விந்து என்ற அந்தச் சீவ ஆற்றல் உள்ளே நிறை ஆற்றலாக நிரம்பி விளங்குகின்றவர்கள் யாரோ அவர்கள்தாம் வெள்ளிவிழாக் கொண்டாடலாம். அது மேலும் சிறந்து, ஒளி சிறந்து விளங்குகின்றபோதுமனதிலேஅமைதிவரும்அப்போதுபொன்விழா கொண்டாட வேண்டும். அதுவே பொன்னாக மாறிவிடும். அதற்கு மேலே போனால் பவளவிழா கொண்டாடலாம். அப்போது அந்த விந்துவே மேலும் இறுகிச் செந்நிறமாக மாறியிருக்கும். அதற்கு மேலே போனால் வைரவிழா கொண்டாட வேண்டும். இப்படி வயது நிலையிலே காட்டிய ஒன்று. 60 வயது என்பது பவள விழா. அது ஒரு முதிர்ந்த நிலை. அப்போது இழப்புக்கள் இருக்காது. இனி வரவும் அதிகமிருக்காது. 60ஆண்டிலே ஊற்றுப் பெருகாது. வந்தது அப்படியே இறுகிப் போய்விடும். குறையவும் குறையாது. இளமைக் காலத்திலேதான் ஊற்றும் பெருகும்; கழியவும் கழியும். விந்து கெட்டுப் போனால் வெள்ளி சாப்பிட வேண்டுமென்று சொல்வார்கள். 80 வயதில் இன்னும் குறைந்துவிடும். அதற்கு மேலே போனால் உள்ளது அப்படியே இறுகிப் போயிருக்கும். இப்படியே யோக நிலையிலே தன்னை ஆட்படுத்தி, இல்லறத்தோடு வாழ்ந்து கொண்டே யோகியாக வாழ்ந்து கொண்டிருப்பவர்களுக்குத் தான் இத்தகு விழாக்கள் எல்லாம். ஆனால் சாதாரண நிலையில் இருக்கின்ற நாமும்

அவற்றையெல்லாம் கொண்டாடிக் கொண்டிருக்கின்றோம். அப்படியானால் இத்தகு விழாக்களை நாமெல்லாம் கொண்டாடக் கூடாது என்று சொல்கின்றீர்கள் என்றால் கொண்டாடக் கூடாது என்று பாகுபாட்டைச் சொன்னேன். மேற்சொன்ன நெறியில் நின்று ஒழுகினால் சீவ ஆற்றல் வெள்ளியாய்ப் பொன்னாய்ப் பவளமாய் சிறந்து விளங்குதலின் அடையாளங்களே விழாக்களாகக் கொண்டாடப் பட்டனவே அன்றி, வெறும் கொண்டாட்டங்கள் அல்ல. இதைப் புரிந்து வாழ்க்கையில் கடைப்பிடித்து வருவது வாழ்க்கையில் ஒளி கூட்டும்.

இப்போது பல நிறுவனங்களுக்கும் கூட வைரவிழா, பொன்விழா, பவளவிழா என்று கொண்டாடிக் கொண்டிருக்கின்றோம். ஆனால் மேற்சொன்ன தத்துவங்களைக் காட்டவே எழுந்தன இவ்வகை விழாக்கள்.

அதனால்தான் திருவடிப் புகழ்ச்சியில் ஆரம்பத்தில் ஒருவித நடை, இடையில் ஒரு நடை, முடிவில் ஒருவகை நடையாக இருக்கின்றது. அந்த நிலையிலே உயர்ந்த வள்ளல்பெருமான் முதலிலே பேசிய இடம் உயர்ந்த இடம். பின்னாலே பேசியது இரண்டும் கலந்த இடம். கடைசியாகப் பேசியது தெளிந்த இடம். இந்த மூன்று நிலைகளிலே நின்று பாடியிருக்கின்றார். வெள்ளி விழாவைப் பேசியிருக்கின்றார்; பொன் விழாவைப் பேசியிருக்கின்றார். பவள விழாவைப் பற்றியும் பேசியிருக்கின்றார். மனிதன் வெள்ளியான நிலையையும், பொன்னான நிலையையும், பவளமான நிலையையும் பேசினார். இம்மூன்று நிலைகளையும் திருவடிப் புகழ்ச்சியில் அதன் நடையினாலே காட்டிஇருக்கின்றார். இவையெல்லாம் மிகவும் நுட்பமான செய்திகள். நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதற்காகச் சொன்னேன். ஆகவே விந்து என்பது இன்பத்துக்குரிய பொருளானாலும் கழிய வேண்டியபொருளாகவும் இருக்கின்றது. அப்பொறியினுடைய செயல் இதுதான்.

    

16. அந்தக் கரணம் அடைவே உரைக்கக்கேள்
அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம் – சிந்தைஇவை
பற்றியது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்துஅங்கு
உற்றதுசிந் திக்கும் உணர்.

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கும் அந்தக்கரணங்கள். இவை உள்ளே அமைந்திருக்கும் கருவிகள். இவை உயிரின் நிலைக்களம். இந்தப்பாடலோடு உயிரின் நிலைக்களம் என்ற இத்தலைப்பு நிறைவடைகின்றது.

அகக்கருவிகள் நான்கும் ஒரு பொருளைப் பற்றி நான்குவிதமான வேலைகளைச் செய்யும். மனம் ஒரு பொருளைப் பற்றும். புத்தி அதைப் பற்றி நிச்சயிக்கும். அகங்காரம், 'அதற்கென்ன, நான் அப்பொருளைக் கொண்டு வந்துவிடுகின்றேன்' என்று சொல்லும். சித்தம் அதைப் பற்றி யோசிக்கும். இவை அவற்றின் நிலைகள்.

மனம் முந்தியதா? சித்தம் முந்தியதா? அகக்கருவிகள் ஒன்றா? நான்கா? சாத்திரமாகச் சொல்கின்றபோது முறைப்படுத்திச் சொல்ல வேண்டும். அநுபவத்தில் சொல்லும்போது சாத்திரத்தில் சொன்னது போல முறையாகச் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

கரணம் என்றால் என்ன? கரணம் என்றால் கருவி என்று மட்டும் பொருளன்று. துண்டு துண்டாக இருப்பது என்றும் பொருள் தலைகீழாக மாறிப் போவதற்கும் கரணம் என்று பெயர்.

துண்டு துண்டாகப் போடுவதற்குக் கரணை கரணையாகப் போட்டு இருக்கின்றார்கள் என்பர்.

'கரணம் தப்பினால் மரணம்' என்பது பழமொழி. 'தருணம் தப்பினால் மரணம்' என்பது மருவி 'கரணம் தப்பினால் மரணம்' என்று வழங்கி வருகின்றது. தருணம் என்றால் நேரம். குறித்த நேரம் தப்பினால் மரணம் அல்லது மரணத்துக்கு ஒத்த நிகழ்ச்சி, தோல்வி நேரும் என்பது அதன் கருத்து. சொல்லுக்குப் பொருள் தெளிவாகத் தெரிந்து

கொண்டால் இப்பாடல் எளிதில் விளங்கிவிடும்.

அந்தக் கரணம் என்றால் அகக்கருவிகள். புலன்களைவிட நமக்கு அதிகமாகத் தொல்லை கொடுப்பன அகக்கருவிகள்தான். சாத்திரமாகச் சொல்லுகின்றபோது மனம், புத்தி, சித்தம், அகங்காரம்என்று ஒரு முறைக்காகச் சொன்னார்கள். ஆனால் வள்ளல் பெருமான் போன்ற அனுபவசாலிகள் கொஞ்சம் மாற்றிச் சொல்வார்கள். உதாரணமாக, 'அகக்கருவிகள் நான்கு அல்ல; சிந்தை என்ற ஒன்றுதான் உண்டு; சிந்தையின் கூறுகள்தாம் இவை நான்கும்' என்பர். எனவே கணக்காகச் சொல்வது வேறு, அனுபவத்தின் வாயிலாகச் சொல்வது வேறு.

கணக்கு என்றால் என்ன?

நான் படிக்கின்ற காலத்தில் 8 ஆழாக்கு ஒரு படி, 8 படி ஒரு மரக்கால், 12 மரக்கால் ஒரு கலம்; 12 கலம் ஒரு கரிசை என்று படித்திருக்கின்றேன். இது ஒரு அடிப்படை. இந்த அடிப்படைப்படி அப்போது சொல்லிக் கொடுத்தார்கள்.

8 ஆழாக்கு ஒரு படி என்று வைத்தது சரிதான். ஆனால் 8 படி ஒரு மரக்கால் என்று வைத்திருக்கின்றார்களே அந்த மரக்காலை வைத்து அளக்க முடியுமா? முடியாது. பெரிதும் சிரமப்படுவார்கள். வேர்க்கடலையை போன்ற லேசான பொருள்களை அளந்துவிடலாம். நெல்போன்ற கனமான பொருள்களை அளக்க முடியாது.

மரக்கால் என்ற அளவும் ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒவ்வொரு அளவில் வைத்திருப்பார்கள். $3\frac{1}{2}$ படி ஒரு மரக்கால், 4 படி ஒரு மரக்கால், $3\frac{1}{2}$ படி ஒரு மரக்கால் என்று ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு அளவு கொண்டதை மரக்கால் என்பார்கள். நான் சின்ன வயதாக இருக்கின்றபோது கேட்டேன். ஏன் இப்படிப்பட்ட அளவுகளை வைத்திருக்கின்றார்கள் என்று. அது ஒரு கணக்கு என்று சொன்னார்களே தவிர, வேறு வித விளக்கத்தை அவர்களால் தரமுடியவில்லை. பயிற்சி

கொடுக்கப்பட்டதே தவிர, நடைமுறைக்கு ஒத்து வந்ததா? பயன்பட்டதா? என்று பார்த்தால் இல்லை. அதேபோல 8 பலம் ஒரு சேர்; 5 சேர் ஒரு வீசை, 8 வீசை ஒரு மணங்கு, 20 மணங்கு ஒரு பாரம் என்று சொல்லுவார்கள். இப்போது இந்த அளவைகள் எல்லாம் வழக்கில் இல்லை. மாறிவிட்டன. ஆனால் இப்போது இருக்கின்ற அளவைகளும், அப்போது இருந்த அளவைகளும் ஒரு அடிப்படைக் கணக்குகள். அதேபோலத்தான் சித்தாந்தம் சொல்லுகின்றபோதும் ஒரு கணக்குச் சொன்னார்கள். அனுபவத்தில்விளைந்த விளைவுகளைச் சொன்னவர்கள் ஒரு கணக்குச் சொன்னார்கள். இருவரும் சொன்ன கணக்குகள் சரியானவையே.

இயற்கையைப் பற்றிச் சொல்லுவது என்றால் அறிவு பூர்வமாகச் சொல்லலாம்; அனுபவ பூர்வமாகவும் சொல்லலாம். மண், நீர், தீ, காற்று, வானம் என்றும் சொல்லலாம். வான், காற்று, தீ, நீர், மண் என்றும் சொல்லலாம். ஆனால் இந்த இயற்கை எப்படி இயங்குகின்றது? இதில் எது எது முதன்மை? என்று பார்க்கின்ற போது அப்படிச் சொல்லிக் கொண்டிருக்க முடியாது. உதாரணமாக, ''வானாகி, மண்ணாகி வளியாகி ஒளியாகி'' என்பார் மணிவாசகர். வானாகி என்றதும் வளியாகி என்றுதானே சொல்ல வேண்டும். அதுதானே முறை. அதற்கு மாறாக மண்ணாகி என்கின்றாரே பந்தாடுவதுபோலச் சொல்லியிருக்கிறாரே என்றால் என்ன காரணம்? அவருக்கு முறை தெரியாதா? பாட்டுக்காகச் சொன்னாரா? பாட்டுக்காகவும் சொல்லவில்லை முறை தெரியாமலும் சொல்லவில்லை அதிலே ஒரு நுட்பம் இருக்கின்றது. அதனால் அப்படிச் சொன்னார்.

புறநானூற்றுப் பாடல் ஒன்றில், ''மண்திணிந்த நிலனும்'' என்று நிலத்தில்ஆரம்பிக்கின்றார். பிறகு, ''நிலன்ஏந்திய விசும்பு'' என்று கூறுகின்றார். வானம் இதனைத் தாங்கிக் கொண்டிருக்கின்றதாம். காரண காரிய நிமித்தமாக இப்படிச் சொல்லியிருக்கின்றார். அடுத்து, 'விசும்புதை வரு வளியும், வளிதலைய

தீயும், தீ முரணிய நீரும் ...' என்று எப்படி உலகம் இயங்குகின்றது என்பதைச் சொல்கின்றார். இப்படிச்சொல்வதில்ஏதோ பிழை இருக்கின்றது என்றோ, ஒருவர் பெரியவர், மற்றவர் சின்னவர்என்றோ கொள்ளுதல் கூடாது. இயற்கையை இவர் பார்த்த முறை வேறு; அவர் பார்த்த முறை வேறு. அதைப்போலவே வள்ளல் பெருமானும் அந்தக் கரணத்தைப் பற்றிய செய்தியைச் சிறிது மாற்றத்துடன் விளக்குவார். சாத்திர ஆசிரியர்கள் நேர்முகமாகச் சொல்வரர்கள். சாத்திரத்தையும், தோத்திரத்தையும் படித்து அனுபவத்தால் உணர்ந்தவர்கள் ஒருவிதமாகச் சொல்வார்கள். இவ்விரண்டு அனுபவங்களும் இல்லாத நாம் இவற்றைக் கண்டு மயங்கிப் பிழைபட உணருவோம்.

திருவள்ளுவர் ஐம்புலன்களைப் பற்றியும சொல்வார். நீத்தார் பெருமை என்ற அதிகாரத்தில் துறவிகளைப் பற்றிச் சொல்கின்றார். நீத்தார் என்றால் எல்லாவற்றையும் நீத்தவர்கள், கடந்தவர்கள், நீந்திவிட்டவர்கள் என்று பொருள்.

> ''சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்
> வகைதெரிவான் கட்டே உலகு''.

என்று சுவையிலிருந்து தொடங்குகின்றார். ஏன்? ஒன்று மண்ணிலிருந்து தொடங்க வேண்டும்; அன்றி விண்ணிலிருந்து தொடங்கியிருக்க வேண்டும். மாறாக சுவையிலிருந்து (நீரிலிருந்து) ஏன் தொடங்கினார்?

துறவிகளுக்குச்சுவையிலே நாட்டமிருக்கக்கூடாது. நாவுக்கு அடிமையாய் இருத்தல் கூடாது. நாவுக்கு அடிமைப்பட்டவன் பெரும் தீங்குகளுக்கு ஆட்படுவான். எதுபோல என்றால் புழுவுக்கு (நாச்சுவைக்கு) ஆட்பட்ட மீன் தூண்டிலில் அகப்படுவதுபோல, நாவுக்கு அடிமைப்பட்டவன் துன்பப்படுவான். எனவே, துன்பப்படாமல் இருக்க வேண்டுமென்றால் சுவைக்கு அடிமைப்படாமல் இருக்க வேண்டும். அதனால் சுவையிலிருந்து ஆரம்பித்திருக்கின்றார்.

அதுவே இல்லறத்தில் ஈடுபட்டிருக்கும் சராசரி மக்கள் எப்படியிருக்க வேண்டுமென்று இன்பத்துப் பாலில் "கண்டு கேட்டு..." என்று ஆரம்பித்துச் சொல்கின்றார். கண்டு என்றால் பார்த்தல். இல்லறத்தான் எல்லாவற்றையும் பார்த்துத்தான் ஆக வேண்டும் கண் தீ ஆதாரமாகக் கொண்டது. அவன் ஒவ்வொரு பொருளையும் தூய்மையான நோக்கத்தோடுதான் காண வேண்டும். பார்வையில் தூய்மை இருக்க வேண்டும். தவறாக எதையும் பார்க்கக்கூடாது. எந்தப் பொருளை யும் உயர்வாகக் காண வேண்டும். அதனால்தான் 'நோக்கல் நோக்கம்' என்று சொன்னார்கள். பார்க்கின்ற பார்வையில்தான் தூய்மையும், தூய்மையின்மையும் இருக்கின்றது. எனவே, கண்டு என்று சொன்ன உடனே தூய்மையாகக் காணுதல் என்பதும் விளங்கும்.

காணவேண்டியதைக் காணவேண்டும். காணக்கூடாததைக் கண்ணாலும், மனதாலும் பார்க்கக் கூடாது. கள்ள எண்ணத்தோடு பார்க்காததுபோலப் பார்க்கக்கூடாது.

நீத்தாருக்கு நீரிலும், இல்லறத்தார்க்கு நெருப்பிலும் ஆரம்பித்துச் சொன்னதெல்லாம் காரண காரிய வைப்பு என்று உணர வேண்டும்.

சிவபுராணத்தில், "சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்" என்று மணிவாசகர் குறிப்பிடுவார். உணர்ந்து என்றால் அறிந்து சொல்வார் என்பார்கள். அப்படியன்று. உணர்வது வேறு; அறிவது வேறு. உணர்வினால் எல்லாவற்றையும், எவ்வளவு நுட்பமாக இருப்பினும் அறிந்து கொள்ள முடியும். ஆனால் அறிவால் எல்லாவற்றையும் அறிந்து கொள்ள இயலாது. உதாரணமாக,

நக்கீரர், பெண்களின் கூந்தலுக்குச் செயற்கை மணந்தானே தவிர, 'இயற்கை மணம் கிடையாது' என்று கடவுளிடமே வாதிடுகின்றார். இறைவன் "நீ வணங்கு கின்ற பூங்கோதை அம்மைக்குமா இயற்கை மணம் (கூந்தலுக்கு) இல்லை" என்றுகேட்கிறான். அப்போதும் 'ஆம்' என்று சொல்லுகின்றார். அப்படி அவர் சொன்னது

அறிவினால் ஆய்ந்து சொன்னது. ஏன் அப்படிச் சொன்னார்? இந்த முடியை எடுத்து முகர்ந்து பார்த்தால், எந்த மலர்வைத் திருந்தார்களோ, எந்த எண்ணெய்தடவியிரு ந்தார்களோ அந்த மணம்தான் வரும் என்பது அறிவால் அறிந்த உண்மை. அப்படி அறிவால் அறிந்ததைச் சொன்னாரே தவிர உணர்வினால் அறிந்து சொல்லவில்லை.

கூந்தலில் எவ்வித மலரையும், சூடாமல் தைலமும் தடவாமல் விட்டுவிட்டால் எவ்விதமான வாடையும் வராது. அதனால் கூந்தலுக்கு இயற்கை மணம் இல்லை; செயற்கை மணந்தான் உண்டு என்று சொன்னார். நமக்கும் அதுதான் சரி என்று தோன்றும். ஆனால் இது அறிவு. இது தவறு.

எப்படித் தவறு? உதாரணத்தால் இதனை விளக்கினால் விளங்கிவிடும். கட்டைகளில் பல வகை உண்டு. ஒவ்வொரு கட்டையை எரிக்கும்போதும் ஒவ்வொரு மணம் வரும். சந்தனக் கட்டையை எரித்தால் அதன் மணம் வேறு. சவ்வாதுக் கட்டையை எரித்தால் அதன் மணம் வேறு. கருங்காலிக் கட்டையை எரித்தால் அதன் மணம் வேறு. சவுக்குக் கட்டையை எரித்தால் அதன் மணம் வேறு. வேலிக்காத்தான் கட்டையை எரித்தால் அதன் மணம் வேறு. இப்படி ஒவ்வொரு கட்டையை எரிக்கும்போதும் அதிலிருந்து தனித்தனி மணம் வருகின்றதல்லவா; அதுதான் அக்கட்டையின் இயற்கை மணம். கட்டையில் மணம் இல்லையென்றால் எரிகின்றபோது மணம் வராது. மாற்று மணமும் வராது. அப்படியே, நம்முடைய முடியை எரித்தாலும் ஒருவித சுடுநாற்றம் வீசும். அந்த நாற்றம் எப்படி வந்தது? இயற்கையாக அதில் மணம் இல்லை என்றால் எரிக்கும் போது மணம் வருமா. வராது. எனவே அதற்கு ஏற்கனவே ஒருவித மணம் இருக்கின்றது. அதனை உணர்வால்தான் அறிய முடியும். அறிவால் அறிய இயலாது.

இதை வேறு வகையாலும் நிறுவ முடியுமா? அல்லது உங்களுக்குத் தெரிந்தது நக்கீரருக்குத் தெரிந்திருக்காதா? என்றெல்லாம் ஐயங்கள் எழக்கூடும். நிரம்பவும் படித்துவிட்டால் அறிவின் முனைப்புத்தான் அதிகம் இருக்கும். அதிகமாகப் படிக்காதவர்களுக்கு

முனைப்பு அதிகமிருக்காது. செருக்குக் குறைவாக இருக்கும். நக்கீரர் சங்கப் புலவர்களிலே தலையாயவர். எதையும்எடுத்துப் பேசும் ஆற்றல் உடையவர். அந்த முனைப்பினாலேதான் இயற்கையை மறந்தார். இறைவனிடமும் வாதிட்டார் என்பது வரலாறு.

மலரில் மணம் எப்போது வருகின்றது? மலர் மொட்டாக இருக்கும் போதும் மணம் வருவதில்லை. உதிரும் நிலையிலும் அதில் மணம் இருப்பதில்லை. மலர் மலர்ந்தும், மலராத நிலையிலும் மணம் வருவதில்லை. பின் எப்போது மணம் வருகின்றது? மலர் முழுதும் மலர்ந்த பின்னர்தான் மணம் வரும். ஓரிரு இதழ்கள் விரியாமல் இருந்தபோதும் மணம் வராது.

மரம் தளிர் விடுகின்றபோதும் ஒரு மணம் இருக்கும். அதுவே முதிர்ந்த பின்னர் அந்த மணம் இராது. எங்காவது தோப்புக்கள் இருந்தால் அங்கே போய்ப் பாருங்கள். இந்த உண்மை தெரியும். எதுவும் முதிர்ந்தால் மணம் இருக்காது. கசக்கிப் பார்த்தால் ஒரு வித மணம் வரும். ஆனால்அது இயற்கையான மணமாக இருக்காது. பருவத்தில் வருகின்ற மணம், முன்னும், பின்னும் கிடையாது. முதிர்விலும் கிடையாது; உதிர்விலும் கிடையாது. அதேபோலத்தான் நம் உடம்பிலும் ஒரு மணம் வரும். அந்த மணம் நம் முடியிலும் வரும். முடி என்பது நம் உடல் முடிகின்ற இடம். நம் உள்ளே என்ன மணம் இருக்கிறதோ அந்த மணம் கூந்தலிலும் வரும். அப்படி ஒரு மணம் வீசும் என்பதை உணர்ந்தவர்கள் அனுபவத்தாலே உணர்த்துவர்.

பெண் குழந்தையை அப்பா அம்மா பக்கத்தில் விடவேண்டாம்; நம் பக்கத்தில் வைத்து வளர்ப்போம் என்று எண்ணி, வீட்டில் உள்ள வயதானவர்கள் தங்கள் பக்கத்தில்இரவில் படுக்க வைத்துக் கொள்வார்கள். அதுகூட எதற்காக? இக்குழந்தையின் தாய் தந்தையர்கள் இளைஞர்களாக இருப்பதனாலும், அவர்கள் இளமை நிலைக்குக் குழந்தையினால் தடுமாற்றம் வரக்கூடாது என்பதனாலும் அப்படிச்செய்வார்கள். அவர்கள்நிலையில்

தெ.பொ.உலகநாதன்.



தடையாக இக்குழந்தை இருந்து விடக்கூடாதே என்பதற்காகவே இப்படிச் செய்வார்கள். ஏன்? அப்படித் தடையாக இருந்தால் குழந்தையின் மீதே வெறுப்பு உண்டாகும். அதுதான் இயற்கையும் கூட. இந்த உண்மையைக்கூட யாராவது உணர்த்தினாலன்றி நாமே உணர்ந்து கொள்ள முடியாது. அப்படி யாரும் வெறுக்க மாட்டார்கள் என்று தான் நினைக்கத் தோன்றும். அனுபவத்தினால்தான் இதனை அறிய முடியும்.

அப்பெண் குழந்தை வளர்ந்து பருவம் வரும்போது ஒரு மலர்ச்சியும், பின்னர் இன்னொரு மலர்ச்சியும் என இரு மலர்ச்சிகள் ஏற்படும். பின்னால் வருவது மறுமலர்ச்சி எனப்படும். இப்படி மலர்ச்சி வந்தபோது அப்பெண் ஒருவனைப்பார்த்து அன்பு செலுத்தும்; அவனும் அவளைப் பார்த்து அன்பு செலுத்துவான். இருவர் மனமும் ஒருவர்மேல் மற்றவர் ஈடுபாடு கொள்ளும். அப்போது ஒரு மலர்ச்சி ஏற்படும். முதல் மலர்ச்சி கருவிகளிலே எழிலை உண்டாக்கும். ஒளித்தன்மையை உண்டாக்கும். பின்னால் உணர்வு சிறந்து விளங்கும். இந்த மலர்ச்சிகள் யாவும் குழந்தையின் பாட்டிக்குத்தான்தெரியும். தாய்க்குத் தெரியாது. இந்த மணம் வந்ததும், குழந்தை யாரையோ விரும்புகின்றாள் என்று உணர்ந்து கொள்வார்கள். அதை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக இன்னும் கொஞ்சம் அவள்மேல் கவனம் செலுத்துவார்கள். இதனை,

> 'நாற்றமும், தோற்றமும், ஒழுக்கமும், உண்டியும்,
> செய்வினை மறைப்பினும், செலவினும், பயில்வினும்' .(3:24)

என்று பெரியவர்கள் அப்பெண்ணிடம் நிகழும் மாற்றங்களைப் புரிந்து கொள்வார்கள் என்று தொல்காப்பியர் கூறுவார்.

முதல் மலர்ச்சி பருவமலர்ச்சி. இரண்டாவது மலர்ச்சி அன்பு மலர்ச்சி அல்லது மறுமலர்ச்சி என்பர். முதலாவது இயற்கை மலர்ச்சி, இரண்டாவது இணைந்த மலர்ச்சி. இணைந்த பின்பு அன்பு மணம் வீசும். அன்பு மணம் பெருகும். அது இயற்கை மணம். அந்த மணம்

அக்குழந்தையை வளர்க்கும் பாட்டிக்குத் தெரியும். ஆகவே இவற்றையெல்லாம் அனுபவத்தால்தான் உணரலாம். அறிவினால் உணர முடியாது. அப்படித்தான் நக்கீரரும் அறிவினால் உணர்ந்தாரே அன்றி, அனுபவத்தால் உணரவில்லை.

எனவே மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கு கருவிகளைப் பற்றி உணர்வார்க்கன்றி, அறிவினாலே மட்டும் தெரிந்து கொள்ள முடியாது என்பதுதான் இதன் கருத்து.

மனம் என்பது கருவி. அது உள்ளேயும் இருக்கும். வெளியேயும் இருக்கும் 'என் மனம் இப்போது இங்கில்லை' என்றும், 'என் உடல் மட்டும் இங்கேயிருக்கின்றது; மனம் அங்கேயிருக்கின்றது' என்றும் சொல்லக் கேட்கின்றோம். இப்போது மனம் என்பது கருவியா? அல்லது நினைவா?

இதற்கு வள்ளல் பெருமான் விடை சொல்லுவார். 'மனம் என்பது ஒரு கருவி, அது எல்லாப் பிறவியிலும் தொடர்ந்து வருகின்றதோர் கருவி, மனம் மட்டும் இல்லையென்றால் மனிதன் அறிவு பெற முடியாது; அந்த நுண் கருவியில்தான் இறைவன் நிலைபேறாக இருக்கின்றான்' என்பார் வள்ளல் பெருமானார்.

'மன்' என்றால் நிலைபேறு. மனம் என்றால் இறைவன் நிலைபேறாக இருக்கின்ற இடம். நிலைபேறானவன் வந்து நிலைபேறான இடத்தில் அமர்கின்றான். அந்த இடத்திற்கு மனம் என்று பெயர். எப்போதும் அவன் நிலைபேறாக மனத்தில் அமர்ந்து உணர்த்தவில்லையென்றால் ஆன்மாவானது எந்த அறிவையும் பெறாது. அப்போது எல்லாப் பிறப்புக்கும் மனம் உண்டு என்பது தெளிவாகின்றது.

சில உரையாசிரியர்கள், 'மனம் உடையவன் மனிதன் என்றும், மனிதனுக்கு மட்டுந்தான் மனம் உண்டு' என்றும் எழுதியிருப்பார்கள். அது பிழையான கருத்து.

இப்படி என் ஆசிரியரும் எழுதியிருக்கின்றார். இப்படி நீங்கள் மாற்றுக் கருத்தைச் சொல்வதனால் உங்கள் ஆசிரியரையே மறுப்பது போலிருக்கிறதே என்று வினவலாம். ஒரு கருத்தில் தெளிவு வந்த பிறகு அக்கருத்தைக் கொண்டு பிறரையும் தெளிய வைக்க வேண்டுமென்பதே ஒவ்வொருவரது கடமையும். அவர்களுக்குத் தெளிவான அளவு அவர்கள் பிறருக்குச் சொன்னார்கள். அதற்குமேல்தெளிவு கிடைத்த பின்னர் அதனையும் பிறருக்குச் சொல்ல வேண்டுமே தவிர, தெளிவு கிடைத்த பின்னரும் பழைய கருத்தையே சொல்லிக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. இதனால் பெரியவர்களை மறுத்ததாகவும் கொள்ளக் கூடாது.

> ''எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
> மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்''

என்கின்றபோது மணிவாசகர் மனதைப் பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை ஆனால் அப்பர் சுவாமிகளோ,

> ''புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே
> வழுவாதி ருக்க வரந்தர வேண்டும் ... ''

என்று அன்போடு வேண்டிக் கொள்கின்றார். அப்போது மனம் என்பது புழுவாகப் பிறந்தாலும் உள்ளதொரு கருவி என்பது விளங்கியிருக்கும் என எண்ணுகின்றேன்.

வள்ளலார், ''சிந்தைதான் எல்லாவற்றிற்கும் உபகாரமாக இருக்கின்றது; அதுதான் மற்ற மூன்றுக்கும் ஆதாரமாக இருக்கின்றது'' என்பதனை உணர்ந்து, சிந்தையிலிருந்து ஆரம்பிப்பார். மனம் அநாதியிலிருந்தே வருவதானாலும், அநுபவத்தில் வருகின்ற போது சிந்தைதான் முன்னே நிற்கும். வள்ளலாருடையது அநுபவம், சாத்திரம் என்பது கணக்கிட்டு, அறுதியிட்டுச் சொல்வது. முன்னதை உணர்ந்தால் தெரிந்து கொள்ளலாம். பின்னதைப் படித்துத் தெரிந்து கொள்ளலாம். இது ஒரு வரன்முறை.

ஆன்ம தத்துவம் என்றால் ஆன்மா நிலைபெற்று வாழ்கின்ற தத்துவம். இவை ஆன்மாவுக்கு அரணாக இருக்கின்ற தத்துவங்கள்; உயிர் வாழ்வதற்கான இடங்கள்; உயிர்க்களம்; உயிர் உலாவுகின்ற களம்; உயிர் போராடுகின்ற களம் என்றும் சொல்லலாம். உயிர் இத்தத்துவங்களோடு போராடிக் கொண்டிருப்பதனாலே களம் என்று சொன்னார். உயிரானது இத்தத்துவங்களோடு மாறுபட்டும், வேறுபட்டும், உடன்பட்டும் போராடிக் கொண்டும் வாழ்ந்து கொண்டிருக்கின்றது.

சுருக்கமாக ஆன்ம தத்துவங்கள் என்ன என்று பார்க்கலாம். பூதம் – 5, செயற்பொறி – 5, புலன்– 5, தன்மாத்திரை – 5, அந்தக் கரணம் – 4. ஆக 24 தத்துவங்களும் ஆன்மதத்துவங்கள். இப்போது ஆசாரியார் 36 தத்துவங்களில் 24 தத்துவங்களைப் பற்றிச் சொல்லிவிட்டார். இனி, வித்தியா தத்துவங்களைப் பற்றிக் கூறுகின்றார்.



17. ஓதிஇடும் நால் ஆறும் உற்றுஆன்ம தத்துவம்
என்(று)
ஆதி அருள் நூல் அறையுங்காண் – தீதறவே
வித்தியா தத்துவங்கள் தம்மை விளம்பக்கேள்
உத்தமனே! நன்றா உனக்கு

ஆதி அருள்நூல் என்றால்ஆதியிலே தோன்றிய அருள் நூல் அன்று. அருள் நூல் என்பது ஒரு காலத்தில் தோன்றியதல்ல. காலங்கள் தோறும் அருள் நூல்கள் தோன்றும். சங்க காலத்தில் அருள்நூல்கள் என்று பேசுவதற்கு இடமின்றியிருந்தது. இல்லையென்றும் கூறிவிடமுடியாது. அருள்நூல் என்று யாரும் தொகுத்து வைக்கவில்லை. சமய காலம் வந்தபோது அருள்நூல் என்று சொன்னார்கள். அவ்வளவுதான்.

திருஞானசம்பந்தர் வந்தார். அவருக்கு முன் அப்பர் சுவாமிகள் அவதரித்தார். இருவரும் ஏககாலத்தில் இருந்தவர்கள். இவர்கள் காலத்தில் இவர்கள் பாடி வைத்தவை அருள் நூல்கள். அத்துடன் நிற்கவில்லை.

அவர்களுக்குப் பின்னர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வருகின்றார். அவருக்குப் பின்னர் கடைசியாக வள்ளல் பெருமான் வந்தார். இவர்கள் யாவரும் பாடியவை, பாடி அருளியவையாவும் அருள்நூல்களே. அப்பருக்கும் முன்னர் மாணிக்கவாசகர் இருந்தார். அவர் பாடியதும் அருள் நூலே. கடைச் சங்க காலத்தில் பரிபாடல் பின்னர் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை என்று இருக்கின்றன. பத்துப் பாட்டில் திருமுருகாற்றுப்படை வருகின்றது. இவையாவும் அருள்நூல்களே. ஆனால் அருள்நூல்களைப் பாடியவர்கள்தோன்றிய கால இடைவெளியைப் பார்க்க வேண்டும். ஏதோ ஒரு காலத்தில் மட்டும் பாடியது அருள்நூல் அன்று. காலங்கள் தோறும் அருள்நூல்கள் தோன்றும்.

ஆதி அருள்நூல் என்றால் என்ன? ஆதியாகிய அம்மை அருளுகின்ற நூல்கள் யாவும் அருள்நூல்கள். அம்மை எக்காலத்தும் இருப்பவள். அவளால் அருளப்படும் அருள்நூல்கள் காலங்கள்தோறும் வெளிவரும். ஆதி(பகவன்) என்பார் திருவள்ளுவரும்.

ஆதி அருள்நூல் என்பதற்கு அருளாசிரியன் அருளிய நூல் என்றும் கூறலாம். ஆதி என்றால்ஆசாரியன். உரைகளில் இக்கருத்து இல்லையே என்று பார்க்க வேண்டாம். இறைவன்அநாதியானவன். நமக்கு எதையேனும் அறிவிக்கின்றபோது தோற்றத்தோடு வருகின்றான். ஆதி என்பது இறைவன்தான் என்று சொல்வார்கள். இறைவன் இல்லை என்று சொல்லவில்லை. குருவடிவம். அவ்வளவுதான்.

ஆரணம் ஆகமங்கள் அருளினால் உருவு கொண்டு
காரணன் அருளா னாகில்கதிப்பவர் இல்லை யாகும்

என்று அருள் நந்தி சிவனார் சிவஞானசித்தியாரில் கூறியிருக்கிறார்.

அவன் கருணையினாலே உருக்கொண்டு வந்து வேதங்களையும், ஆகமங்களையும் ஓதவில்லை என்று சொன்னால் நம்மால் எதையும் அறிந்து கொள்ள முடியாது. உயரவும் முடியாது. அதனால்தான் அவனே உருவு கொண்டு என்று சொல்லுவார். அநாதியான பொருள் ஆதியாக உருக்கொண்டுவந்தான். குருவாக நின்று நமக்கு உணர்த்தினான்.

இந்த அருள் நூல்கள் சொல்லும் வித்தியா தத்துவங்கள் பற்றி உத்தமனே உனக்குச் சொல்லுகின்றேன் என்று தொடங்குகின்றார்.

உத்தமன் என்றால் யார்?

ஐம்புலன்களையும் ஒரு பொருள் வழி நிறுத்தி, தீமையில் தள்ளாமல் நன்மையில் நிறுத்தி வாழ்பவர்கள் உத்தமர்கள். இக்கருத்து புரியவில்லை யென்றால் வள்ளல் பெருமான் வாசகத்தை எண்ணிப் பாருங்கள். ''உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்'' என்றும், ''ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவு வேண்டும்'' என்றும் வேண்டுவதைப் பார்க்கலாம். ஒருமை என்றால் என்ன?

கண்ணொன்று காண, செவி ஒன்றுகேட்க, மொழியொன்று பேச, மூக்கொன்று நுகர, மனம் எங்கோ செல்ல, என்றில்லாமல் ஒருமையுடன் ஐம்புலன்களும் ஒன்றி நின்று ஒரு செயலைச் செய்தல். ''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின் எழுமையும் ஏமாப் புடைத்து'' என்பார் திருவள்ளுவ நாயனார். ஆமையானது தன் 4 கால்களையும், தலையையும் உள்ளடக்கி, அடங்கியிருப்பதுபோல, ஒரே நினைவில் புலன்கள் நிலைத்து நிற்க வேண்டும். அதற்குத்தான் ஒருமை என்று பெயர். அந்த ஒருமை உணர்வுடன் கேட்க வேண்டும் ஆதலின் உத்தம என்றார்.

வித்தியா தத்துவம் உணர்வுகளை மலரச் செய்வது. ஆன்மாவுக்கு நிலைக்களமாக இருக்கும் 24 தத்துவங்களும் ஆன்மா உலாவுவதற்கு நிலைக்களமாக இருக்குமே தவிர ஆன்மாவுக்கு மலர்ச்சியினைத் தரா.

ஒரு வீடு இருக்கிறது. அந்த வீட்டில் ஒரு மனிதன் உலாவிக் கொண்டே இருக்கின்றான். ஓய்வில்லை. ஏன்? அந்த வீட்டில் எந்தப் பொருளும் இல்லை. உணவு இருந்தால் சாப்பிடலாம். பசி தீரலாம். பண்டங்கள்

இருந்தால் சமைத்துச் சாப்பிடலாம். இல்லத்தில் மனம் மகிழக்கூடிய பொருள் இருக்க வேண்டும். அதனால்தான் இல்லறத்தில் வாழ்கிறவர்கள் இருவராக இருந்தாலும், இரண்டுபேரும் ஒருவரை ஒருவர் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தாலும், அந்த இருவரும் மகிழ்வதற்கு ஒரு பொருள் வேண்டும். அதுதான் மகப்பேறு. அது இல்லையென்றால் மகிழ்ச்சி இருக்காது. அவ்வாறே நம் உடம்பினுள் இருந்து இந்த மலர்ச்சியினைத் தருகின்றவையே வித்தியா தத்துவங்கள்.

உத்தமனே! உனக்கு வித்தியா தத்தவத்தை நன்கு உரைக்கப் போகின்றேன் கேள். உன் ஆன்மாவில் இருக்கும் தீமைகள் அற உரைக்கப் போகின்றேன். ஆன்மாவில் உள்ள தீமைகள் என்ன? இப்போது இந்த உடம்பில்வாழ்ந்து கொண்டிருக்கின்ற ஆன்மாவுக்கு ஏற்கனவே வாழ்ந்த காலத்தில் உற்ற தீங்குகள் இருக்கும். இனியும் இதற்குத் தீங்குகள் வரும். இவற்றை 'எஞ்சு வினை' என்றும், 'ஏறுவினை' என்றும் சொல்வர். இவ்வினைகளாகிய தீங்குகளை அகற்றிக் கொள்ளவே அருள் நூல்களை நமக்குச் சொன்னான். அவற்றை அறிந்து கொள்ள, தீமைகளை அகற்றிக் கொள்ள மிக நுண்கருவிகளைக் கொடுத்திருக்கின்றான். அவைதாம் வித்தியா தத்துவங்கள். அவை உணர்வு நிலை உடையன. அவற்றுக்கு உணர்ச்சிக்களம் என்றும் பெயர். வித்தியா தத்துவம் என்பது அறிவுத்தொடர்புடையது. 'இவன் வித்தை காட்டுகின்றான்' என்றும், 'இவர் பெரிய வித்துவான்' என்றும் சொல்வார்கள். பல செய்திகளைத் தெரிந்து கொண்டவர்கள்; பல நலங்களைத் தன்னுள் அடக்கி வைத்துக் கொண்டிருப்பவர்களை வித்தகர்என்பர். இத்தத்துவங்கள் கலைநல இயக்கம் உடையன. கலைநல விளக்கம் உடையன. அறிவு சம்பந்தம் உடையன.

வித்தியா தத்துவங்களை வித்தை தத்துவம் என்றும் கூறலாம். அவை வித்தையின் படிமுறைகள்கலையின்படி நிலைகள் என்றும் சொல்லலாம். வித்தைத் தத்துவம் ஏழும்

விளம்புகின்றேன் என்றால்மூலத் தத்துவத்தை விளக்குகின்றேன் என்று பொருள். அதனை மட்டும் விளக்கினால் போதும்.

ஒரு வித்தை மண்ணில்போடுகிறோம். அது முளைத்து, செடியாகி, மரமாகி, கிளைகள் விட்டு, நிழல்தரும், பூ தரும், காய் தரும், கனிதரும். இன்னும் மருத்துவ நலன்களையும் தந்து கொண்டிருக்கும். இப்படியே பல வேறு நலன்களைத் தந்து கொண்டிருக்கின்ற தத்துவங்களுக்கு வித்தியா தத்துவம் என்று பெயர் சொன்னார்.

'நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க்கு அல்லால் அரிது'

என்று திருவள்ளுவரின் வாக்கிற்கிணங்க, வித்தியா தத்துவம் என்பது பலவேறு நலங்களைத் தன்னுள் அடங்கப் பெற்ற இயற்கை அல்லது இயல்பு என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அவற்றை உணர்ந்தார் வித்தகர். அத்தகைய வித்தியா தத்துவங்கள் எவை என்று கூறுகின்றார்.



18. காலம் நியதி கருதும் கலைவித்தை
ஏலஅரா கம்புருட னேமாயை – மால்அறவே
சொன்னோம் அடைவாகச் சொன்ன இவை தம் உண்மை
உன்னி உரைக்கும் நாம் உற்று.

● காலம், நியதி, கருதும் கலை, வித்தை, ஏலஅராகம், புருடன், மாயை என்பன வித்தியா தத்துவங்கள். இவற்றைப் பற்றிய உண்மைகளை உனக்கு அடைவாகச் சொல்லப் போகின்றேன். அவற்றை நீ கவனமாகக் கேட்டுக் கொண்டால் உன்னிடத்தில் உள்ள மயக்கங்கள் அகலும். இவையெல்லாம் உன்னிடத்தில் உள்ள மயக்கத்தைப் போக்க, உனக்கு உதவி செய்ய வந்த தத்துவங்கள் என்பதனை உணர்ந்து கொள்வாயாக என

உரைக்கின்றார்.

ஞானிகள் மயங்கிச் சொன்னாலும், தயங்கிச் சொன்னாலும், எதைச் சொன்னாலும், எப்படிச் சொன்னாலும், நம்முடைய நலன் கருதியே சொல்வார்கள். அறிவாளிகள் தெளிவாகச் சொன்னாலும், பாகுபடுத்திச் சொன்னாலும் நம்முடைய மயக்கம் தீராது. மாறாக ஞானிகள் முன்பின் முரணாகவும் சொல்வார்கள், பாகுபடுத்திச் சொல்லமாட்டார்கள். இருப்பினும், அம்மொழிகள் யாவும் நம்முடைய மயக்கத்தைத் தீர்த்து, தெளிவினைத் தந்து, ஆன்மாவை ஈடேற்றும். ஞானிகளின் மொழி எப்போதும் ஆன்மாக்களின் ஈடேற்றத்தையே குறிக்கோளாகக் கொண்டவை. எனவே எப்போதும் ஞானிகளின்மொழிகளையே கேட்டுக் கொண்டிருக்க வேண்டும். அதுவே நம்முள் தெளிவை உண்டாக்கும். அறிவாளிகளின் மொழி எக்காலத்தும் நம்முள் தெளிவை உண்டாக்காது.

உதாரணமாக, இங்கே சொல்லுகின்ற போது மண், நீர், தீ, கால், வான் என்று முறைப்படுத்திச் சொல்லியிருக்கின்றார்கள். ஞான மயமாக நின்றவர்களைக்கேட்டுப் பாருங்கள்; அவர்கள் சொல்வது வேறு விதமாக இருக்கும். ''வானாகி, மண்ணாகி, வளியாகி, ஒளியாகி...'' என்று சொல்லுவார்கள். இவை முறையாகவா இருக்கிறது; மாறி மாறி சொல்லப்பட்டிருக்கிறது. இவை இப்படிச் சொல்லப்பட்டதன் நோக்கம் வேறு. மாற்றி மாற்றிச் சொல்லியிருந்தாலும் இவற்றைச் சொல்கின்றபோது ஏற்படுகின்ற நெகிழ்ச்சி, மகிழ்ச்சி, முறையாக, மண், நீர், தீ, காற்று, வான் என்று சொல்லுகின்றபோது ஏற்படுவதில்லை. ஞான மொழி வேறு, அறிவு மொழி வேறு. மொழிகள் ஒன்று போலத்தான் இருக்கும். வித்தியாசம் தெரியாது. ஆனால் அம்மொழிகள் நம் உள்ளத்தை ஆட்கொள்ளுகின்ற போதுதான் அவை ஞான மொழியா, அன்றி அறிவு மொழியா என்ற வேறுபாடு தெரியும்.

இனி அத்தத்துவங்கள் சொல்லும்விளக்கம் என்ன என்று பார்ப்போம்.

**1. காலம்:**

*காலம் என்பது என்ன?*

இப்போது ஆன்ம தத்துவத்தில் நம்மைத் தூண்டி எழுப்புகின்றார். உணர்வு பெறச் செய்கின்றார். உணர்ச்சிகளின் நிலைக்களமாக இத்தத்துவங்கள் அமைந்திருக்கின்றன என்பதனை உணர்த்துகின்றார்.

காலம் என்பது ஒரு தத்துவம். காலையில் கதிரவன் தோன்றுகின்றான். அதற்குக் காலம் என்று பெயர். காலை ஒரு காலம்; பகல் ஒரு காலம், மாலை ஒரு காலம். காலத்தை மூன்று என்று சொல்வாரும் உண்டு. காலம் ஒன்றே என்று சொல்வாரும் உண்டு. எப்படியானாலும், இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என்று பிரித்துக் கொள்ள வேண்டும். இதை மிகவும் நுட்பமாக எடுத்துக் கொண்டு போகவில்லை. காலம் என்று சொல்லி முடிப்பதற்குள் இறந்த காலமாகிவிடுகின்றது. அதனால்தான் இறந்த காலத்தை நம் பெரியவர்கள் பெரிதும் பயன்படுத்தினார்கள்.

இறந்த காலத்தால் ஒன்றைச் சொல்லிவிட்டால் அது முக்காலத்துக்கும் பொருந்தும் என்பது இலக்கணம். 'ஏகினான் என்று இறந்த காலத்தால்' கூறினால் அது முக்காலத்துக்கும் பொருந்தும் என்பார் பரிமேலழகர். இப்படிக் காலங்களைக் கணிப்பதற்குக் கூட இலக்கணம் நமக்குப் பெரிதும் உதவியாக இருக்கின்றது.

காலையில் கதிரவன் உதிக்கின்றான். மலர்கள் மலர்கின்றன. நேரம் ஆக ஆக மாற்றங்கள் வந்துகொண்டேயிருக்கின்றன. காலை அரும்பி, பகலில்போதாகி மாலை முதிர்கின்றது.

இப்போது நம் நிலை என்ன? ஓர் உணர்ச்சி வரும். இந்த உணர்ச்சியும், மலர்ச்சியும் வருவது ஒரு காலம். அது ஒரு எல்லையைக் குறிக்கும். முதிர்ச்சியைக் காட்டும்.

காலையில் கதிரவன் தோன்றிய வடிவத்தோடு வருவதில்லை. உச்சியில் நின்றபோது காலையில் இருந்த அளவு இல்லை. மாலையில் மறைகின்ற போது உச்சியில் இருந்த வடிவம் இல்லை. தோற்றத்திற்கும், நிலைபேற்றுக்கும், மறைவுக்கும் ஒரு எல்லை இருக்கிறது என்று காட்டியவுடன் நமக்குள் ஒரு பயம் எழுகின்றது; அல்லது மகிழ்ச்சி வருகின்றது.

மலர்ச்சி அச்சத்தினாலும் வரலாம்; மகிழ்ச்சியினாலும் வரலாம். அச்சமே கீழ்களது ஆசாரம். சொல்லப்பயன்படுவது சான்றாண்மை. சொல்லால் மலர்வது சான்றாண்மை. அச்சத்தால் மலர்வது தாழ்மை. எதனால்வேண்டுமானாலும் ஒருவர் மலரலாம்.

எனவே காலம் என்பது மலர்ச்சியைக் காட்டுகின்றது. மேலும் காலை மலர்ந்த மலர்போலே நாமும்மலர வேண்டுமென்ற மலர்ச்சி நம்மிடத்தே மலர வேண்டும். நாம் மலராமல், மலர்ந்து பயன்படாமலிருந்தால் வாடி உதிர்ந்து பயனற்றுப் போய்விடுவோம் என்ற எண்ணம் வரவேண்டும். அந்த எல்லைக்குள் நாம் என்னென்ன செய்ய வேண்டுமென்று எண்ணம் வரவேண்டும். காலம் எல்லையைக் குறித்துக் காட்டும். அந்த எல்லைக்குள் நாம் விரைந்து செயல்பட்டு, செய்ய வேண்டிய பணிகளைச் செய்துவிட வேண்டுமென்ற உணர்ச்சி மலர வேண்டும்.

ஓர் எல்லையைச் சுட்டிக் காட்டினால் புரியும். இப்போது, 'நான் பிறந்துவிட்டேன்' என்று சொல்லுகின்றேன். பிறந்துவிட்டேன் என்பது ஒரு காலம். பிறப்பது ஒரு காலம் என்றால் நான் வாழ்வது ஒரு காலம்; நான் மறைவதும் ஒரு காலம். இப்படித் தோன்றி நின்று, அழிதல் என்பதனைச் சுட்டிக் காட்டுவது சித்தாந்தம்

எந்த ஒரு பொருளும் தோன்றும்; நின்று நிலவும்; பின்னர் அழியும். இதனை நிகழ்காலம், எதிர்காலம் இறந்தகாலம் என்று வகுத்து அறுதியிட்டுச் சொன்னவர்கள் சைவ சித்தாந்தப் பெருமக்கள்தான். மற்றவர்கள், காலம் ஒன்றுதான் என்று சொல்லியிருக்கின்றார்கள். நிகழ்காலம் மட்டுமே உண்டு என்றார்கள். அவர்கள் கூற்று சரியானதன்று. 'நி' என்று சொல்லி முடிக்குமுன்னமே இறந்த காலமாகிவிடுகின்றது. அப்போது எதிரில் இருப்பதே நிகழ்காலமாகிறது. எது இறந்த காலம், எது நிகழ்காலம் என்று நம்மால் சொல்ல முடியாது. உடன் நிகழ்ச்சிகளாக இவை நடந்தேறிக் கொண்டிருக் கின்றன.

மேலும் ஓர் உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஒரு குழந்தை 50 ஆண்டு காலம் வாழ்நாளுடன் பிறக்குமானால், பிறந்த அன்றே அது ஒரு நாள் ஆயுள் போய்விட்டது. இறைவன் வகுத்துத் தந்த நாளிலே ஒரு நாள் போய்விட்டது. ஒரு நாள் மரணத்தை அக்குழந்தை சந்தித்து விட்டது. அது மட்டுமன்று. ஒவ்வொரு மணி நேரமும் அது மரணத்தைச் சந்தித்துக் கொண்டேயிருக்கின்றது. மரணத்திற்குரிய முதிர்ச்சியையும், தகுதியையும் நோக்கி அது போய்க் கொண்டேயிருக்கிறது. நாம் என்ன நினைத்துக் கொண்டிருக்கின்றோம் என்றால் குழந்தை வளர்ந்து கொண்டிருக்கிறான் என்றும், பையன் அறிவிலே வளர்ந்துவிட்டான் என்றும், ஆள் வளர்ந்து விட்டான் என்றும் சொல்லுகின்றோம்.

நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும்
வாள்அது உணர்வார்ப் பெறின்.

என்பதனை உணர்ந்தால்தான் தெரியுமே தவிர, வெறும் படிப்பினால் மட்டும் தெரிந்து கொள்ள முடியாது. குழந்தை பிறந்த அந்தத் தேதியிலிருந்து நாளும் நாளும் அது மரணத்தைத் தழுவிக் கொண்டே வருகின்றது. கடைசியாக இதைத் தாங்க முடியாமல் உயிரை விட்டுவிடுகின்றது. அவ்வளவுதான். தூக்குப் போட்டுக் கொள்கின்றான் ஒருவன். உடனேயா அவன் இறந்து விடுகின்றான்? சிறிது

நேரம் உதைத்துக் கொண்டு கிடக்கின்றான். அவன் எப்படிச் சில நேரம் உதைத்துக் கொண்டு கிடக்கின்றானோ அப்படியே பிறந்த குழந்தையும் சாகப்போகும் வரையிலும் உதைத்துக் கொண்டு கிடக்கினறது. அதுதான் ஆடுதல், பாடுதல், முதலானவற்றைச் செய்து கொண்டு இருத்தல். எனவே ஒரு எல்லையைக் குறிக்கவே காலம் இருக்கிறது; அறிவுரை சொல்லுகிறது. இதற்கு மேலும் புரியவில்லையென்றால், இயற்கையைப் பார். விளங்கிவிடும்.

காலை கிழக்கே எழுந்த கதிரவன் கிடுகிடு வென்று ஓடி மேற்கே மறைந்துவிடுகின்றான். இது கண்ணுக்கு முன்னே நடக்கின்ற நிகழ்ச்சி. இதைக் கண்டும் தேறவில்லையென்றால் என்னசெய்வது என்பார் திருமூலர்.

வீட்டில் ஒரு காளைக்கன்று வளர்கிறது. துள்ளி விளையாடுகிறது. வளர்ந்த பின் வண்டியில் பூட்டி வேலை வாங்குகின்றார்கள். அப்போது அதற்குத் தேவையான உணவைக் கொடுக்கின்றார்கள். நன்றாகக் கவனித்துக் கொள்கின்றார்கள். அதுவே மூத்த பிறகு சரியாகக் கூடக் கவனிப்பது இல்லை. இதைக் கண்டும் தேறார் அறிவிலா மாந்தர் என்பார் திருமூலர்.

ஒரு பிள்ளை பிறக்கின்றான். குழந்தையை நன்றாகச் செல்லம் கொடுத்து வளர்க்கின்றார்கள். அவன் வளர்ந்து, இவர்களுக்கு மூப்பு வந்த காலத்தில் சரியாகக் கவனிக்காமல் இருப்பான். அப்போது, 'ஏன் இவனைப் பெற்றோம்,' என்று வருந்துவார்கள், பெற்றோர். இவர்கள் வருந்துவதைக் கண்ட அவன் மனைவி, தன் கணவனை ஏன் திட்டுகின்றார்கள் என்று பரிந்து கொண்டு வருவாள்.

கணவன் மேல் உரிமை கொண்டாடுகின்ற மனைவி, அவனுடைய நலனைப் பேணுகின்றாள். அவன் வெளியில் போய் வீடு திரும்பும் வரை அவனுக்காகவே காத்துக் கொண்டிருக்கின்றாள். கணவனும் அப்படியே மனைவிக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றான். வயது

முதிர்ந்த பின் இருவரும் அலுத்துக் கொள்வார்கள். இப்போது அந்தக் கணவன் நினைத்துப் பார்க்கின்றான். "என் தாய்க்குக் குழந்தையாக இருந்தேன்; பின்பு என் மனைவிக்குக் கரும்பாக இருந்தேன்; காலம் கடக்கக் கடக்கக் காஞ்சிரங் காயாக மாறிவிட்டேன்; இதுதான் வாழ்க்கை போலிருக்கிறது' என்று.

இந்த உண்மைகளையெல்லாம் வாழ்க்கை முகமாகப் பார்த்துத் தெரிந்து கொள்; தெரிந்து கொண்ட நிலையாமை உடைய உலகிடையே வாழ்கின்றபோது நிலையான வாழ்க்கையைத் தேடு; இங்கே வாழ்ந்து கொண்டிருக்கின்றபோதே இன்னொரு வாழ்க்கை இருக்கின்றது அந்த வாழ்க்கையைத் தேடு. ஏன்? இப்போது வாழ்ந்து கொண்டிருக்கிறாயே அதுவன்று வாழ்க்கை. அது நிலைபேறில்லா வாழ்க்கை. நிலையான வாழ்க்கை வேறொன்று இருக்கின்றது. இந்த வீட்டில் வாழ்கின்ற வாழ்க்கை கொஞ்ச நாள் வாழ்கின்ற வாழ்க்கை. ஆனால் நிலையான வாழ்க்கை வாழ்வதற்கு வேறொரு வீடு இருக்கின்றது. அதனை இயற்கையைப் பார்த்து அறிந்து கொள்ள வேண்டும். அதைப் பார்த்து உன் இயக்கத்தை மாற்றிக் கொள் எனக் காலம் புத்தி சொல்லுகின்றது.

காலம் என்பது ஒரு எல்லையைக் காட்டகின்றது. பிறவியில் எல்லையையும், வாழ்வு இவ்வளவுதான் என்ற எல்லையையும், உலகம் இவ்வளவுதான் என்ற எல்லையையும், மனைவியின் உறவு இவ்வளவுதான். மக்களின் உதவி இவ்வளவுதான் என்று அவரவர் எல்லையைச் சுட்டிக் காட்டுவது. இந்த எல்லைகளையெல்லம் காட்டிய காலம், மீளாத எல்லை ஒன்று உண்டு என்றும், அது பிணக்கில்லாத எல்லை என்றும். சுட்டும் எல்லையில்லாதன அவன் திருவடிகள். அதுதான் கடைசி எல்லை. மற்றது எல்லாம் ஓடுகின்ற எல்லைகள். வாழ்க்கையில் ஒரே இடத்தில் இருந்து கொண்டிருக்க முடியாது. எங்கேயாவது ஓடினால்தான் வாழ முடிகின்றது.

பந்தாடுகின்றவனுக்கும் ஒரு எல்லை இருக்கின்றது. எல்லைக்கோட்டுக்குள்அவன்விளையாடிக்கொண்டிருந்தாலும், எதைத் தொட வேண்டுமோ, அந்த எல்லையைத் தொட்டுவிட வேண்டும். அதுதான்கடைசி எல்லை.

காலம் நமக்குப் பல நல்ல பாடங்களைச் சொல்லிக் கொடுக்கின்றது. அவற்றை நாம் உற்றுக் கவனித்து, அவற்றின் படிப்பினைகளை உணர்ந்துகொண்டு, வாழ்க்கையில் முன்னேற வேண்டும். ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு வகைக் கனி, ஒவ்வொரு வகை மலர், ஒவ்வொரு வகையான மாற்றம் ஏற்படுகின்றது. பருவ நிலைகளில் – மழை மாற்றம், வெயில் மாற்றம், வெயிலில் நிலை மாற்றம், இப்படிப் பல மாற்றங்களை நிகழ்த்திக் காட்டுகின்றது. இப்படி மாற்றம் அடைகின்ற உலகத்திலே மாறாத எல்லையைக் காட்டிக் கொண்டிருப்பது காலம். அந்த எல்லையைத் தேடுமாறு நம்மைப் பணிக்கின்றார் திருவள்ளுவர்.

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

இவற்றையெல்லாம் கற்றவர்கள் மற்றீண்டு வாரா நெறியினைத் தலைப்படுவர். காலம் சொல்லுகின்ற பாடம் 'மீண்டும் பிறவா நிலையைச் சென்று அடைதலே.'.

ஏன் மீண்டு வந்து பிறந்தால் என்ன? பிறவியை மீண்டும் மீண்டும் கேட்டுப் பெறுங்கள். தவறில்லை. வேண்டாமென்று சொல்லவில்லை. இளமையிருக்கும் போது இன்னும் கொஞ்சம் வயதிருந்தால் நன்றாக இருக்கும் என்றும் முதுமை வந்தபோது இன்னும் என் இருக்கிறோம், போய்விட்டால் பரவாயில்லை என்றும் எண்ணுவான். ஊனப் பிறவிகள்தாம் மீண்டும் பிறவி வேண்டும் என்பார்கள்.

ஞானிகள் அப்படிச் சொல்ல மாட்டார்கள். "வாழ்பொருளாக வந்த குருவே, கோனாகி என்னை ஆண்டான், குருவாக வந்தான், தலைவனாக நின்றுஆண்டான்; என் ஊனப் பிறவியை அறுத்தான் ; ஞானப் பிறவியாக மாற்றினான்; நான் இங்கிருந்தாலும் ஒன்றுதான் அங்கிருந்தாலும் ஒன்றுதான் என்ற நிலைக்கு என்னை உயர்த்திவிட்டான்; இருப்பினும் எனக்கிந்த உடம்பு வேண்டாம், ஊன் உடம்பினை வேண்டேன்' என்பார் பட்டினத்தார்.

ஏன் வேண்டாமேன்கின்றார்? இந்த உலகத்தைப் பார்க்கப் பயமாக இருக்கின்றது. இந்தப் பயங்கரமான

உலகத்திலேயா நாம் வாழ்ந்தோம் என்று இவ்வுலகத்தை விட்டு அகன்றபின்புதான் தெரியும். ஆனால் இவ்வுலகத்தில் மூழ்கிப் கிடக்கின்ற வரையில் இந்த உண்மை தெரியாது. இதன் அவல நிலை தெரியாது. அதைச் சாதாரணமாகக் கருதுவோம். ஆனால் அதிலிருந்து விடுபட்ட பின்புதான் இதன் அவல நிலை தெரியும். தெரிந்தபின் இத்தகுவாழ்க்கையா நாம் வாழ்ந்தோம்! என்று எண்ணி எண்ணி மருகுவோம். எனவே தான் ஞானிகள் இந்த உலகத்தைக் கண்டு வெருவி ஓடினார்கள். பிறப்பு அறுத்தல் ''உற்றார்க்கு உடம்பு மிகை'' என்று எண்ணுவார்கள். ''காய வாழ்க்கை எனக்கு வேண்டா'' என்பார்கள். ''பட்டது போதும், இனிப்பட முடியாதரசே'' என்பார் வள்ளல் பெருமான். அவருக்குஎல்லாம் கிடைத்திருந்தும் இப்படிச் சொல்கிறார். ''கோழை உலகு உயிர்த்துயரம் இனிப் பொறுக்கமாட்டேன்'' என்பார் ஏன்?

சொல்லப்போவது நல்ல கருத்தாக இருந்தாலும், அதைச் சொல்ல வேண்டிய நேரத்தில் சொல்ல வேண்டியவர்களிடத்தில் சொல்லப்போகும் போது துணிவில்லாமல் கோழையைப்போல் நடந்து கொள்வார்கள் இந்த உலகத்தவர். ஏன் இப்படித் துடிக்க வேண்டும்? ''இந்தக் காலத்தை வைத்து இவ்வளவு தூரம் கணித்துவிட்டாயே அப்பா, நீ இந்தக் காலத்தையே மையமாக வைத்துக் கொண்டு வாழ்; வாழத் தொடங்கு'' என்று வழி காட்டியது காலம். எனவே, காலம் எல்லையைக் காட்டுவது. இதனை நம்மை உணருமாறு சொல்லுகின்றார். இந்த உரையிலே அதெல்லாம் கிடையாது. இதை வைத்துக் கொண்டு எதையும் உணர முடியாது. இவையெல்லாம் விளங்க வேண்டுமானால் நம்முடைய சிந்தனைகள் இயற்கையை ஊடுருவி நோக்கி உறவு கொள்ளும் போதுதான் உண்மைகள் விளங்கும். அப்படி விளங்கியதால், விளங்கிக் கொண்டதால் நமக்கு விளக்கவந்ததால் இதற்கு உண்மை விளக்கம் என்று பெயர் வைத்தார்.

காலம் என்ற எல்லையினாலே நம் எல்லையை அறிந்து ஒரு வல்லமையைப் பெற்று, நமக்குக்

கிடைத்துள்ள காலத்தைப் பயன்படுத்திக் கொண்டு, அதற்குள் நாம் செய்ய வேண்டியதைச் செய்து முடித்துவிட வேண்டும். இதைத் தெரிந்தவர்கள் காலத்தையே தன் வலிமையாக்கிக் கொள்வார்கள்.

## 2. நியதி

நியதி என்றால் முறைமை என்று பொருள். இது பலம் தருவது; வல்லமையைத் தருவது. இயற்கை ஒரு நியதியில் இயங்கிக் கொண்டிருக்கின்றது. நான் சின்னவனாக இருந்தபோது சூரியன் காலை 6 மணிக்கு உதித்தது; இப்போதெல்லாம் பத்து மணிக்குத்தான் உதிக்கின்றது என்று யாராவது சொல்வார்களா? அன்று எப்படி உதித்ததோ அப்படித் தான இன்றைக்கும் உதிக்கின்றது. 16 நாளைக்கு ஒரு முறைதான் நிறைநிலா வரும்; 14 நாளைக்கு ஒரு முறை அமாவாசை வரும் என்று சொல்ல முடியுமா? இயற்கையின் நியதிகள் மாறுவதில்லை. அதைப் பார்த்து நீயும் ஒரு நியதியில் நடந்து கொள், சொன்ன சொல்லைக் காப்பாற்ற வேண்டும்; சொன்னதுபோல் நடந்து கொள்ள வேண்டும். என்று மாணவனைப் பார்த்து அறிவுறுத்துகின்றார். அப்படி நடக்க வில்லையென்றால் மனதில் நிம்மதியிருக்காது. இத்தத்துவம், தான் வாழ்வதோடு உலகையும் வாழ்வித்துக் கொண்டிருக்கின்றது.

நியதி என்பது புதுமை. மாதங்கள் 12. அவற்றை ஒவ்வொரு காலம் என்று கொள்ள வேண்டும். ஒவ்வொரு நேரமும் ஒரு காலமாக அமையும். ஒவ்வொரு நேரமும் நமக்குப் புதுமையை அறிவித்துக் கொண்டு இருப்பதே நியதி.

ஒரு மலர் மலர்கின்றது; மலர்ந்து முதிர்கின்றது; பின்பு உதிர்கின்றது; உதிர்ந்த பின்பு அதில் ஒரு சின்னப் பிஞ்சு தெரிகின்றது. இது ஒரு புதுமைதானே.

இது ஆவணி மாதம். இந்த மாதத்தில் சில மலர்கள் மலர்கின்றன. அடுத்த ஆண்டும் இந்தக் குறிப்பிட்ட மாதம் வருகின்ற போது இதே மலர்கள் மலர்கின்றன. ஏன் எல்லாக் காலங்களிலும் எல்லா மலர்களும் வருவதில்லை?

இவையெல்லாம் குறித்த காலத்தில் மட்டுமே மலர்கின்றனவே ஏன்? குறிப்பிட்ட மலர்கள், குறிப்பிட்ட காலத்தில் மட்டுமே மலர்கின்றபோது அம்மலர்கள் ஒரு குறிப்பிட்ட வல்லமையைப் பெறுகின்றன. இவையாவும் ஒரு நியதியில் ஒழுங்காக நடைபெற்று வருகின்றன. இவை யாவும் ஒரு புதுமை.

தமிழ் ஆண்டுகளிலே 60 ஆண்டுகள் என ஒரு சுற்றுக் கணக்கு வைத்து இருக்கின்றனர். அவற்றில் ஒவ்வொரு ஆண்டுக்கும் இன்னின்ன மாதிரி நடக்கும் என்று சொல்லி வைத்தும் இருக்கின்றனர். எப்படி இதைச் சொல்கின்றார்கள்? ரக்தாட்சி ஆண்டு இப்படி இருக்கும் என்று எழுதுகின்றீர்களே, எப்படி எழுதுகின்றீர்கள் என்று கேட்டால், போன ரக்தாட்சி ஆண்டும் இப்படித்தான் நடந்தது என்பார்கள். இப்படிப் பல ரக்தாட்சி ஆண்டுகள் வந்துவிட்டன. அவை எல்லாவற்றிலும் இக்குறிப்பிட்ட நிகழ்ச்சி களே நடந்து கொண்டிருக்கின்றன.

'சுற்றி வந்தும் சுங்கத் துறையில் பட்டாற்போல' என்பார்கள். நாம் எங்கே சுற்றி வந்தாலும் குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட மாதிரிதான் நடக்கும். இதற்கொரு உதாரணத்தைப்பார்க்கலாம். மார்கழி மாதத்தில் குளிர் வராமல் இருக்குமா? பனி வராமல் இருக்குமா? அளவில் வேண்டுமானால் கூடுதல் குறைவு இருக்குமே தவிர, பனியும், குளிரும் இருந்தே தீரும். அதனால் வருகின்ற காய்ச்சலும், சளியும், பிறவும் வந்தே தீரும். இதில் மாற்றங்கள் ஏதும் நேரா.

அப்படியே இளமைக் காலத்தில் ஒரு தன்மை, நடு வயதுக் காலத்தில் ஒரு தன்மை, முதுமைக் காலத்தில் ஒரு தன்மை. மேலும் ஆண்டுக்கு ஆண்டு ஒவ்வொரு தன்மை என மாற்றங்கள் நியதியாக நடந்து கொண்டேயிருக்கும். உடல்நிலை மாறிக் கொண்டேயிருக்கும். உடல் நிலை மாற மாற உயிரின் நிலையிலும் மாறுதல் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். எனவே இந்த நியதியை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்.

காற்று காலங்க்ள்தோறும் மாறி மாறி வீசுவதும், காலங்கள் தோறும் அறுவடைகள் நிகழ்வதும்,

காலங்கள்தோறும் பயிர்கள் விளைவதும் இப்படிப் பல செயல்கள் நடைபெறுகின்றன. இவற்றில் மாற்றம் நிகழ்ந்தால், அல்லது நியதியாக நடக்கவில்லையென்றால் உயிரினங்கள் சரியாக வாழ முடியுமா? எந்தத் தொழிலாவது ஒழுங்காக நடைபெறுமா? இருக்கவே இருக்காது. அந்தந்தக் காலங்களில்தான் அந்தந்த மரங்கள் தழைக்கும். அந்தந்தக் காய்கள் கிடைக்கும். இப்போது அறிவியலால் எல்லாக் காலங்களிலும் காய்கள், கனிகள் கிடைக்கச் செய்கின்றோம் என்கின்றார்கள். இயற்கையாக கிடைக்கின்ற காலங்களில் விளை கின்ற காய்கள், கனிகளைப் போன்று செயற்கையாகச் செய்யப்படுகின்ற விளைவில் விளைகின்ற காய், கனிகளின் சுவை இருக்காது. அப்படிக் காலமல்லாத காலத்தில் விளைகின்ற காய்களுக்குக் 'கார்காய்' என்று பெயர் சொல்லுவார்கள்.

சில பொருள்கள் ஒரே மாதிரியாக இருக்கிறதே என்றோர் ஐயம் எழுகின்றது இப்போது கிடைக்கின்ற தக்காளிகள் எல்லாக் காலங்களிலும் கிடைக்கி ன்றனவே; அவை யாவும் சுவையாகத்தானே இருக்கின்றன என்றால் அப்படியிருக்காது. தக்காளி களில் பல வகை உண்டு. ஒன்று சின்னக் கொடியில் காய்க்கின்றது. ஒன்று செடியில் காய்க்கின்றது; இன்னொன்று ஆள் உயர மரத்திலே காய்க்கின்றது. ஒன்று கோவைக்காய்போல் இருக்கின்றது; ஒன்று பாகற்காய் போல் இருக்கின்றது. ஒன்று ஆப்பிள்போல் இருக்கின்றது. ஒன்று சின்னதாக இருக்கின்றது; ஒன்றில் வித்து அதிகமாக இருக்கின்றது; ஒன்றில் சதைப்பற்று மிகுந்து காணப்படுகின்றது; ஒன்றில் சாறு அதிகமாக இருக்கின்றது; ஒன்றில் சாறே இல்லாமல் இருக்கின்றது; சுவையும் அப்படியே வேறுபட்டுக் காணப்படுகின்றது. எல்லாக் காலங்களிலும் பொருள்களை விளைவித்துவிட முடியும் என்றாலும் அவை சுவையால், பயனால்வேறுபட்டே காணப்படும். ஆகவே எல்லாமே ஒரு நியதியாக நடந்து கொண்டிருக்கின்றது.

இந்த நியதிகள் சரியில்லையென்று சொன்னால் இயற்கை இப்படி இருக்காது. 15 நாளைக்கு ஒரு முறைதான் சந்திரனும், சூரியனும் ஒரு கோட்டில் வந்து சந்திக்கின்றன என்றால் இந்த உலகம் இயற்கையாக இருக்கின்றதென்று

அர்த்தம். 13 நாளில் மாறுகின்றது என்று சொன்னால் இயற்கை மாறபட்டது என்று பொருள். பின்பு எதுவும் அதனதன் நிலையில் இருக்காது. அனைத்தும் விழுந்துவிடும். இந்தக் கிரகங்கள் ஒன்றோடொன்று தட்டுப்பட்டு, ஒரு பானையோடு மற்றொரு பானை மோதுவதுபோல்மோதிக் கொண்டு கீழே விழுந்துவிடும். அப்படி ஒன்றோடொன்று மோதாமல் இயக்கம் முறையாக நடந்து கொண்டிருக்கின்றது. ஒவ்வொரு கிரகமும், ஒவ்வொரு அண்டமும் இன்ன தூரத்தில் இருந்துதான் இயங்க வேண்டுமென்று ஒரு கணக்கு இருக்கின்றது. அக்கணக்கு நமக்கு இன்னதென்று தெரியவில்லை. விஞ்ஞானிகள் இருக்கின்ற கணக்கைச் சொல்கின்றார்கள். இந்தக் கணக்கை அவன் எப்படிப் போட்டுவிட்டான் என்று அந்த நியதியைப் புரிந்து கொள்ளுங்கள்.

இந்தக் காலமும் அவனே. இந்த நியதியும அவனே. காலத்தைக் கடவுள் என்று சொல்லலாமா? ''காலமே உன்னை ஓத நீ வந்து காட்டினாய் கழுக்குன்றிலே'' என்பார் மணிவாசகர். இறைவன்தான் காலம்; அவனே நியதி.

இந்த நியதியைப் பார்த்துக் கொண்டு நாமும் ஒரு முறையாக இயங்க வேண்டும். வாழ்க்கையை இப்படித்தான் வாழ வேண்டும் என்று ஒரு நியதியை வகுத்துக் கொண்டு வாழ வேண்டும். அந்த நியதி எப்படி இருக்க வேண்டும் என்றால் சான்றோர்களால் வகுக்கப்பட்ட, பாராட்டத் தக்க முறையாக இருத்தல் வேண்டும். இயல்பானமுறையாக இருக்க வேண்டும்.

பெரியவர் ஒருவர். ஒரு உணவு முறையைக் கையாண்டார். தேங்காய்ப் பாலில் சோறு வேகவைத்துச் சாப்பிடுவார். அனைத்துக் காய்கறிகளையு ம் நெய்யிலேதான் வேகவைத்துச் சாப்பிடுவார். பாதாம் பருப்பை நன்கு அரைத்துப் பாலில் கலந்து உண்பார். இப்படியே மூன்று வேளையும் உணவு உண்பார். ஆனால் காலையில் எழுந்ததும் 'எனிமா' எடுத்துக் கொள்வார். ஏன்? அப்போதுதான் அவருக்கு மலம் போகும்.

இல்லாவிட்டால் மலம் போகாது. இப்படியே நாளும் செய்து கொண்டிருப்பார். அதன் விளைவு என்னவாயிற்று தெரியுமா? கடைசிக் காலத்தில், உயிர்பிரிகின்ற நேரம் – அவருக்கு மலமே போகவில்லை. வேறொருவரின் உதவி கொண்டு அதைக் கட்டாயமாக வெளியேற்ற வேண்டிய நிலைமை உண்டாகி விட்டது. இப்படிப்பட்ட உணவுகள் இயற்கைக்கு ஒவ்வாதன.

தேங்காய்ப்பாலிலா சோறு வேகவைப்பார்கள்? அரைப்படிப் பாலை ஆழாக்குப்பாலாக ஆக்கியா சாப்பிடுவது? ஒவ்வொரு காய் கறியையும் நெய்யில் வதக்கியும், வேகவைத்துமா சாப்பிடுவது? இதில் பாதாம் பருப்பு வேறு. இதெல்லாம் செயற்கை. காலையில் எழுந்ததும், பழைய சாதம், நீராகாரம் இவற்றை உண்டு கொண்டு வந்தால் இயற்கை உணவு. இதனால் உடலுக்குக் கெடுதியே வராது. அதையும் அளவில் நிறுத்தி ' உண்ண வேண்டும். இயற்கைக்கு மாறாக உணவு உட்கொண்டால் பின்னால் அது பெரிதும் இடர்ப்பாட்டை உண்டாக்கிவிடும். இப்படியே அறிவிலும் உண்டு. இப்படியிருந்தால் என்ன என்று கேட்டால் அந்த அறிவினால் நமக்கு ஆபத்து உண்டாகிவிடும். நமக்கு மட்டுமல்ல. உலகத்துக்கே ஆபத்து. நமக்கும் பிறருக்கும் தீங்கில்லாதது இயற்கை, நியதி.

நியதி, நீதி இரண்டுமே ஒன்றுதான். ஒரு சின்ன வித்தியாசம். நியதி என்பது பேரியக்கம். நீதி என்பது ஒரு இடத்தில் நிலவுகின்ற தன்மை.

இயற்கை நியதிகளைப் பார்த்து நாமும் ஒழுங்காக இயங்க வேண்டும். காலை எழுந்ததும் பல்லைத் துலக்கி, வாய் கொப்பளித்து, நெற்றியில் நீறு இட்டுக்கொண்டு, பிறகு ஏதேனும் நீர் ஆகாரமாக உண்ண வேண்டும். ஆனால் இப்போது யாரும் அதைக் கடைப்பிடிப்பதில்லை. எழுந்தவுடனே பல் துலக்காமலும், வாய் கொப்பளிக்காமலும் காபியைக் குடிக்கின்றார்கள். ஏன் இப்படிச் செய்கிறீர்கள், வாயில் இருக்கின்ற ஊத்தை அப்படியே உள்ளே போகுமே, அந்த ஊத்தையில்

கிருமிகள் இருக்குமே என்றால், சூடாகச் சாப்பிட்டால் அக்கிருமிகள் இறந்துவிடும் என்று சாதுரியமாகப் பதில் சொல்லி விடுகின்றார்கள். அதில் ஒரு நியாயம் இருப்பதுபோல் தோன்றுகின்றது. ஆனால் உடலுக்கு எவ்வளவு கெடுதி பயக்கும் என்பதை அவர்கள் உணர்வதில்லை. எதையும் சுத்தமாகச் சாப்பிடு என்று பெரியவர்கள் நியதியை வகுத்து வைத்திருக்கிறார்கள். அதனையும் இயற்கையைப் பார்த்து வகுத்துக் கொடுத்தார்கள்.

நாம் மூச்சு விடுகின்றோம். அதுவும் சில நேரங்களில் செயற்கையாக இருக்கும்; இயற்கையாக இருக்காது. இன்றைக்குப் புதன் கிழமை. இன்றைக்கு இந்த மூச்சு எப்படிப்போக வேண்டுமென்று யாருக்காவது தெரியுமா. தெரியாது. வலப்பக்கமாகப் போக வேண்டுமா; இடப்பக்க மாகப் போக வேண்டுமா? ஒவ்வொரு கிழமையிலும் மூச்சுக் காற்று எத்தனை நாழிகைக்கு எந்தப் பக்கமாகப் போக வேண்டுமென்ற நியதி இருக்கின்றது அப்படி போய்க் கொண்டிருந்தால் உங்களுக்கு இயற்கையோடு இயைந்த வாழ்க்கையாக இருக்கும். இப்படிப் போவது சில பேருக்கு இயற்கையாக அமைந்திருக்கும். சிலருக்கு அப்படி இயற்றையாக அமைந்திருக்காது. ஏன்? அவர்களுடைய பழக்க வழக்கங்களினால் அது மாறுபட்டு அமைந்திருக்கும். அது செயற்கையாக அமைந்து விட்டிருக்கும். வலப்பக்கம் போக வேண்டிய நாட்களில் இடப்பக்கமாக மூச்சுப் போய்க்கொண்டி ருக்கும். அப்போது நோய் வந்துவிடும். பெரும் பகுதியும் நமக்கெல்லாம் நோய் ஏன் வருகின்றதென்றால் இயற்கையின் நியதியை, பழக்கத்தை நாம் தெரிந்து கொள்ளாமலே ஒழுகுவதால்தான் நடைபெறுகின்றது.

மூச்சு ஒவ்வொரு நாளும் எந்தப் பக்கத்தில் நடைபெற வேண்டும் என்ற நியதி இருக்கிறது. இதைப் பற்றி மருத்துவர்கள் ஏதேனும் சொல்லியிருக்கின்றார்களா? அப்படிச் சொல்லியிருப்பதாகத் தெரியவில்லையே என்று கேட்பாருக்கு ஒரு செய்தி. ஆங்கில மருத்துவர்கள்

சொல்லவில்லை என்றாலும் சித்த மருத்துவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அப்படி அவர்களும் சொல்லவில்லையென்றால், இந்த நோயாளி நாம் சொல்வதைக் கேட்க வில்லையென்று சொல்லாமல் விட்டுவிட்டார்கள் என்று பொருள்.

**ஞாயிறு, செவ்வாய், வியாழன், சனிக்கிழமைகளில் வலப்பக்கமாகவும், திங்கள், புதன், வெள்ளி ஆகிய நாட்களில் இடப்பக்க மாகவும் மூச்சுக் காற்றுப் போகவேண்டும்.** இப்படி ஒரு குறிப்பிட்ட நாளில் குறிப்பிட்ட பக்கமாக மூச்சுக்காற்றுப் போவதில் வாழ்க்கையின் இரகசியமே அடங்கியிருக்கின்றது. உலகியல் வாழ்க்கை இரகசியம் அடங்கியிருக்கின்றது.

மூச்சு –சுழி மாறிப் போனாலும் போச்சு. என்பார்கள். இதனைச் சரஓட்டம் என்பார் திருமூலர். போக வேண்டிய பாதையை விட்டுவிட்டு இடையிலேயே மறித்துத் திரும்புதலுக்கு சுழி வாங்குதல் என்று பெயர்.

வலப்பக்கமாக ஒரு ஆண்மகனுக்கு மூச்சுப் போகின்றபோது கருத்தரித்தால் அது ஆண் குழந்தையாக இருக்கும். இடப்பக்கமாகக் காற்றுப் போய்க் கொண்டு இருக்கும்போது கருத்தரித்தால் அத பெண் குழந்தையாக இருக்கும். இரண்டு பக்கமும் மூச்சுக் காற்றுப் போய்க் கொண்டிருக்கும் போது கருத்தரித்தால் அது அலியாகப் பிறக்கும். இது ஆண்கள் தெரிந்து கொள்ள வேண்டிய குறிப்பு. கருத்தரித்தலுக்குரிய காலங்கள் இருக்கின்றனவே அக்காலங்களில் இருவருடைய நீர்ப் பைகளில் நீர்மிகுந்திருந்தால் பிறக்கும் குழந்தை மூங்கையாக இருக்கும் அக்குழந்தை பேசுகின்ற போது மூக்கால் தான்பேசுவான். 'சலம் மிகில் மூங்கையாம், மலம் மிகில் கண் இருக்காது. குழந்தைக்கு ஏன் கண் தெரியவில்லையென்றால் அதன் காரணத்தை அறிவார் யாருமில்லை. ஏதோ தெரியவில்லை என்பார்கள். மலம் மிகுந்திருந்தால் குருடாம். சலம் மிகுந்திருந்தால் மூங்கையாம். இவையெல்லாம் கலைகள் தான். அதனால்தான் வித்தியா தத்துவங்களில் சொன்னார்கள். இவற்றை எல்லாம் ஆசாரியனிடத்தில் கேட்டுத்தான்

தெரிந்து கொள்ள வேண்டும். அதனால் முன் காலத்தில் சில பழக்கங்கள் இருந்தன. இந்த இயற்கை மாறுவதற்கு உணவும் ஒரு காரணம். இப்படி மூச்சு ஒரு பக்கமாகப் போகின்ற போது கலந்து கொள்ள வேண்டுமென்று எண்ணினால் வலப்பக்கமாகப் படுத்தால் இடப்பக்கமாகச் சர ஓட்டம் வந்துவிடும்; இடப்பக்கமாகத் திரும்பிப் படுத்தால் வலுப்பக்கமாகச் சர ஓட்டம் மாறிவிடும். இப்படி நினைத்த அளவிலே மாற்றிக் கொள்ளும் வகையில் நம் பழக்கத்தை மாற்றிக் கொள்ள வேண்டும். பழக்கத்தால் இவையெல்லாம் இயற்கையாக கை வந்துவிடும். தனியாக இதற்கென்று யோகமெல்லாம் பழக வேண்டிய அவசியமில்லை. இயற்கையாகப் பழகினால் போதுமானது. ஆனால் தாறுமாறாகப் பழக விட்டுவிட்டால் பின்னால் வாழ்க்கையும் தாறுமாறாகத்தான் போய்க் கொண்டிருக்கும். நிறுத்த முடியாது. இது நியதி.

நியதியைத் தெரிந்து கொள்வதால் என்ன நன்மை? நியதியினால் பெற வேண்டியது புதுமை. புதுமை என்றால்ஞானம். ஒரு தெளிவான அறிவைப் பெறுதல் வேண்டும். காலத்தால்பெற வேண்டியது வலிமை. நியதியால் பெற வேண்டியது புதுமை.

**3. கலை:**

அடுத்த தத்துவம் கலை

கலை—கலைவது; கலைந்துவிடுதல்; மனதை எது எது கலைக்கின்றதோ அதற்கெல்லாம் கலை என்று பெயர். இயற்கையில் காணப்படுவதெல்லாம் கலையே. இயற்கைக் காட்சிகள் மலரும், மகிழ்ச்சி தரும்; மறையும். இப்போது கலைந்து போய்விட்டன அல்லவா? தோன்றிய பொருள்களின் நிலைகள் அனைத்தும் மாறிக் கொண்டேயிருக்கும். இதற்குக் கலை என்றுபெயர். அதுமட்டுமல்ல. முதலில் கவரும்; பிறகு விட்டுவிடும். ஒன்று அதுவே விட்டுவிடும்; அல்லது நாமாகிலும் விட்டுவிடுவோம்.

தாய்மார்கள் தெருவில்போய்க் கொண்டிருக்கின்றார்கள். மலர் மணம் வீசிக் கொண்டிருக்கிறது. அதைப் பார்த்தவுடன் வாங்கிக் கொள்ள வேண்டுமென்ற எண்ணம் வரும். வாங்கிச் சூடிக் கொள்கின்றார்கள். அந்த மலரினால், அதன் மணத்தினால் ஒருவித மகிழ்ச்சி தோனறும். மலர் எவ்வளவு நேரம் மலர்ச்சியாக இருக்கும்? கொஞ்ச நேரம் வரையிலும் தான். பிறகு அது வாடிவிடும். பினனர் குப்பைத் தொட்டியில் கொண்டுபோய்ப் போட்டு விடுகின்றார்கள். இப்படித்தான் பயன்படுகின்ற வரையிலும் எதையும் பயன் படுத்துகின்றார்கள்; பிறகு ஒதுக்கிவிடுகின்றார்கள். மனித வாழ்க்கையிலும் இப்படித்தான். இளமையாக இருக்கின்ற வரையிலும் பயன்படுகின்றவரையிலும் பயன்படுத்திக் கொண்டுவிட்டு, நம்மால் பயன் கிடையாது என்று தெரிந்ததும் ஒதுக்கிவிட்டு விடுகின்றார்கள். அப்படியே அந்த மலரை யாரும் பயன்படுத்த வில்லையென்றாலும் அதுவே உதிர்ந்துவிடும். வாழ்க்கை நிலையும் இப்படித் தான் இருவர் கூடுகின்றார்கள்; மகிழ்ந்திருந்து இல்லறம் நடத்துகின்றார்கள். பிரிகின்றார்கள். இப்படி நடக்கும் குடும்பமும் ஒரு கலைதான். சுவையாகச் சமைத்தோம்; உண்டோம், அது கலைந்துவிட்டது. மறுநாள், மீண்டும் சமைக்கின்றோம்; சாப்பிடுகின்றோம். மிகவும் விலை உயர்ந்த பொருளை வாங்கிச் சமைத்தோமே என்று அப்படியே பத்திரமாகவா வைத்திருப்போம்? இல்லை. அதனால்தான் கருதும்.கலை என்றார்.

இந்தக் கலைகளைப் பற்றி இங்கே சொல்லப்படவில்லை. ஞானக்கலைகளை நீ பெற வேண்டியவன். இந்தக் கலைகள் யாவும் கலைகள்தாம். இவற்றால் அறிவு வரும். ஆனால்இவற்றினால் வரும் அறிவைக் கொண்ட ஞானக் கலையை நீ பெறுக. ஞானக்கலை என்பது வேறாக இருக்கிறது. புகழேந்திப் புலவர், நளவெண்பாவில் ஒரு கருத்தைச் சொல்வார்.

"........

சீதக் களபச் செழுஞ்சேற்றால் – வீதிவாய்
மாரிக் கரி வழுக்கும் மாவிந்தம் எபிறு உளது ஓர்
ஞாபிக் கலைவாழ் நகர்"

என்று நளன் வாழ்ந்த நகரைச் சிறப்பித்துச் சொல்லுவார். அந்நாட்டில் ஞானக்கலை மிகுந்து காணப்படுகின்றதாம். சந்தனம் முதலான மணப்பொருள்களை அந்நாட்டு மக்கள் வாரி வாரிப் பூசிக் கொள்வார்களாம். அவை காய்ந்து உதிர்ந்து தெருவில் சிதறிச் சேறாகிக் கிடக்குமாம். அத்தெருவில் வந்த யானை ஒன்று சறுக்கி விழுந்துவிட்டதாம். அப்படிப்பட்ட "மாவிந்தம் என்னும் ஞானக்கலைவாழ் நகர்" என்று அந்நகரத் தின் செழுமையையும், ஞானத்தையும் கொண்ட நகரமாக அது விளங்கிற்றாம்.

ஞானம் எங்கே வளரும்? **எங்கே நிறைவு இருக்கின்றதோ அங்கே ஞானம் வளரும்.** நிறைவு இல்லாவிட்டால் ஞானம் வளராது. நிறைவு என்பது மன நிறைவு. அந்த நிறைவு செல்வ வளத்தாலும் வரலாம். செல்வம் இல்லாவிட்டாலும் வரலாம். செல்வம் இருந்தால் மேலும் மேலும் செல்வத்தையே தேடி மனம் அலைந்தாலும் அலைந்து கொண்டிருக்கும். ஆகவே செல்வம் இருக்கின்றதோ இல்லையோ, மன நிறைவு இருக்க வேண்டும். மன நிறைவு இருந்தால், மனம் நிறைந்து இருந்தால்ஞானம் தானாக வரும். அதனால் கருதும் கலை– அதாவது ஞானக் கலை என்றார்.

## 4. வித்தை:

அடுத்தது வித்தை என்னும் தத்துவம்.

பிறரால் செய்ய முடியாத செயல்களை இயற்கை செய்து கொண்டு இருக்கின்றது. "என்னங்க வித்தை காட்டுகிறீர்கள்?" என்பார்கள். மண்ணில் ஒரு வித்தைப் போடுகின்றோம். அது முளைத்து, மரமாகிப்பல்வேறு நலன்களைச் செய்து கொண்டிருக்கின்றது. இது ஒரு பெரிய வித்தை தானே. இந்த நலன்கள் யாவும் இந்த வித்தில் அடங்கியிருக்கின்றது அல்லவா? அப்படி 'நீயும் பிறருக்கு உபகாரமாக இரு' என்று மாணவனுக்கு உபதேசிக்கின்றார். எல்லா நலங்களும் அடங்கிய தத்துவம் வித்தைத் தத்துவம்.

வித்தை என்றாலே ஞானம். ஞானம் என்றாலும், தூய அறிவு என்றாலும், நடுநிலை என்றாலும் ஒன்றுதான். நடுநிலையில் இல்லார்க்கு ஞானம் இருக்காது. இரண்டு குழந்தைகள் விளையாடிக் கொண்டிருக்கும் போது அடித்துக் கொள்வார்கள். அப்போது அங்கு வருகின்ற தாய்மார்கள், தங்கள் குழந்தை எந்தத் தப்பும் செய்யவில்லை என்றும், அடுத்த வீட்டுக் குழந்தைதான் தவறு செய்திருப்பான் என்றும் சொல்வார்கள்; இகழ்வார்கள். காரணம் நடுவின்மை. நடுநிலை இருக்குமானால், குழந்தைகள் தவறு செய்து இருக்கக் கூடும் என்றும், ஒன்றை ஒன்று அடித்துக் கொள்ளும் இயல்புடையன என்றும் புரிந்து கொண்டு, நடுவாக இருந்து இரண்டுபேரையும் விலக்கிவிட்டுப் போவார்கள். இப்படியே தானும், தன்னைச் சார்ந்தவர்களும் எந்தத் தவறும் செய்யாதது போலவும், பிறர்தாம் தவறு செய்பவர்கள் என்றும் நடுவு நிலையில் இல்லாதவர்கள்; பேசுவார்கள், எண்ணுவார்கள். இத்தகையோர்க்கு ஞானம் வருவதில்லை. நடுவு நின்றார்க்கே ஞானம் வரும். 'நடுவு நின்றார்க்கன்றி ஞானமும் இல்லை' என்பது திருமூலரின் திருவாய்மொழி. அதுதான் வித்தை.

வித்தை என்பது வெறும் ஏட்டுக்கல்வி மட்டுமன்று. வித்தை தெரிந்தவர்கள் என்றால் அவர்கள் பல நிலைகளைப் புரிந்தவர்கள் என்று பொருள். எனவே தத்துவங்களைச் சாதாரணமாகச் சொல்லியிருக்கின்றார்கள் என்று எண்ணக்கூடாது.

**5. ஏல அராகம்:**

அராகம் என்பதனை 'ஏல அராகம்' என்று சொல்லியிருக்கிறார். மணம் மிக்க அராகம் என்றும் சொல்லலாம். அதற்கு என்ன மணம் இருக்கிறது? கண் தெரியாதவனை 'கமலக்கண்ணன்' என்றும், கெட்டவனைப் பார்த்து 'நல்லப்பன்' என்றும்சொல்வார்கள். இதற்கு மங்கல வழக்கு என்று இலக்கணத்தில் சொல்வார்கள். 'காராட்டை வெள்ளாடு என்றால்போல' 'நச்சுப் பாம்பை நல்லப்பாம்பு என்றாற்போல' என்று இலக்கணம் பேசும்.

அராகம் என்றால் என்ன? ஒருவன் ஆயிரம் ரூபாய் வைத்து இருக்கின்றான். மற்றொருவன் கோடி ரூபாய் வைத்திருக்கின்றான். கோடீச்வரன் ஆயிரம் ரூபாய் வைத்திருப்பவனைப் பார்த்து, 'ஐயா, நீங்க பெரிய பணக்காரர், ஆயிரம் ரூபாய் வைத்திருக்கிறீர்களே;' என்று மிகவும் பெருமையாகக் கூறுவான். அவன் திரும்பி இவனிடம், 'நீங்கள் எவ்வளவு வைத்திருக்கிறீர்கள்' என்று கேட்டால், 'என்ன, ஒரு கோடி ரூபாய் இருக்குது, அது என்ன பிஸ்கட் வாங்கவும் போதாதுங்க' என்று மிகவும் அலட்சியமாகச் சொல்வான். இப்படிச் சொல்லிவிட்டு அடுத்தவனிடம் இருக்கும் அந்த ஆயிரம் ரூபாயை எப்படியாவது பறித்துக் கொள்ள வேண்டுமென்று எண்ணுவான். இந்த நினைப்புக் குத்தான் அராகம் என்றுபெயர்.

பணத்தில் மட்டுமல்ல இந்தக் குணம், கல்வியிலும் உண்டு. ஏதாவது செய்தியைக் கேட்டால், 'எனக்கு என்னங்க தெரியும்? உங்களுக்குத் தெரிந்து இருப்பதில் பாதி கூடத் தெரியாதுங்க' என்பான். ஆனால் பிறருடைய அறிவு எந்த வகையிலும் பயன்படாத வகையில் எப்படியாவது முயன்று தடுத்துவிடுவான். ஒரு வேலை செய்யும் போது 'நான்' பார்த்துக் கொள்கிறேன், நீங்கள் சிரமப் படவேண்டாம், இந்த வேலையெல்லாம் நீங்கள் செய்யலாமா? 'என்று நமக்காக அநுதாபப்படுவது போலவும், அந்த வேலை தாழ்ந்த வேலை போலவும் நடித்து, அதில் பயன்படக்கூடிய அறிவையும், பெறக்கூடிய அனுபவத்தையும் மற்றவர்கள பெறவிடாமல் செய்வதிலேயே குறியாக இருப்பான். அந்த எண்ணத்திற்குத்தான் அராகம் என்று பெயர். ஞானிகளைத் தவிர மற்ற எல்லோரிடத்திலும் இருக்கும் குணம் இது.

தன்னிடத்திலிருக்கின்ற பொருளைக் கொண்டு தன்னிறைவு செய்து கொள்ள முயற்சிப்பதை விடுத்துப் பிறர்பொருளைத் தனதாக்கிக் கொள்ளவேண்டுமென்று உணர்ச்சி உந்துதற்கு அராகம் என்று பெயர்.

**அராகம் என்பதற்கு மிகுவிருப்பம் என்று பொருள்.** இதற்கு, 'இச்சை நிலை' என்று உரையாசிரியர்கள். இச்சை

என்பதற்கு ஆசை, விருப்பம் என்றும் சொல்லலாம்.

ஆசை எப்படியிருக்கின்றது? எவ்வளவு நலம் நமக்குக் கிடைத்தாலும் அதில் நமக்கு நிறைவு ஏற்படுவதில்லை. இதனை 'ஆரா இயற்கை அவா' என்பார் திருவள்ளுவர் நிறைவுபடாத் தன்மைக்கு இச்சை என்று பெயர். அந்த நிறைவுபடா நிலையைத் தூண்டி கொண்டிருக்கின்ற தத்துவமே அராகம் என்பது.

ஆசையே இல்லாவிட்டால் அராக தத்துவம் அடங்கிக் கிடக்கிறது என்று பொருள்.

**6. புருடன்:**

மேற்சொன்ன காலம், நியதி, கலை வித்தை, அராகம் என்ற ஐந்து தத்துவங்களும்தனித்தனியே செயல்பட்டுக் கொண்டிருக்கும். இவை ஐந்தையும் சேர்த்து நுகர்வதற்குத் தத்துவங்களின் வாயிலாக நுகரும் தரத்தை ஏற்படுத்திச் செல்லுகின்ற ஒரு சீவனுக்குப் புருடன் என்று பெயர். அதுவும் ஒரு தத்துவம். இந்த ஐந்து தத்துவங்களும் ஆன்மாவோடு இயங்குமானால் அந்த இயக்கத்திற்குப் புருடன் என்று பெயர். அவன் தாழ்வான பொருளைத்தான் நுகர்ந்து கொண்டிருப்பான்.

காலத்தை அறிந்து எல்லையைக் கணித்து அதற்குள் அனுபவத்தைப் பெறுவது; செய்த வினைகள் கூடாமல் குறையாமல் வருமென்ற நியதியை உணர்வது; கலை நலம் ஆகிய பல்வேறு நிலைகளில் செயல்புரிந்து அதனால் கவரப்பட்டு நலங்களைப் பெற்றுத் திகழ்வது; வித்தை என்ற நடுவுநிலையில் இருந்து ஞானத்தைப் பெறுவது; அராகம் என்றபோது இச்சையிலே தன்னை ஆட்படுத்திக் கொள்வது என்ற இந்த ஐந்தின் வாயிலாக நுகருகின்ற தன்மையைப் பெறுகின்ற – தாழ்வான தன்மையைப் பெறுகின்ற ஒரு சீவன் புருடன் என்று பெயர் பெறும். அதுவே அறம், பொருள், இன்பம், வீடு என்ற உயர்வான நிலைகளில் மனதைச் செலுத்தித் தரமாக வாழ்ந்து நிலைபெறுமானால் அதற்குப் புருஷார்த்தம் என்று பெயர்.

**7. மாயை:**

மாயை எல்லாவற்றிற்கும் அடிப்படையானது. அது இந்தச் சீவனைப் பற்றிக் கொண்டிருக்கின்றது. அது பற்றியிருக்கும்போது சீவனுக்கு ஒரு மயக்கம் இருந்து கொண்டேயிருக்கும். தத்துவங்கள் என்ன என்று கேட்டு இந்த ஆன்மா மயங்கிக் கொண்டிருக்கின்றது. இந்த மயக்கத்தைத் தீர்க்கவே வித்தியா தத்துவங்களைப் பற்றிச் சொன்னேன்.

மாயை அறிவை உண்டாக்கும்; இச்சையை உண்டாக்கும். செயலை உண்டாக்கும். ஞானம், இச்சை, கிரியை என்ற இம்மூன்றையும் மாயை தான் உண்டாக்கும்.

கலையில் கிரியையும், வித்தையில் ஞானத்தையும், அராகத்தில் இச்சையையும் பெற்ற இந்த ஆன்மாவை, இவற்றிலிருந்து மாயைதான் பிரிக்கின்றது. அதற்கேற்ற ஆற்றலை மாயை பெற்றிருக்கின்றது.

ஏன் இப்படிப் பிரிக்கின்றது? மயக்கம் வருகின்றபோது விருப்பம் இருக்குமா? அறிவு இருக்குமா? செயல்படுவோமா? அப்படியே பேசாமல் இருந்துவிடுவோம். எல்லாவற்றிலும் மயங்குமாறு செய்யும்; **ஒன்றில் மயங்கச் செய்து, இன்னொன்றில் மயங்காதிருக்குமாறு செய்யும்; ஒன்றையும் குறித்துக் காட்டாது. இது மாயையின் தன்மை.**

இந்த ஏழு தத்துவங்களைப் பற்றிச் சொன்னது எதற்காக என்றால் சீவனுக்கு இருக்கும் மயக்கத்தைத் தீர்க்க. இத்தத்துவங்கள் என்ன என்று கேட்டு மயங்கி நிற்கும் ஆன்மாவின் மயக்கத்தைத் தீர்க்கும்.

ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றும் மயக்கம் தருவன. அவற்றில் மாயை என்பது பெரும் பொருளாக இருந்து மயக்கிக் கொண்டு இருக்கும். அது நிரந்தர மயக்கம். அந்த மயக்கம் தீரவே ஏழு வித்தியா தத்துவங்களைப் பற்றி ஆசிரியர் விளக்கினார்.

இவற்றை மிகவும் கவனமாகக் கேட்டுக் கொள்ள வேண்டும். ஒருமுறை கேட்டுவிட்டால் அனைத்தும் புரிந்துவிடும் என்று எண்ணக் கூடாது. ஏன்? இவை பழக்கப்படாத செய்திகள். இப்போதுதான் முதன் முறையாகக் கேட்கின்றோம். மேலும் இது கதையன்று. எனவே புரிந்து கொள்வது சிறிது சிரமமாக இருக்கும்.

உண்டு பழக்கமான உணவைத்தான் சுவைத்துக் கொண்டிருப்போமே தவிர புதிய உணவு வகைகள் எவ்வளவு உயர்வானதாக இருப்பினும், எவ்வளவு சுவை மிகுந்ததாக இருப்பினும் நமக்குச் சுவைக்காது.

பலபேர் நிறைந்த சபையில் ஒரு பெண்ணை அழைத்து வந்து மான பங்கம் செய்தான் துரியோதனன் என்று கதை சொன்னால் அதனைச் சுவைத்துக் கேட்டுக் கொண்டிருப்பார்கள். ஆனால் ஒருவராவது, இப்படிப்பட்ட அவலக்கதையைச் சொல்கின்றீர்களே, நல்ல கதைகளைச் சொல்லக்கூடாதா என்று கேட்கமாட்டார்கள். காரணம் இப்படிப்பட்ட கதைகளைக் கேட்டுக் கேட்டுப் பழகிவிட்டது. அதிலேயே மனம் மயங்கி நிற்பதுதான்

எனவேதான் தத்துவங்களைப் பற்றிச் சொல்லுகின்றபோது அவை உயிருக்கு விளக்கம்செய்யும் செய்திகள் என்பதனால், அவற்றைக் கேட்டால் உயிரில் உள்ள மயக்கம் அகலும் என்பதற்காக, அவை நன்றாக விளங்கவும், உயிர் உய்வு பெறவும் நிதானமாக அவற்றைப் பற்றிச் சொல்கின்றார் ஆசிரியர்.

இந்த ஆன்மாவுக்கு அனுபவங்களைப் பெருக்குவதற்காக பொறி, புலன், அந்தக் கரணங்கள் அமைந்திருக்கின்றன இப்படி இறைவன் அமைந்திருப்பது பேரற்புதம். உதாரணமாக, இக்கருவிகள் எப்படிச் செயல்படு கின்றன என்று பார்த்தால் விளங்கிவிடும்.

தன் குழந்தையைப் பார்த்தவுடனே தாய்க்கு உள்ளம் மலருகின்றது. மனைவியைப் பார்த்தவுடன் கணவனுக்கு ஒரு உணர்ச்சி மலருகின்றது. கடன்காரனைப் பார்க்கின்றபோது ஒரு உணர்ச்சி மலருகின்றது. இப்படி

ஒவ்வொரு உணர்ச்சி மலருவதற்கும் ஒவ்வொரு கருவி உள்ளே அமைந்திருக்கின்றது. இப்படி ஒரு உணர்ச்சி மலருகின்ற போது, மற்றொரு கருவி அடங்கி நிற்கும். ஒவ்வொரு உணர்ச்சிக்கும் ஒவ்வொரு கருவியென பல கருவிகள் உள்ளே அமைக்கப்பட்டிருக்கின்றன. அது நல்லதானாலும் சரி, கெட்டது ஆனாலும் சரி. ஒன்று அடங்க, மற்றது மலரும். இவை எல்லாம் ஒரே நேரத்தில் மலர்வது இல்லை. எல்லாம் அடங்கிப் போவதும் இல்லை, எல்லாம் ஒரே நேரத்தில் மலர்ந்தால் மனிதன் பைத்தியமாகிவிடுவான். எல்லாம் அடைந்து ஒரே ஒருகருவி மட்டும் மலர்ந்தாலும் பைத்தியமாகிவிடுவான். எனவே **மலர்ச்சி என்பது தத்துவங்களிலே நிகழ்வது.**

ஆசை நிறைந்து, ஆசை அகன்ற அறிவும் நிறைந்துவிடுமானால் அங்கே மாயை இருக்காது. புலன்கள் நிறைந்துவிட்டால் மாயை இருக்காது. புலன்கள் நிறையாத வரையிலும் மாயை இருக்கும். ஒரு பொருளின்மேல் ஆசை வருகின்றதென்றால் இன்னும் நிறைவு ஏற்படவில்லையென்று பொருள். நிறைவு ஏற்பட்டுவிட்டால் அதன்மேல் ஆசை இருக்காது.

உதாரணமாக இங்கே வந்து பலரும் பாடம் கேட்டுக் கொண்டே இருக்கின்றீர்கள். அப்படியானால் இன்னும் உங்களுக்கு கேள்வி என்ற ஆசை நிறையவில்லை என்று பொருள். இது எப்போது நிறையும். கேட்பதனால் மட்டும் நிறையாது. கேட்ட வண்ணம் ஒழுகினால்தான் இப்புலன் நிறையும். அப்போதுதான் நலம் விளையும ஒழுகுவதற்கு வாயிலாக இருப்பதுதான் கேள்வி.

எனவே மாயை என்பது ஒரு முக்கியமான தத்துவம். அது ஆன்மாவை – அறிவு ,செயல், விருப்பம் என்ற மூன்றிலிருந்தும் பிரித்துக் கொண்டுவந்துவிடும். பொதுவாகவே விளங்கும். ஒன்றையும் குறித்துக் காட்டாமல் விளங்குவது மாயையின் தன்மை.

இதுவரையில் வித்தியா தத்துவங்களின் பெயர்களைப் பற்றிய அடைவுகளைச் சொன்னவர் அடுத்து அவற்றின் இயல்புகளைச் சொல்லுகின்றார்.

19. எல்லை பலம்புதுமை எப்போதும் நிச்சயித்தல்
அல்லல் தரும்கிரியை ஆ|ன் மாவுக் (கு) -
ஒல்லை
அறிவுஆசை ஐம்புலனும் ஆரவரும் காலம்
குறியா மயக்கென் று கொள்.

காலம் என்ற தத்துவத்தால் நாம் நம் வாழ்நாளுக்கு ஒரு எல்லையை உணருகின்றோம். நம்முடைய வாழ்நாளுக்கு ஒரு எல்லை உண்டு. உணர்வதினாலே அந்த எல்லை வருவதற்குள்ளே நாம் என்னென்ன செய்தாக வேண்டும்; நம் கடமைகள் என்னென்ன என்பதைப் பற்றிச் சிந்தித்து வைத்துக் கொள்ள வேண்டும். வருவதும், போவதும் மாத்திரம் நம் வேலையல்ல. சும்மா வந்துவிட்டுப் போவதையே நம் வேலையாகக் கொள்ளக் கூடாது. ஏன் பிறந்தோம்? ஏன் இறந்தோம்? என்பதற்குச் சில காரணங்கள் உள்ளன.

''பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே'' என்று அப்பர் சுவாமிகள் வருத்தப்படுகின்றார். வள்ளல் பெருமான் ''ஆற்றுவெள்ளம் வருவதன் முன்அணை போட அறியீர்'' என்று வருந்துகின்றார். ஏன்?

இங்கே பாடம் கேட்க வருகின்றீர்கள். 1.30 மணி நேரம் இருந்து பாடம் கேட்கின்றீர்கள். அப்படி வருவதற்குக் காரணம் என்ன? நல்ல கருத்துக்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதுதானே நல்ல செய்திகளைக் கேட்டோம் என்பதோடு விட்டுவிட்டால் அதனால் பயனில்லை. கேட்டதன் பயன் ஒழுகுதல்தான் இங்கே குறிப்பிட வந்தது 1.30 மணிநேரம் என்பது கால எல்லை; அதற்குள் என்ன கேட்டோம் என்பது எல்லை. கேட்ட செய்திகளை எப்படி பயன்படுத்தப் போகின்றோம் என்று சிந்திப்பது மாயை அறுந்த நிலை.

இறைவன் நம்மைப் படைத்துவிட்டான். நமக்கென்று ஒரு காலம் அல்லது வாழ்நாளைக் கொடுத்திருக்கின்றான். இதற்கு என்ன காரணம்? நமக்கென்று சில பணிகள் காத்திருக்கின்றன. அவற்றைச்

செய்வதற்காகத்தான் நமக்கு இவ்வுடலையும் வாழ்நாளையும், இவ்வுலகையும், உலகப் பண்டங்களையும் படைத்துக் கொடுத்திருக் கின்றான். அவற்றை உணர்ந்து நாம் ஒழுகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

எனவே எல்லையினால் உணர்வது, நியதியினால் ஆன்ம பலம் பெருவதும், வித்தையாலே நாம் எப்பணிகளைசெய்ய வேண்டுமென்று நிச்சயம் செய்வதும், பிறகு அராகத்தாலே (அல்லல் தரும்) கிரியைகளை நீக்குவதும், ஆன்மாவுக்கு 'ஒல்லை அறிவு, ஆசை, ஐம்புலனும் ஆரவரும் காலம் குறியா மயக்கென்று கொள்' என்றார். இதனால் ஐந்து புலன்களுக்கும் நிறைவை உண்டாக்கிக் கொள்ளுங்கள் நிறைவுடைய வாழ்க்கையைத்தேடிக் கொள்ளுங்கள்; தத்துவங் களைக் கொடுத்திருப்பது இதற்காகத்தான் என்பதனைத் தெரிந்து கொண்டால் இனி மயக்கம் என்பது நிற்காது. எனவேதான் முன்னர் 'மாலற ஏழ் சொன்னோம்' என்றார்.

20. வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினோம்
சுத்தமாம் தத்துவங்கள் சொல்லக்கேள் –
நித்தமாம்
சுத்தவித்தை ஈசுரம், பின் சொல்லும்
சதாசிவம்நற்
சத்திசிவம் காண்அவைகள் தாம்.

விளம்புதல் என்பதற்குச் சொன்னோம் என்றும் பொருள். மற்றும், எது எது உங்களுக்கு எவ்வெப்போது தேவையோ அதை அதை அவ்வப்போது, முறையாகச் சொல்லுதல் என்றும் பொருள். பரிமாறுதல் என்றும் பொருள்.

இலையைப் போட்டுப் பரிமாறுகின்றார்களோ, அப்போது எதை முதலில் பரிமாற வேண்டும் என்று ஒரு முறை இருக்கின்றது. ஆனால் இப்போது எப்படி எப்படியோ பரிமாறுகின்றபிர்; உண்ணுகின்ற போதும் எப்படி எப்படியோ உண்ணுகின்றோம். அது முறையற்ற செய்தி.

இலையைப் போட்டவுடன் கொஞ்சம் உப்பு வைக்க வேண்டும். அதனை வலது கைப்பக்கம் வைக்கக் கூடாது. இடது கைப்பக்கம்தான் வைக்க வேண்டும்; அடுத்து, பச்சடி, பொரியல், கூட்டு, மற்ற பண்டங்களை வைக்க வேண்டும்.

உப்பை வலது கைப்பக்கம் வைத்தால் என்ன? அப்படி வைத்தால், கை அந்தப் பக்கமாகப் பட்டால் மொத்தத்தில் உப்பு கலந்துவிடும். பண்டம் பாழ்பட்டுப் போகும். இடது கைப்பக்கமாக, ஓரத்தில் இருந்தால் கை அங்கே அதிகமாகப் போகாது. இப்படி முறையாகப் பரிமாறுதலுக்கு விளம்புதல் என்று பெயர். உண்பதற்குச் சுவையாக இருக்கின்ற வகையில் பரிமாற வேண்டும். அப்படி உங்களுடைய ஆன்மாவில் இருக்கின்ற அழுக்குகள் தீருமாறு, அல்லது அழுக்கு என்ற மாயை அகலுமாறு, மயக்கம் அறுமாறு வித்தியா தத்துவங்கள் ஏழைப் பற்றியும் (முறையாக) விளம்பினோம்.

இனி சுத்த தத்துவத்தைப் பற்றிச் சொல்லப்போகின்றார். சுத்த தத்துவம், சுத்த வித்தை, சிவதத்துவம் என்றும் சொல்லலாம்.

சுத்தத் தத்துவத்தை ஐந்து வகைகளாகப் பிரிக்கலாம்.
1) சுத்தவித்தை, 2) ஈசுரம், 3) சதாசிவம், 4) சக்தி, 5) சிவம் என ஐந்து.

வித்தியா தத்துவத்தில் கொஞ்சம் மயக்கம் இருக்கின்றது. காரணம் அதில் சுத்தம், அசுத்தம் இரண்டும் உண்டு. ஆனால் சுத்த தத்துவத்தில் மயக்கம் இல்லை. காரணம் அது சுத்தமானது.

நித்தமாம் சுத்த வித்தை என்று கூறுகின்றார். காரணம் அவை கால தத்துவத்துக்கு உட்படாதவை. ஆகையால் நித்தமாக உள்ளவை.

இறைவன் உயிர்களுக்கு உதவ வேண்டும் என்று எண்ணுகின்றான். அப்படி உதவ வேண்டும் என்ற தாக்கத்திற்குத் திருவருள் என்று பெயர். அவன் உதவ வருகின்றபோது அவன் பயன்படுத்துகின்ற முதல் பொருள் மாயை.

இறைவனது சங்கல்பம் அல்லது நினைப்பு சீவனுக்கு உதவ வேண்டுமென்பது. அந்த நினைவின் அளவிலே வெளிப்பட்டது திருவருள். அத்திருவருள் வெளிப்பட்ட உடனே தானே செயல்படாது. அது முதன் முதலாகப் பயன்படுகின்ற இடம் சுத்தமாயை. அந்த சுத்த மாயையிலே இறைவன் திருவருள் இறங்கி நின்று நமக்குப் பயன்படும். இறைவன் நேரே வருவதில்லை. திருவருள் மட்டுமே மாயையில் இறங்கி நின்று நமக்குப் பயன்படும்.

உதாரணமாக நீங்கள் சாப்பிட உட்கார்ந்திருக் கின்றீர்கள். சாதம் தட்டில் போடப்பட்டிருக்கிறது. குழம்பு ஊற்ற வேண்டுமென்று நினைக்கின்றேன். எனக்குக் கை இருக்கின்றது. ஆனால் கையினால் குழம்பை ஊற்றுவதில்லை. கரண்டி ஒன்றைக் கொண்டு அதனால் குழம்பை ஊற்றுவேன். அப்படி, இங்கே நான் என்பது கடவுள், கை என்பது திருவருள், சுத்த மாயை என்பது அகப்பை அல்லது கரண்டி. பயன்படுகின்ற சுவைப் பொருள் குழம்பு. நீங்கள் தான் ஆன்மா. இப்படித்தான் இறைவன் நமக்கு உபகாரம் செய்கின்றான்.

ஏன் அப்படிச்சுத்தமாயையில் இறங்கி வருகின்றான்? நேரடியாக வந்து ஏன் ஆன்மாவுக்கு உபகாரம் செய்யக் கூடாது?

இறைவன் சுத்தமானவன் ஆனால் இந்த ஆன்மா ஆணவம் என்ற அழுக்கை இயல்பாகவே உடையது. அழுக்கை அழுக்கினால் போக்கியபின்னர் சுத்தமாக ஆக்கிய பின்னர் தன்னோடு சேர்த்துக் கொள்கின்றான்.

ஆன்மாவில் ஆணவம் என்ற அழுக்கு கலந்திருக்கின்றது. அதனால் மாயை என்ற அழுக்கை அதனுடன் சேர்க்கின்றான். ஆனால் மாயையுடன திருவருள் கலந்து நிற்பதனால் சுத்தமாயையாகின்றது.

உதாரணமாக, நம்முடைய குழந்தை மலம்போய் மேலெல்லாம் பூசிக் கொண்டிருக்கின்றது. நம்முடைய குழந்தைதானே என்று எண்ணி அப்படியேவா எடுத்து வைத்துக் கொள்கின்றோம். அதன் உடல் அழுக்கு நீங்க அதனைக் குளிப்பாட்டிய பின்னர் எடுத்து அணைத்துக் கொள்கின்றோம். இப்படித்தான் இறைவனும் இந்த ஆன்மாக்களின் அழுக்கை நீக்கிய பின்னர் எடுத்து அணைத்துக் கொள்கின்றான்.

சுத்த மாயை என்றால் என்ன? அசுத்த மாயை என்றால் என்ன? இரண்டுக்கும் உள்ள வேறுபாடு என்ன?

பூதம், பொறி, புலன், தன்மாத்திரை, அந்தக்கரணம் என்ற 24 தத்துவங்களும் அசுத்த மாயை. காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என வித்தியா தத்துவங்கள் . அவை சுத்தாசுத்த மாயை. சுத்தவித்தை, ஈசுரம், சதாசிவம், சக்தி, சிவம் என்ற ஐந்தும் சுத்த தத்துவங்கள்.

சுத்த மாயையில் திருவருள் பதிகின்றபோது மாயை மூவகையாகப் பிரியும். அவை, பருமாயை, நுண்மாயை, மிகுநுண்மாயை என்பன. (உ.ம்.) மாயையை ஒரு பழமாகக் கொண்டால், சக்கை, சாறுடன் கூடிய பழம் பருமாயை அல்லது அசுத்த மாயை, அதனைப் பிழிந்து சாறாக ஆக்கினால் அதற்கு நுண் மாயை அல்லது சுத்த மாயை என்றும், அதனையே சுவையாக சாரமாக ஆக்கின்ால் அதற்கு மிகு நுண்மாயை என்றும் பெயர்.

திருவருள் உயிருக்கு உபகாரம் செய்கின்ற போது சுத்த மாயையை நிலைக்களமாகக் கொண்டு உபகரிக்கும் என்பதைப் பார்த்தோம். அப்போது அது மூன்று கூறாகச் சீவனில் நின்று சீவனைத் துய்க்குமாறு செய்யும். சுத்த மாயையிலே நின்று இச்சையை உண்டாக்கும்; ஞானத்தை உண்டாக்கும்; செயல்படச் செய்யும். இதனை, இச்சை, ஞானம், கிரியை என்றும், அறிவு, விருப்பம், செயல் என்றும் சொல்லலாம்.

**இச்சை:**

இச்சை அல்லது விருப்பம் எப்போது ஏற்படும்? இச்சை ஏற்பட வேண்டுமானால் நமக்கு முன்னே ஒரு பொருள் இருக்க வேண்டும். அப்போது தான் நமக்கு அதன்மேல் விருப்பம் ஏற்படும். அதனால் இறைவன் நாம் விரும்பும் பொருளாக எதிரிலேயும், விருப்பமாக நம்முள்ளேயும் நிற்பான். விருப்பத்தை உள்ளே தூண்டுவான். முன்னே இருக்கின்ற பொருளை அவாவுமாறு செய்வான். அப்போது நமக்குத் தேவையோ, இல்லையோ, எப்பொருளைப் பார்க்கினும் இப்பொருள்மேல் இச்சை கொள்வோம். இது அனைவருக்கும் பொது.

யாராவது அப்படி விருப்பமில்லாமல் இருந்தால் அவர்களை விதிவிலக்கு என்று கொள்ள வேண்டும். அப்படி வேண்டாம் என்று சொல்கின்றவர்களுக்கும் ஒரு விருப்பம் உள்ளே இருக்கும். அவர்கள் வேண்டாம் என்று சொல்லுவது, 'நமக்கு வேண்டாம், பிறருக்குக் கொடுக்கலாமே' என்று எண்ணியிருக்கலாம் அதுவும் ஒரு விருப்பம்தானே. ஆகவே இச்சை என்பது ஏதோ ஒரு வகையில், நேரடியாகவோ, அல்லது மறைமுகமாகவோ நம்முள் இருந்துகொண்டே இருக்கும். அதனால் இந்த (இச்சை, ஞானம், கிரியை) மூன்றனுள் இச்சையானது எங்கும் ஒருபடித்தாய், எல்லோரிடத்திலும், எங்கும், ஒரே நிலையில் நிறைந்து விளங்குவதாம்.

நம்மை அறியாமல் நமக்குள்ளே சுத்த மாயையில் இறங்கிய திருவருள் முஇச்சை' என்ற பெயர் பெறும். சுத்த மாயை என்பதற்கும், அசுத்த மாயை என்பதற்கும் உள்ள வித்தியாசத்தைச் சிறிது சிந்திப்போம்.

உங்கள் கையில் ஒரு பொருள் இருக்கின்றது. அப்பொருள் எனக்குத் தேவைப்படுகின்றது. ஆனால் அதை நீங்களாக எனக்குக் கொடுக்க மாட்டீர்கள். அதனால் அதை எப்படியாவது உங்களிடமிருந்து வஞ்சித்துப் பிடுங்கிக் கொள்ள எண்ணுவது அசுத்தம். மாறாக, உங்களக்குத் தேவையான ஒரு பணியைச் செய்துவிட்டு, உங்கள் அன்பைப் பெற்று, அதற்கு ஊதியமாக

அப்பொருளைப்பெற எண்ணுவது சுத்தம். இதனைத் திருவள்ளுவர்,

> அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
> புல்லார் புரள விடல்.

என்று தெளிவுபடுத்துவார்.

பொருளும், இன்பமும் அன்பினாலும், அருளினாலும் வரவேண்டும். எப்போதும் நம்மிடத்தில் அன்பு முன்னிலையில் இருக்க வேண்டும். அன்பு இருந்தால் அருள் வரும். அன்பும் ஒரு மாயைதான். திருவருள் அன்பிலே கலந்து, இச்சிக்குமாறு செய்யும்; அறிவில் கலந்து தெளிவை உண்டாக்கும்; கிரியையில் கலந்து செயல்பட வைக்கும்.

<u>ஞானம், கிரியை:</u>

இச்சை என்பது எங்கும், எப்போதும் ஒரே சமமாக இருக்கும். ஞானம், கிரியை என்ற இரண்டும் ஒரே சமமாக இருந்தாலும் இருக்கும், அல்லது ஒன்று கூடியும் , ஒன்றுகுறைந்தும் காணப்பட்டாலும் காணப்படும். ஒன்றோடு ஒன்று ஒத்துப் போனாலும் போகும், பிரிந்து போனாலும் போகும். இதற்கு ஏதேனும் காரணம் உண்டா எனில், ஒத்துப்போவதற்கும் காரணம் இருக்கும். பிரிந்து போவதற்கும் காரணம் இருக்கும்.

சொல்லும் செயலும் ஒன்றாக இருக்க வேண்டுமென்று எண்ணுவது ஞானமும் கிரியையும ஒத்துப் போகின்ற நிலை. 'நமக்கெதற்கு இந்த வேலை, முடிந்தால் இரண்டு நல்ல வார்த்தைகளைச் சொல்லிவிட்டுப் போவோம்' என்று எண்ணுவது அறிவு அல்லது ஞானம். அங்கே செயல் குறைந்து காணப்படும். 'நமக்கெதற்கு அறிவு, ஏதோ சொன்னார்கள், அது வரையில் செய்துவிட்டுப் போய்விடுவோம்' என்று எண்ணுவது கிரியை. இங்கே கிரியை மேம்பட்டும், ஞானம் குறைந்தும் காணப்படும்.

ஒரு படித்தாய் இருக்கின்ற இச்சை, ஒத்தும்; பிரிந்து செயல்படுகின்ற ஞானம், கிரியை இம்மூன்றும் நிலைகளுக்கும், வேறுபாட்டுக்கும் ஏற்பட சுத்தமாயை செயல்படும். மாயைக்குத் தனித்த செயல் கிடையாது. இம்மூன்றும் எப்படிச் செயல்படுகின்றனவோ அப்படித்தான் சுத்த மாயையும் செயல்படும். அப்படியானால் கடவுள் இதற்கு ஏற்றவாறுதான் செயல்படுவானா?

சுத்தமாயையில் கலந்திருந்தது எது? திருவருள். திருவருள் எதனால் ஏற்படுகிறது. இறைவனது கருணையினால். எனவே இறைவனும் சுத்தமாயைக்கு ஏற்றவாறுதான் செயல் படுவான். அது எப்படி? ஏன் இப்படிச் செயல்படுகின்றான்?

கடவுள் பெரும் கருணையாளன். சீவன்களுக்கு என தத்துவங்கள், உலகம், பண்டம் இவற்றைப் படைத்துக் கொடுத்தாலும், சீவன்களுக்கெனத் தனி நிலை இருக்கின்றது. அந்த நிலையில்தான் அவை இயங்கும். அவற்றின் இயக்கத்தில் அவைகளை இயங்கவிட்டு, தானும் அவை இயங்குவதுபோலவே இயங்கி, சீவன்களைத் தேற்றுகின்றான்; தெளிவு செய்கின்றான். ஒரு சின்னக் குழந்தை தாய் தந்தையரிடத்தில் பிடிவாதமாக நடந்து கொண்டாலும், தாய் தந்தையர் அதனிடத்தே மாறுபடாமல் ஒத்துப் போவது போல நம்மிடத்தில் இறைவனும் ஒத்துப் போகின்றான்.

குழந்தை அப்பாவின் தோள் மேல் ஏறி உட்கார நினைக்கின்றான். தந்தை அவனைத் தூக்கித்தோள்மேல் உட்கார வைப்பதை அவன் ஒத்துக் கொள்வதில்லை. தந்தையைக் குனியச் சொல்கின்றான்; பின்னர் அவனே முயன்று மேலே ஏறி உட்கார்ந்து கொள்ளு கின்றான். இவையெல்லாம் வீட்டில் சாதாரணமாகக் காணுகின்ற காட்சிகள்தானே!

இப்படித்தான் சீவன்கள் பிடிவாதம் பிடிக்கின்றபோது இறைவனும் குனிந்து கொடுக்கின்றான்.

பிடிக்கின்றபோது இறைவனும் குனிந்து கொடுக்கின்றான். நம் நிலைக்கு இறங்கி வருகின்றான். நம் செயலுக்கு ஏற்ப வளைந்து கொடுத்து, இந்த ஆன்மாவுக்கக் கருணையினால் அனுபவத்தை ஊட்டுகின்றான். அப்படி ஊட்டுவதற்குக் கருவியாகவும், நிலைக்களமாகவும் அமைத்துக் கொண்டவைதான் இக்கருவிகளும், தத்துவங்களும்.

21. சுத்தவித்தை ஞானம்மிகும், தொன்மையாப்
ஈசுரந்தான்
அத்தன் தொழில்அதிகம் ஆக்கியிடும் – ஒத்தத்இவை
சாதாக்கியம் என்றும்சத்தி சிவம் கிரியை
ஆதார ஞானஉரு வாம்.

ஞானம் மிகுந்து கிரியை (செயல்) குறையும்போது அதற்கு ஆதாரமாக இருப்பதற்கு சுத்த வித்தை என்று பெயர். அதற்கொரு இடம் இருக்க வேண்டும் . அந்த இடம் அதற்கு ஆதாரமானது. அதற்கொரு வடிவம் உண்டு. அதற்கு உரு என்று பெயர். அந்த உருவிற்குச் சுத்த வித்தை என்று பெயர்.

அதேபோலக் கிரியை மிகுந்து ஞானம் அடங்கும். அப்போது ஞானம் குறையும் என்று சொல்லக் கூடாது. ஞானம் அடங்கி கிரியை மிகுந்த போது அதற்கொரு நிலைக்களம் உண்டு. அந்த நிலைக்களத்திற்கு ஒரு உரு உண்டு. அதற்குப் பெயர் ஈசுரம். ஈசன் வேறு. ஈசுரம் வேறு.

சுத்த வித்தையும், ஈசுரமும் நிகழ்வதற்கான ஆதார நிலை சாதாக்கியம் எனப்படும். சதாசிவம் என்றும் இதனைச் சொல்வர். சதா இயக்கம் சாதாக்கியம் எனப்படும். ஞானவிளைவு என்றும் சொல்லலாம். இது ஒருகால் நிகழ்ந்து ஒருகால் நிற்பது அன்று. சதா இயங்கிக் கொண்டே இருக்கும். இவையெல்லாம் கலைச் சொற்கள். இப்படிப்பட்ட சொற்களை நம்மால் இப்போது புரிந்து கொள்ள முடியவில்லை. ஒருவேளை நமக்குப் புரியக் கூடாது என்று இப்படிச் சொல்லி வைத்தார்களா என்ற எண்ணம் வருகின்றது. அல்லது அக்காலத்தில் இப்படிச்

சதாசிவம் என்றால் எங்கும் சிவம் எனப்படும். நாம் எப்போதும் சிவத்தை நினைத்துக் கொண்டிருத்தல். அது எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்றதோர் பொருள். அதுவே சுத்த வித்தைக்கும், ஈசுரத்துக்கும் ஆதார உருவாய் நிற்கின்றது. ஒவ்வொன்றின் ஆதாரமும், செயலும் பலவாய் இருக்கின்றன.

சுத்த வித்தையால் ஞானம் மிகும். நம்மிடத்தில் இருக்கின்ற பசு அறிவு நீங்கி பதி அறிவு வரும். அதற்கு ஞானம் என்று பெயர். பசு அறிவு நீங்குதலும், பதி அறிவு பதிதலுமாகிய நிகழ்வு நம்மை அறியாமலேயே நம்முள் நிகழும். இதுதான் சுத்த வித்தையினுடைய மாட்சி.

உதாரணமாக, சிறு வயதில் நமக்கிருந்த அறிவா இப்போது இருக்கின்றது; வளர்ந்து காணப்படுகிறது. அப்படியானால் நம்மிடத்தில் அப்போது அறிவு இல்லை என்றா சொல்வது; ஓர் ஆசார்யனிடத்தில் சென்று பயிலப் பயில மாணவனின் அறிவு மேலும் மேலும் வளர்ந்து கொண்டே போகின்றது. காரணம் ஆசார்யனுடைய திறமை அவனிடத்தில் வளர்கின்றது. அதற்கு ஆதாரமாக ஏற்கனவே அவனிடத்தில் ஓர் அறிவு இருக்கின்றது. அந்த அறிவுடன் ஆசார்யனுடைய திறமையும் சேர்கின்ற போது, அது தொழில் நுட்பமாகவும், இசைநுட்பமாகவும், கலை நுட்பமாகவும், ஓவிய நுட்பமாகவும், மருத்துவ நுட்பமாகவும் மலருகின்றது. ஆரம்பத்தில் இந்த நுட்பங்கள் இருப்பதில்லை. ஆசார்யனுடைய சேர்க்கையினால் இந்த அறியாமை மாறி, அவனிடத்தில் இருந்த அறிவுகள் மாறி அவருடைய அறிவு இடத்தில் சேர்ந்து மலர்கின்றது.

ஆனால் இப்படிப் பல வகையிலும் தேர்ந்துவிட்டவர்கள் இவற்றையெல்லாம் தானே கற்றதாகவும், தானே சிறந்த அறிஞர் என்று சொல்லிக் கொள்ளுகின்றார்களே தவிர, இந்த அறிவும், இந்தக் கல்வியும் ஆசார்யனின் சேர்க்கை யினால் விளைந்தது என்று சொல்லுவதில்லை. இதனைத் திருவள்ளுவர்

மனத்துளது போலக் காட்டி ஒருவற்கு
இனத்துளது ஆகும் அறிவு

என்று நயம்பட உரைக்கின்றார்.

ஞானம் மிகுந்தபோது கிரியை (செயல்) குறையும். கிரியை குறைந்த போது ஞானம் மிகும். இரண்டும் எப்போதும் சமமாக இருக்கும் என்று எப்போதும் எண்ணக் கூடாது. அறிவோடு செயல்படுகின்ற போது செயல்கள் குறைவாகவும், செயல் மிகுதியாக இருக்கின்றபோது அறிவு குறைவாகவும் இருக்கும். இதுதான் நியாயம்; முறை. சில இடங்களில் அறிவைப் பார்க்கவே கூடாது. அறிவோடு பார்த்தோமேயானால் செயல்படவே முடியாது. செயலை மட்டும் பார்த்துக் கொண்டிருந்தால் சிலது பாழ்பட்டுப் போகும். அந்த இடத்தில் அறிவோடு செயலைப் பார்க்க வேண்டும். இப்படி ஒன்று மிகும்போது மற்றொன்று குறையும். ஞானம் மிகுந்தபோது கிரியையும், கிரியை மிகுந்த போது ஞானமும் குறையும்.

சத்தி தத்துவம், சிவதத்துவம் இரண்டும் முறையே செயலுக்கும், ஞானத்துக்கும் நிலைக்களமாக இருக்கும்.

சில தத்துவங்கள் ஐந்தும் சிவம் என்றே சொல்லப்படும். அது மாயையைத் தோற்றுவித்து அதை அடிப்படையாகக் கொள்ளுகின்றது. சக்தி தத்துவம் காலம், நியதி இவற்றினை அடிப்படையாகக் கொள்ளும்.

இதுவரையில் 36 தத்துவங்களைப் பற்றிப் பேசினார். அதில் முதல் பகுதி 24 தத்துவங்கள் கொண்டது. அதனைஆன்ம தத்துவங்கள் என்பர். அதனினும் இன்னும் கொஞ்சம் நுட்பமாக இருப்பவை அறிவு, கலை முதலானவை. இவை சுத்த, அசுத்த தத்துவங்கள்.. இந்த ஏழு தத்துவங்களும் வித்தியா தத்துவங்கள் எனப்படும். அடுத்து சுத்த தத்துவங்கள் ஐந்து. இவை மிக நுட்பமானவை. இவை இறைவனின் இச்சை, ஞானம், கிரியை என்பனவற்றுக்கு இடமானவை. இவை ஞானத்துக்கு ஆதரமாக நிற்பன. இப்படி 36 தத்துவங்களையும் மூன்று கூறுகளாகப் பிரித்துச் சொன்னார்.

இதற்கு மேலே என்ன இருக்கிறது என்று மேலும் விளக்குகின்றார்.

● ● ● ● ●

22. ஆறாறு தத்துவமும் சொன்னோம் அடைவாக
மாறா மலமிரண்டும் வாசொல்லக் – கூறில்
அறியாமை ஆணவம்நீ யானசுக துக்கம்
குறியா வினைஎன்று கொள்.

ஆணவம், கன்மம், மாயை என்கின்ற மும்மலங்களில் இதுவரையில்மாயாமலத்தைப் பற்றி (36 தத்துவங்களைப் பற்றி) க் கூறிய பின்னர், மாறாது வருகின்ற ஆணவ மலத்தையும், கன்ம மலத்தையும் பற்றிச் சொல்லப் போகின்றார்.

ஆணவம் என்று கூறப்படுவது வேறொன்று மில்லை. அறியாமையைத் தான் ஆணவம் என்பர். **எதையும் அறிய விடாமல் தடுப்பது எதுவோ அதற்கு ஆணவம் என்று பெயர்.**

நளவெண்பாவில் ஒரு கருத்துச் சொல்லு கின்றார். தமையந்தியை விட்டுவிட்டு நளன் பிரிந்து போய்விடுகின்றான். நள்ளிரவு நேரம். கடற்கரையோரம். அந்த இருளைப் பற்றிக் காளமேகப்புலவர் சொல்லுவார்: ''கொள்ளிக்கும் விள்ளாத காரிருள்'' என்று. நெருப்பைக் கொளுத்தினாலும் அந்த இருள் போகவில்லையாம். நெருப்பையே இருள் மயமாகக் காட்டுகின்றதாம் அந்த இருட்டு.

அப்படி அறிவினாலே அகற்ற முடியாத அறியாமை, 'நான்தான் 'ஆணவம் என்று தன்னையும் காட்டாது; தான் சார்ந்த பொருளையும் காட்டாது. தலைவனையும் (இறைவனையும்) காட்டாது இப்படி மூன்று நிலையிலும் இருள்மயமாக விளங்குவது ஆணவம். உ.ம்.

எல்லா விளக்குகளும் அணைந்துவிட்டன. எந்த வெளிச்சமும் உள்ளே வரா வகையில் கதவு, சன்னல் யாவும் மூடப்பட்டுள்ளது. அந்த இருட்டில் நான் இருக்கிறேன். என்னை உங்களால் யாரென்று அடையாளம் தெரிந்து கொள்ள முடியுமா? அந்த இருட்டு தன்னையும் காட்ட வில்லை; என்னையும் காட்டவில்லை; அங்கே

இருக்கின்ற பொருள்களையும் காட்ட வில்லை; ஆனால் தான் மட்டும் நிரந்தரமாகக் குடியிருக்கும். ஒளி எப்படி நிரந்தரமோ அப்படியே இருளும் நிரந்தரம்.

ஆணவம் இருள் வடிவமுடையது; எளிதாக நீங்காது; சார்ந்திருக்கும் பொருளையும் சிறிதும் காட்டாத் தன்மையுடையது.

__(மாறா)வினை:__

ஆணவத்தால் செயல் நிகழும். அதற்குக் கன்மம் என்று பெயர். கன்மம் இருவகைப்படும். அவை நல்வினை. தீவினை எனப்படும். ஆணவம், கன்மம் நல்வினை, தீவினை என்ற இம்மூன்றும் நம்மை விட்டு எப்போதும் நீங்காத் தன்மையுடையது.

ஆணவம் அறியாமையைத் தரும். நல்வினை சுகத்தையும், தீவினை துக்கத்தையும் தரும். இவை மாறாத் தன்மையுடையன. இவற்றைப் பண்ட மாற்று போன்று மாற்றிக் கொள்ளலாமா? முடியாது. நன்மை செய்தால் சுகமும், தீமை செய்தால் துக்கமும் வருவது என்பது உறுதி.

ஆணவத்துக்கு வாய்ப்புக் கிடைத்தால் நல்லதோ அல்லது கெட்டதோ செய்து கொண்டிருக்கும். அது அதன் இயல்பு. **ஆணவமற்று செயல்புரிந்தால் அதற்குப் பணி என்ற பெயர். ஆணவத்தோடு செய்கின்ற செயல்களுக்கு நல்வினை, தீவினை என்று பெயர்.** திருவள்ளுவர் இத்னை, ''இருள்சேர் இருவினை' என்பார். இருள் என்பது ஆணவம். இருள்சேர் இருவினை என்பது ஆணவம் சேர்ந்த நிலையில் நிகழ்கின்ற இருவினைகள். அதைத்தான் இங்கே ''மாறா இருவினை' என்றார். வினை செய்துவிட்டால் அது மாறாமல் அப்படியே திரும்ப வரும். என்னுடைய அனுபவத்திலே கண்ட உண்மைகளைச் சொல்லுகின்றேன் மாறா மலமிரண்டும் எப்படி நிகழ்கின்றன என்று பாருங்கள்.

ஒருவருக்கு நாளும் ஒரு கைப்பிடி சர்க்கரை, கொடுத்துவிட்டுப் போகிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். இது இனிப்பான செய்தி. இந்த வினை எனக்குத் திரும்பி வரும் போது எப்படி வரும்? காரமாகவா வரும்; இனிப்பாகவே வரும். யாரோ வந்து எனக்கு இனிப்புக் கொடுப்பார்கள். அது இந்தப் பிறவியிலும் நிகழலாம். அல்லது வேறு பிறவிகளிலும் நிகழலாம். அப்படியே காரம் கொடுத்தால் காரமாகவே நமக்குத் திரும்பி வரும். நாம் யாரையாவது துன்புறுத்தினால் நமக்குத் துன்பம் வரும். நாம் பிறரை வாழ்த்தியிருந்தால் நம்மை யாராவது வந்து வாழ்த்துவார்கள். வாக்கினால் பிறரைத் திட்டியிருந்தால் நம்மைப் பிறர் வாக்கினால் திட்டுவர். மனதினால் பிறருக்குத் தீங்கு செய்திருந்தால் பிறர் நமக்கு மனத்தினால் தீங்கு செய்வர். செயலினால் பிறருக்குத் தீங்கு செய்திருந்தால் பிறர் நமக்குச் செயலால் தீங்கு செய்வர்.

சிலர் நாங்கள் யாருக்கும் எந்தக் கெடுதலும் எப்போதும் செய்ததே இல்லை என்று சொல்லுவார்கள். இப்படிச் சொல்பவர்களைக் கண்டால் கோபமே வந்துவிடும் வள்ளலாருக்கு. இவர்களைக் "கயவர்' என்று திட்டுவார். திருவள்ளுவரோ மிகவும் பக்குவமாக, 'தீயவை செய்வார் கெடுதல் நிழல்தன்னை வீயாதடி உறைந்தற்று'' என்றும், ''பிறர்க்கின்னா முற்பகல் செய்யின், தமக்கின்னா பிற்பகல்தாமே வரும்'' என்றும் உறுதிபடச் சொல்கின்றார். ஆனால் பெரிதும் மக்கள் தங்களுக்குத் துன்பம் வரும்போது தாம் முற்பகல் செய்த வினைகளால்தான் இத்தகைய துன்பங்கள் நமக்கு வருகின்றன என்று உணராமல், யாரோ தங்களுக்குத் துன்பம் செய்ததாக எண்ணிக் கொள்வார்களே தவிர உண்மையை உணரமாட்டார்கள். அதுவே நன்மை விளைந்தால் தம்மால் தாம், தம் சாமர்த்தியத்தால் தான் நன்மைகள் விளைந்ததாக எண்ணிக் கொள்வார்கள்.

வினைகள் தாமாக எப்படி நம்மை வந்து சாரும் என்றொரு வினா எழும். நாம் செய்த வினைகளை நமக்கு இறைவன் ஊழாக நின்று உறுத்த ஊட்டுவான் என்பது

திருவள்ளுவரின் தெளிந்த சிந்தனை. ஆகவே செய்த வினைகள் எப்போதும் நம்முடைய நிழல் நம்மைத் தொடருவதுபோலத் தொடர்ந்து வரும். அதனால் செய்கின்ற வினைகளை நல்வினைகளாகச் செய்துவிட்டுப் போவோம். குருவிக்கு இரண்டு அரிசி போட்டால் நமக்கு யாராவது இரண்டு அரிசி போட்டுவிட்டுப் போவார்கள். பசி, பட்டினி வராமல் யாராவதுவந்து காப்பாற்றுவார்கள். ஊழ்வினை எப்படி வந்து நம்மைச் சாரும் என்பதற்கு நடந்த செய்தி ஒன்றைச் சொல்கின்றேன்.

எனக்குப் பத்து, பனிரெண்டு வயதிருக் கலாம். சைதாப்பேட்டையில் குடியிருந்த நேரம். பெரியபாளையம் என்ற பகுதியில் குடியிருந்தோம். அப்பகுதியில் ஒரு தகாத செயல் நடந்தது. ஒரு பெரிய கல்லை எடுத்து ஒரு பிள்ளை இன்னொருவனை அடித்தான். அடிபட்டவன் மண்டை உடைந்தது. பிள்ளை செய்த அடாத செயலை நியாயப்படுத்திப் பேசுகின்றார் பிள்ளையின் அப்பா. மேலும் அடிபட்டவரை ஆதரிக்கவோ ஆதரவு சொல்லவோ அவருக்கு யாருமில்லை. மாறாக, அவரை "ஏன் இங்கே வந்தாய்" என்று திட்டுகின்றனர். அடிபட்டவர் துடித்தும், அலறியும் எவ்விதப் பயனுமில்லாமல் அங்கிருந்து போய்விட்டார்.

பின்னர் எனது 28 வது வயதிலே மீண்டும் அந்தப் பகுதிக்கே குடிவந்தோம். ஒரு நாள் முன்னர் கல்லால் அடித்த பிள்ளையை யாரோ ஒருவர் கல்லால் அடிக்கின்றார். அடித்தது அதே கல். அடித்த இடம் இவன் இன்னொருவரைத் தாக்கிய அதே இடம் . அடிபட்ட பிள்ளையும் , அப்பிள்ளையின் தகப்பனும் கதறிக் கதறி அழுகின்றார்கள். இப்போது அடித்த கல்லும் மாறவில்லை, அடித்த இடமும் மாறவில்லை; அடிபட்ட விதமும் மாறவில்லை. எல்லாமே அப்படியே திரும்ப நிகழ்கின்றது. அடிபட்ட பிள்ளையின் அப்பா துடித்து அழுகின்றார். அவரைத்தேற்றிவிட்டு வீட்டுக்குப் போய் விட்டேன். மறுநாள் அவரைப் போய்ப் பார்த்துப்பேசினேன். "ஐயா, இத்தனை ஆண்டுகளுக்கு முன்னே இதே போல உங்கள் பிள்ளை இன்னொருவரைக் கல்லால் அடித்தானே, அப்போது உங்கள் பிள்ளை செய்தது நியாயம் என்று

சொன்னீர்களே, இப்போதும் அப்படிப்பட்ட நிகழ்ச்சிதான் நடந்தது ஆனால் இப்போது மட்டும் அழுது துடிக்கின்றீர்களே; இந்த நிகழ்ச்சியும் நியாயம் என்று ஏன் நீங்கள் நினைக்கவில்லை'' என்று கேட்டேன். அவர் என்னை மிகவும் கூர்ந்து கவனித்துப் பார்த்துவிட்டு, என் அப்பா பெயர், என் பெயர் இன்னதுதானே என்று கேட்டு நினைவுபடுத்தி கொண்டவர், அந்த நிகழ்ச்சியின் போது நானும் இருந்ததைக் கேட்டுத் தெரிந்து கொண்டார். பின்னர், ''நான் செய்த வினைதான் இப்போது இப்படி நடக்கின்றது'' என மீண்டும் புலம்ப ஆரம்பித்துவிட்டார்.

ஆகவே செய்த வினைகள் எதுவானாலும் காத்துக் கொண்டிருக்கும். நேரம் வரும்போது கூடவே வினைகளும் சேர்ந்து வந்து நம்மைத் தாக்கும். எனவே, கூடுமான அளவிலே பிறருக்குத் தீங்கு செய்யாமல் இருக்கப் பழகுங்கள்.

பெரும் பணக்காரன். பணக்காரன் என்பதற்கான சுகங்களும், பெருமையும் அவனுக்கு இருக்கும். அனால் இரவில் அவனுக்கு நிம்மதியான தூக்கம் இல்லை. இது அவன் செய்த நல்வினை, தீவினைகளுக்கு ஏற்ப நிகழ்வது.

எனவே வினைகள் மாறாது வந்து நம்மைச் சேரும் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள். உங்கள் வாழ்க்கையில் இன்பமும், துன்பமும் வருகின்ற போது, இதற்கான காரணம்என்ன என்று சிந்தித்துப் பாருங்கள். **துன்பம் வருகின்ற போது என்ன தவறு செய்தோம் என்று எண்ணிப் பார்த்துத் தவற்றைத் திருத்திக் கொள்ள முயலுங்கள். நன்மைகளை மேலும் மேலும் செய்ய ஊக்கம் கொள்ளுங்கள். அதிலும் பயன்கருதாப் பணிகளை மேலும் மேலும் யாருடைய தூண்டுதலும் இன்றிச் செய்யுங்கள்.**

வாசொல்லக் கூறில் என்னுமிடத்தில் வா என்பதில் 'ய்' மறைந்திருக்கின்றது. வாய் என்பது வாய்மையைக் குறிக்கும். வா என்பதற்கு வாய் என்று பொருள் கொள்ளக்கூடாதா என்று கேட்கத் தோன்றும். கூடாது. வா - வாய்மை - உண்மை. கூறில் என்றால் கூறுபடுத்திச் சொன்னால் என்பது பொருள்.

அறியாமையின் அடிப்படை ஆணவம். அறியாமை இருந்தால் அங்கே ஆணவம் இருக்கிறது என்று பொருள். "எங்களுக்கெல்லாம் அறிவு இருக்கிறது அதனால் எங்களிடத்தில் ஆணவம் இல்லை" என்று எண்ணுவீர்கள் அறியாமை எந்த அளவுக்கு இருக்கின்றதோ அந்த அளவுக்கு ஆணவமும் கொஞ்சம் அகன்றிருக்கும். அறியாமை அகன்ற அளவுக்கு ஆணவமும் அகன்றிருக்கும்.

ஆணவத்திற்குக் குறியாக (அடையாளமாக) இருப்பது அறியாமை. வினைக்குக் குறியாக இருப்பது நீ பெறுகின்ற சுகமும் துக்கமும். இவை இரண்டுமே அறியாமையினால் விளைவன.

ஆணவத்தால் நல்வினை, தீவினைகள் நிகழும்; அதனால் சுக துக்கங்கள் ஆன்மாவைச் சாரும் என்று பார்த்தோம். அவ்வினைகள் 'மாறாமல் வரும்' என்று ஏன் சொன்னார் என்றார், முன்னே செய்த வினை பின்னாலும், பின்னால் செய்த வினை முன்னாலும் மாறி வராது. முன் செய்தது முன்னேயும், பின் செய்தது பின்னாலும் – இந்த முறைமை மாறாமல் வரும் என்பதால் "மாறா வினை" என்று சொன்னார். ஆணவத்தைப் பற்றியும், வினைகளைப் பற்றியும் சொன்னார். இனி 'நான்' என்பது யார் என்று சொல்லப் போகின்றார்.

**நான் யார்?**

23. ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
மாறா அருளால் வகுத்துரைத்தீர் – வேறாகா
என்னை எனக்கறியக் காட்டீர் இவைகண்டேன்
உன்னரிய தேசிகரே உற்று.

ஆணவத்தின் தன்மை வினையைச் செய்வது. வினையின் தன்மை பயனாக விளைகின்றபோது சுக துக்கமாக வருவது. அதை அனுபவிப்பது நீதான், என்று ஆசாரியார் உணர்த்துகின்றார்.

இப்போது மாணவனுடைய உள்ளத்தில் சிந்தனை உருவாகின்றது. 'அவ்வினைக்கு இவ்வினை ஆமென் சொல்லும் அஃதறிவீர்'' என்ற திருஞான சம்பந்தரின் வாக் நினைவிருக்கும். அதனைச் சொல்லவும் செய்வீர்கள் 'என்ன பாவம் செய்தானோ, இப்படியெல்லாம் அனுபவி கின்றான்'' என்று பிறரைப் பார்த்து அனுதாபப் படுவீர்கள் ஆனால் நீங்கள் சுக துக்கங்களை அனுபவிக்கின்றபோ மட்டும், நாம் நன்மை, தீமைகளைச் செய்திருப்போ என்று எண்ணுவதில்லை. மேலும் இருவினைகளை செய்து கொண்டு இருப்பீர்களே தவிர, ''உய்வினை நாடாதிருப்பது உந்தமக்கு ஊனமன்றே'' என்ற திருவாக் உன்ன மாட்டீர்கள்.

நாங்கள் நல்லதைத்தான் செய் கொண்டிருக்கின்றோம் என்று தெளிவாகச் சொல் வீர்கள். அவர் சொல்லும்போதே, 'அவ்வினைக் இவ்வினை' என்ற போதே இருவினைகளையும் பற்றி தான் சொல்லியிருக்கின்றார் என்பதைத் தெளிந்து கொள் மாட்டீர்கள். 'உய்வினை' என்றதால் இருவினைகளை தவிர வேறொரு வினை இருக்கின்றதென்று உண வேண்டும். அதனை, மூகைவினை செய்து எம்பிரா கழல்போற்றுதும்'' என்று சொல்லுவார். ஆசார்ய நோக்கை உளங்கொண்டு ஒழுகுதல். அப்படிச் செய்தா ''செய்வினை வந்து தீண்டா திருநீலகண்டம்'' என்பா இனிமேல் வினைகளைச் செய்யலாம் என் எண்ணினாலும் உங்களால் செய்ய முடியாது என் பொருள். செய்வினை வந்து தீண்டப்பெற என்றால்இதுவரையில் செய்த தீவினைகள் வந்து தீண்ட என்று பொருளன்று. இனிமேல் வினை செய் வேண்டுமென்று நினைத்தாலும் அந்த வினைகள் வந் உம்மை தீண்டா. இனி, நமக்கு 'இந்தச் செய்திக எல்லாம்வேண்டாம், கடவுள் நமக்கு என்ன சொன்னானோ அதை மட்டும் செய்துவிட்டுப் போவோம், அல்ல இதற்கு எல்லாம் யாரையாவது கேட்டுக் கொள்ளுங்க என்று சொல்லி ஒதுங்கிக் கொள்ளுவோம்.

இப்பாடலுக்குச் சிலர் உரை காணுகின்றபோது 'இப்பாடலைப் பாராயணம் செய்தால் பில்லி, சூனிய

போன்ற வினைகள் உம்மை வந்து தீண்டா' என்று எழுதியிருக்கின்றார்கள். இது பொருந்தாக் கூற்று. பில்லி, சூனியம் பற்றி இங்கு எதுவுமே சொல்லப்படவில்லை. அதற்காக இப்பாடல் பாடப் பட்டதாகவும் எனக்குத் தோன்றவில்லை. பயன்தரும் பதிகங்கள் என்று போட்டு நம்மைப் படிக்கச்சொல்லியிருக்கிறார்கள். பெரிய நிலைக்கு உயர்ந்து போக வேண்டுமென்று நமக்கெல்லாம் இத்தகைய பதிகங்களைப் பாடிவைத்தால் அதனைப் பயன்தரும் பதிகங்கள் என்று கீழ்நிலையில் மக்களைத் தள்ளிவிடுகின்றனர் சிலர்.

நாம் ஏதேனும் வினை செய்தால் அவ்வினையை நம்மால் தீர்க்க முடியாது. செய்வினை திரும்ப வந்தே தீரும். பிறகு செய்வினை தீண்டப் பெறாது என்று சொல்கிறாரே அது எதனால்? என்றால் ஓர் உதாரணத்தின் மூலம் இதனை தெளிவாக்கிக் கொள்ளலாம்.

எனக்கு இளமையிலிருந்தே ஒரு எண்ணம். காசு கீழே கிடந்தாலும், அல்லது வேறு இடங்களில் கேட்பாரற்றுக் கிடந்தாலும் அதனைத் தொடமாட்டேன். காரணம் அது நம்முடைய காசல்ல என்ற எண்ணந்தான். அதை விரும்புவது இல்லை. அப்படிப்பட்ட எண்ணங்களும் எனக்கு வரக்கூடாது என்று எப்போதும் வேண்டிக் கொள்வேன். அப்படி வேண்டிக்கொள்ளலாம்; அதனால் பயனிருக்கிறது என்று பெரியவர்கள் சொல்லியிருப்பதால் அப்படி வேண்டிக் கொள்வேன். ''வேண்ட முழுதும் தருவோய் நீ'' என்று சொல்லியிருக்கிறார் அல்லவா? அப்படி உண்மையானதோர் உணர்ச்சியோடு வேண்டிக்கொள்ள வேண்டும். அது மாதிரிஉணர்ச்சி பிறகு எப்போதும் எனக்கு வந்தது இல்லை. ஒரு நாள் நாம் செய்த வினை வந்து நம்மைத் தீண்டா என்பதற்காக இந்த உதாரணத்தைச் சொல்கின்றேன்.

ஒரு நாள் என்னுடைய அலுவலகத்தில் வேலையை முடித்துவிட்டு (அலுவலகம் அப்போது பர்மாஷெல், இப்போது சென்னை ஹவுஸ்) வருகின்ற போது அண்ணா

மலை மன்றம் அருகில் வந்தேன். அங்கே கத்தை கத்தையாக 100ரூபாய்நோட்டுக்கள் கிடந்தன. இது நம் பணம் அல்ல, நாம் இதை எடுக்கக்கூடாது என்று எண்ணிக் கொண்டு அதைக்கடந்து போய்விட்டேன். 10 அடி நடந்திருப்பேன். இதற்குள் மனதிற்குள் ஒரு சலனம் ஏற்பட்டது. நூறு நூறாகக் கிடக்கின்றதே, அதை ஏன் விட்டு விட்டுப் போக வேண்டும் என்று உள்மனதில் எண்ணம். எடுக்க வேண்டுமென்று திரும்பி விட்டேன். நான் திரும்பி வருவதற்குள் என்னுடைய நண்பர் ஒருவர் வந்து அதன்மேல் காலை வைக்கின்றார். அவர் வரவில்லையென்றால்நான் அதை எடுத்துக் கொண்டிருப்பேன். வேண்டிக் கொண்டது இப்படிப்பட்ட சலனங்கள் ஏற்படக் கூடாது என்று அதில் உறுதியாக இருந்தது உள்ளம். எதுவரையில் என்றால், 5 பைசா, 10 பைசா, ஐந்து ரூபாய், பத்து ரூபாய் என்று சின்ன தொகைகளைப் பார்த்தபோதெல்லாம் அவற்றை உரியவரிடம் எடுத்துக் கொடுத்தது மனது. அல்லது அதைத் தொடாமலே போனது உள்ளம். ஆனால் கத்தை கத்தையாக நூறு ரூபாய்களைக் கண்டதும் மனது சலனப்பட்டுவிட்டது. உண்மையாக நடந்த செய்தியைச் சொல்கின்றேன்.

அவர் அப்பணத்தின் மீது காலை வைத்ததும், அவரிடம் 'நான் அதைப் பார்த்துத்தான் திரும்பி வந்தேன்' என்றேன். ஆனால் அதை விரும்பி வந்தேன் என்று சொல்லவில்லை. அவர், ''அதைப் பிறர் தனதுஎன்று சொல்லிவிடுவார்களோ என்று எண்ணித்தான் அதன்மேல் காலைவைத்தேன்'' என்றார். பின்னர் அதைக் கையில் எடுத்துக் கொண்டார். அவரும் நல்ல உள்ளம் படைத்த அன்பர்தான். ஜானகிராமன் என்று பெயர். பிறர் பொருளை எப்போதும் விரும்பியவர் அல்ல.

நான், போகலாமா என்றுகேட்டேன். அவர், 'இருங்க, அவசரப் படவேண்டாம்'என்று என்னிடம் சொல்லிவிட்டு அங்கேயே இருக்குமாறு கேட்டுக் கொண்டார். மாலை 4.30 மணிக்கு அந்த இடத்திற்கு வந்த நாங்கள் 7.30 மணி வரையில் அங்கேயே இருந்தோம். பின்னர் 8 மணி ஆயிற்று. அப்போதும் நாங்கள் அந்த இடத்தை விட்டு அசையவில்லை. பொருளை

இழந்தவர்கள் அதனைத் தேடிக் கொண்டு வரலாம் என்ற எண்ணத்தால் தான் அப்படிக் காத்து இருந்தோம். யாரும் வரவில்லை. அதற்குப் பிறகு அப்பணத்தைக் கொண்டு ஏழைப் பிள்ளைகளுக்குப் பலகை, புத்தகம் முதலானவற்றை வாங்கிக் கொடுத்தோம். இந்தக் கதையை எதற்காகச் சொன்னேன். இன்னொருவர் காசுக்கு ஆசைப்படக்கூடாது என்று வேண்டிக் கொண்டேன். ஆனால் பொருளைக் கண்டவுடன் அதன் மேல் ஆசைப்பட நேர்ந்தது. சலனம் ஏற்பட்டுவிட்டதில்லையா? ஆனால் நான் செய்த வேண்டுதலுக்கிணங்க, ''செய்வினை வந்து தீண்டப்பெறார்'' என்பதற்கிணங்க, அப்பொருள் வேறொருவர் கண்ணிலும் பட்டுவிட்டது. அதனால் அந்த வினையை என்னால் செய்ய முடியாமல் போய்விட்டது.

மக்களுடைய மன விசித்திரத்தை நினைத்தால் வியப்பாக இருக்கிறது. 100 ரூபாய் பெறுமானமுள்ள பண்டத்தைக் கீழே போட்டுவிட்டு வந்தால் அதை யாரும் தொடக்கூட மாட்டார்கள். ஆனால் அதுவே 5ரூபா நோட்டைப் போட்டுவிட்டுத் திரும்பிப் பார்ப்பதற்குள் யாராவது அதை எடுத்துக் கொண்டு போய்விடுவார்கள். காரணம், பண்டத்தை அவ்வளவு அதிகமாக யாரும் மதிப்பதில்லை; பணத்திற்குத்தான் அவ்வளவு மதிப்பு, வேகம்.

ஆகவே செய்வினை என்பது இதுவன்று. நாம் செய்கின்ற வினைகளை அதன் மேல் மனம்கொள்ளச் செய்யான் இறைவன்.

ஆறாறு தத்துவம் என்று முன்னே சொன்னது ஆசிரியர். இப்போது சொன்னது மாணவர். இப்படிச் சொல்வதற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு. ஆசிரியர் முன்னே சொன்னதை மாணவன் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறான் என்று பொருள். ஆசிரியர் சொல்லிக் கொடுத்த பாடம் என்ன? அதை எவ்வளவு தூரம் நினைவில் வைத்துக் கொண்டிருக்கின்றாய் என்று மாணவனைக் கேட்ட பின்பு மாணவன் எவ்வளவு நினைவில் வைத்திருக்கிறானோ அதைச் சொல்வதைவிட, அவர் கேட்காமலேயே இந்த அளவுக்குச் சொல்லியிருக் கின்றீர்கள், என்று மாணவன் சொல்வது மிகவும் முக்கியம்.

நான் படிக்கின்றபோது நடந்த ஒரு நிகழ்ச்சி. நானும் இன்னொரு மாணவரும் என் ஆசிரியரிடம் பயின்று கொண்டிருந்தோம். அவர்கள் இன்றைக்கு நடத்திய பாடத்தை நாளைக்கு ஒப்புக்க வேண்டும்என்று சொல்லுவார். அப்படியே மறுநாள் வந்ததும் நாங்கள் நேற்றுப் பயின்ற பாடத்தை ஒப்புவிக்கிறோம் என்று சொல்வோம். அப்படியே சொல்லி முடித்துவிடுவோம். அதற்குப் பிறகு இன்னொரு அன்பர் வருவார். பாடம் நடந்து கொண்டு இருக்கும். ''என்ன கோவிந்தசாமி, சொன்னவரையில் பாடத்தை மனப்பாடம் செய்து விட்டீர்களா'' என்று கேட்பார். அவர், ''ஐயா .... ' என்று இழுப்பார். ஆசிரியர், ''அப்படியானால் இன்னும் மனப்பாடம் செய்யவில்லை போல் தோன்றுகின்றது, நம்ம பிள்ளைங்க எல்லாம் பாடம் பண்ணியிருக்க வேண்டாமா, அதுதான் நம் பிள்ளைங்களுக்கு அடையாளம்'' என்பார்கள். இவ்வளவும் சொல்வதற்கு இடம் கொடுக்க வேண்டியதில்லையல்லவா? அதனால் தான் இந்த மாணவர் ஆசிரியர்கேட்பதற்கு முன்னமே கேட்டவரையில் பாடம் இன்னதென்று சொல்லிவிடுகின்றார். எனவே, மாணவர்கள் ஆசிரியர் உணர்த்தியது என்ன? தான் உணர்ந்தது என்ன? என்று ஆசிரியர் மாணவனிடம் கேட்பதற்கு முன்னமே சொல்லிவிட வேண்டும்.

எனவேதான் இந்த மாணவர், 'இவ்வளவெல்லாம் சொன்னீர்கள், 'நான் யார்?' என்பது பற்றி எனக்கு எடுத்துச் சொல்ல வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறார். இதுதான் மிகவும் கடினம். என்னை யார் என்ற கேட்டால் எனக்குத் தெரியாது. அப்படித் தான் உங்களையும் 'நீங்கள் யார்' என்ற கேட்டால் சொல்லத்தெரியாது. 'என்ன இந்த ஐயா இத்தனை நாள் பொறுத்து 'நீ யார்' என்ற கேட்கின்றாரே என்று எண்ணத் தோன்றும். அப்படியே நீங்கள் கேட்டாலும் நானும் உங்களைப் பற்றி அப்படித்தான் எண்ணுவேன். ஆனால் இங்கே மாணவர் ஆசிரியரைப் பார்த்துக் கேட்கின்றார், 'என்னை எனக்கறியக் காட்டீர்' என்று. காட்டீர் என்றால் காட்டுவீர் என்று பொருள். மற்றொன்று காட்ட மாட்டீர்களா என்று வினவுவது போன்றது. என்னை நானே அறிந்து கொள்வதும் என்னைப்

பிறர் அறிந்து கொள்ளுமாறு காட்டுவதும் கடினம். இச்சொல்லை உடன்பாட்டிலும், எதிர்மறையிலும் அமைத்திருக்கின்றார் இந்நூலாசிரியர். அத்துடன் இது கடினமான செய்தி என்பதையும் நினைவுபடுத்துகின்றார்.

குருவின் அருமையும், பெருமையும், தகுதியும் உன்னுதற்கு அரியது. இவற்றையெல்லாம் உற்றுக்கண்டேன். இப்படியெல்லாம் அறிவிக்கின்ற அறிவு எல்லோருக்கும் அமையாது. நீ அருமை உடைய தேசிகன். அதை உன்னி, உற்று என்று அறிவிக்கக் கண்டேன். நீங்கள்தான் சரியான ஆசாரியன் என்று கண்டேன். இவ்வளவு அறிவித்தால்தான் அவர் சரியான ஆசிரியர்.

முதலில் ஆசிரியர் யாரென்று அறிந்து கொள்ள வேண்டும். அப்படி அறிந்து கொள்கின்ற வரையிலும் அறிவிப்பதே பாடம். தன்னை இன்னார் என அறிவிப்பதே பாடம். பாடமாகச் சொல்கின்றபோது, ''நான்தான் தேமொழியார்; நான்தான் உங்களுக்குப் பாடம் சொல்கின்றேன்'' என்று சொல்வதில்லை. இத்தனை செய்திகளையும், கருத்துக்களையும் சொன்னதை வைத்து எண்ணிப் பார்க்கின்றபோது அரிதாய கருத்துக்களைச் சொல்லும் தகுதி உடையவர் இவர். இவர், சராசரி மக்களுடன் ஒத்துப் பார்க்கக் கூடியவர் அல்லர் என்று ஆசிரியனைப் பற்றி மாணவன் உணர்தல் வேண்டும். அப்படி உணர்த்துவதுதான் மிகப் பெரிய தன்மை. அப்படி உணர்த்தாமல் ஏதாவது பாடம் நடத்திக் கொண்டிருந்தால் மாணவன் எதையும் உணர மாட்டன். கேட்க மாட்டான்; உதாசீனப் படுத்தி விடுவான்; அது வெற்றுப் பாடமாகிவிடும். விழலுக்கு இரைத்த நீராகிவிடும். ஆசிரியன் தன்னை உணருமளவுக்குப் பாடம் நடத்திக் கொண்டிருக்க வேண்டும்; அந்தப் பாடத்திற்கு மேல் இருப்பதுதான் பாடம். இது தன்னை உணர்த்தும் பாடம். அப்படியென்றால் தன்னையே விளக்கிக் கொண்டிருக்கவும் கூடாது.

பத்து ஆண்டு காலத்திற்கு முன் நாம் யார் யாரோடு பழகிக் கொண்டு இருந்தோம். அக்காலங்களில் நாம் உணர்ந்தது என்ன? எந்தெந்த ஆசிரியர்களிடம் பாடம்

உணர்ந்தது என்ன? எந்தெந்த ஆசிரியர்களிடம் பாடம் கேட்டோம்; அவர்கள் எல்லாம் நமக்கு உணர்த்தியது என்ன? நாம் அவற்றிலிருந்து உணர்ந்தது என்ன? இத்தனை ஆண்டு காலம் அவர் நடத்திய பாடங்கள் என்ன? சொன்ன கருத்துக்கள் என்ன? இவர் உணர்த்திய உணர்வுகள் என்ன ? உணர்வரிய உணர்வுகள் என்ன? என்ற இவற்றையெல்லாம் உணர்ந்து, தெரிந்து கொள்ளுதல் வேண்டும். அதனால்தான் உற்று உன்னரிய தேசிகன் என்றார்.

உற்று என்பது மிகவும் கூர்ந்து நோக்கித் தெரிந்து கொள்ளுதலாகும். எளிதாகக் காண முடியாது. இப்படி ஆசாரியனை உணர்ந்த மாணவனுக்குத்தான் ஆன்மா என்றால் என்ன என்று உணர்த்த வேண்டும். அப்படி உணராதார்க்கு ஆன்மா என்றால் என்ன என்று உணர்த்தினால் அவர்கள் உணர மாட்டார்கள். கேலி பேசுவார்கள். ஆன்மாவை யார் பார்த்தது என்ற கேலி பேசுவார்கள். ஆகையினாலே பாடத்தை எப்படி நடத்த வேண்டும் என்றதொரு குறிப்பையும் இங்கே உணர்த்துகின்றார்.

'நான் யார்' என்று மாணவர் ஆசிரியரைப் பார்த்துக் கேட்கின்றார். அதே வினாவை நமக்குள் நாமே எழுப்பிப் பார்த்தால் 'யாருமில்லை' என்று ஆகிவிடும். யாரோ சொல்லக் கேட்ட நாம் சொல்லிக் கொண்டும், கேட்டுக் கொண்டுமிருக்கிறோம். நான் என்றால் யார்? இந்தக் கண்ணா, மூக்கா, காதா? இவையெல்லா மில்லையென்றால் நான் என்பது யார்? இந்தச் சீவன். இந்தச் சீவன் எங்கேயிருக்கின்றது. சீவன் என்பது உள்ளே இருக்கின்றது. இப்படி ஒவ்வொன்றாக விளக்கிச் சொல்லிக் கொண்டே வந்த பிறகு இதற்கும் வேறாக இதற்குள் ஒரு பொருள் இருக்கிறது என்பதைத்தெரிந்து கொள்ளலாம். அதுதான் ஆன்மா.

அந்த ஆன்மாவைத்தான் 'நான்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம். இப்படி 'நான்' என்று சொல்லுகின்ற ஆன்மாவின் வடிவம் என்ன? ஆன்மா உரு எது? நான் என்பதன் வடிவம் என்ன?

உரு என்பதற்கு வடிவம், ஒளி என்றும் பொருள். அதைக் காணலாம். ஆனால் அது அருவமாக உள்ளது. எனவே உருவம் என்ற சொல்லிற்கு அருவமும் உருவமும் சேர்ந்திருப்பது என்று பொருள். ஒளியை உருவம் என்றும் சொல்லலாம்; அருவம் என்றும் கொள்ளலாம்.

உருவம் அருவம் என்று எப்படிக் கொள்ளலாம் என்றால் ஒரு பொருளைக் கையால் தொடலாம்: அல்லது கையை வீசினால் அது தட்டுப்படும். அதனால் அதற்குப் பொருள் என்று பெயர். வேகமாகக் கையை வீசினால் காற்று தட்டுப் படும். அப்போத காற்று இருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம். இவற்றிற்கு அருவம் என்பர். நெருப்பு எரியும்போது ஒரு கொம்பையோ அல்லது கட்டையையோ எடுத்து வீசினால் அது நெருப்பினூடே தாராளமாகச் செல்லும். தட்டுப்படாது , நெருப்பைக் கண்ணாலும் காணலாம். ஆனால் அது எதனாலும் கட்டுப்படாமலும் இருக்கும். அதனால் அதற்கு உருவம் என்றும் அருவம் என்றும் பெயர் சூட்டினர். ஆகவே அதனை அருஉரு என்று சொல்லலாம். அருஉருவமாக இருக்கின்ற ஒரு பொருள் நெருப்பு. ஏறக்குறைய நெருப்பு வடிவமாக இருப்பது சீவன். அதுவும் அருவமாகவும், உருவமாகவும் இருக்கிறது. அதனால்தான் இறைவனுக்கும், ஆன்மாவுக்கும் ஒரளவு ஒற்றுமை இருக்கிறது என்றும், ஒன்று சேருகின்றது என்றும் சொல்வர். மொத்தமும் மாறுபாடாக இருந்தால் ஒன்றோடு ஒன்று சேராது.

இறைவன் பேரொளி. சீவன் சிற்றொளி. அவன் பெயராத வடிவம். இவன் பெயருகின்ற வடிவம். அவனுக்கும் ஒளி உண்டு. இவனுக்கும் ஒளி உண்டு அவன் பிரணவ சொரூபன். இவன் பிராண சொரூபன். பிரணவம் என்பதுதான் பிராணன் என வந்தது. இரண்டுக்கும் உள்ள வேறுபாடு தெரிவதற்காகப் பிராணன் என்றும் பிரணவம் என்று கூடியும் குறைந்தும் ஒலிக்கின்றது. அதனால் தான் மூச்சு இருக்கின்ற வரையில் உடம்பில் சூடு இருக்கின்றது. மூச்சு நின்று விட்டால் உடல் சில்லிட்டுவிடும். அப்போது

மூச்சு இருப்பதால் உள்ளே நெருப்பு இருக்கின்றதென்று தெரிந்து கொள்ளலாம். மூச்சுக்குக் 'கால்' என்று பெயர். காலுதல் என்றால் எரிதல் என்று பொருள். 'நிப்பு கால் சுந்தி என்று தெலுங்கில் சொல்வார்கள். இந்த இடத்தில் தெலுங்கைக் கொண்டு வந்து இணைக்கின்றீர்களே எனக் கேட்கலாம். அது தெலுங்கு இல்லை. தமிழ்தான். நெருப்பு என்றால் கால் என்று பொருள். அது உள்ளே போனால்தான் உள்ளே உள்ள மூலக்கனல் எரிந்து கொண்டிருக்கும். இந்தக் காற்று அடங்கினால் உள்ளே உள்ள நெருப்பு அணைந்துவிடும். நெருப்பை மூடி போட்டு மூடிவிட்டால் அணைந்து போய்விடும். ஆகவே உள்ளேயிருக்கின்ற நெருப்பு எரிந்து கொண்டு இருப்பதற்கு உதவியாக இருப்பது மூச்சுக் காற்று. அதனால் அதனைக் கால் என்று சொன்னார்கள்.

   

24. நன்றா உரைக்கக்கேள்; நல்லசித்தன் முன்
அசித்தீங்கு
ஒன்றாத சித்துஅசித்தை ஓராது – நின்றிவற்றை
அன்றே பகுத்து அறிவது ஆன்மாவே என்றுமறை
குன்றாமல் ஓதும் குறித்து.

அசித்து அறியாமை உடையது. அறிவும் அறியாமையும் ஒன்று சேராது. அறிவின் முன் அறியாமை நிற்காது. அறியாமை இருக்கின்ற இடத்தில் அறிவு இருக்காது. அறிவை அறியாமை அறியாது. அறியாமையை அறிவாக இருக்கின்ற இறைவனும் அறிய மாட்டான். அதைப் பற்றிச் சிந்திக்கவும் மாட்டான். அறிவாக இருக்கின்ற இறைவனை அறியாமையும் சென்று அடையாது. எது அறிவு, எது அறியாமை என்று பிரித்து அறிகின்ற தன்மை ஆன்மாவுக்குத்தான் உண்டு. அறிவும், அறியாமையும்தான் ஆன்மாவின் இயல்பு. மிகவும் நுட்பமாகச் சொல்லியிருக்கின்றார்கள்.

ஒரு நல்லவனிடம் இந்த ஊரில் கெட்டவன் யாராவது இருந்தால் அவனை அழைத்துவா என்றார்கள். அவன் ஊரெல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டு வந்து யாருமே கெட்டவர்கள் இவ்வூரில் இல்லையென்று

சொல்லிவிட்டான். அதே போல ஒரு கெட்டவனைப் பார்த்து இந்த ஊரில் நல்லவர்கள் யாராவது இருக்கின்றார்களா என்று பார்த்துவிட்டு வா என்று சொல்லி அனுப்பினார்கள். அவனும் ஊரெல்லாம் சுற்றிவிட்டு யாருமே நல்லவர்கள் இல்லையென்று திரும்பி வந்து விட்டான். இது மகாபாரதத்தில் வருகின்ற கதை. அப்படியானால் இதன் பொருள் என்ன? நல்லவனுக்குக் கெட்டவனைத் தெரியவில்லை; கெட்டவனுக்கு நல்லவனைத் தெரியவில்லை. அறிவுக்கு அறியாமையைத் தெரியவில்லை; அறியாமைக்கு அறிவைத் தெரியவில்லை. அறிவையும், அறியாமையையும் அறியக் கூடிய திறன் உடையது ஆன்மா ஒன்றுதான்.

துப்பறிபவன், திருடன் எப்படித் திருடுவான் என்று திருடன் எண்ணுவது போல் எண்ணி பார்ப்பான். ஆனால்திருட மாட்டான். நேர்மையாளனாக இருப்பான். குற்றத்தைக் கண்டுபிடிக்கக் குற்றத்தைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டும். அந்த அறிவு இருக்க வேண்டும். குற்றம் செய்யாதிருப்பவர்கள் குணமும் தெரிந்திருக்க வேண்டும். இவ்விரண்டு அறிவும் இருக்கின்றவன்தான் ஓரளவுக்கு நீதிபதியாகவும் இருக்க முடியும். வழக்குத் தொடுப்பவன், அதனை எதிர்ப்பவன் இவர்களில் யார் உண்மையைச் சொல்லுகின்றான்; யார் பொய் சொல்கின்றான் என்பதை அப்போதுதான் அவரால் அறிய முடியும். அவன்தான் நீதிபதி. நடுவாக இருந்து நீதி சொல்ல முடியும். அப்படியே ஆன்மாவுக்கும் எது அறிவு, எது அறியாமை என்று அறியும் ஆற்றல் உண்டு. ஆனால் கூடவே ஒரு திண்டாட்டமும் இருக்கின்றது. முதலில் இதற்கு அறியாமை என்பது எப்படியிருக்கும்; அறிவு என்பது எப்படியிருக்கும் என்று யாராவது அறிவித்தாலன்றி அதனால்தானே உணர்ந்து கொள்ள முடியாது. இதனை, ''இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா' என்றார். அறிவுப் பொருளை அறியும் அறிவும் உள்ளது; அறியாமை உடைய பொருள்களோடு ஈடுபட்டு நிற்கும் அறிவும் உள்ளது.

அப்படியானால் ஆன்மாவுக்கு யார் அறிவிப்பார்கள்? இறைவன்தான் அறிவிக்க வேண்டும். இறைவன் அறிவிக்க வேண்டுமென்றால் அவன் ஒளிமயமானவன். ஆணவச் சார்பினால் ஆன்மா இருள்

வடிவானது. இருள் தன்னையும் அறிவிக்காது, தன்னைச் சார்ந்தார்க்கும் அறிவிக்காது. ஒளி இருளை அணுகாதே. எப்படி அறிவிப்பான்?

அதனால்தான் இந்த மானுடச் சட்டையிலே இறைவனது திருவருள் குடியேறுகின்றது. அது சீவன்பால் நின்று அறிவிக்கின்றது. இச்சீவனுக்கு இயல்பாகவே ஆணவம் என்ற ஒன்று இருக்கின்றதல்லவா? இந்த ஆணவத்தைச் சார்பின் தன்மையினாலே 'இதுதான் ஆணவம்' என்ற விளக்கினான். தன்னியல்பில் நின்று அறிவை விளக்கினான்.

இறைவன் குருவாக வந்து தான் சார்ந்ததின் வண்ணத்தில் இருந்து அறியாமையை விளக்கினான். தன்னியல்பால் அறிவை விளக்கினான். அறிவித்தால் அறியக்கூடிய தன்மையது ஆன்மா என்பதால் அதற்கு எப்படி அறிவிக்க வேண்டுமோ அப்படி அறிவித்தான். இறைவன் அநாதி காலம் தொட்டு, இன்று வரையில், இனியும் இந்த உலகம் நின்று நிலவுகின்ற வரையிலும், அளவிறந்த உயிர்களுக்குக் கருணை புரிந்து கொண்டிருக்கின்றான். அவை ஈடேற வேண்டுமென்ற எண்ணத்தால் கருணையினால் எத்தனையோ உபாயங்களைக் கையாண்டு கொண்டிருக்கின்றான். ஆனால் திருவருளுக்கு மாறாகத்தான் இந்த உயிர்கள்போய்க் கொண்டிருக்கின்றன. அவன் ஆணைவழி எவ்வுயிரும் நிற்பதில்லை. ஏன் அப்படிப் போகின்றன?

இந்த வினா இறைவனுக்கே ஏற்பட்டுவிட்டதுபோலக் காண்கின்றது. இந்த ஆன்மாக்கள் என்ன சொன்னாலும் கேட்பதாகவும் இல்லை, என்ன செய்வது என்று இறைவனுக்கும் தெரியவில்லை. ஒரு நகைச்சுவையான செய்தி.

கயப்பாக்கத்தில் உள்ள அன்பர்களோடு எனக்கு 30, 32 ஆண்டுகளாகத் தொடர்பு. அத்தொடர்பு ஏற்படுவதற்கு முன்னர் அங்கெல்லாம் பாரதம், இராமாயணம் போன்றவற்றை மிகவும் விரும்பிக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். தொடர்பு ஏற்பட்ட பின்னர், அவற்றில் எல்லாம் ஒன்றுமில்லை; அதைப் போய் ஏன் கேட்டுக் கொண்டிருக் கின்றீர்கள் என்று விளக்கிய பின்பு

அந்நிகழ்ச்சிகளையெல்லாம் நிறுத்திவிட்டார்கள். இப்போது பெரிய புராணம் போன்ற நூல்களைத்தான் பாடமாகக்கேட்டுக் கொண்டிருக்கின்றார்கள்.

சிறிது காலமாக என்னுடன் தொடர்பு விட்டுவிட்டது. நானும் அதிகமாக அங்கே போவதில்லை. இரண்டு நாட்களுக்கு முன் சில அன்பர்கள் கயப்பாக்கத்திலிருந்து என்னைப் பார்க்க வந்திருந்தார்கள். இப்போது என்ன பாடம் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்று கேட்டேன். நீங்கள் அங்கே வருவதில்லை; பெரிய புராணம் போன்றவற்றைச் சொல்ல யாருமில்லை; அதனால் அனைவரும் கூடி, பாரதம், இராமாயணம் போன்ற நிகழ்ச்சிகளை நடத்த ஏற்பாடு செய்து விட்டோம் என்று சொன்னார்கள்.

இதிலிருந்து என்ன தெரிகிறது. நாம் கொஞ்சம் விலகினால்கூட அன்பர்கள் பழைய இடத்திற்கே போய்விடுகின்றார்கள். இது, 'வேதாளம் முருங்க மரத்தில் ஏறிக்கொண்ட' கதைபோல் இல்லையா; அவர்கள் சொன்னதைக் கேட்ட நான், 'நான் சொன்னதெல்லாம் என்னவாயிற்று' என்று கேட்டேன் . அவர்கள் மிகச் சாதுர்யமாக, 'நீங்கள் சொன்னதையெல்லாம் சம்பிரதாயமாக வைத்துக் கொள்கின்றோம்; ஆனால் அதைக் கடைபிடிக்க வேண்டும் என்று நாங்கள் நினைக்கவில்லை என்று பதில் சொன்னார்கள். இதற்கு என்ன காரணம்? உண்மைகள் கவர்ந்த காலம் போய் இப்போது மாயை கவர்கின்ற காலம் என்பதை உணர்ந்து கொண்டேன்.

இறைவனுடைய அருளாற்றலைவிட, அறியாமையின் (ஆணவ) ஆற்றல் மிகப் பெரியது. அது எதுபோலே என்றால், பெற்ற தாய் தந்தையரின் அறிவுரையைவிட, உடன் பழகும் நண்பர்களின் அறிவுரைகள் பெரிதானது போல. தங்கள் அறிவுரைகளைக் கேட்காத பையனைத் திருத்த வேண்டி, தாய் தந்தையர் அவனுடைய நண்பர்கள் யாரென்று பார்த்து, அவர்களிடம் சென்று, 'அப்பா, நீங்கள் நல்ல பிள்ளைகளாயிற்றே, உங்கள் நண்பன் இப்படிக் கெட்டவனாக மாறிவிட்டானே, நீங்களாவது அவனை நல்ல புத்தி சொல்லித்

திருத்தக்கூடாதா' என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்ள வேண்டிய நிலையைப் போன்றது. ஆனால் பிள்ளை, தன்னை ஈன்றெடுத்து, தனக்காகப் பல துன்பங்களைத் தாங்கிக்கொண்டவர்கள்தன்பெற்றோர்என்பதையும், தான் நன்றாக இருப்பதற்காகத் தானே தனக்கு நல்லபுத்தி சொல்கின்றார்கள் என்பதையும் எண்ணிப் பார்ப்பது இல்லை. அதேபோலத்தான் இந்த சீவனும், எல்லாம் வல்ல பரம்பொருளை மறந்து ஆணவத்தின் சொல்லைக் கேட்டுக் கொண்டு அதன் வழியில்தான் போய்க் கொண்டிருக்கின்றது.

ஆணவம் இந்தச் சீவனுக்கு என்ன ஊட்டுகின்றது; என்ன சொல்லிக் கொண்டு இருக்கின்றது; என்ன வழி காட்டுகின்றது; இந்தச் சீவன் என்ன காரணத்தால் ஆணவத்தின் வழி நிற்கிறது என்று இறைவனுக்குப் புரியவில்லையாம். அதனால் இறைவன் என்ன செய்கின்றான் என்றால் அந்த ஆணவத்தில் வந்து உட்கார்ந்து கொள்கின்றான். இறைவனது இயல்பு ஆடுவது. ஆணவத்தில் வந்து அமர்ந்தவன் தன்னியல்பில் ஆடுகின்றானாம். ஆனால் தன்னியல்பில் ஆடுகின்றவன் அந்த ஆணவம் எப்படி ஆடுகின்றதோ அப்படி ஆடுகின்றானாம். ஆணவத்தோடு ஆடுகின்றானாம். அப்போது அந்த ஆணவம் இறைவனைப் பயன்படுத்திக் கொண்டு ஆன்மாவுக்கு வழி காட்டுகின்றதாம். அது எப்படி வழிகாட்டுகின்றதென்று கண்காணிக்கின்றான். எங்கேயிருந்து கண்காணிக்கின்றான்; இந்தச் சீவனுக்குள்ளே, ஆணவத்தில் இருந்து கொண்டு அதனுடனே அசைந்து ஆடி, அந்த ஆட்டத்தின் மூலமாக இந்த ஆணவம் ஆன்மாவுக்கு என்ன உணர்த்துகின்றது என்று உணர்ந்து, பிறகு தனியே நின்று ஆடி ஆன்மாவுக்கு உணர்த்துகின்றான். இதனை,

'நள்ளிருளில் நட்டம் பயின்று ஆடும் நாதனே
தில்லையுள் கூத்தனன் தென்பாண்டி நாட்டானே'

என்று உணர்த்துவார் மணிவாசகர். அவன் எப்போதும் தில்லையில் கூத்தாடிக் கொண்டுதான்இருக்கின்றான். ஆனால் அவன் இங்கே வரும்போது ஆணவத்தில் நின்று,

அதன் இயக்கத்தைப் பயின்று ஆடுகின்றான். ஏன் பயின்று ஆடவேண்டும் என்றால் இந்த ஆன்மாவுக்கு ஆணவம் என்னசொல்லுகின்றது என்று தெரிந்து கொண்டால்தானே அதனைப் பயிற்றுவிக்க முடியும், அதனால் ஆன்மாவுக்கு ஆணவம் என்ன சொல்லுகின்றது என்பதைத் தெரிந்து கொள்ளுதல் வேண்டி, ஆணவத்தின் விளிம்பில் நின்று கொண்டு, அதன் ஆட்டத்தைப் பயின்று, அது ஆன்மாவுக்கு என்ன சொல்லுகின்ற தென்பதைப் பயின்று, அந்த வழியில் சென்று ஆன்மாவுக்குத் தன் வழிமுறைகளைப் பயிற்றுவிக்கின்றான்.

எனவே ஆணவத்தின் விளிம்பில் நின்று ஆணவம் ஆன்மாவுக்கு என்ன உணர்த்திற்று என்று உணர்ந்து ஆன்மாவுக்கு அறிவித்தான். தன்னியல்னபில்நின்று அதையும் ஆன்மாவுக்கு அறிவித்தான். இந்த இரண்டையும் அறியும் தன்மை உடையது ஆன்மா. இதுவே ஆன்மாவின் வடிவம்.

அருவம், உருவம் இரண்டுக்குமே நெருப்பு பொது வானது என்று சொல்லலாம். காரணம் அது ஒளிமையமாக இருக்கின்றது; க ண்ணுக்குத் தெரிகின்றது. தடையின்றி இருப்பதால் அருவம் என்றும், கண்ணுக்குத் தெரிவதால் உருவம் என்றும் சொன்னார்கள். இந்த இரண்டு தன்மைகளும் கொண்டது ஒளி அல்லது நெருப்பு. ஒரு திருமுறைப்படலில் இதற்கான விளக்கம் வருகின்றது.

காணுதஅருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ் குறியாம்
சிவலிங்கம்

என்று சிவலிங்கத்தை இதற்கு உதாரணமாகச் சொன்னார்கள். சிவலிங்கத்தின் வடிவம் என்ன? அது உருவுமல்ல, அருவுமல்ல, நெருப்பைக் குறிக்க எழு,ந்த ஒரு குறியீடு. ஆதிகாலத்தில் மனிதன் நெருப்பைத்தான் வணங்கினான். அந்த நெருப்பை எப்போதுமே வைத்துக் கொண்டு வணங்க முடியாது. சில சமயம் அது அணைந்து விடும் தன்மையுடையதாயிருப்பதால் அதற்கொரு அடையாளம் அல்லது குறியை வைத்தான். நெருப்பைக்

குறியாக வைத்து வணங்கியதற்கு இதுதான் காரணம். நெருப்புக்குக் குறி ஏதுமில்லை. காது, கண், மூக்கு என்று எதுவுமில்லை. மேலெழுந்து போகும் தன்மையது. ஆகவே அருவத்துக்கும், உருவத்துக்கும் ஓர் அடையாளமாக வைத்தார்கள்.

எனவே இந்த ஆன்மாவின் உரு அருவமும், உருவமுமாக இருக்கின்றது.

°°° °°° °°° °°° °°° °°°

**25.** தத்துவங்கள் ஆறாறும் தம்மைத்தாம் என்றறியா
எத்தன்மை என்னில் இயம்பக்கேள் – சுத்தமாம்
ஆறுசுவையும் அறியாவே தம்மைத்தாம்
கூறில் அவையிவை போற் கொள்.

இதுவரையில் தத்துவங்களைப் பற்றிப்பேசிக் கொண்டு வந்தோமே அத்தத்துவங்களுக்குத் தம்மைத்தாம் அறியும் தன்மை கிடையாது. அவை அறிவற்ற பொருள்கள் . கண்ணுக்கு அறிவில்லை, ஆனால் காணுகின்றது. காதுக்கு அறிவில்லை. ஆனால் கேட்கின்றது. வாய்க்கு அறிவில்லை, ஆனால் பேசுகின்றது. 36 தத்துவங்களும், 60 தாத்துவீகங்களும் அறிவற்றவை.

இது எப்படியென்றால் ஒரு சிறு உதாரணத்தால் இதனை விளங்கிக் கொள்ளலாம். சுவையை எடுத்துக் கொள்வோம். சுவை தன்னைத்தானே அறிந்து கொள்ளாது. அதனை அறிந்து கொள்ள ஒருவர் வேண்டும். நாக்குத் தான் சுவையை அறிகின்றது என்றால் நாக்குக்கு அறிவிருக்கிறதா? இல்லை. நாவில் சுவையை அறியுமாறு செய்வது உள்ளே இருக்கின்ற சீவன் இதை எப்படி உணர்வது என்றால் இந்த உடலுக்குள் இருக்கின்ற சீவன் இருக்கின்ற வரையில் சுவையை உணர்கின்றோம். ஆனால் இச்சீவன்பிரிந்துவிட்ட பின்பு நாக்கு சுவையை உணருமா? அதில் காரத்தையோ, இனிப்பையோ வைத்தால் அது சுவைக்குமா? சுவைக்காது. சுவை எப்படித் தன்னைத்தானே அறியாதோ அப்படியே தத்துவங்களும்

தம்மைத்தாமே அறியா. உணர்த்தினாலும் உணரா. ஆனால் மாணவனாகிய நீ, தத்துவங்களுக்குள் குடியிருக்கின்ற நீ உன்னையே அறிய மாட்டாய்; உணர்த்தினால்தான் உணர்வாய் என்பது இப்பாட்டின் கருத்து.

இவையெல்லாம முழுமையாகச் சொல்லப் பட்ட உவமைகள் அல்ல. ஏறக்குறைய முக்கால் அளவுக்குப் பொருந்தி வருகின்ற உண்மைகள். உவமைகள். இந்த அளவுக்குத்தான் சொல்ல முடியும்.

இன்னும் சற்று விளக்கமாகப் பார்க்கலாம்.

''இவன் என் பிள்ளை'' என்று நமக்கு அறிமுகப்படுத்துகிறார் ஒருவர். ஞானிகளாக இருந்தால் இதைக் கேட்டுச் சிரிப்பார்கள். பிள்ளை என்று சொன்னாரே, எதைப் பார்த்துச் சொன்னார்? இந்த உடலைப் பார்த்துத் தன் பிள்ளை என்றாரா? இதற்குள் இருக்கின்ற உயிரைப் பிள்ளை என்றாரா?

இந்த உயிர் யார் யாருக்கோ பிள்ளையாக இருந்து வந்தது. யார் யாருக்கோ தந்தையாக இருந்து வந்தது. யார் யாருக்கோ நண்பராக இருந்து வந்தது. யார் யாருக்கோ எதிரியாக இருந்து வந்தது. எனவே அனைவரும் இந்த உடலைப் பார்த்துத்தான் என் பிள்ளை என்றும். என் மனைவி என்றும், என் கணவன் என்றும் சொல்லிக் கொண்டிருக்கின்றார்கள்.

அப்படி யாரேனும் இந்த உயிரைப் பார்க்க நேரிட்டால், இதன் முற்பிறவி பற்றித் தெரிந்து கொண்டால் பெரிதும் இதனை விரும்ப மாட்டார்கள். ஏன்? முற்பிறவியில் இப்பிள்ளை உங்களுக்குக் கடன் கொடுத்தவனாக இருந்திருக்கலாம். அக்கடனைத் திருப்பித் தராமல் நீங்கள் இறந்து, இப்பிறவிக்கு வந்திருக்கலாம். இந்த உண்மையைத் தெரிந்து கொண்டால் நீங்கள் அவனை வீட்டில் வைத்திருக்க மாட்டீர்கள். விரட்டிவிடுவீர்கள்.

சில பிள்ளைகள் தந்தையாரைப் பார்த்து, ''நீங்கள் கவலைப் படாதீர்கள் அப்பா, நான் பார்த்துக்

கொள்கின்றேன்'' என்று தேறுதல் சொல்லிப் பொறுப்புக்களை தாங்களே ஏற்றுக் கொள்வார்கள். அவன் சம்பாதித்து நமக்குக் கொடுப்பான். இதிலிருந்து அவன் முற்பிறவியில் நம்மிடம் கடன் வாங்கியவன், இப்போது அதனைத் திருப்பிக் கொடுக்க வந்திருக்கின்றான் என்று உணர்ந்து கொள்ளாலாம். மாறாக, ''இருக்கிறதை யெல்லாம் என் பெயருக்கு மாற்றிக் கொடு, இல்லாவிட்டால் தொலைத்துவிடுவேன்'' என்றால் அவன் முற்பிறவிகளில் நமக்குக் கடன் கொடுத்தவன் என்று பொருள்.

ஆன்மா என்றால் என்ன என்று நம்மால் தெரிந்து கொள்ள முடியவில்லை. மேலும் ஆன்ம உரு என்று இந்த உடம்பில் இருந்து கொண்டிருக்கின்றோம். இந்த உடம்பில் இருக்கின்றபோது சில விஷயங்கள் நமக்குத் தெரியவில்லை. அல்லது தெரிந்தும் தெரியாமலும் இருக்கிறோம். இதை விளங்கிக் கொள்ள ஒரு உதாரணத்தைச் சொல்கின்றேன்.

ஒரு சாதாரணஆள். நாடகத்தில் நடிக்கின்றான். இராம ர ாக வேடம் தாங்கி மேடைக்கு வருகின்றான். இயல்பாக அவன் கோபம் உள்ளவன். ஆனால் நாடகத்தில் இராமன் வேடம் தாங்கியபின், கோபமாக நடிக்க முடியுமா? வேடத்திற்கு ஏற்ப சாந்தமாகத்ததான் பேசுவான். அவன் அவ்வேடத்தைக் கலைத்து விட்டு அனுமார்வேடம் தாங்கினால் சமாதானமாகவா இருப்பான்? வீராவேசமான பேச்சுக்களும், கடலைத் தாண்டுவதும், வனத்தை அழிப்பதுமாக இருப்பான் ஆள் ஒருவன். வேடங்கள் பல தாங்கும் போது, வேடங்களுக்கு ஏற்ப நடிக்க வேண்டியிருக்கின்றது.

அப்படியே, சீவன் ஒன்றுதான். இது வந்த பிறவிக்கு ஏற்றவாறு நடிக்க வேண்டியிருக்கின்றது. நாமெல்லாம் பல பிறவிகள், பல உடல்களில் வாழ்ந்தவர்கள்தாம். அந்தந்த உடலில் வாழ்ந்தபோதும் இருந்த உணர்ச்சிகள் இப்போதும் நம்மிடத்தில் இருக்கின்றன,

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய்மனித ராய்ப்பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகிமுனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்
எம்பெருமான் ...

என்பார் மணிவாசகர். அப்படி எல்லாப் பிறப்பிலும் வருகின்ற நேரத்தில் அவர் விலங்கிலும் வாழ்ந்திருந்தார் என்று தெரிகின்றது. இப்போது காணப்படுகின்ற மணிவாசகரா அப்போது இருந்திருப்பார்; புலி வடிவத்தில் இருந்த போது எத்தனை மிருகங்களை அடித்திருப்பார்: 'மணிவாசகரா அப்படிச் செய்திருப்பார்?' என்ற வினா எழும். இப்போது அவர் மணிவாசகர். இதற்கு முற்பிறவிகளில் அவர் எந்த வடிவத்தில் இருந்தார் என்று யாருக்காவது தெரியுமா? அப்படியில்லாமல் அவர் எந்த வடிவத்தில் (புலி , சிங்கம், மான்) இருந்தாரோ, அந்த வடிவத்துக்கு ஏற்ப அவர் செயல்பட்டிருக்கவில்லை என்றால், வேடத்துக்கு ஏற்றவாறு நடிக்கத் தெரியாதவர் என்றாகிவிடும். அவர்கள் நாடகத்திற்கு ஏற்றவர்கள் அல்ல.

இப்போது நாம் மனிதச் சட்டைக்குள் ஒளிந்திருக்கிறோம். ஆயினும் முற்பிறவியில் எடுத்த விலங்குகளின் இயல்புகள் நம்மிடத்தில் இன்னும் மாறாமல் அப்படியேதான் இருக்கும். உதாரணமாக, "நான் இப்படியிருக்கிறேன் (சாந்தமாக) என்று பார்க்கின்றீர்களா? என்னைச் சீண்டி விட்டுவிட்டால் மிருகமாக மாறிவிடுவேன்" என்று எத்தனை பேர் சொல்லக் கேட்டிருக்கின்றோம்.

ஆகவே மனிதனுடைய உணர்வுகள் இந்த மனிதப் போர்வையிலே மறைந்து கிடக்கின்றனவே தவிர அவனுடைய உண்மையான தன்மைகள் வேறு. தன்மைகளை மாற்றுவதற்காகவே இந்த போர்வைகள் பலவாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

ஆகவே ஆன்ம உரு நம்மால் அறிய முடியாத ஒன்று அதை அறிவித்தவர் ஆசார்யர்.

ஆன்மா அறிவுடையதா? ஆனமாவின் உரு அறிவு உடையதன்று. சரி, அறியாமையுடையதா என்றால் அதுவுமில்லை. ஆன்மாவிற்கு அறிவுமில்லை; அறியாமையுமில்லை.

நல்ல அறிவாக (சத்தாக) இருப்பவன் இறைவன். அசத்தாக இருப்பவன் இந்த ஆன்மா. ஆன்மா அறிவற்றது என்னில் நல்ல சத்தின் முன் அசத்து ஒன்றாது. அப்படியானால்ஆன்மா அறிவுடையதா என்னில் அதனிடத்தில் அசத்து என்ற அறியாமை இருக்காது. இரண்டும் கலந்தே இந்த ஆன்மா. அறிவித்தால் அறியக்கூடிய தன்மையுடையது. எனவே அது சத்தாகவும் இருக்கின்றது; அசத்தாகவும் இருக்கின்றது. அதுதான் ஆன்மாவின் உரு என்று ஆன்மாவைப் பற்றி அறிவுறுத்தினார் ஆசிரியர்.

❋ ❋ ❋ ❋

26. ஆறு சுவையும் அருந்தி அவைதம்மை
வேறொருவன் கூறியிடும் மேன்மைபோல் –
ஆறாறும்
ஒன்றொன்றா நாடியுணர்ந்து ஓதில் அதில் உற்று
அறிவாய்
நின்றபொருள் தானேகாண் நீ.

சுவை தம்மைத்தாமே அறியாவிட்டாலும் அச்சுவையை அருந்தி உணர்ந்தவன் சொன்னால் உணர்ந்து கொள்ளலாம்.

ஒரு பையன் மிகவும் மந்தனாக இருக்கின்றான். அதற்கு என்ன செய்வது என்று கேட்டார் தந்தை. மருத்துவர் இன்னின்ன காய்கறி, பழம் கொடுங்கள், இன்னின்ன உணவு வகைகளைக் கொடுங்கள் என்று சொன்னார். இவ்உணவுப் பண்டங்கள் பலவாக இருப்பினும் அவற்றுள் நிறைந்து விளங்கும் சக்தி ஒன்றுதான். அப்பண்டங்களை

உண்டால், அச்சக்தி உடம்பில் வெளிப்படும். அவ்வளவுதான்.

உணவில்தான் அறிவில்லையே, அறிவற்ற உணவிலே அறிவு எப்படி வந்தது? ஆய்ந்தது ஆய்ந்து போகின்ற போது அதனுள்ளே கடைசியாக இருப்பது அறிகின்ற ஒரு பொருள். அப்பொருள்தான் நான். 'எல்லாப் பொருளாகவும், அதன் ஆற்றலாய், இயக்கமாய், அதன் விளைவாய் அதனுள் நிறைந்திருப்பது போல எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்றேன்.' என்றார் ஆசிரியர்.

## ஆசிரியர் என்றால் யார்?

ஆன்மாவுக்குச் சொல்ல வந்தவர் உணர்த்த வந்தவர் அவர் ஏன் ஆன்மாவுக்கு முன்னர் தோன்றினார் என்றால் இந்த் ஆன்மா விரும்பியதால் அவர் வந்தார். நான் இப்போது விரும்பவில்லையே என்றால் இப்போது விரும்பாமல் இருக்கலாம். ஆனால் முன்னே விரும்பியிருக்கலாம். எப்போதும் யாரும் விரும்பாமல் அவர்கள்முன் யாரும் வருவதில்லை. எதிர்ப்படுவதும் கிடையாது. நாம் ஒரு பொருளைப் பற்றிப் பலகால் எண்ணுகின்ற போது அந்த எண்ணத்தினுடைய உந்துதல், அதன் தாக்கம், அதைத் தெரிவிக்கின்ற ஒருவரை அவர்கள் முன்னே கொண்டு வந்து நிறுத்தும். இப்படித்தான் வாழ்வில் ஒருவரை யொருவர் சந்திக்கின்றோம். அதுதான் வாழ்க்கை. சந்திப்பு இப்படித்தான் நிகழும். வேட்கை எழுகின்ற போது வேட்கைக்குரிய பொருள் முன்னே வந்து நிற்கும்.

நாக்கு வழியாகச் சுவைகளை உள்ளே இருக்கின்ற சீவன் அறிந்து கொள்ளுகின்றது. அதுபோலத் தத்துவத்தின் வழியே நமக்கு இறைவன் அறிவிக்கின்றான்.

இதோடு நிறைவு பெற்ற மாணவர் ஒரு கருத்தைத் தெரிவிக்கின்றார்.

❋ ❋ ❋ ❋ ❋

27. குன்றா அருளாலே கூறினீர் என்வடிவு,
பொன்றாத நும்உருவம் போதியீர் – நின்றருக்கன்
கண்ணுக்குக் காட்டுமாப் போலே உனது அறிவில்
நண்ணி அறிவித்திடுவோம் நாம்.

என்னுடைய வடிவத்தைப் பற்றிச் சொல்லிவிட்டீர்கள். உங்களுடைய உருவம் எப்படிப்பட்டது என்று அறிவியுங்கள் என்று கேட்கின்றார். பொன்றாத – என்றால் அழியாதது. உங்கள் வடிவம் அழியாதது. அப்படியென்றால் முன்னிருந்து போதித்துக் கொண்டிருந்தவன் அழியக்கூடிய பொருளல்ல என்று தெளிவாகத் தெரிகின்றது. அதனாலே 'பொன்றா வடிவம் நீரென்றும்', 'பொன்றும் வடிவம் நானென்றும்' தெரிகின்றது.

உலகத்தில் சுட்டி அறியப்படும் எந்தப்பொருளும் அழியும். ஆனால் நும் வடிவம் என்று சுட்டுகின்ற காரணத்தினாலே அதுவும் அழிய வேண்டியதுதானே! சுட்டப்படும் பொருள் அழிந்துவிடும். தோன்றிய பொருளைத்தான் சுட்டவும் முடியும். தோற்றமற்ற பொருளை சுட்டிக் காட்ட முடியாது. ஆனால் இறைவனுடைய கருணையினாலே இந்த நியதியைச் சிறிது மாற்றி, நாம் சுட்டும் வண்ணம் அவன் சில நேரங்களிலே தோன்றுகின்றான். திருஞானசம்பந்தப் பெருமானுக்கு சுட்டிக் காட்டும் வண்ணம்தோன்றினான். யாரும் சுட்டியறிய முடியாத பரம்பொருள், அவர் பொருட்டு இறங்கி வந்து, அவரால் சுட்டுமாறு காட்சியளித்தான். 'சுட்டினொடு காட்டும் திருஞானசம்பந்தர்' என்று பிறரால் சுட்டக் கூடிய வாய்ப்பும் இருந்தது.

அப்போது இந்த மாணவனுக்குப் போதனை செய்து கொண்டிருக்கின்ற ஆசிரியர் சராசரி மனிதர் அன்று. இறைவனே குருவாய் எழுந்தருளியிருக்கின்றான். அவன் குருவாக எழுந்தருளுகின்ற போது அவன் 'பொன்றாதவன்' என்று உணருகின்றார் மாணவர். ஏன் அவன் மட்டும் பொன்றாதவனாகிறான்?

மாணவனைப் பொன்றா (அழியா) நிலைக்கு உயருமாறு அறிவுரைகளைச் சொல்லிக் கொண்டிருக்கிறான். அவனுடைய அறிவுரையை நாம்

கேட்கவில்லை யென்றால் குன்றிவிடுவோம்; அழிந்துவிடுவோம். அவன் அறிவுரையைக் கேட்பதால் மரணமிலாப் பெருவாழ்வை அடைவோம்.

ஆசாரியர் மாணவனுக்கு எந்த வகையில் இருந்து போதிப்பார்? சூரியன் தன்னொளியால் அனைத்துப் பொருள்களையும் கண்ணுக்குக் காட்டுவது போல மாணவனின் அறிவில் நெருங்கியிருந்து அறிவிப்பார். மாணவன் அப்போது போதப் பொருளாக இருப்பான். ஆசாரியர் போதிக்க வேண்டியதை அருவமாக இருந்து போதிப்பார். ஒளிநிலையில் இருந்து போதிப்பார். மாணவனுடைய அறிவில் அருவமாக நின்று உணர்த்துவார். அறிவு அருவம். ஆசாரியரும் அருவம். அருவமான பொருளிலே அருவமான பொருளும், பருப்பொருளிலே பருப்பொருளும் சேரும். இது இயற்கை நியதி.

அப்படியானால் மனித வடிவத்தில் ஆசாரியர் வரமாட்டாரா? ஆசாரியர் பருப்பொருளாக இருந்தாலும் அவர்போதிக்கின்ற போதப் பொருளாகிய உண்மை அருவமாக இருக்கின்றது. நாளும் நாளும் அதைக் கேட்டு கேட்டு அது எந்த போதனையாக இருந்தாலும் சரி, அதனைக் கொஞ்சங்கொஞ்சமாகக் கேட்டுக் கேட்டு, கேட்டதன் வடிவமாகிவிடுவான் மாணவன் அல்லது சீவன்.

சிலர் 'யார் என்ன சொன்னாலும் அதை நாங்கள் எங்கள் அறிவால் எடை போட்டுவிடுவோம்' என்பார்கள். அப்படி எடை போட்டுவிட முடியாது. முதலில் எடைபோடுவதுபோல எடைபோட்டுக் கொண்டே வருவார்கள். பின்பு இவர்கள் எடைபோட்டுக் கொண்டே வருகின்றபோது இவர்கள் அறியாமலேயே ஆசாரியர் இவர்கள் அறிவில் எடையாக நின்றுவிடுவார். அதன் பின்னர் இவர்கள் எதைப் பார்த்தாலும், எதைக் கேட்டாலும் ஆசாரியரின் பார்வையினாலேதான் பார்த்துக் கொண்டிருப்பார்கள். என்னதான் மெய்ப்போதம் கேட்டுக்கொண்டு இருந்தாலும், உள்ளே பொய்ப்போதம்

அல்லது சீவபோதம் இருந்து கொண்டே இருக்கும். ஆணவம் உள்ளே இருந்து கொண்டு இந்தச் சீவனுக்குப் போதித்துக் கொண்டேயிருக்கும். அந்தச் சீவ போதத்தினாலே மனம் என்ன நினைக்கின்றது என்றால் "என் மனதிலிருந்து எல்லாம் உதிக்கும், நானே சிந்திப்பேன், எனக்கு அறிவு இருக்கின்றது" என்றெல்லாம் சொல்லுமாம். இதனைத் திருவள்ளுவர் ஒப்புக் கொள்ள மாட்டார்.

மனத்துளது போலக் காட்டி ஒருவற்கு
இனத்துளது ஆகும் அறிவு.

என்பார். இது எப்படியென்றால் ..

"நீ எந்த இனத்தோடு பழகிக் கொண்டிருக்கிறாயோ அப்பழக்கங்கள் உன்னைக் கவரும். நாத்திகரோடு பழகினால் நாத்திகக் கருத்துக்கள் உன்னைக் கவரும். ஆத்திகரோடு பழகினால் ஆத்திகக் கொள்கைகள் உன்னைக் கவரும். பொது உடைமைக் கொள்கையாளர்களோடு பழகினால் அக்கொள்கைகள் உன்னைக் கவரும். சமயக் கொள்கையாளர்களோடு பழகினால் உன்னையறியாமல் சமயக் கொள்கைகள் கவரும்.'பிறப்பிலேயே யாரும் ஆத்திகராகவோ, நாத்திகராகவோ, பொது உடைமைக் கொள்கைக்காரர்களாகவோ பிறப்பதில்லை. பிறந்த பிறகு வளருகின்ற சூழலுக்கேற்பத்தான் அந்தக் கொள்கைகள் வளர்ந்து, அக்கொள்கையாளனாக வளர்கின்றான் மனிதன்.

அதேபோலத்தான் இங்கே"உன் அறிவில் நாமே அறிவித்து விடுவோம், உண்மைப் பொருளை அறிவிப்போம், ஆகையால் நீ போதப் பொருளாம் மெய்" என்று சொன்னார். மெய் என்றால் சீவன். அந்தச் சீவன் மெள்ள மெள்ள போதப் பொருளை ஏற்கும். முதலிலே மறுக்கும். போகப் போக ஏற்கும்.

உதாரணங்கள் பல சொல்லலாம். ஒன்றை மட்டும்சொல்கின்றேன். எத்தனையோ துறவிகளைச் சந்தித்த விவேகானந்தர், அவர்களையெல்லாம் விடை சொல்ல முடியாமல் திணறிய துறவிகளையும், சாதுக் களையும் உதாசீனமாகப் பேசினார். அச்சூழலிலேயே

பழகிக் கொண்டே வந்தவர் ஒரு நிறைவான துறவி எதிர்ப்பட்டவுடனே அப்படியே அவரை ஏற்றுக் கொள்ளவில்லை. பின்னர் நிறைவான பின் ஏற்றுக் கொண்டார். அப்படி ஏற்றுக் கொண்டவர்தாம் இராமகிருஷ்ணர். அவரையே முதன் முதலில் சந்தித்திருந்தால் ஏற்றுக் கொண்டு இருப்பாரா என்பதும் ஐயந்தான். காரணம் பலரிடத்தே கேட்டுக் கேட்டு அந்த விடைகள் யாவும் மனதில் ஒரு நிறைவைத் தர முடியாத நிலையிலே இராமகிருஷ்ணரைச் சந்திக்கின்றார். அப்போது அவர் சொல்லுகின்றதை ஏற்றுக் கொள்ளுகின்ற மனப்பக்குவம் வந்துவிட்டது. அதுதான் உண்மை என்று நான் நினைக்கின்றேன்.

தரையில் ஆழமாகவும், பலமாகவும், அசைக்க முடியாமலும் ஒரு குச்சி அழுந்திக் கிடக்கின்றது. பலர் அதனை அசைத்து அசைத்துப் பார்த்தும் நம்மால் முடியாதென்று ஒதுங்கிப் போனபின்பு ஒருவன் வந்து அசைக்கும்போது குச்சி எளிதாக வந்துவிடும். அப்படியானால் அவன்தான் பலசாலியா? இல்லை. பலரும் வந்துஅசைத்து அசைத்து அது எளிமையான பின்பு கடைசியாக வந்தவன் சிறிது பலம் கொண்டு அசைத்ததும் குச்சி வெளியே வந்துவிடுகின்றது. இதுதான் உண்மை. அப்படித்தான் பல துறவிகளிடமும், சாதுக்களிடமும், வினாக்களை எழுப்பி, அவர்கள் சொன்ன விடைகளைக் கேட்டு ஏற்பட்ட தெளிவை ஏற்றுக் கொண்ட நெஞ்சம், கடைசியாக இவரிடம் நிறைவை ஏற்றுக் கொண்டுவிட்டது என்று கொள்ள வேண்டுமேயல்லாது இதற்கு முன்னே சொன்ன விடைகள் அடிப்படை இல்லாதவை என்று நினைக்கக் கூடாது.

ஆகவே மனம் நிறைவு கொள்ளுவதற்கு முன்னே பல செய்திகள் அவர் மனதிலே தெளிவாகியிருக்கின்றது. அதற்குத்தான்போதப் பொருள் என்று பெயர். எனவே, 'நல்லதோ கெட்டதோ, சொல்லுவதை ஏற்றுக்கொள் ளுவாய்' என ஆசாரியர் உபதேசிக்கின்றார்.

எனவேதான் நம் நாட்டில் பிள்ளைகளுக்கு இளம் வயதிலேயே நல்ல கருத்துக்களையே போதிக்க

வேண்டுமென வைத்திருக்கின்றார்கள். ஆரம்பத்தில் இருந்து நல்லதையே போதித்துக் கொண்டு வந்தால், இடையில் கொஞ்சம்மாற்றங்கள் ஏற்பட்டாலும் மீண்டும் நல்ல நிலைக்கு வந்துவிடுவான்.

சூரியன் எப்படி ஒளியாகவும், கண்ணுக்குள் ஒளியாகவும் கலப்பதுபோல நாம் உன் அறிவுக்கு அறிவாக இருந்து அறிவிப்போம் என்கிறார் ஆசாரியர். அப்போது இதை இறைவன்தான் அறிவிக்கின்றான் என்று பொருள். ஏனென்றால் இங்கே அருக்கனை உதாரணத்திற்குக் காட்டியிருக்கின்றார். அருக்கன் ஒளி மயமானவன். இறைவன் ஒரு சீவனுக்குள்ளே நின்று காட்டுகின்றான். அவனாக நேராக வந்து காட்டக் கூடாதா என்றால், மனிதனோடு பழக ஒரு மனிதனாகத்தான் வர வேண்டும். அப்படியே ஒரு ஒளி வடிவமாக வந்தால்நாம் அவன் எதிரில் நிற்க மாட்டோம். நமக்குள்ளேயேகூட ஒரு தகுதி யாளரைப். பார்த்தால் அவர்களோடு பழகக் கூச்சப்படுகின்றோம் இல்லையா; ஒரு பெரிய கல்வியாளர், ஒரு சாது, அல்லது சாமியார் இவர்களோடு எல்லாம் நம்மால் சகசமாகப் பழக முடிகின்றதா? இல்லையே அதுவே நண்பனாக இருந்தால் தாராளமாகப் பேசுவோம். மனைவியாக இருந்தால் தாராளமாகப் பேசுவோம். அதனால்தான் இறைவன் நண்பன் வடிவமாகவும் உருக்கொள்கின்றான்; மனைவி வடிவிலும் உருக் கொள்கின்றான்; மகன் வடிவிலும் உருக்கொள்கின்றான். நாய் வடிவிலும் உருக்கொள்ளுகின்றான். அவன் இந்த ஆன்மாவுக்கு என்ன உணர்த்த வேண்டுமோ, எந்த நேரத்தில் உணர்த்த வேண்டுமோ அதை அந்த நேரத்தில் உணர்த்த வருகின்றபோது அதற்கு ஏற்ற வடிவத்தில் வந்து உணர்த்திவிட்டுப் போகின்றான். ஆனால் அவன் எந்த வடிவத்தில் வந்தாலும் போதிக்கின்ற பொருள் மெய்ப்பொருளாகத்தான் இருக்கும். அது பின்னர் போதப் பொருளாக மாறும். அது நம்முடைய உயிரை நிறைவு செய்யும்.

எனவே குருநாதன் என்பவன் எந்த வடிவத்தில் வேண்டுமானாலும் வரலாம். குறிப்பிட்ட வடிவத்தில்தான் வரவேண்டுமென்று கட்டாயம் இல்லை. எளிதாகப்

போதிக்க வேண்டுமென்றால் மனைவியாக வரலாம். மகனாக வந்தும் போதிக்கலாம் (பட்டினத்தார் வரலாறு). தாயாக இருந்து போதிக்கலாம். நண்பனாக இருந்து போதிக்கலாம். இப்படி நிரம்பவும் உரிமை உள்ளவர்களாக இருப்பதனால் போதிப்பது சுலபம்.

ஞானிகள் தாய்போல இருப்பார்கள். தன்னை இன்னார் என்று காட்டிக் கொள்ளாமல் ஏழைபோல இருப்பார்கள் பரதேசிபோல் இருப்பார்கள். தன் திறமைகளைக் காட்டாமலேயே இருப்பார்கள். ஒரு தாய் உள்ளம் எப்படிக் குழந்தையிடத்தில் பரிவோடு கலந்து பழகுமோ அப்படி ஞானிகள் இருப்பார்கள். அறிவாளிகள் அப்படியல்ல. மிகவும் எச்சரிக்கையாகவே பழகுவார்கள் நச்சுப் பாம்பு எப்படிப் பழகுமோ அப்படியிருந்து பழகுவார்கள். ஏன்? தன்னிடத்தில் இருக்கும் குற்றத்தைப் பிறன் உணர்ந்துவிடுவானோ என்றுஎண்ணி மிகவும் எச்சரிக்கையாகப் பழகுவார்கள். ஞானிகளோ குற்றமோ, குறையோ எதைப் பற்றியும் கவலைப்படாமல் பழகுவார்கள், பேய்போல் திரிவார்கள், கிடைத்ததை உண்பார்கள், நேரம் வரும்போது நம்மைத் தீமையினின்றும் காப்பாற்றி நல்வழியில் உய்விப்பார்கள்.

மாணவனே; நீ போதப் பொருளாய் இருக்கின்றாய். அந்தப் போதம் நான் தந்தது. அதைத் தருகின்றபோது உன் அறிவில் அறிவாய் இருந்து உணர்த்தினோம் என்று ஆசாரியர் சொல்லுகின்றார்.

❋ ❋ ❋ ❋ ❋

28. அன்றியுங்கேள் ஆன்மாவால் ஆய்ந்தறியும்
ஐம்பொறிகள்
இன்றி அறியா இவைஎன்ன– நின்றதுபோல்
ஓவாமல் உன்னை உணர்த்துவோம் உன்னறிவில்
மேவாமல் மேவி நாமே.

இவ்வுடலில் ஐம்பொறிகள் இருக்கின்றன. இந்தப் பொறிகள் இல்லாமல் எதையும் அறிய முடியாது இவ்வான்மாவால். பொறிகளின் இயல்பு பற்றிக்

கொள்ளுவது. அப்படி அவை பற்றிக் கொண்டதை இந்த ஆன்மா ஆய்ந்து அறிந்து கொள்ளும். புறவியலில் விஞ்ஞானிகளும், தொழிற்கல்வி பயில்வோரும் கருவிகளை வைத்துக் கொண்டுதானே ஆய்ந்து உண்மைகளைக் கண்டு பிடிக்கின்றார்கள். அதைப்போல உனக்குக் கிடைத்திருக்கின்ற இந்த ஐம்பொறி களையும் கொண்டு ஆய்ந்துதெளிந்து கொள். அப்படி ஆயும்போது உண்மைகளை ஓவாமல் உணர்த்துவோம் என்றார்.

'ஓவாமல் உன்னை உணர்த்துவோம்' என்றால் இடைவிடாமல் உனக்கு உணர்த்திக் கொண்டிருப்போம். ஓவாமல் என்ற சொல்லை இங்கே போட்டதற்கு என்ன காரணம்? ஒருகால்சொல்லி, ஒருகால் விட்டு விட்டால் நிச்சயமாக நம்மால் எதையும் சரிவர உணர்ந்து கொள்ள முடியாது.

உதாரணமாக, ஒன்றிரண்டு நாட்களுக்கு மட்டும் சொற்பொழிவாற்றச் சில இடங்களிலிருந்து வந்து கூப்பிடுவார்கள். அதற்கு நான் போவதில்லை. காரணம் அது பயனற்றது. ஒரு நாள் ஓரிடத்தில் போய்ப் பேசிவிட்டு வந்தால் அந்த அன்பர்கள் நான் சொன்ன கருத்துக்களைப் புரிந்து கொள்வதும். அதற்கேற்ப ஒழுகுவதும் நடவாத காரியம். இது எதுபோலே என்றால், ஒரு வீட்டை ஒரு முறை பெருக்கிவிட்டு விளக்கேற்றி வைத்துப் போய்விட்டது போன்றது. அப்படி ஏற்றி வைத்த விளக்கு எவ்வளவு நேரத்திற்கு எரிந்து கொண்டிருக்கும். சிறிது நேரம் எரிந்து விட்டு பின்னர் அணைந்துவிடும். பெருக்கிச் சுத்தப்படுத்திய வீட்டில் மீண்டும் குப்பைகள் சேராதா? நாம் இப்படி வந்ததுமே அதில் குப்பை கூளங்கள் வந்து சேர்ந்துவிடும். அதனால் வீட்டை அடிக்கடி பெருக்க வேண்டும்; குப்பைகளையும், தூசுகளையும் அகற்ற வேண்டும். இருள் சேரும் நேரங்களில் விளக்கேற்ற வேண்டும். இதற்கும் மேலாக அந்த வீட்டில் நடமாடிக்கொண்டே இருந்தால்தான் வீடும் தூய்மையாக இருக்கும். அதேபோலத்தான் பாடம் நடத்துவது குறுகிய கால இடைவெளிவிட்டோ அன்றி நாள்தோறுமோ நடத்தினால் தான்கேட்கின்ற அன்பர்களின் உள்ளங்கள்

மாசுகள் அகன்று இருக்கும். ஓரிரு மாதங்கள் கழித்துப் போய்ப் பாடம் நடத்தினால் அவர்கள் மனதில் பதியாது. சொன்ன கருத்துக்களை அவர்கள் வாழ்வில் பயன்படுத்துவதும் அரிதாகப் போய் விடும்.

பாத்திரத்தை நாளும் துலக்கி, அதில் பண்டங்களை இட்டு வைத்தால் தூய்மையாக இருக்கும். நீண்ட இடைவெளிக்குப் பின்னர் துலக்கிப் பயன்படுத்துவது என்பது தூய்மையானதாகவும், ஆரோக்கியத்திற்கு உகந்ததாகவும் இருக்காது. அதில் ஒருவித கெட்ட வாடை வந்து கொண்டே இருக்கும்.

ஒரு சீவன் தூய்மைப்பட வேண்டு மென்றாலும், அதனை நாளும் சுத்தம் செய்து கொண்டே வரவேண்டும். அதாவது நல்ல கருத்துக்களைச் சொல்லிக் கொண்டே இருந்தால்தான் அவை நினைவில் நிற்கும்.

எனவேதான் ஆசாரியர் மாணவனின் அறிவில் பொருந்தாமல் பொருந்தி நின்று அறிவித்துக் கொண்டே இருப்பார். அதுவும் இடைவிடாமல் அறிவித்துக் கொண்டே இருப்பார். இப்படி அறிவிப்பதையும் மாணவனிடத்தில் 'என் அறிவைத்தான் உனக்கு அறிவித்தோம் என்று சொன்னால் பயன்படாது. அப்படிச் சொன்னவுடன் மாணவன் 'இது என் அறிவுதான், உங்கள் அறிவில்லை' என்று மறுத்துச் சொல்லுவான்.

எனவே மாணவனிடம் பக்குவமாக, 'உன் அறிவுதானப்பா இது, உனக்கு அறிவு இருக்கின்றது, அந்த அறிவைக் கொண்டு நான் சொல்லுகின்ற கருத்தை நீயே சிந்தித்துப் பார்' என்று ஆசாரியார்சொல்லிக் கொண்டே வந்தால், கடைசியில் ஆசாரியருடைய அறிவுதான் அங்கே நிறைந்து காணப்படும். மாணவனால் ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் சிந்திக்க முடியாது. ஏன்? அறிவித்தால் அறியும் தன்மையுடைய ஆன்மா (மாணவன்) அறிவித்த செய்திகளையே எண்ணி எண்ணித் தன் அறிவிலே ஏற்றுக் கொள்ளும். அதனால்தான், 'ஓவாமல் உன்னை உயர்த்துவோம் உன்னறிவில் மேவாமல் மேவி நாமே' என்று சொன்னார்.

இது எதுபோலே என்றால், ஐம்பொறிகளும் எப்படி உன் கூடவே இருந்து நீ ஆய்ந்து அறிந்து கொள்ள உதவியாக இருக்கின்றனவோ, அப்படியே நாம் உன்னறிவில் இருந்து கொண்டு இடைவிடாது உனக்கு உணர்த்திக் கொண்டே இருப்போம். எப்படி? சிந்னையினால், உணர்வால் உணர்த்துவோம்.

ஆசாரியர் எங்கோ இருந்து கொண்டே மாண்வனுக்கு ஒரு கருத்தை விளக்க வேண்டுமென்று நினைத்தால் அது மாணவனுக்கு விளங்கிவிடும். இது நடக்கும் காரியமா என்று ஐயம் எழக்கூடும். இன்றைய அறிவியலார் 'ரிமோட் கண்ட்ரோல்' என்ற கருவியைக் கொண்டு தூரத்தில் இருக்கின்ற கருவிகளையும் இயக்கிக் கொண்டிருக்கின்றார்கள். வான்வெளியிலே பழுதுபட்டு விட்ட கருவியை பூமியிலிருந்து கொண்டு மின் அலைகளைப் பாய்ச்சிப் பழுது பார்த்து திருத்தி பயன் கொள்கின்றார்கள். இது விஞ்ஞானிகளின் நிலை. இவர்கள் கருவிகளைக் கொண்டுதான் கருவிகளை இயக்க முடியும். ஆனால் ஞானிகள், ஞானத்தின் உச்ச நிலையிலே நிற்பவர்கள், தங்கள் மாணாக்கர்களுக்கு ஏற்படும் தடைகளையு ம் எவ்வளவு தூரத்திலிருந்தாலு ம் உணர்ந்து, அவற்றிற்கு ஏற்ற விளக்கத்தை அவர்கள் அறிவில் ஏற்றுவார்கள். இதனைத்தான் மேவாமல் மேவி என்றார்.

    

ஐந்து பொறிகள் இல்லையென்றால் ஆன்மா எதையும் ஆய்ந்து அறியாத போல, நாமும் உனக்கு உண்மைகளை ஓவாமல் உணர்த்துவோம். நீ யார் என்பது பற்றியும் உனக்கு உணர்த்துவோம். உன்னிடத்தில் உள்ள பொறிகள் வாயிலாகக் கருத்துக்களை அறிகின்றாய். ஆனால் அக்கருவிகள் எப்படி உன்னிடத்தில் அமைந்துள்ளன என்பது உனக்குத் தெரியாது அப்படியே நாமும் உன்னிடம் மேவாமல் மேவி உனக்கு உண்மையை உணர்த்துவோம் என்றது ஒரு அடிப்படைக் கருத்து.

ஆசிரியருக்கு இருக்க வேண்டிய குணம்; திருந்தும் மாணவனுக்கு ஏற்பட வேண்டிய எழுச்சி என இரண்டு கருத்துக்களையும் இதிலே காட்டுகின்றார். நான் உனக்கு எல்லாவற்றையும் உணர்த்துவேன் என்ற ஆசாரியர் மாணவனுக்கு உறுதி சொல்ல வேண்டும். அப்படிச் சொல்வதோடு மட்டுமல்ல. எல்லாவற்றுக்கும் அடிப்படையாக இருக்கவேண்டும். அதனால் தான் அவருக்குக் குரு என்ற பெயர் வழங்குகின்றது.

குரு, ஒளி, நிறம், விந்து ஒருபொருட்பன்மொழி, வித்தாகி, முளையாகி, கிளையாகி, கொத்தாகி, கொள்வோனாகி, பயனாகி என்றெல்லாம் வள்ளலார் சொல்லிக் கொண்டே போவார். குரு என்பது ஒரு ஆலமரம் போல் கிளைத்து விளைந்து எல்லா வகையிலும் பயன் தரக்கூடியவன். மாணவனுக்கு அறிவுரை, உயர்ந்த குணங்கள் இவற்றைப் போதிப்பதன் மூலம் அவனைக் கவர்ந்து, அவனுக்கு எல்லா வகையிலும் உதவி செய்து கொண்டிருப்பான். எதையாவது சொல்லி, எதற்கும் பயன்படாத மொழிகளை அவன் பேசமாட்டான். பண்டைக்காலத்தில் ஒவ்வொரு கூட்டத்திற்கும் ஒரு குருநாதன் இருந்தான். அவன் ஊருக்கு வெளியில்தான் இருப்பான். ஊருக்குள் வரமாட்டார்கள். அவைதாம் பின்னாலே மடங்களாக நமக்குத் தோற்றமளிக்கின்றன.



29. அக்கரங்கட் குளல்லாம் அகரஉயிர் நின்றாற்போல்
மிக்க உயிர்க்குஉயிராய் மேவினோம் – எக்கண்ணும்
நில்லா இடத்துயிர்க்கு நில்லாது அறிவு என்று
நல்ஆ கமம் ஓதும் நாடு.

<u>அகரம்</u>

மக்கள் பேசுகின்ற மொழிகள் பல, அந்த மொழிகளிலே தேர்ந்த மொழிகள் சில. அதிலும் மிகத் தேர்ந்து நிலை பெற்றிருப்பவை ஓரிரு மொழிகள்தாம். அந்த மொழிகளிலும் தலையாயதும், மிக எளிமையாகத் தெரிந்து கொள்ளக் கூடியதும், செறிவுடையதுமான மொழி தமிழ் மொழி ஒன்றுதான்.

மொழிகள் யாவும் கருவிகள். அக்கருவிகள் ஒரு காலத்தில் நன்றாக இருக்கும். பிறிதொரு காலத்தில் தேய்ந்துவிடும். மொழியே எல்லாம் என்று சொல்லிவிட முடியாது. விளக்கு என்னும் கருவி ஒரு காலத்தில் ஒளியைத் தெளிவாகத் தரும். அதுவே ஒரு காலத்தில் மங்கலாகிவிடும். அதுபோலத்தான் மொழிகள் யாவும் ஒரு காலத்தில் ஒரு பொருளையும், மற்றொரு காலத்தே வேறொரு பொருளையும் குறித்து நிற்கும். ஆனால் உலக மக்கள் அனைவருக்கும் அடிப்படையாக இருப்பது உணர்வு. அந்த உணர்வை இரண்டாகப் பிரித்துக் கொள்ளலாம். அவை புற உணர்வு, அக உணர்வு எனலாம். அக உணர்வையும், புற உணர்வையும் வெளிப்படுத்துவதற்குரிய ஒலிகள் நம்மிடத்தே எழுகின்றன. அந்த ஒலிகளை வெளிப்படுத்துவதற்கு நாம் சில கோடுகளைப் போட்டு, அதனை மொழியெனச் செய்கிறோம்.

ஆதி மக்கள் அப்படித்தான் செய்திருக்கிறார்கள். அதிலே நமக்குக் கிடைத்திருக்கின்ற தமிழ் மொழி மிகவும் சிறப்பானது. பன்னெடுங்காலத்துக்கு முன்னே முற்பட்ட பண்பட்ட மொழியாக, கூடுமான அளவிலே தான் வெளிப்படுத்த வருகின்ற உணர்ச்சிகளை இயற்கையோடு இயைந்து சொல்ல வருகின்ற மொழியாக அமைந்தது தமிழ் மொழி என்று தமிழ் மக்கள் சொல்லுவார்கள். அது மிகையன்று. இருந்தாலும் பிற மொழியாளர்களின் உணர்ச்சிகளையும் நாம் மதிப்பது சிறந்தது. நமக்கு என்னென்ன உணர்வுகள் உண்டோ அதே போன்ற உணர்வு மற்றவர்களுக்கும் உண்டு. அதைச் செயல்படுத்துகின்றபோது வரையறையோடு செயல்படுத்துவது, உணர்வுபோன போக்கில் செயல்படுத்துவது என்ற பாகுபாடு இருக்கின்றது.

மழை பெய்து முறையாக நீர் ஆற்றிலே ஓடிக் கொண்டிருக்கும். மற்றும் சில பகுதிகளில் மழை பெய்தால் காட்டாறு போல நீர் ஓடிப் போய்விடும். அது புதிய புதிய வழிகளை வகுத்துக் கொண்டு ஓடிக் கொண்டிருக்கும். அந்தக் காட்டாறு, காட்டைப் பாழ்படுத்தி, சமவெளிகளையும் பாழ்படுத்தி, வயல்

வெளி களையும் பாழ்படுத்திவிடும். முறையாக போகின்ற ஆற்று நீர் சமவெளிகளைப் பாதுகாத்துக் கொண்டு, அங்கிருக்கும் பயிர்களையும் காத்து, வளங்களைச் சேர்த்துக் கொண்டே போகும். அப்படித்தான் வரையறை என்பதும் சில பேருடைய உணர்வுகள் பழைய ஆறுபோல் முறையாக, நிதானமாகப் போய்க் கொண்டிருக்கும். சிலபேருடைய உணர்வுகள் காட்டாறுபோல் போய்க்கொண்டு இருக்கும். நம்முடைய முன்னோர்கள் கண்ட முதிர்ந்த உணர்வுகள் முறையான ஆறு போன்றவை. முதிராத உணர்வுகள் காட்டாறு போன்றவை. எ ப்படி வேண்டுமானாலும் ஓடும் தன்மையுடையன. அதனால் தனக்கும், பிறருக்கும் நன்மையைவிடத் துன்பங்களே அதிகமாயிருக்கும்.

அதனால் மொழியைப் பற்றிய சிந்தனையை நமக்கு அடிப்படையிலேயே தெளிவாக்கித் தந்திருக்கின்றார்கள் நம் முன்னோர்கள். ''யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல இனிதாவதெங்கும் காணோம்'' என்பார் பாரதியார். நாம் அறிந்த மொழிகளிலே இதைப்போன்ற இனிமையான மொழி வேறெதுவும் இல்லை என்று சொல்லலாம். ஆனால் அதுவே முழுமையாகக் காட்ட முடிந்த மொழியென்றும் சொல்லிவிட முடியாது. அதை நாம் மனதில் வைத்துக் கொண்டால்தான் சில உண்மைகள் நமக்குத் தெளிவாக விளங்கும்.

ஒரு விதையை நட்டோம். அதில் ஒரு முளை வந்தது. அதனை 'முளை', என்கிறோம். அது வளர்ந்து கிளைத்தால் 'கிளை' என்கிறோம். கிளையில் இலைகள் தழைத்தால் 'தழை' என்கிறோம். அது மென்மையாக, இளமையாக இருக்கின்றபோது 'தளிர்' என்கிறோம். முதிர்ந்தபோது 'பசுந்தழை' என்கிறோம். இலை பழுத்தால் 'பழுப்பு' என்கிறோம். காய்ந்த பின் 'சருகு' என்கிறோம். ஒரு மரத்தினுடைய இலையைப் பற்றியே நாம் இத்தனை பாகுபாடு செய்திருக்கின்றோம். அப்படியே மொழி முதிர்ந்து, நாம் நினைத்த உணர்வை அப்படியே சொல்லக் கூடிய அளவுக்குச் செப்பமாகக் கண்டு பிடித்திருக்கின்றார்கள் நம் பெரியவர்கள்.

ஆங்கில மொழியிலே அப்படிச் சொல்ல முடியாது. அதில் ஒரே ஒரு வார்த்தைதான் உண்டு. 'லீஃப்' என்பதுதான் அது. தமிழ் மொழியில் மேற் சொன்னது போன்ற வார்த்தைகள் அம்மொழியில் இல்லை. அதனால் அதனைச் சிறந்த மொழியன்று என்றும் சொல்லிவிட முடியாது. அது உலகம் முழுதும் ஆண்ட மொழியாக இருந்திருக்கிறது. அப்படியானால் நம்முடைய மொழி உலகம் முழுதும் ஆட்சி செய்யவில்லையென்ற எண்ணந்தோன்றும். இந்த ஏக்கம் சரியன்று. அகழ்வாராய்ச்சி செய்தவர்கள் 20000 ஆண்டுகளுக்கு முன்னே உலகம் முழுதும் சைவ சமய வழிபாடும், தமிழ் மக்களுடைய நெறியும் பின்பற்றப்பட்டு வந்தன என்ற கண்டுபிடித்திருக்கின்றார்கள். அவர்கள் வைத்திருந்த சின்னங்கள், கையாண்ட பாத்திரங்கள், நாணயங்கள், இவற்றையெல்லாம் கண்டெடுத்திருக்கின்றார்கள்.

இதைக் கண்டும் மகிழ்ந்து விட முடியாது. வரலாறு என்பது முழுமையாக எதையும் காட்டாது. நாம் எந்த அளவுக்கு எதையும் ஆராய்கின்றோமோ அந்த அளவுக்குத்தான் உண்மைகளைக் காட்டும். அதிலேயும் சில சமயங்கள் குழப்பங்கள் விளையும். எனவே வரலாறு என்பது முழுமை பெற்றதில்லை என்பதை நீங்கள் உணர்ந்து கொள்ள வேண்டும். வரலாறு என்பது குழப்பங்கள் நிறைந்தது. அது கிடைத்ததை வைத்துக் கொண்டு ஒழுங்கு படுத்துவது. ஆனால் மொழி அப்படிப்பட்டதல்ல. உலகம் முழுதும் தமிழ் ஆண்டதாகக் குறிப்புச் சொல்கிறார்கள். ஆனால் அதை இப்போது சொன்னால் எடுபடாது. காரணம் இன்றைக்கு அது அந்த அளவுக்குச் சக்தி வாய்ந்ததாகவும் இல்லை. அதனால் அந்த வாதம் எடுபடாது. எல்லா மொழிகளின் நிலைகளும் இப்படித்தான் இருக்கும்.

நம்முடைய மொழி எப்படி அமைக்கப்பட்டது? ஆங்கில மொழியைப் போல் பிற மொழிகளைப் பார்த்து, பிறமொழிச் சொற்களைத் தன்னிடத்தே சேர்த்துக் கொண்டு, அந்த ஒலிகளைப் பார்த்து அமைக்கப்பட்டதல்ல. அவர்கள் ஒருவகையாகப் பார்த்து -- மொழியை

அமைத்திருக்கிறார்கள். உதாரணமாக, நாம் முருங்கைக்காய் என்று பெயர் வைத்தோம். அதற்குத் காரணம் நமக்குக் தெரியும். ஆனால் ஆங்கிலத்தில் அதற்கு 'டிரம்ஸ்டிக்' என்று பெயர் வைத்திருக்கின்றார்கள். அந்தக் காயைப் பார்த்தவுடன் அவர்களுக்குத் தோன்றிய உணர்வின் காரணமாக அப்படி வைத்திருக்கின்றார்கள். அவர்கள் நாட்டில் டிரம் அடிப்பதற்கு உபயோகிக்கும் குச்சியைப் போல இருந்ததால் அப்படிப் பெயர் முருங்கைக்காய் என்று நாம் சொல்லுகின்ற போது இருக்கும் மொழி வளம், பொருட்செறிவு டிரம்ஸ்டிக் என்றபோது அதில் இல்லை. இப்படி மொழியை மிகச் செப்பமாக வைத்திருக்கின்றனர் நம் பெரியோர்.

இயற்கையில் எழுகின்ற ஒலிகளைக் கொண்டு தமிழ் மொழியிலே பெயர்களைப் பெரிதும் அமைத்தார்கள். மொழியின் அடிப்படையே வாழ்வியலை ஒட்டியதாக அமைந்திருக்கிறது. அதனால்தான் 'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழயைப்போல் இனிதாவது எங்கும் காணோம் என்றார்.'

அப்படியே இலக்கணம் கண்டு பிடிக்க வந்தபோதும் இயற்கையை அடிப்படையாக் கொண்டுதான் அமைத்தார்கள். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்து கூறுகளாக அமைத்தார்கள். இவை இயற்கையில் அமைந்த ஐம்பெரும்பூதங்களான மண், நீர், தீ, காற்று, வான் இவற்றைக் கொண்டு வகுத்தார்கள். பிறமொழிகளைப் பார்த்து அதைப்போலச் செய்ததன்று தமிழ் மொழி.

ஆனால் இன்றைய வரலாற்று ஆசிரியர்களோ நம்முடைய மொழியின் சிறப்பையும், அதை ஆக்கித்தந்த முன்னோர்களின் சிறப்பையும், மொழியின் அடிப்படையையும் சிறிதும் அறியாதவர்களாகவும் பிறமொழித் தாக்கங்கள், பிற இனத்தாக்கங்கள் நிறைந்தவர்களாகவும் விளங்குகின்றார்கள். இப்படிப் பட்டவர்கள் வரலாற்றை எழுதும் போதும், ஆராய்ச்சி செய்கின்ற போதும் கடல் போன்ற தமிழின் ஆழ, அகல,

நீளம் தெரியாமல், அதன் வளமும் தெரியாமல் கடற்கரையில் உட்கார்ந்து கொண்டு மனக்கணக்குப் போட்டு ஏட்டை நிரப்பிவிடுகின்றார்கள். இவர்கள் எழுதுவதைப் பாருங்கள்: பாணினி செய்த இலக்கணத்தைப் பார்த்து அகத்தியர் செய்தார். அகத்தியரைப் பார்த்து அவருடைய மாணவரான தொல்காப்பியர் செய்தார் என்று எழுதுகின்றார்கள். நம்முடைய மொழியைச் செய்த ஞானிகளையும் பெரியோர்களையும் சரியாகக் கணிக்கத் தெரியாத இவர்கள், அவர்கள் செய்ததெல்லாம் மொழி பெயர்ப்பு என்றும். ஒன்றைப் பார்த்து ஒன்று செய்யப்பட்டதென்றும் ஏதோ கிளிப்பிள்ளைகள் போலச் சொல்லிக் கொடுத்ததையே சொல்லிக் கொண்டிருக் கின்றார்களே தவிர ஒருவராவது இதன் சிறப்பை உணர்ந்து வரலாறு சொல்வதாகத் தெரியவில்லை. மேலும் இவர்கள் சொல்லுவதைப் பார்த்தால் தமிழ் மக்களுக்கென்று தனி மொழி கிடையாது. தமிழ் மக்களுக்கென்று அறிவு கிடையாது, தமிழ் மக்களுக்கென்று எதுவுமே கிடையாது என்றும், எல்லாமே பிற மொழிகளிலிருந்து இங்கே மொழி பெயர்க்கப்பட்டதென்றும் சொல்லிச் சொல்லியே பழகிவிட்டார்கள்.

இயற்கையை வணங்கி, இயற்கையோடு இயைந்து, இயற்கை வாழ்க்கை வாழ்ந்தவர்கள் இந்த நாட்டு மக்கள். அந்த இயற்கை கொடுத்த அறிவுதான் இவர்கள் பெற்ற நலங்கள். அதனால் அந்த இயற்கையையே அவர்கள் இலக்கணமாக வைத்துக் கொண்டார்கள். அதற்கொரு உதாரணம் சொல்கிறேன்.

இந்த உலகம் அழகு பெறுவதற்கு வான்மழை தேவை. மழையில்லாவிட்டால் உலகம் அழகு பெறாது. எல்லாம் தழைத்து அழகாக விளங்க வேண்டும் என்றால் வான்மழைதான் தேவை. எந்த மக்களுக்கும் அணி தேவை. அது ஆணோ, பெண்ணோ அன்றி பெரியவரோ, சிறியவரோ யாராக இருந்தாலும் அவர்களுக்கு அணி தேவை. அணி என்பது ஒரு நுட்பமான கலை. நுண்ணிய கலை. அந்த கலை மிக நுண்மையாக இருக்கின்ற வான் தத்துவத்தை வைத்து அணி என்று சொன்னார்கள். அணி இலக்கணம் என்பது இங்கிருந்துதான் பிறந்தது.

காற்று நான்கு பக்கங்களிலிருந்தும் வீசும். வடகாற்று, தென் காற்று, கீழ்க்காற்று, மேல் காற்று என காற்று நான்கு பக்கங்களிலிருந்தும் வீசியதைப் பார்த்து, பாடல்களை வெண்பா என்றும், அகவல் என்றும், கலிப்பா என்றும், வஞ்சிப்பா என்றும் நான்காக வகுத்தார்கள். அதற்கு மேல் எந்தப் பாவும் இல்லை. ஆனால் அதன் திரிபுகள் இருக்கும். பாட்டு என்று சொன்னவுடன் தாழிசை, வெண்பா இசை, துறை, விருத்தம் என்று அதிலிருந்து விரிந்து வரும். ஆனால் அடிப்படையானது இந்த நான்குதான். அதையும், தென்மேற்குப் பருவக் காற்று, வடகிழக்குப் பருவக் காற்று என்று சொல்கிறோமல்லவா, அப்படித்தான் இவையும். இப்படி இயற்கையைக் கண்ட பெரியவர்கள் வாழ்க்கையையே இலக்கணமாக வகுத்தார்கள். நம்முடைய வாழ்க்கையை இலக்கியமாக அமைத்தார்கள். இலக்கணத்தையும், இலக்கிய த்தையும் இந்த அடிப்படையில் வகுத்தவர்கள் இவற்றுக்கு அடிப்படையாக எழுத்தையும் அமைத்தனர்.

எழுத்துக்களை அமைக்கின்றபோது இரண்டு, மூன்று செய்திகளை மனதிலே கொண்டு அமைத்தார்கள். இந்த எழுத்துக்கள் அறிவின் சிகரத்திலிருந்து அல்லது உச்சியிலிருந்து வந்தவை. உச்சியிலிருந்து புறப்பட்ட ஒரு பேரொளிதான் இந்த எழுத்துகள். ஏதோ ஒன்றைப் பார்த்து அதைப்போல எழுத்துக்களை அமைக்கவில்லை.

நமக்கு உடம்பு என்றும், உயிர் என்றும் இருக்கின்றதல்லவா! இந்த இரண்டையும் பார்த்து "உடம்பும் உயிருமாம் முப்பது முதலே" என்று இலக்கணம் வகுத்தனர். உயிரெழுத்து பனிரெண்டு, மெய்யெழுத்து பதினெட்டு. உடம்பு என்பது மெய்யெழுத்து. ஆக 30 எனக் கணக்கிட்டனர். அப்படியானால் இந்தப் பனிரெண்டு எழுத்துகளுக்குள்ளே உயிரினங்கள் அமைகின்றன. பனிரெண்டு தகுதிகள் கொண்ட உயிரினங்கள்தாம் உலகில் இருக்கின்றன என்பதை இவை காட்டும்.

இந்த உடம்பும், உயிரும் சேர்ந்தால் உயிர் மெய்யெழுத்து என ஆகும். உள்ளே இருப்பது உயிர்.

மேலே இருப்பது உடம்பு. இரண்டும் தனித்து இருந்தால் உயிர் என்றும், மெய்யென்றும் ஆகும். இரண்டும் ஒன்று சேர்ந்தால் உயிர்மெய் என ஆகும். உயிர்உடம்பு என ஆகும். தனித்தனி உயிரை உயிர் என்றும், தனித்தனி உடம்பை மெய் என்றும் சொன்னார்கள். இரண்டும் இணைந்தால் உயிர்மெய் அல்லது உயிர் உடம்பு எனப் பெயரிட்டனர். இப்படி வாழ்க்கை அனுபவத்தையே எழுத்துக்களாக அமைந்தார்கள்.

இதற்கெல்லாம் மேலாக இருப்பது ஒன்றுண்டு. அதை 'அகரம்' என்றனர். எழுத்துக்களுக்கெல்லாம் முதலில் இருப்பதை அகரம் என்றனர். அதைத்தான் திருவள்ளுவர் தம் அறநூலிலே முதல் குறளிலே 'அகர முதல எழுத்தெல்லாம்..' என்று அகரத்தை முதலாகச் சொன்னார்.

'அகரம்' என்பது ஒளி, இந்த உடம்பையும், இந்த உடம்பிற்குள்ளே இருக்கும் சீவனையும் அறிவாகவும், ஆற்றலாகவும், நலமாகவும் இயக்கிக் கொண்டிருப்பது அந்த ஒளிதான். அதனாலே அகரமாகிய ஒளியை இறைவன் என்றனர். சீவனாகிய மெய் அறியாமையிலிருப்பது. அது குடியிருப்பது இந்த உடம்பில். அதைப் பொய் என்றார்கள். பொய்யும் மெய்யும் சேர்ந்தது இந்த உலகம். இந்த உடம்பு பொய்யும் மெய்யும் கலந்திருப்பதனாலே அவற்றைக் கடந்து ஒரு பெரிய நிலையை அடைவதற்கான ஒரு வரையறையைச் சொன்னார்கள். அந்த வரையறை என்பதே படி நிலை. பொய்யையும் நாம் கடக்க வேண்டும். மெய்யையும் நாம்கடக்க வேண்டும். இதனைத்தான் 'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணம்'' என்றார் தொல்காப்பியரும். கரணம் – நெறிமுறை, வரைமுறை, எப்படி எப்படி வாழவேண்டும். எப்படி எப்படி இருக்க வேண்டும் என்ற விதிமுறைகள் செய்தனர்.

ஐயர் என்று சொன்னவுடனே நம் உள்ளத்தில் ஓர் ஐயம் தோன்றும் ஐயர் என்றால் ஏதோ ஒரு இனத்தைக் குறிக்கும் என்ற எண்ணமே பெரும்பகுதி மக்கள் உள்ளத்தில் இருக்கின்றது. இச்சொல் ஒரு இனத்தையோ,

அல்லது ஒரு குறிப்பிட்ட குலத்தையோ குறிப்பதன்று. ஐயர் என்றாலும், ஆரியன் என்றாலும் இறைவனுக்குரிய பெயர்கள். அந்தப் பெயரை நாமும் வைத்துக் கொள்ளலாம் அதில் தவறில்லை. இப்போது நமக்கிடப்பட்டிருக்கும் பெயர்கள் யாவும் கடவுளின் திருநாமங்களே. அதைக் கொண்டு நான்தான் கடவுள் என்று சொல்லிக் கொள்ள முடியுமா? பெயர் வைத்துக் கொள்வதில் எந்தத் தவறுமில்லை. உதாரணமாக,

இராமன் என்று ஒரு பெயர். இப்பெயரைச் சொன்னவுடனே தசரதனுடைய மகன் என்ற நினைவுதான் எல்லோர்க்கும் வரும். ஏன்? அவன் வரலாற்றிலும், காவியத்திலும் இடம் பெற்றதோடு அடிக்கடி அவன் பெயரைச் சொல்லிப் பழகிவிட்டோம். எந்த ஒரு செய்தி, எந்த ஒரு பெயர் அடிக்கடி மக்கள் மத்தியில் பேசப்படுகின்றதோ அதுதான் அவர்கள் உள்ளத்தில் நிற்கும். ஆனால்மூலம் மறந்துவிடும். கோயபெல்ஸ் என்பார் இதைத்தான் சொன்னார் 'நீ சொன்னதையே சொல்லிக் கொண்டிரு, அது பொய்யாக இருந்தாலும் சரிதான், பின்னால் அதுவே மெய்யாகிவிடும்' என்பார். பொய்யுடை ஒருவன் சொல் வன்மையினால் மெய்போலும்மே மெய்போலும்மே' என்பதையும் உன்னுக'. ஆகவே பின்னால் வந்த சில குறிப்புக்கள் அப்படி அமைந்து போனதினால் ஆரியர், ஐயர் என்று சொன்னவுடனே நாம் யாரையோ நினைத்துக் கொள்கின்றோம்.

இராமன் அவன் இல்லை. அவனுக்கு முன்னே ஒரு இராமன் இருந்தான் அவன் பெயர் பரசுராமன். அவனுடன் இவன் சண்டை போடவில்லையா? இப்படியே சொல்லிக் கொண்டே போனால் இராமன் என்ற பெயர் யாருக்கு இருந்தது', அது யாருக்கு உரியது. அது அநாதி ஒலி. அந்த ஒலி அநாதியாக இருக்கின்றது ஒரு ஆற்றலுக்கு இட்ட பெயர். 'ரா' என்று சொன்னால் அது மிகுந்த ஆற்றல் உள்ள ஒலி. ஆங்கிலத்தில் சொல்லுகின்ற மாதிரி சொன்னால் எல்லா எழுத்துக்களிலும் இருக்கின்ற ஒலி அலைகளைவிட (வைப்ரேஷன்) 'ரா' என்ற சொல்லுக்கு அதிகமான ஒலி அலை உண்டு. அது மந்திர ஆற்றல் உடையது என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அந்தப் பெயரை

அவனும் வைத்துக் கொண்டான். வழி வழியாகப் பலரும் அப்பெயரையே வைத்துக் கொண்டார்கள். இருந்தும் அப்பெயர் அந்த ராமனைக் குறிப்பதாகவே நாம் எண்ணிக் கொண்டிருக்கின்றோம். இப்போது நமக்கு வைத்திருக்கின்ற பெயர்கள் யாவும் நமக்கே வைத்த பெயரா? இதற்கு முன்னர் யார் யாருக்கோ பெயராக அது இல்லையா? இப்படி ஆராய்ந்து கொண்டே சென்றால் மூலத்தில் யாருக்கோ அப்பெயர் இருந்திருக்கும்.

ஐயர்–பெரியவர்,ஐயா–ஐயம் இல்லாதவர். 'ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே' என்பதால் அது இறைவனைக் குறிக்கும் சொல் என்பது உணரப்படும். தூயவர், உயர்ந்தவர் என்றும் பொருளுண்டு.

ஆரியர் வழுத்தும் என்றதனால் கடவுளை ஆரியர்கள் தாம் கும்பிட வேண்டும் போலிருக்கிறது, நாமெல்லாம் கும்பிடக்கூடாது போலிருக்கிறது என்றெல்லாம் நாமாக ஒரு கற்பனை செய்து கொள்கின்றோம். ஏன் நாம் ஐயராக இருக்கக் கூடாது? ஏன் நாம் ஆரியனாக இருக்கக் கூடாது? மாற வேண்டும். மாறிக் கொள்ள வேண்டியதுதானே. நமக்கு எப்போதும் அடிமைத்தனத்தில் வாழ்ந்ததால் ஒரு பழக்கம் இருக்கின்றது. நானும் உன்னைப் போலத்தான் என்று சொல்லிக் கொள்வதற்குப் பதிலாக, 'நான் பிராமின்' என்று ஆங்கிலத்தில் சொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்கின்றோம். நான் தமிழன் என்று சொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்ளவில்லை. நான் மனிதன் என்று சொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்ளவில்லை. 'நான்பிராமின்' என்று சொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்கின்றதோர் இழிநிலைக்கு இச்சமுதாயம் போய்விட்டது.

பிராமணன் என்றால் யார்? பிரமத்தை எவன் அறிந்தவனோ அவனே பிராமணன். நான் பிராமணன் என்று சொல்லிக் கொள்வதாலோ அல்லது ஒரு குறிப்பிட்ட கோலத்தைப் போட்டுக் கொள்வதாலே அவன் பிராமணன் ஆகமாட்டான். ஐயமில்லாதவன் ஐயர், ஞானச் செய்திகளைச் சொல்லிப் பிறரை ஆட்படுத்திக்

கொள்பவனை ஆரியன் என்றும் கொள்ளுதல் வேண்டும். இதைப் பழைமையான தமிழ்ச் சொற்கள் உணர்த்துகின்றன. அதை நாம் சரியாகப் புரிந்து கொள்ளாததால்தான் பிழைபட பல கருத்துக்களை உணர்ந்தும் பேசியும் வருகிறோம். அதனால்தான் மொழி அறிவை அடிப்படையாக வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று நம் மொழியைச் செம்மையாக அமைத்து வைத்தார்கள்.

ஆரியர் என்றவுடன் நமக்கு என்ன நினைவுக்கு வருகின்றது? ஒரு கூட்டத் தாரை நினைத்துக் கொள்கின்றோம். மாணிக்கவாசகர், ''பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே'' என்றால் அந்தக் கூட்டத்தாரையா சொன்னார். இறைவனைப் பார்த்து ஆரியனே என்றார். அவன், மீள முடியாமல் நம்மை அல்லல் படுத்துகின்ற பாசமாகிய வலையை அறுக்கின்றான். பாச வலையறுத்து அருள்பாலிக்கும் ஆரியனே என்பது 'அருள்பாலிக்கும்' என்பது குறைந்தபாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே, என்று குறுகி ஒலிக்கின்றது. பாசத்தை அறுத்து அருள்பாலிக்க வல்லவன் எவனோ அவன்தான் ஆரியன். நாம் ஏன் யாரையோ பார்த்து ஏக்கப் பெருமூச்சு விடவேண்டும்:

இப்படி பல சொற்களுக்கு நாம் பொருள் தெரியாமல் ஏதேதோ சிந்தனைக்கு இடம் கொடுத்துக் கொண்டிருக்கின்றோம். இப்படி மொழியைப் பற்றிச் சொல்லிக் கொண்டு போனால் நிறைய சொல்லிக் கொண்டு போகலாம். இதையெல்லாம் எடுத்துக் காட்டியதன் நோக்கம் என்னவென்றால் கண்ணை மூடிக் கொண்டு யார் சொல்வதை வேண்டுமானாலும் கேட்டுக் கொண்டு போகின்றோமே தவிர, சிந்திக்கின்ற பழக்கத்தை மறந்துவிட்டோம். நம்முடைய மொழியின் பெருமையை உணர மறந்துவிட்டோம். நம்முடைய முன்னோர்கள் ஏன் இப்படி எல்லாம் சொல்லி வைத்தார்கள், அதன் காரண காரியம் என்ன என்று சிந்தித்தால் சிந்தனை வளமும் பெருகும், மொழி வளமும் பெருகும், மனமும் விரிவடையும், நாம் யாரையும் பார்த்து ஏக்கப் பெருமூச்சும் விடவேண்டி இருக்காது. இப்படிச்

சிந்திக்காவிட்டால் காழ்ப்பு உணர்ச்சி வரும், பொறாமை வரும், மனிதாபிமானத்தை விட்டுவிடுவோம். பிறருக்கு ஊறு செய்யத் தொடங்குவோம். இவையெல்லாம் கூடாது. வரலாறு என்பதை ஓரளவுக்குப் படிக்கலாம் அவ்வளவுதான்.

உங்களுக்கெல்லாம் தெரிந்த செய்திதானே. இந்திரா காந்தி இருந்த போது வரலாற்றை மாற்றி எழுதி வைத்துவிட்டுப் போய்விட்டார்கள். அப்படி காலங்கள்தோறும் வருகின்ற ஆட்சியாளர்கள் வரலாற்றை மாற்றி எழுதிவைத்துவிட்டுப் போய்விடுவார்கள். இப்படிக் கிடைக்கின்ற செய்திகளை வைத்துக் கொண்டு நாம் ஏதோ வரலாறு இருப்பதாக நினைத்துக் கொண்டு இருக்கின்றோம். தமிழ் மக்களுக்கு வரலாறு அவ்வளவு செம்மையாகக் கிடைக்கவில்லை. கிடைத்திருப்பது இலக்கியங்களாக, நூல்களாக, அங்கொன்றும், இங்கொன்றுமாகக் கிடைத்திருக்கின்றன. அவை, அகநானூறு, புறநானூறு, பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, போன்ற நூல்களிலிருந்துதான் வரலாற்றைத் தொகுக்க முடியும். அப்படி எழுதியிருந்தாலும் அது காலத்தால் மாறுபட்ட மன்னர்கள் விட்டுச் சென்ற செய்திகளே.

அது மட்டுமன்று. நாம் தனித்துத் தமிழன் என்றும் சொல்லிக் கொள்ள முடியாது. இதில் யாருக்கும், எந்தவிதமான தகுதியும் இருப்பதாகவும் எனக்குத் தெரியவில்லை. மேடையில் வேண்டுமானால் பேசிக் கொள்ளலாம். ஆனால் வரலாற்றையும், கடந்த கால நிகழ்ச்சிகளையும் தொகுத்துப் பார்த்தால் இந்த உண்மை தெள்ளென விளங்கும். காரணம், இந்த நாடு பல படை எடுப்புகளைக் கண்டது. அந்தப் படையெடுப்புக்குப் பிறகு, பகைவர்களாக இங்கே வந்தவர்கள், இந்த நாட்டிலேயே தங்கிவிட்டார்கள். இங்கிருந்த மக்களோடு கலந்து விட்டார்கள். ஆனால் இனக்கலப்பு மக்கள் உருவாகி விட்டார்கள். அதேபோல கிரேக்கத்தில் கூடக் கலப்பு ஏற்பட்டிருக்கிறது. வணிகத்திற்குச் சென்ற மக்கள் அங்கே சென்று கலந்து கொண்டார்கள். இங்கே வந்த மக்கள் இங்கே கலந்து கொண்டார்கள். இப்போது

இதுதான் தமிழ் இனம் என்று பிரித்துக் காட்டவே முடியாது. மிகவும் அநியாயமாகப் பேசுவதாகத் தோன்றும்.

நீங்களே சிந்தித்துப் பாருங்கள். பழைய திராவிடர்கள் என்று சொல்லப் படுவோர் வேறு. இப்போது இருக்கின்ற திராவிடர்கள் வேறு. இடையே பல கலப்புகள் ஏற்பட்டுவிட்டன. கலப்பினங்கள் தாராளமாகக் கலப்பை ஏற்றுக் கொள்ளும். சில இனங்கள் அப்படிக் கலப்பை ஏற்றுக் கொள்வதில்லை. வசதிக்காகவும், வாய்ப்புக்காகவும் கலப்பை மகிழ்ச்சியாக ஏற்றுக் கொள்ளும் கூட்டம் ஒன்று. நாமெல்லாம் மறத்தமிழர், கலப்பை ஏற்றுக் கொள்ள மாட்டோம் என்று கடினமாகச் சொல்லிக் கொண்டே கலந்து கொள்ளுகின்ற கூட்டமும் ஒரு பக்கத்தில் பெருகிக் கொண்டிருக்கின்றது. இப்படி ஏகக் கலப்புகள் ஏற்பட்டு இன்றைய சமுதாயத்திலே ஒரு தனிச் சமுதாயத்தைக் காண முடியாத நிலை உருவாகியிருக்கிறது.

ஆனால் மொழி ஏறக்குறைய கலப்பில்லாமல் திகழக் கூடியது. அப்படிப் பட்ட மொழி தமிழ் மொழி என்றாலும் அதிலும் பல கலப்புகள் ஏற்பட்டுவிட்டன. இஸ்லாமியர்கள் மொழி இதில் கலந்திருக்கின்றது. கோடம்பாக்கம் என்பது தமிழ் மொழியா? இல்லை. கோடோ பாக் என்பதன் திரிபே கோடம்பாக்கம். குதிரை கட்டுகின்ற இடத்திற்குக் கோடோ பாக் என்று பெயர். அப்படியே சேப்பாக்கம். சே பாக் என்பது சேப்பாக்கம் ஆகிவிட்டது. சே பாக் என்றால் 7 பங்களாக்கள் உள்ள இடம் என்று பொருள். அவர்கள் ஆட்சிக் காலத்தில் வழங்கிய மொழிகள் இன்று தமிழ்போல ஒலித்துக் கொண்டிருக்கின்றது.

பிறமொழிச் சொற்களைக் களைந்து பேசலாமா என்று சிந்திக்கின்றோம். அதிலும் பல பிரச்சனைகள் இருக்கின்றது. நான் தனித் தமிழ் என்று ஒன்றைச் சொல்வேன். மற்றொருவர் அப்படிச் சொல்லக்கூடாது, இப்படித்தான் சொல்ல வேண்டும் என்பார். இப்படிப் பலபடியான சிக்கல்கள் எல்லாம் உண்டு.

தாயம் என்று ஒரு சொல். தாயம் என்றால் உறவு முறை. சம தாயம் என்பது மருவி வழக்கில் சமுதாயம் என்றாகிவிட்டது. என்று நான் சொன்னால், இப்படிச் சொல்லக் கூடாது. கடலிலிருந்து குமிழ்ந்து வந்தது, அதனால் குமுகாயம் என்றுதான் சொல்ல வேண்டுமென்பார் மற்றொருவர். இப்படிச் சொன்னவர் தேவநேயப் பாவாணர். அவரும் பெரிய அறிஞர். நாமெல்லாம் மதிக்கத் தகுந்த பேரறிஞர் அவர். வணங்கத் தக்க அறிஞர் அவர். இப்போது, எதைக் கொள்வது? சரி எதையாவது ஒன்றை ஏற்றுக் கொள்ள வேண்டும். அவ்வளவுதான். இப்படி மொழியிலும் பல பிரச்சனைகள்.

இப்பாடலில் 'அகரம்' என்ற சொல் வருகின்றது. இந்த மொழி அடிப்படையை எப்படிக் கொண்டிருக்கின்றார்கள் என்பதற்காக இதைச் சொன்னேன்.

திருப்புகழில், 'அகரமும் ஆகி அதிபனும் ஆகி' என்றும், தேவாரத்தில் 'ஆனத்து முன்னெழுத்தாய் நின்றார் என்றும், சொல்லுவார்.

'ஆ' என்ற எழுத்துக்கு முன்னெழுத்து எது? 'அ' தானே. இப்படிப் பல இடங்களில் அகரம் என்பதை ஒளி என்ற பொருளிலே கையாண்டிருக்கின்றார். அதனால் அக்கரம் என்பது எழுத்து. அகரம் என்பது ஒளி. இந்த உலகம் இவ்விரண்டினால்தான் இயங்கிக் கொண்டிருக்கின்றது. இந்த இரண்டும் அவனே. இறைவனை அதனால்தான் 'நமோ நம' (வணக்கம், வணக்கம்) என்று பாடுகின்றார் அருணகிரிநாதர். மேலும் நாத விந்துகள் ஆதி நமோ நம என்று பாடுவார். ஆனால் நாம் இதைப் பாடும்போது 'நாத விந்து கலாதி நமோ நம' என்று பாடுவோம். அப்படிப் பாடக் கூடாது. நாத விந்துகள் ஆதி நமோ நம என்று பிரித்துப் பாட வேண்டும். மொழி தெரியாததால் இப்படிப் பாடுகின்றோம்.

இந்த உலகுக்கு ஆதியும் அகரமும் முதலாகின்றன. அக்கரமாகிய ஒலி களிலெல்லாம் அகரமாகிய ஒளிகலந்து நின்றாற்போல, ஒன்றாகக் கலந்து

T. N. Jaganathan



நின்றாற்போல, மிக்க உயிர்க்குயிராய்க் கலந்து மேவினோம் என்றார். மாணவனுடைய உயிரில் ஆசாரியரின் உயிர் எப்படிக் கலக்கும்? மாணவன் ஒலி. ஆசாரியர் ஒளி. ஒளியில் ஒலி கலக்கும். அகரமாகிய எழுத்து எல்லாவற்றிலும் கலக்கும் இயல்புடையது. எனவே ஆசாரியார் ஒளியாக மாணவனின் உயிரில் கலக்கின்றார்.

'எழுத்துக்களில் அகரமாகவும், மாதங்களில் மார்கழியாகவும் இருக்கிறேன் என்று கீதையில் கண்ணன் சொன்னான். அப்படியானால் கண்ணன் ஒரு ஆசிரியன். அது எப்படி? கீதையைத் தந்ததனாலே ஆசிரியன் தானே. அதைக் கேட்டுக் கொண்டவன் மாணவன். அவன் சொன்னதில் எது சரி எது தவறு என்பது வேறு செய்தி. சொன்னவன் ஆசிரியன். கேட்டவன் மாணவன். அப்படிக் கேட்கின்றவனின் உள்ளே ஒளியாக ஆசாரியன் திகழ்கின்றான்.

மாணிக்க வாசகப் பெருமான் திருப்பெருந்துறைக்கு வருகின்றபோது முதலில் 'ஓம் சிவாய நம' என்ற ஒலி கேட்கின்றது. அதைக் கேட்டுத் திரும்பிப் பார்க்கின்றார். அங்கே ஒளிமயமான ஒரு தோற்றம் இருக்கின்றது. அங்கே சென்றார். ஆட்பட்டார். அனைத்தும் பெற்றார். அதனால் எக்கண்ணும் மேவினோம் என்றார். ஏன்? இந்த உயிர் ஓர் இடத்தில் நில்லாது. நான் சொல்லிவிட்டேனே என்று அது ஒரு இடத்திலா நிற்கும்?

இந்த உயிர்களை மூவகையாகப் பிரிப்பார்கள். அதில் ஒரு வகை ஆடு. ஆட்டை அவிழ்த்துவிட்டால் காலையிலிருந்து மாலை வரையில்மேய்ந்து கொண்டே இருக்கும். இருப்பினும் அதன் வயிறு நிரம்பவே நிரம்பாது திரும்பவும் பட்டியில் கொண்டு வந்து மடக்கினால்கூட பச்சென்று ஏதாவது தெரிந்தால் அங்கே போய் வாயை வைக்கும். அப்படிச் சில உயிர்கள் ஒரு இடமாக நின்று உயர்பொருளைக் கேட்காமல், இவர் சொன்னதையும் கேட்கும், இன்னொருவர் சொன்னதையும் கேட்கும், மற்றொருவர் சொல்வதையும் கேட்கும். அங்கே போனபோது இங்கே சொன்னதையும், இங்கே வந்தபோது அங்கே

சொன்னதையும் மாறி மாறி நினைத்து, நிலை தடுமாறித் தேறாது நிற்கும். இப்படி ஆட்டைப் போலத் தேறாமல் தவிக்கின்ற ஆன்மாக்கள் சில. அதனை 'எக்கண்ணும் நில்லா உயிர்க்கு' அந்தந்த இடத்திலே நின்று, அந்தந்த உயிர்கள் என்ன விரும்பிற்றோ அதை நாம் உணர்த்துவோம், என்று கூறுகின்றார்.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

30. நற்றவத்தோர் தாம் காண நாதாந்தத் தஞ்செழுத்தால்
உற்றுஉருவாய் நின்று ஆடல் உள்ளபடி – பெற்றிடநான்
விண்ணார்பொழில்வெண்ணெய் மெய்கண்ட நாதனே!
தண்ணார் அருளாலே சாற்று.

திருவெண்ணெய்நல்லூர் வாழ் மெய்கண்ட நாதனே நாதன் நடம் பற்றி எனக்கு உள்ளபடி எடுத்துரைக்க வேண்டும் என்று மாணவர்கேட்கின்றார் கேள்வி கேட்கும் மாணவர் எந்த அளவுக்குத் தெளிந்தவராக இருக்கின்றார் பாருங்கள்.

இந்த நடம் எங்கே நடைபெறுகின்றது என்று மாணவரே சொல்லிக் காட்டுகின்றார். ஏன் தெரியுமா? மாணவனுக்கு ஒரு பரிபக்குவம் வந்தால்தான் அப்படிக் கேட்க முடியும். எந்த ஒரு செய்தியும் அறிவார்ந்த பிள்ளை கேட்பது வேறாய் இருக்கும். அறிவில்லாத பிள்ளை கேட்பது வேறாய் இருக்கும்.

இந்த இடத்தில் ஒன்றை நினைவுபடுத்துகின்றேன். எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டிய செய்தி இது. திருவிளையாடல் என்றால் இறைவன் ஆடிய விளையாட்டு என்று பொருள். ஏன் அவன் விளையாட வேண்டும்? பொழுது போகவில்லையா அவனுக்கு? அல்லது அவன் என்ன சிறு பிள்ளையா? ஏன் ஆட வேண்டும்? திருவிளையாடல் என்றால் என்ன?

திரு – ஞானம்
விளை – தோன்றுதல்.
ஆடுதல் – இயக்கம்.

ஒரு சீவனில் ஞானம் விளையும் பொருட்டு இறைவன் ஆடுகின்ற ஆட்டம் திருவிளையாடல். ஆன்மாவிலே ஞானம் விளைய வேண்டும். நமக்கெல்லாம் ஞானம் உண்டாக வேண்டுமென்பதற்காக அவன் இயங்கிக் கொண்டிருக்கின்றான். அந்த இயக்கமே திருவிளையாடல்.

நமக்கு உணவு கிடைக்க வேண்டுமென்பதற்காகத் தாயார் உணவு சமைத்துப் போடுகின்றார்கள். நமக்கு அறிவு கிடைக்க வேண்டுமென்பதற்காக ஆசாரியர் காலை முதல் மாலை வரையில் முயன்று பாடம் நடத்திக் கொண்டு இருக்கின்றார். அப்படியே நம்மிடத்தில் ஞானம் விளைய வேண்டும் என்பதற்காக இறைவன் இயங்கிக் கொண்டிருக்கின்றான்; இயற்கையில் நின்று ஆடிக் கொண்டு இருக்கின்றான். அதற்கு நடனம் என்று பெயர். நடம் என்பதற்கு ஆனந்தப் பொருள் என்றும் நடனம் என்பது நாடுதற்குரிய ஆட்டம் என்று பொருள் பெறும். அந்த ஆட்டம் எங்கே நிகழ்கின்றது? தில்லையில் நிகழ்வது அந்த ஆட்டம். தில்லை என்றவுடன் சிதம்பரம்தான் நமக்கெல்லாம் நினைவு வரும். மேலும் ஆனித் திருமஞ்சனமும் நினைவு வரும். இதையெல்லாம் பார்க்கப் போக வேண்டாம் என்று சொல்லவில்லை. இப்படியெல்லாம் சொல்லி வைத்ததற்கு என்ன காரணம்? அவன் நடனத்தைப் பார்த்தவர்கள் யார்? சிறிது சிந்தனை செய்து பார்க்க வேண்டும். கோயிலுக்குப் போவதில் தவறில்லை. ஆனால் கோயிலுக்குப் போவதன் உட்பொருள் என்ன என்று தெரிந்து போக வேண்டும்.

எனக்கு வயிற்று வலி. அது போக எந்தக் கோயிலுக்குப் போக வேண்டும் என்றும், எந்தக் கோயிலுக்குப் போவதாக வேண்டிக் கொண்டால் வயிற்று வலிபோகும் என்றும் கேட்கிறோம். இப்படிக் கேட்பது அறிவல்ல. வயிற்று வலிக்கும் கோயிலுக்கும் என்ன சம்பந்தம். இது அறியாமை. இந்த வயிற்று வலிக்கு என்ன மருந்து சாப்பிடலாம் என்று கேட்பது அறிவுடைமை.

வைத்தீசுவரன் கோயிலுக்குப் போனால் வயிற்று வலி போய்விடும் என்று சொல்கின்றார்கள். காரணம்

அவன்தான் வைத்தியநாதன். அங்கே போனால் எந்த நோயும் குணமாகிவிடும் என்று சொல்கின்றார்கள். ஒரு சமயம் இவன் அங்கே போய்ச் சேருவதற்குள் அந்த நோய் தணிந்துவிடலாம். 'நீங்கள் சொன்னீர்களா, நான் அங்கே போனேன், போவதற்குள் நோய் பறந்துவிட்டது' என்று மகிழ்ச்சியாகச் சொல்லுவார்கள். ஆனால் இதுவே விதியாகிவிடாது. இப்படிச் சொல்வதால் இறைவனிடத்தில் நம்பிக்கை இல்லைபோல் இருக்கிறது ஐயாவுக்கு என்று எண்ணிக் கொள்ளாதீர்கள். இறைவனிடத்தில் கொள்ளும் நம்பிக்கை வேறு; நோய் தீர்க்கும் முறை வேறு. உதாரணமாக,

எனக்குப் பத்து, பதினோரு வயதிருக்கும் போது எங்கள் பெரியம்மா இருந்த கிராமத்திற்குப் போனோம். பட்டணத்திலிருந்து வந்த பிள்ளைகள் காலையில் கூழ் சாப்பிடமாட்டார்கள் என்று எண்ணிப் பழைய சாதத்தைப் பிழிந்து வைத்து, இரவு மீந்திருந்த குழம்பைப் போட்டார்கள். அதைச் சாப்பிட்டுவிட்டு நாங்கள் வேலைக்குப் போய்விடுவோம். அப்போது எனக்குத் தாங்க முடியாத வயிற்று வலி ஏற்பட்டுவிட்டது. அங்கிருந்த நாட்டு வைத்தியர்–புழப்பலூர் என்ற ஊரில் இருந்து வந்தவர், எங்களைச் சோதித்துப்பார்த்துவிட்டு, 40 நாளைக்கு மருந்து சாப்பிடவேண்டுமென்று சொன்னார். அவர் வைத்திருந்த மாத்திரையில் ஒரு இழைப்பு இழைத்தால் அதற்கு 3.50 ரூபா கட்டணம் கொடுக்க வேண்டுமென்று சொன்னார். 35 ஆண்டுகளுக்கு முன்னேயே இப்படிப்பட்ட கட்டணம் வசூலித்தார் அந்த மருத்துவர். நானோ கஞ்சனிலும் கஞ்சன், வடிகட்டிய கஞ்சன். அதிகமாகப் பணம் செலவு செய்வதென்பது எனக்குப் பிடிக்காது. இவ்வளவு பணம் கொடுத்து மருந்து வாங்கிச் சாப்பிட வேண்டுமா என்று எண்ணி மருந்தே வேண்டாமென்று சொல்லிவிட்டேன்.

வயிற்று வலி தாங்க முடியாமல் இருந்தது. என்ன செய்வதென்று யோசித்து மதிய உணவு வேண்டாமென்று சொல்லிவிட்டேன். இரவு நேரத்தில் இரண்டு பிடி சாப்பிட்டுவிட்டு படுத்துக் கொள்வேன். காலையில்

எழுந்து பழையது சாப்பிட்டுவிட்டுப் போய்விடுவேன். பகலெல்லாம் அந்த வலி இருந்து கொண்டே இருக்கும். என் பெரியம்மா, 'இந்த வயிற்று வலி போகவேண்டுமென்றால் திருப்போரூர் சாமிக்கு வேண்டிக் கொள், வெல்லம் கரைவதுபோல் உன் வயிற்று வலியும் கரைந்துபோகும் என்றார்கள். அவர்கள் சொன்ன யோசனை எனக்கு ஏற்புடையதாகத் தெரியவில்லை. காரணம் வெல்லம் வாங்கிப் போடுவதென்றால் காசு செலவாகிவிடும் என்பதால் அதற்கும் ஒத்துக் கொள்ளவில்லை. இதனால் எனக்குக் கடவுள் நம்பிக்கையில்லை என்று அர்த்தம் அல்ல. காசு செலவு செய்து கடவுள் நம்பிக்கையை வளர்த்துக் கொள்ள வேண்டாம் என்பது என் உள்ளம்.

நான் செய்தது மூட நம்பிக்கையா? அல்லது அறிவார்ந்த செயலா? என்பதற்காக நடந்ததைச் சொல்கிறேன்; நீங்களே புரிந்து கொள்ளுங்கள். நான் மருந்தும் சாப்பிடாமல், பிரார்த்தனையும் செய்யாமல் இருந்ததைப் பார்த்து என்னை அடிக்கடித் திட்டிக் கொண்டேயிருந்தார்கள். ஒரு நாள் எனக்குக் கோபம் வந்து அன்றைக்குக் காலையில் பழையது சாப்பிடாமலே வெளியில் போய்விட்டேன் அன்றைக்கு எனக்கு வயிற்று வலி இல்லை. மதியம் இன்னொரு பெரியம்மா வீட்டில் போய்ச் சாப்பிட்டேன். மறு நாள் காலையில் இந்தப் பெரியம்மா வீட்டில் வந்து பழையது சாப்பிட்டேன். உடனே வயிற்று வலி வந்துவிட்டது. மறுநாள் ஏதும் சாப்பிடாமல் இருந்தேன். வயிற்று வலியும் இல்லை. இப்படி ஒரு நாள் பழையது சாப்பிடுவது, ஒரு நாள் சாப்பிடாமல் இருப்பது என்று மாறி மாறிச் செய்து பார்த்தேன். பழையது சாப்பிடுகின்ற மட்டும் வயிற்று வலி வருவதும், சாப்பிடாமல் இருக்கின்ற நாளில் வயிற்று வலி இல்லாமலும் இருப்பதை எண்ணிப் பார்த்துப் பழையது சாப்பிடுவதை நிறுத்திக் கொண்டேன். அன்றிலிருந்து எனக்கு வயிற்று வலி வருவதும் நின்று விட்டது. உடனே பழையது சாப்பிட்டால் வயிற்று வலி வருமா? என்று கேள்வி கேட்காதீர்கள். எனக்கு பழையது சாப்பிட்டால் ஒத்துக் கொள்ளவில்லை என்பதுதான் சரி.

இப்போது சாமியா வயிற்று வலியை உண்டாக்கினார்; அல்லது வலியை நீக்கினார்; சாமிக்கும் அந்த வலிக்கும் சம்பந்தமில்லை என்று உணர்ந்தேன்.

சமயத்திலே பலருக்குச் சிந்தனையே வேலை செய்வதில்லை. சமயம் என்பதனைக் காலம், மதம் என்ற இரண்டுக்குமே எடுத்துக் கொள்ளலாம்.

அப்பர் அடிகளுக்கு எப்படி சூலை நோய் வந்தது? அது கடவுளே கொடுத்துவிட்ட வலியா? அப்படியானால் கடவுள் வேறு வேலை இல்லாமல் இருக்கின்றாரா? இவருக்கு வயிற்று வலியைக் கொடுப்பது தான் அவருக்கு வேலையா? வேறு வேலை எதுவும் கிடையாதா? அவருக்கு வந்த வயிற்று வலிக்கு காரணம் வேறு. சமணத்திற்குப் போனதால்தான் அவருக்கு வயிற்று வலி வந்ததென்பர் சிலர். அப்படியானால் பாண்டியன் சமணத்திற்குப் போனானே, அவனுக்கு வயிற்று வலி ஏன் வரவில்லை? இவருக்கு மட்டும் அந்த வலியை ஏன் இறைவன் கொடுக்க வேண்டும்? வயிற்று வலியைக் கடவுள் கொடுத்திருந்தாலும் அதற்கொரு காரணம் உண்டு. அது என்ன என்றால் இந்தப் பிள்ளை வாழவேண்டுமென்று வாழ்ந்து கொண்டிருந்த ஒரு தமக்கையின் மனம் நொந்தது. அந்த நோக்காடு இவருக்கு வயிற்றில் நோக்காடாக வந்தது. அன்றைக்கு இரவு தமக்கையின் காலில் விழுந்து வணங்கிய பின்னர் வயிற்று வலியும் நீங்கியது. காரணம் அம்மையாரின் வயிறு குளிர்ந்தது. இதைத்தான் 'பெரியவர்கள் மனம் நொந்தால் நம் வாழ்க்கையும் நொந்து போகும்' என்றார்கள். அதனால்தான் யாருடைய மனமும் நோகாமல் நடக்கப் பழகிக் கொள்ள வேண்டும். பிறர் மனம்நொந்தால் நமக்கு நோக்காடு வரும். அதனால் அப்படி வரும் துன்பங்களுக்கும், கடவுளுக்கும் சம்பந்தப்படுத்தக் கூடாது. நாம் பிறருக்குத் தீங்கு விளைவிக்கின்ற போது அவர்கள் எப்படித் துன்பப்படுகின்றார்கள் என்பதை உணர்த்த அத்தகைய நோக்காட்டை நமக்குத் தந்து காட்டுகின்றான். அவ்வாறன்றி அவனைத் திட்டினாலும், வாழ்த்தினாலும் அவன் அதற்காக நம்மைத் துன்புறுத்துவதில்லை.

கடவுளுக்கு என்ன அநியாயத்தை வேண்டுமானாலும் செய்யலாம். ஆனால் பதிலுக்கு நமக்கு அவன் எந்தவிதமான தண்டனையோ, துன்பமோ தருவதில்லை. ஆனால் மற்றவர்கள் யாருக்காவது தீங்கு செய்தால், பதிலுக்கு நமக்குத் தீங்கு விளைவித்துவிடுவான். அவர்கள் பட்ட துன்பத்தைப் போல நாமும் துன்பப்பட்டுவிட வேண்டியிருக்கும். அதனால் தான் அடியார்களுக்கு ஏற்படுத்துகின்ற துன்பங்களின்போது இறைவன் வெளிப்பட்டு அவர்கள் துன்பத்தைத் துடைப்பான். மார்க்கண்டேயருக்காகக் காலனையே உதைத்தானே. ஏன்? தன்மேல் பாசக்கயிறு போட்டதனாலா? இல்லை. தன்னை வந்து அடைக்கலம் புகுந்தவன்மேல் எமன் எப்படி பாசக் கயிற்றை வீசலாம் என்றுதான் காய்ந்தான்.

இறைவன் ஆடுகின்ற நடனம் தில்லையிலேயும் இல்லை. வேறு எந்தக் கோயிலிலும் நடக்கவில்லை. பின்பு அவன் நடனம் எங்கே நடக்கின்றது? அதை மாணவரே ஆசாரியரிடம் சொல்லுகின்றார். நாதாந்தம் என்ற எல்லையில் நாதமும் கடந்த நிலையில் ஐந்தெழுத்தால் அமைந்த வடிவத்தில் நின்று ஆடிக் கொண்டிருக்கும் ஆட்டத்தை அவன் எப்படி ஆடுகின்றானோ அதனை அப்படியே நான் பெற்றிட வேண்டும்.

நற்றவத்தோர் உள்ளத்தில் உருக்கொண்டு ஆடிக் கொண்டிருப்பவன் பெருமான், நற்றவத்தவர் உள்ளிருந்து ஓங்கும் நமச்சிவாயத்தை நான் மறவேனே என்றால் அந்த முன்னோர் மரபிலிருந்து கொஞ்சங்கூட வழுவிப் போகாத மரபுடையவன் பெருமான். நாம் புதிய மரபு ஒன்றையும் வகுத்துவிட முடியாது. புதிதாக விளக்கங்கள் வேண்டுமானால் செய்யலாம். விளக்கங்களைத் தெளிவாகச் சொல்லலாம். ஆனால் புதிய செய்திகள் எதையும் நம்மால் கண்டு பிடித்துச் சொல்ல முடியாது.

தவத்தோர் உள்ளத்திற்குள்ளே ஐந்தெழுத்தின் வடிவம் கொண்டு ஆடிக் கொண்டிருக்கின்றான். இந்தத் தவம் எப்படி இருக்க வேண்டுமென்று உள்ளபடி எனக்குச் சொல்லுங்கள் என்று கேட்கின்றார்.

இதை ஏன் குருநாதனிடம் கேட்டுக் கொண்டார் என்றால் பலகால் நாம் பழகிக் கொண்டிருந்தாலும் அவர்களுடைய தகுதிகள், தன்மைகள் தெரியாமற் போய்விடும். இந்த அளவுக்குக் கேட்கின்ற மாணவர் ஏதோ ஒரு அனுபவம் பெற்றிருந்ததால்தான் கேட்க முடியும். நற்றவத்தோர் உள்ளிருந்து நாதன் நடம் செய்கின்றான். அதனைக் காட்டுங்கள் என்றால் அவருக்கு ஓரளவுக்குத் தெரிந்திருக்கின்றது. ஆனால் உள்ளபடி அவர் இன்னும் அதனைக் காணவில்லையென்றும் தெரிகிறது. அதனால் அதனை விளக்கிக் காட்டும்படி ஆசாரியனிடம் கேட்டுக் கொள்கின்றார். ஏதோ ஒரு ஆட்டம் நிகழ்கின்றது என்பது மட்டும் தெரிகிறதே தவிர, அதன் முறைமை என்ன, அதன் பொருள் என்ன என்றெல்லாம் இவருக்குத் தெரியவில்லை. அதனால் கேட்டுக் கொள்ளுகின்றார். ஏன்? அறிவித்தாலன்றி அறியாதது இந்த ஆன்மா. அதனால் உள்ளபடி அறிவி என்று கேட்டுக் கொள்கின்றார்.

சிலபேர் கண்மூடி மௌனமாக இருந்து உள்ளுக்குள்ளேயே ஆனந்தப்பட்டுக் கொண்டிருப்பார்கள். அப்போது அந்தப் பொருள் ஆனந்த மயமானது என்பதை உணர்ந்து கொள்ளலாம். அதனை மணிவாசகப் பெருமான், "உய்யஎன் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா" என்பார்.

பெருமான் ஐந்தெழுத்தின் உருக் கொண்டு ஆடிக்கொண்டு இருக்கின்றான். அதனை உள்ளபடி எனக்கு அறிவிக்க வேண்டுமென்று ஆசாரியனிடம் வேண்டிக் கொள்கின்றார்.



31. எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா! நவிலக்கேள் - சிட்டன்
சிவாயநம என்னும் திருஎழுத்துஅஞ் சாலே
அவாயம் அற நின்றுஆடு வான்

இலிங்கத்தை எட்டும் இரண்டும் என்று சொல்கின்றார். இலிங்கத்திலேயே ஆடுகின்றார். இரண்டு என்பது கீழிருக்கின்ற ஆவுடையார். மேலிருப்பது இலிங்கம். தீவடிவாக எரிவது. சிவ்லிங்கத்தில் குழவிக்கல் போல்

இருக்கிறதல்லவா, அது தீ வடிவத்தைக் குறிக்கும். அதற்கு எட்டு என்று பெயர். கீழே உரல்போல் இருப்பது ஆவுடையார். அதற்கு இரண்டு என்று பெயர். இந்த இரண்டும் சேர்ந்து உருவானது 'ஓ', 'அ', 'உ', 'ம' மூன்றும் சேர்ந்தால் 'ஓம்'. 'அ' என்றால் எட்டு, 'உ' என்றால் இரண்டு, இவை எண்களைத் தமிழில் குறிக்கும் முறை.

''எட்டும் இரண்டும் அறியாத என்னைப் பட்டி மண்டபம் ஏற்றினை'' என்பார் மணிவாசகர். எட்டும் இரண்டும் என்றால் பத்து. இதுகூடவா மணிவாசகருக்குத் தெரியாமல் இருந்தது! என்று ஐயம் எழும்.

'அ'கரம் இறைவன். 'உ'கரம் இந்த ஆன்மா. இறைவனுடைய வண்ணம் எது என்றும், உயிரின் வண்ணம் எது என்றும் தெரியாதிருந்த என்னைப் பட்டி மண்டபம் ஏற்றினையே என்று உருகுவார் மணிவாசகர். பட்டி மண்டபம் என்பது அறிஞர் அவை. அறிவார்ந்த மேடை.

இறைவனும் ஆன்மாவும் சேர்ந்து விளங்கும் நிலையையே இலிங்கமாக நம் பெரியவர்கள் உருவகப்படுத்திக் காட்டியிருக்கின்றார்கள்.

எட்டும் இரண்டும் என்ன என்றும் ஐந்தெழுத்தில் இறைவன் உருக்கொண்டு ஆடுகின்றான். பெருமான் என்பதற்கும் இன்னும் சற்று விளக்கத்தைப் பார்க்கலாம்.

ஆடுகின்றவர்கள் எப்போதும் முதலில் ஒரு எல்லையை வகுத்துக் கொள்ள வேண்டும். எல்லையில்லாமல் ஆடினால் அது முறைமையின்றிப் போய்விடும்.

*அரங்கின்றி வட்டாடி அற்றே நிரம்பிய*
*நூல் இன்றிக் கோட்டிக் கொளல். (401)*

என்பது திருவள்ளுவரின் வாக்கு. பேச்சாளர்கள் என்னதான் யுக்திகள் தெரிந்தவர்களாக இருந்தாலும், கல்விகள் பயின்றிருந்தாலும், ஞானநூல்களினின்றும் மேற் கோள்களை எடுத்துக்காட்டிப் பேசினால்தான்

அவர்கள் பேச்சு எடுபடும். ஞான நூல்களில் உள்ள செய்திகளை எடுத்துக் கொண்டு அதனுடன் தங்களது யுக்தியையும் கலந்து பேசினால்தான் பேச்சும் சிறப்பாக இருக்கும். கேட்போர் உள்ளத்தையும் கவர்ந்து நிறுத்தும். ஞான நூல்களின் கருத்துக்களைக் கலவாது பேசுகின்ற பேச்சுக்கள் யாவும் அரங்கின்றி வட்டாடுதல் போன்ற பயனற்றதாகிவிடும்.

ஏன் அப்படிப் பயனற்றதாகிவிடுகின்றது? இதற்கு ஓர் எடுத்துக்காட்டைச் சொல்லலாம். இறைவன் எங்கும், எதிலும் நிறைந்து எல்லையில்லாது விளங்குகின்றவன். அவனே இந்த ஆன்மாக்களுக்குப் பயன்படவேண்டும் என்று எண்ணுகின்ற போது பிரணவத்தை ஓர் எல்லையாக்கிக் கொண்டு அதனுள்ளே ஐந்தெழுத்தின் வடிவமாக நின்றுகொண்டு ஐந்தொழிலையும் செய்து கொண்டிருக்கின்றான். எல்லையற்று விளங்கும் பரம்பொருளே பயனை அளிக்க நினைக்கின்றபோது ஒரு எல்லை வகுத்துக் கொள்ளுகின்றான். எனவே முதலில் ஓர் அரங்கத்தை வகுத்துக் கொண்டான். அதற்குத் திருவாசி என்று பெயர். அதுவே பிரணவம்.

எல்லையில் வந்து நின்ற இந்த ஆன்மாக்கள் நன்மை பெற்று உய்ய வேண்டுமென்ற எண்ணத்தில்தான். அதற்கு என்ன செய்ய வேண்டும்? ஆட்டம் இருந்தால்தான் அனைத்தும் இயங்கும். எனவே பிரணவம் என்ற அரங்கத்திற்குள் ஐந்தெழுத்து உருக்கொண்டு ஆடிக் கொண்டிருக்கின்றான்.

திருவாசி அல்லது பிரணவம் என்பது அரங்கம். அதற்குள் ஒளியாக இருப்பது ஐந்தெழுத்து. அந்த ஐந்தெழுத்து இயங்கினாலன்றி உலகம் இயங்காது அப்போது ஒளிக்கு முன்னே இருப்பது எது? ஒலி. 'ஓ' என்பது ஒலியாக நிற்க அதனுள் இயங்கிக் கொண்டிருக்கின்றது.

எழுத்துக்கள் யாவும் ஒளியுடையன. அவ்வெழுத்துக்கள் இந்த உடம்பினுள்ளே ஒவ்வோர் இடத்தில் இருந்து இயங்கிக் கொண்டிருக்கின்றன. அப்படி அவை இயங்கிக் கொண்டிருப்பதால்தான் நாம் இயங்கிக் கொண்டிருக்கின்றோம். இல்லாவிட்டால் நாம் இயங்கமாட்டோம். இப்பதிவு எல்லா உயிர்களிடத்தும்

நிகழ்ந்து கொண்டு இருக்கின்றது. இது எப்படி என்றால் இறைவன் எல்லா உயிர்களிடத்தும் நிறைந்து இருப்பதால் அப்பதிவும் எல்லா உயிர்களிடத்தும் இருக்கின்றது.

இறைவனுக்கு ஒரே வடிவந்தான். ஆனால் அவனுடைய ஆற்றலானது அலைகளாக வந்து கொண்டிருக்கின்றன. அந்த அலைகள் இடைவிடாது வந்து கொண்டு இருப்பதனாலே அது எல்லா உயிர்களிடத்தும் பதிந்திருக்கிறது. இறைவன் எப்போதும் ஆடிக் கொண்டிருப்பதனால் அவன் அலைவுகள் அனைத்து உயிர்களிடத்தும் பதிந்து விளங்குகின்றது. இந்த ஆட்டமும், பதிவும் இடையீடு இல்லாமல் தொடர்ச்சியாக நிகழ்ந்து கொண்டே இருக்கின்றது. நடிகர்கள் நடிப்பதையும், பாடு வதையும், பேசுவதையும் படச்சுருள் மூலம் படமாக எடுக்கும்போது படச்சுருள் இடைவிடாது சுழன்று கொண்டிருக்கின்றது. அச்சுழற்சியின் போது அனைத்தையும் அது பதிவு செய்து வைத்துக் கொள்கின்றதல்லவா? பதிவு செய்ததை வேறொரு கருவியில் பொருத்திப் படச்சுருளை இயக்கிவிட்டால் மீண்டும் நடிப்பும், பேச்சும், பாட்டும் நமக்குக் கேட்கின்றது. அதுபோலவே இறைவனது இயக்கம் இடைவிடாது நிகழ்வதனால், அது சீவனில் பதிந்து இவற்றை இயக்கிக் கொண்டிருக்கின்றது. இறைவனது பதிவுகள் எப்போதும் அழிவதில்லை. பதிந்தது பதிந்ததுதான் இறைவனது இயக்கம் என்றைக்கு நிற்கின்றதோ அன்றைக்குத்தான் பதிவுகள் யாவும் நிற்கும்.

எனவே இறைவனது பதிவாக இருக்கின்ற ஒளி, ஒலி அனைத்தும் அவனே. ஆனால் சீவன் இறைவனல்ல. சீவனில் இறைவனது பதிவு இருக்கும். அவ்வளவுதான்.

அவாயமற – அபாயமற என்று சொல்லியிருக்க வேண்டும். ஆனால் அவாயமற என்கிறார். ஏன்? அவாவினால் வருகின்ற துன்பங்கள் அறுமாறு அவன் ஆட்டம் நிகழ்வதால் அப்படிச் சொன்னார். மற்றொரு வகையில் இதைச் சிந்திக்கலாம்.

அவாயமற நின்றாடுவான் என்றால் நமக்கு என்ன அபாயம் இருக்கின்றது? மரணந்தான் பெருத்த அபாயம். அதைத் தவிர வேறு அபாயமே நமக்கில்லை. அந்த மரண பயத்தை நீக்குவதற்காகவே இறைவன் ஆடிக்கொண்டு

இருக்கின்றான் மற்ற நெருக்கடிகள் யாவும் நமக்குப் பெரிய அபாயங்களில்லை. மரணம் வந்துவிட்டால் நம்மால் எதுவும் செய்ய முடியாது.

உறங்கிவிட்டால் விழித்து எழுந்தவுடன் உற்சாகத்துடன் செயல்படலாம். மறந்துவிட்டால் மீண்டும் நினைவுக்குக் கொண்டு வரலாம். ஆனால் இறந்து விட்டால் என்ன செய்ய முடியும்? ஒன்றும் செய்ய முடியாது. எனவே உயிருக்குப் பெரிய அப்பாயம் மரணந்தான். அதனால்தான் 'காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்' என்று பழமொழியாகப் பெரியவர்கள் சொல்லி வைத்தனர். ஆனால் இந்த அருமையான அனுபவ மொழிக்கு நாம் கொள்ளும் பொருள் என்ன தெரியுமா? காற்று அடிக்கின்ற போதே நெல் முதலான பொருள்களில் உள்ள பதர் முதலானவற்றை நீக்கிச் சுத்தப்படுத்தி வைத்துக் கொள்ள வேண்டும் என்பதாகும். இப்பழமொழிக்கு இது பொருளன்று. நம் உடம்பில் காற்று இருக்கின்றபோதே அதைப் போற்றிக் கொள்ள வேண்டுமென்பதே இதன் கருத்து. காற்றுள்ளபோதே போற்றிக் கொள் என்பது காற்றுள்ளபோதே தூற்றிக் கொள் என்று திரிந்து வழங்குகின்றது. அதனால் 'சிவாயநம'. என்பதனைக் கைக்கொண்டு மரணமாகிய பயத்தைப் போக்கிக் கொள்ள வேண்டும்.

நவிலுதல் என்றால் ஓசைபடாமல் சொல்லுதல். இதனை 'நாஇயல் மருங்கி நவிலப்பாடி'' என்ற திருமுருகாற்றுப்படை வரிகளால் அறியலாம். மந்திரங்களை உச்சரிக்கும்போது ஓசையெழாமல் உள் நாக்கினால் உச்சரிக்கப் பழக வேண்டும்.

வாசியோகத்தைக் கைக்கொண்டவர்கள் வாயினாலே பேசமாட்டார்கள். அவர்களது வாய் மட்டும் அசையும். உள்ளிருந்து ஒரு காற்று பேசும். நாவு அசையாது. உள்நாவு மட்டும் அசைந்து காற்றால் அசைவுண்டாக்கிப் பேச வேண்டிய செய்திகளைப் பேசுவார்கள். பேச்சும் தெளிவாக இருக்கும். இதற்கு ஒலியின்றிப் பேசுகின்ற மொழி என்று பெயர். நவிலுதல் என்றும் பெயர்.

நற்றவத்தில் இருந்து எட்டும் இரண்டும் உருவானபோது அங்கே எழுந்த ஆனந்தத்தை,

மௌனமொழியால்தான் சொல்ல முடியும். வேறு எப்படியும் இதனைச் சொல்ல முடியாது. அதனால்தான் இந்த ஆசிரியரும் அந்த நிலையில் இருந்து பேசுகின்றார்.

* * * * *

32. ஆடும் படிகேள்நல் அம்பலத்தான் ஐயனே!
நாடும் திருவடியி லே 'ந'கரம் ,– கூடும்
'ம'கரம் உதரம், வளர்தோள் 'சி' கரம்
பகரும்முகம் 'வா' முடி 'ய' ப் பார்.

ஐந்தெழுத்திலே இறைவன் எப்படி உருக் கொண்டிருக்கின்றான் என்று இப்பாடலிலே சொல்கின்றார்.

ஆன்மாக்கள் விரும்புவது இன்பம். அந்த இன்பத்தின் இருப்பிடம் திருவடி. அது எடுத்த பொற்பாதம். அதுதான் 'ந'கரம், வயிறு 'ம' கரம், தோள் 'சி'கரம் முகம்– 'வ'கரம், முடி 'ய'கரம்.

மாணவனை 'ஐயனே' என்ற கூப்பிடுகின்றார் ஆசிரியர். அப்படிக் கூப்பிடலாமா? கூப்பிடலாம். தந்தை மகனைத் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்சுகின்றபோது, 'என் அப்பா, என் ராசா' என்றெல்லாம் கொஞ்சுகின்றான். அப்ப!டியானால் அக்குழந்தை அவன் தந்தைக்கு 'அப்பாவா? அல்லது அவன் என்ன மன்னனா? அன்பினால் குழந்தையை அப்படிக் கூப்பிடுகின்றான். அப்படியே மாணவனை ஆசிரியர் தங்கள் தகுதியிலேயே வைத்து அழைப்பது அன்பின் மிகுதியால் என்பதை உணர்க.

இந்த ஐந்து எழுத்துக்களும் ஐந்துவிதமான தொழில்களைச் செய்து கொண்டிருக்கின்றன. அதனை அடுத்த பாடலில் சொல்லுகின்றார்.

* * * * *

33. சேர்க்கும் துடி 'சி' கரம் சித்கன'வா' வீசுகரம்
ஆர்க்கும் 'ய' கரம் அபயகரம் – பார்க்கில் இறைக்கு
அங்கி 'ந'கரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கும் 'ம' கரம்அது தான்.

உடுக்கை ஏந்திய கரம் 'சி'கரம்; வீசிநிற்கும் கரம் 'வா' அபயகரம் 'ய'கரம்; நெருப்பு ஏந்திய கரம் 'நகரம்' ஊன்றிய திருவடியில் முயலகன் இருக்கும் இடத்தில் 'ம'கரம். உலகத் தோற்றம் ஓசையிலிருந்துதான் வருகின்றது. ஒலி உடுக்கையில் இருந்து எழுகின்றது. உலகம் ஓசையிலிருந்து உருவாகின்றது என்பதைக் குறிப்பதே சிகரம். படைக்கும் தொழிலை நிகழ்த்துவது சிகரம். அது ஒளி நிலையில் இருக்கின்றது. படைக்கின்றபோது ஒலியை எழுப்பும். அவ்வொலி உடுக்கையில் இருந்து எழுகின்றது. அந்த உடுக்கை இறைவன் கையில் இருக்கின்றது.

சிகரம் சிவத்தைக் குறிக்கும். வகரம் கருணையைக் குறிக்கும். இந்த இரண்டையும் குறிப்பிடவே 'வீ'க ரம், என்கின்றார். சக்தியின் இயல்பு எங்கும் வீசி நின்று ஆடும், செயல்படும். அதனால் 'வீ'கரம், என்றார். துடி (உடுக்கை) அங்கேயே (நிலையாக) இருப்பது.

உலகத்தைத்தான் படைத்துவிட்டானே இறைவன். இன்னும் அந்த உடுக்கை ஒலி எழுந்து கொண்டிருக்கின்றதா? என்றால் ஒவ்வொரு இமை நொடிக்கும் நேரம்கூட விடாமல் படைப்புத் தொழில் நடந்து கொண்டேயிருக்கின்றது. அதனால்தான் இன்றைக்கும் இறைவன் ஆடிக் கொண்டேயிருக்கின்றான் அவன் ஒரு நொடி நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டாலும் அனைத்தும் ஓய்ந்துபோய் விடும். அதனால் அவனுக்கு ஒரு நாளும் ஓய்வு என்பதே கிடையாது. எந்த நிலையிலும் அவன் ஆடிக் கொண்டேயிருப்பதால்தான் படைப்புத் தொழிலும், அத்னைச் சார்ந்த மற்ற தொழில்களும் தொடர்ச்சியாக நடைபெற்று வருகின்றன.

<u>சிகரம்</u>

எந்த உயிர்தோன்றினாலும் ஒலி இல்லாமல் தோன்றாது; தோன்றும் போதும் ஒலி எழும். பிரியும்போதும் ஒலி எழும். அனைத்து ஒ லிகளும் நமக்குக் கேட்பது இல்லை. சில கேட்கும். சில கேட்காமலேயே ஒலித்துக் கொண்டிருக்கும். சரம், அசரம் மற்றும் அண்டங்களின் தோற்றத்திற்கு ஆதாரமாக இருப்பது சிகரம். அது நிலைப்பொருள். இதுவே படைப்பின் நிலை.

**வகரம்**

வகரம் திருவருட் சத்தியைக் குறிக்கும் சிவ என்பதில் 'சி' சிவத்தையும் 'வ' அருளையும் குறிப்பது 'திருந்து நல் சீ என்று உதறிய கையும் அருந்தவா வா வா என்று அணைத்த மலர்க்கையும் என்பது திருமந்திரம். 'வண்ணப் பணித்து என்னை வா என்ற வான்கருணை என்பார் மாணிக்க வாசகர்.

**யகரம்**

யகரம் ஆன்மாவைக் குறிக்கும், ஆர்க்கும் என்றால் ஆரவாரிக்கும் இயல்புடையது ஆன்மா என்று பொருள். 'ய'கரத்தைக் குறிப்பிடுவது அபயகரம்.' யகரம் இந்த ஆன்மாவைக் காப்பேன் என்று சொல்லிக் கொண்டு இருக்கின்றது. இதனை, கைவிடமாட்டான் என்று ஊதூது சங்கே' என்பார்.

**நகரம்**

'ந' என்பது நெருப்பு. அது எல்லாவற்றையும் தூய்மை செய்து கொண்டிருப்பது. இந்த 'ந'கரத்தைத் திரோதானம் என்று சொல்வர். 'ந'கரம் ஒவ்வொரு இடத்தில் ஒவ்வொரு வேலையைச் செய்து கொண்டு இருக்கின்றது. திரோதானம்கூட ஆன்மாவைத் தூய்மை செய்து கொண்டு இருக்கின்றது. அத்துடன் சிலவற்றை மறைத்து வைக்கும் தன்மையுடையது. மருத்துவமனையில் அறுவை சிகிச்சை செய்யும் போதும், வீட்டைச் சுத்தம் செய்யும்போதும் உள்ளிருக்கும் அனைவரையும் வெளியில் அனுப்பிவிட்டுத்தானே சுத்தம் செய்கின்றார்கள். இந்த மறைப்பு என்பது இறைவனது பெருங்கருணை.

**மகரம்**

முயலகன் என்பது மல சக்தி. அது தீய சக்தி. அது எப்போதும் ஆன்மாவில் தலைதூக்கிக் கொண்டேயிருக்கும். அதனை எப்போதும் அழிக்க முடியாது. ஏன்? அது ஆன்மாவில் இரண்டறக் கலந்து நிற்பதால் அதனை அழிக்க முடியாது. முயலகனை அழித்தால், ஆன்மாவும் அழிந்துபடும். அதனால் பெருங்கருணையுடன் ஆன்மாவைக் காக்கும் பொருட்டு ஆணவத்தையும், அழிக்காமல் விட்டு வைத்திருக்கின்றான், ஆனால் அது ஆன்மாவுக்குத் துன்பத்தைக் காட்டிக் கொண்டிருப்பதால் அதனை அடக்கி

வைத்திருக்கின்றான் தன் காலின் கீழ். உதாரணமாக, விஞ்ஞானம் என்ற பெயரில் நாம் செய்கின்ற சில செயல்கள் எப்படி நமக்கே ஊறு விளைவிக்கின்றது என்பதைப் பார்க்கலாம்.

இன்றைக்கு விஞ்ஞானம் மிகவும் வளர்ந்திருக்கின்றது. விவசாயிகளுக்கு விஞ்ஞானிகள் பல அறிவுரைகளைச் சொல்லிக் கொண்டிருக்கின்றார்கள். இந்த மருந்தைப் போடுங்கள், அந்த உரத்தைப் போடுங்கள் என்றெல்லாம் சொல்லுகின்றார்கள். இவற்றையெல்லாம் என்னளவில் நான் ஒத்துக் கொண்டதில்லை. உரங்களையும், பூச்சி மருந்துகளையும் போடப்போட அவற்றால் ஏற்படும் பின் விளைவுகளைப் பற்றி அவர்கள் ஆராயாமலேயே செய்து கொண்டிருக்கின்றார்கள் என்பது என் கருத்து. இப்போது விஞ்ஞானிகளும் இதனை ஒத்துக்கொண்டு உரம் போடுவதையும், பூச்சி மருந்துகளைத் தெளிப்பதையும் நிறுத்திக்கொண்டு இருக்கின்றார்கள்.

ஏன் இப்படி நடக்கின்றது? இயற்கை எப்போதுமே முன்னெச்சரிக்கையாகப் பல நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கின்றது என்பதை நாம் மறந்து விட்டு நமக்கு அறிவு மிகவும் மேம்பட்டு விளங்குகின்றது என்ற தன்முனைப்புத்தான் இதற்குக் காரணம். முற்காலத்தில் எல்லாம் வயல்வெளிகளில் பூச்சிக் கொல்லி மருந்துகள் தெளிக்க மாட்டார்கள். இரசாயன உரங்களையும் போட மாட்டார்கள். உரத்துக்குப் பதில் இலை தழைகளைப் போட்டு அழுகவைத்து உரமாக்குவார்கள். ஏர் உழுது உழுது மண்ணுக்கு உரம் ஏற்றுவார்கள். அதனை இடைவெளி விட்டு விட்டுச் செய்வதால் மண்ணில் பயிருக்கு ஊறு விளைவிக்கும் நுண் உயிர்கள் வெயிலில் பட்டு அழிந்துபடும். அதே நேரத்தில் மண்ணுக்கு அடியில் காத்து நிற்கும் ஈரம் வெளிப்பட்டுவிடும். மண் மிகவும் மிருதுவாக மாறி; பயிர்கள் வேர் விட ஏதுவாக நிற்கும். மண் உராய்வதனாலும், நன்றாக வெயிலில் காய்வதனாலும் உரம் ஏறும். உரம் போடுவதால் மட்டும் உரம் ஏறுவதில்லை. மாறாக இப்போதெல்லாம் ஒரே நாளில் பல ஏக்கர்களை இயந்திரங்களைக் கொண்டு உழுது

உடனுக்குடன் நாற்று நட்டுவிடுகின்றார்கள். இதனால் நுண் கிருமிகள் அழியாமல், பயிர்களின் வேரில் தங்கி, வளர்ந்து,பின்னர் பயிரின் குருத்தில் வந்து, பயனை அழித்துவிடும்.

இப்படியே, வயல்வெளியில் இருக்கும் நீரில் தவளைகள், மீன்கள் வாழும்.வயல்வெளிகளிலே பூச்சிக் கொல்லி மருந்துகள் போடாமல் இருந்த காலத்தே தவளைகள் இருந்தன, மீன்கள் இருந்தன, மற்ற மற்ற சீவன்கள் வாழ்ந்து கொண்டிருந்தன. பயிருக்கு எதிரியான பூச்சி, புழுக்களை அவை உண்டு பயிரைக் காத்து வந்தன. எட்டுக்கால் பூச்சிகள் மேலே வலையைப் பின்னிக் கொண்டு அவற்றில் வந்து விழும் பூச்சிகளைப் பிடித்துச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும். ஆனால் பூச்சிக் கொல்லி மருந்துகள் தெளிக்க ஆரம்பித்தவுடனே தவளைகள், மீன்கள் இவை யாவும் இறந்துவிடுகின்றன. பூச்சிகள் தாரர்ளமாக வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

மேலும் வேலி ஓரங்களில் மரம், செடிகள் வைத்து வளர்த்து வந்தனர். அவை இருப்பதால் பயிருக்கு நிழல் காக்கின்றது என்று அவற்றையும் எடுத்து விட்டனர். அதன் விளைவு இன்னதென்று நீண்ட நாட்கள் தெரிந்து கொள்ளாமல் இருந்துவிட்டு, இப்போது மீண்டும் பழைய நிலைக்கே திரும்ப வந்துவிட்டார்கள். சில அறிவியல் செய்திகளினால் என்னென்ன பின் விளைவுகள் நிகழ்கின்றன என்பதைத் தெரிந்து கொள்வதற்காகச் சொன்னேன்.

தற்போதைய விவசாய விளைபொருட்களை எவ்வளவுதான் சாப்பிட்டாலும் உடலில் பலம் ஏறுவதில்லை. ஏன் ? நம் உடலுக்குப் போதுமான உழைப்பில்லை. நாளும் நடக்க வேண்டும்; உடலுக்குத் தேவையான உழைப்பைத் தர வேண்டும். அப்போதுதான் உடலில் பலம் இருக்கும். ஆனால் இப்போது உண்ணவேண்டியது, உட்கார்ந்து கொள்ள வேண்டியது அல்லது உறங்க வேண்டியது என்று மிகவும் வசதியாக இருந்து கொண்டிருக்கின்றோம். இதன் பயன் என்ன? உடல் பருத்து ஊதிப்போய் விடுகின்றது. உடலில் சக்தி இருப்பதில்லை. உடல் பருப்பதனால் உள்ளே பல

நோய்கள் குடி கொள்ளுகின்றன. மருத்துவர்கள் மருந்துகளைக் கொடுப்பதோடு பல உடற்பயிற்சிகளையும் செய்யச் சொல்லி அறிவுரை கூறுகின்றார்கள். எனவே உணவைவிட, உடலுக்கு உழைப்பு மிகவும் முக்கியமானது. அதேபோல நிலத்துக்கு உரத்தைவிட உழவு மிகவும் முக்கியமானது. எனவே உழவை இடைவிட்டு இடைவிட்டுத்தான் செய்ய வேண்டும். அதுபோலவே உணவை உண்ணுகின்றபோதும் இடைவெளி விட்டு விட்டுத்தான் உண்ண வேண்டும்.

சாதாரணமாக ஒரு கூலியாள் நூறு கிலோ கொண்ட மூட்டையை சாதாரணமாகத் தூக்கிப் போடுகின்றான். நம்மால் அம்மூட்டையை அசைக்கவும் முடிவதில்லை. நாம் அவனை விட அதிகமாகவும், நன்றாகவும் சத்துள்ள உணவாகவும் சாப்பிட்டுக் கொண்டிருக்கின்றோம். இருந்தும் நம்மால் கடினமாக உழைக்க முடிவதில்லை. ஆனால் கூலியாளன் அவன் உட்கொள்ளும் உணவு, பழக்கம், பயிற்சி இவற்றிற்கேற்றவாறு உடலும் வலிமை கொண்டிருக்கின்றது.

இந்தப் பாடத்திற்கு இவையெல்லாம் தேவையான செய்திகள்தாமா என்ற வினா உங்கள் உள்ளத்தில் எழக்கூடும். உதாரணத்திற்காகச் சொல்லப்பட்டதுதான் இச்செய்தி. எப்படியென்றால், நாம் தீமைகளையெல்லாம் அழித்துவிட வேண்டும் என்று எண்ணுகின்றோம். நாம் செய்யும் தவறுகளை இறைவன் செய்வதில்லை. ஆன்மாவுக்குத் தீமை செய்து கொண்டிருக்கின்ற முயலகனை அவன் அழிப்பதில்லை, அடக்கித்தான் வைத்திருக்கின்றான். ஏன்? இந்த முயலகன் உயிர் வளர்ச்சிக்கு ஒரு வகையில் உதவியாக இருந்துகொண்டு இருக்கின்றான். எப்படி பயிர் வளர்ச்சிக்கு மீனும், தவளையும் உதவியாக இருக்கின்றனவோ அப்படி இந்த முயலகன் இருப்பதால்தான் நம்மிடத்தே இருக்கும் சில தீய சக்திகளை அழிக்க முடிகின்றது. இல்லாவிட்டால் அவற்றை அழிக்க முடியாது. எனவே இப்படிப்பட்ட முயலகனை அழிக்காமல் தன் திருவடியிலே அழுத்தி வைத்துக் கொண்டிருக்கின்றான்.

❥ ❥ ❥ ❥ ❥

34. ஓங்கார மேநல் திருவாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம் – ஆங்காரம்
அற்றார்அறிவர் அணி அம்பலத்தான் ஆடல்இது
பெற்றார் பிறப்புஅற்றார் பின்.

ஓங்காரம் – ஒலி. ஒலியால் ஆன அந்த எழுத்தே திருவாசி. அதில் நீங்கா எழுத்தாக அமைந்திருப்பது சுடர் அல்லது ஒளி. இதை ஆங்காரம் அற்றார் அறிவர். ஆங்காரம் எப்போது தணிகின்றதோ அப்போது இறைவன் உள்ளுக்குள்ளேயே, உன்னுள்ளேயே தெரிவான். இந்த ஆடலை யார் பார்த்தார்களோ அவர்கள் பின்னால் பிறப்புக்கு வரமாட்டார்கள் என்பது இதன் கருத்து.

இறைவனுடைய திருநடனம் எத்தகைய தன்மை உடையது? இதை ஏன் தமிழகத்தில் நடராசர் மூர்த்தமாக வைத்து வழிபடுகின்றார்கள் என்பது மேல் நாட்டாருக்கு வியப்பான செய்தியாக இருக்கின்றது. அதனால் அவர்கள் இதனை ஆராய்ந்து கொண்டு இருக்கின்றார்கள். தாங்கள் கண்ட உண்மைகளைப் புத்தகமாக எழுதிக் கொண்டும் இருக்கின்றார்கள். ஆனால் நாம் அதை இன்னும் தத்துவமாகப் பார்ப்பதோடு நிறுத்திக் கொண்டு விடுகின்றோம். இறைவனுடைய நடனம் என்பது வெறும் தத்துவமல்ல. அது ஒரு பேரியக்கம். அது ஒரு குறித்த இடத்தில், குறித்த முறையில் நடக்கும் சாதாரணமான நடனம் அன்று. அண்டம் சரம், அசரம் அனைத்திலும் அது ஊடுருவி நிற்கின்றது. அவற்றையெல்லாம் இயக்கிக் கொண்டிருக்கின்றது. இந்த நடனத்தைக் கண்ட நம் பெரியவர்கள், ஞானிகள் மிகவும் சுருக்கமாக நமக்குச் சொல்லி வைத்திருக்கின்றார்கள். அக்கருத்தில் நாம் ஆழ்ந்து ஈடுபட்டு அதன் உட்பொருளை உணர்ந்து கொள்ள வேண்டும். அறிவைக் கொண்டு ஆராய்ந்து அதன் பொருளை உணர்ந்து கொள்ள முடியாது.

ஓர் அன்பர், 'அருள்வெளி நடனம்' என்றொரு நூல் எழுதியிருக்கின்றார். அந்த நூல் முழுமையான நூல் அன்று. இருந்தாலும் அவருடைய முயற்சி பாராட்டத்தக்கது.

எப்படி முயன்றாலும் மனிதனால் முழுமையாகச் சொல்ல முடியாத நடனம் இறைவனது நடனம். அது ஓர் அற்புத நடனம். அதை மெய்கண்ட தேவரிடமிருந்து மனவாசகங்கடந்த தேவநாயனார் கேட்டுத் தெரிந்துகொள்ளுகின்றார்.

அந்த நடனம் மூவகைப்படும். தூல நடனம், சூட்சும நடனம், அதிசூட்சும நடனம் என்பன அதன்விரிவு. தூல நடனம் என்பதுபருமையான நடனம். சூட்சும நடனம் என்பது நுட்பமான நடனம். அதிசூட்சும நடனம் என்பது அதிநுட்பமான நடனம். இவை மூன்றையும் மொத்தமாகச் சேர்த்து ஊன நடனம் என்று பெயர் வைத்திருக்கின்றார்கள்.

## ஊன நடனம்

முதலில் சொல்லுகின்றபோது நடனம் என்று பொதுவாகவும், பின்னர் நாத நடனம், திருநடனம் என்று விரித்தும், இங்கே சொல்லுகின்ற போது ஊன நடனம் என்றும் சொல்லுகின்றார். ஊன நடனத்தை மூவகையாகப் பிரிக்கலாம் என்பதை மேலே பார்த்தோம்.

எந்த ஒரு பொருளை எடுத்துக் கொண்டாலும் அதனை மூன்றாகப் பிரிக்கலாம். நான்காவது பிரிப்பைப் பற்றி நமக்கு இப்போது தேவையில்லை.

ஊன நடனம் என்பது ஊனத்தைத் தரவல்லதா? என்றால் ஊனத்தைத்தரும் நடனமன்று. ஊனத்தை நீக்கும் நடனம். ஊனத்திலிருந்து கொண்டு இறைவன் நடனமாடி சீவனுடைய ஊனத்தை நீக்கும் நடனம் அது.

இந்தச் சீவனுக்கு தூல வடிவம் சூட்சும வடிவம் அதிசூட்சும வடிவம் என மூன்று வடிவங்கள் உண்டு. அந்த மூன்று வடிவங்களிலும் அந்தந்த வடிவத்திற்கு உரிய நடனமாடி, அந்தந்த வடிவத்தில் இருக்கும் அழுக்கை நீக்குவதற்காக மூவகையான நடனங்களை இறைவன் ஆடிக் கொண்டிருக்கின்றான்.

மனதை ஒரு வடிவாக வைத்திருக்கிறார்கள். அதுபரு வடிவம். இக்கருவிக்கு ஆதாரமாக இருப்பது இந்த உடல். இதற்குள்ளே இறைவன் ஆடிக் கொண்டிருக்கின்றான். அவன் ஆடவில்லையென்றால் இந்த உடம்பு எப்போதோ ஊனமாகப் போயிருக்கும்.

உதாரணமாக நாம் இந்த உடம்பை எடுத்து எத்தனை ஆண்டுகள் ஆகிவிட்டது! இத்தனை ஆண்டுகள் ஆகியும் இந்த உடம்பு கெடாமல் இருப்பது எப்படி? முதுமை என்பது எல்லாம் இருக்கின்றது சரி; ஆனால் இந்த உடம்பு அழுகாமல் எப்படி இருக்கின்றது? அதற்கு என்ன காரணம்? உயிர் போன நான்கு மணி நேரத்தில் இந்த உடல் அழுகிவிடுகின்றதே! அப்படியானால் இத்தனை ஆண்டுகளாகியும் இந்த உடல் அழுகாமல் இருப்பதற்கு என்ன காரணம்? என்னதான் செய்தாலும் உயிர் பிரிந்த பின்பு இந்த உடல் அழுகாமல் இருப்பதற்கு என்ன காரணம்? என்னதான் செய்தாலும் உயிர் பிரிந்த பின்பு இந்த உடல் அழுகிவிடுகின்றது. ஆனால் இத்தனை ஆண்டுகள் ஆகியும் இந்த உடம்பு கெடாமல் இருப்பதற்கு நாம் என்ன முயற்சிகள் செய்தோம் என்று எண்ணிப் பாருங்கள். நம்முடைய முயற்சிகள் இல்லாமலேயே இந்த உடம்பு அழுகாமல் இருப்பதையும் எண்ணிப் பாருங்கள். இறைவன் இந்த உயிரில் நின்று ஆடிக் கொண்டிருப்பதால்தான் இந்த உடல் இத்தனை நாளாகியும் அழுகாமல் இருக்கின்றது.

இப்படி இந்த உடல் கெடாவகையில் பாதுகாப்பாக ஆடிக்கொண்டிருக்கும் நடனத்திற்குப் பருப்பொருள் நடனம் என்று பெயர். அதுவே ஊனத்தை நீக்கும் நடனம் அல்லது ஊன நடனம்.

அடுத்து, உயிரில் இருக்கும் ஊனமாகிய காமாதி அறுபகைகளை அறுப்பதற்காக ஆடும்நடனம் சூக்கும நடனம் என்பர்.

அடுத்து உணர்வில் இருக்கும் குற்றங்களை நீக்குவதற்காக ஆடிக்கொண்டு இருக்கின்ற நடனத்திற்கு அதிசூக்கும நடனம் என்பர்.

உடல் குற்றங்களை நீக்க ஊனநடனமும், உயிரில் உள்ள குற்றங்களை நீக்க சூக்கும நடனமும், உணர்வில் உள்ள குற்றங்களை நீக்க அதிசூக்கும நடனமும் ஆடிக்கொண்டிருக்கின்றான் இறைவன்.

இப்படியெல்லாம் இறைவன் ஆட வேண்டுமா? வேறு விதமாகச் செய்யக் கூடாதா என்றால், குழந்தைக்கு உணவை ஊட்ட நினைக்கின்ற தாய், குழந்தையை வாயைத் திற என்று சொல்கிறாள். ஆனால் அப்படிச் சொல்வதைக் கேட்டுக் குழந்தை வாயைத் திறக்காது. எனவே, தாய் தன் வாயைத் திறந்து காட்டி, தான் உணவைத் தன் வாயில் போட்டுக் கொள்ளுவது போல் போட்டுக் கொள்ளுவதைப் பார்க்கின்ற குழந்தையும் வாயைத் திறக்கின்றது. ஊட்டுகின்ற உணவையும் ஏற்றுக் கொள்ளுகின்றது. வாயைத் திற என்று சொன்னவுடன் வாயைத் திறக்கும் பழக்கம் வந்துவிட்ட பின் வாய் திற என்றால் வாய் திறக்கும். உணவை ஊட்டினால் உண்ணும். அப்படியே ஊனம் நிறைந்த இந்த ஆன்மாவுக்கு அவன் தன் நிலையில் இருந்து என்ன செய்தாலும் தெரியாது. எனவே, தான் ஊனத்தில் நின்று ஆடிய பின்னர்தான் இந்த ஊனங்கள் எல்லாம் அகலும்.

வயலில் களையெடுக்க நினைக்கின்றவன் சேற்றில் இறங்காமல் களை யெடுக்க முடியாது, அப்படியே எந்த ஒரு செயலைச் செய்கின்றவனும் அந்தக் களத்தில் இறங்கியாக வேண்டும். அப்படி இறங்கும்போது அங்கிருக்கின்ற தூசும், தும்பும் அவன்மேலும் படத்தான் செய்யும். எவ்வித அழுக்கும் படாமல் எந்தக் குற்றங்களையும் அகற்றிவிட முடியாது. இறைவனும் தன் நிலையில் நின்றுவிட்டானானால் நம்மிடத்தில் உள்ள குற்றங்கள் அகலா.

* * * * *

35. தோற்றம் துடிஅதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம், – ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

துடியில் தோற்றம், திதியல் காத்தல், அங்கியில் சங்காரம் (சங்காரம் என்றவுடன் அழித்தல் என்று எடுத்துக் கொள்ளக் கூடாது. அது தூய்மை செய்தலைக் குறிக்கும்.) ஊன்றிய மலர்ப்பதம் மறைத்தல் நான்ற மலர்ப்பதம் முத்தி என்று ஐவகையான இயக்கங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

இறைவனுடைய கரத்தில் இருக்கின்ற உடுக்கைக்குத் துடி என்று பெயர். அது இரண்டு பக்கமும் பெருத்தும், இடையிலே சிறுத்தும் காணப்படும். இப்படி இடையும் சுருங்கிக் காணப்படுவதால் 'துடிஇடை' என்றனர். இரண்டுக்கும் ஏதோ சம்பந்தம் இருக்க வேண்டும், அதனால் தான் அப்படிச் சொல்லியிருக்கின்றார்கள். இறைவன் கையிலிருக்கின்ற உடுக்கை உலகத் தோற்றத்திற்குக் காரணமாக இருக்கின்றது. உயிர்த் தோற்றங்களுக்குக் காரணமாக இருக்கின்றது. உலகம் எங்கே தோன்றியது? உடுக்கை ஒலியிலிருந்துதான் தோன்றியது. உடுக்கை ஒலி மாறி மாறி ஒலிக்கும் தன்மையது.

உலகில் நடக்கின்ற செயல்களைக் கூர்ந்து கவனித்தால் இயற்கையின் செயல்பாடுகள் சிலவற்றை நாம் உணர்ந்து கொள்ளலாம். இப்போதெல்லாம் கூர்ந்து கவனிக்கும் சக்தி பெரும்பகுதியானோர்க்கு இருப்பதில்லை. உள்ளுணர்ச்சிகளை வளர்த்துக் கொள்வதைவிட பருப்பொருள் உணர்ச்சியிலேயே மனதைச் செலுத்தி ஏனோதானோ என்று வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள்.

நெல், கேழ்வரகு போன்ற வித்துக்களை நனைத்து ஒரு மூட்டையாகக் கட்டிக் காதில் அருகில் வைத்துக் கொண்டிருந்தால் அவற்றிலிருந்து 'மொடமொட' என்ற சத்தம் வந்து கொண்டிருக்கும். வித்துக்களிலிருந்து முளை தோன்றுகின்ற போது அதிலிருந்து ஒலியெழும். அதேபோல, முளை வெளியே வருகின்ற போது ஒலி வரும், அந்த ஒலி நின்ற பின் அதிலிருந்து ஒருவகையான மணம் வரும்.

ஒரு பொருள் தோன்றுகின்ற போது அதில் தோற்றமும், ஒரு வகையான மணமும் இருக்கும். இப்படி நாற்றம் (மணம்) வருவதால்தான் அதனை நாற்று என்று அழைத்தனர். நாறு, நாற்று, நாற்றம் எல்லாம் ஒரு பொருள் குறிப்பன.

முளைக்கின்ற பயறு நல்ல மணம் தரும். உடலுக்கு மிகவும் வலிமையைக் கொடுக்கும். முளைக்காத பயறு மணமில்லாதது. முளைகட்டிய துவரம் பருப்பில் வைக்கும் சாம்பார் மிகவும் சுவையாக இருக்கும். முளைகட்டாத பருப்பில் வைக்கும் சாம்பார் குழ குழ என்று இருக்குமே தவிர அதில் சுவை இருக்காது. அதனால்தான் தெரிந்தவர்கள் முளைகட்டிய பருப்பாக வாங்கிப் பயன்படுத்துவார்கள். இப்படிப் பல நுட்பங்கள் வாழ்க்கையில் நாம் உணர்ந்து கொள்ள வேண்டியிருக்கின்றது.

**மறைத்தல்:**

ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்து வகையான இயக்கங்களையும் தன் நடனத்தினால் நடத்திக் கொண்டிருக்கின்றான் இறைவன். இவ்வைந்து இயக்கங்களிலும் மறைத்தல் என்ற தொழில் மிகவும் இன்றியமையாத தொழில்.

ஊன்றிய திருவடி மறைப்பைக் குறிக்கும். எதை மறைக்கும்? இந்த ஆன்மாக்கள் முற்பிறவிகளில் செய்த நன்மைகள், தீமைகள், முற்பிறவிகளில் தானிருந்த நிலை முதலியவற்றை மறைத்து, இப்பிறவியில் செய்ய வேண்டிய பணிகளை மட்டும் காட்டிக் கொண்டே போகும். மறதி என்பது ஓர் ஆற்றல் . இதனை மறைப்பாற்றல் என்றும், திரோதானம் என்றும், நடப்பாற்றல் என்றும் சொல்லலாம். பெருமானின் ஊன்றிய திருவடி முயலகன் மேல் இருக்கின்றது. முயலகனைஅழுத்த அழுத்த நமக்கு மறதி இருந்து கொண்டேயிருக்கும் இல்லாவிடில் அவனுடைய அட்டகாசம் அதிகமாகிவிடும்.

மறைப்பாற்றல் மட்டும் செயல்பட வில்லையென்றால் எந்த உயிரும் தான் செய்ய வேண்டிய பணிகளை ஒழுங்காகச் செய்யாது. உதாரணமாக, உணவு உண்ணுகின்ற போது கழிவறையைப் பற்றிப் பேசினால் அறுவறுப்பாக இருக்கும். மேலும் உணவு உண்ணத் தோன்றாது. கழிவறை இருப்பது ஓரிடத்தில். உணவு உண்ணும் அறை இருப்பது வேறிடத்தில். ஆனால் கழிவறை என்று சொன்னவுடனே அந்த நினைவு நமக்கு அறுவறுப்பையும், குமட்டலையும் தந்துவிடுகின்றது.

புறத்தில் இருக்கும் கழிவறையை நினைக்கின்ற போது அறுவெறுக்கின்றோம். அந்தக் கழிவுப் பொருள்கள் நம் வயிற்றிலேயே இருக்கின்றனவே; அப்போது நமக்கு அறுவெறுப்பு வருவதில்லையே. ஏன்? அவையாவும் நம் வயிற்றுக்குள்ளே மறைவாக இருப்பதால், நம்மால் அவற்றைப் பார்க்க முடியாததால் நமக்கு அந்த உணர்ச்சி தோன்றுவதில்லை.

சாதாரணமாக எண்ணிப் பாருங்கள். கழிவறைக்குள் சென்று திரும்பும் போது நீர் ஊற்றாமல் வந்துவிட்டால் துர்நாற்றம் வீசுகின்றதே. அப்படிப்பட்ட சிறுநீரும், மலமும் நம் வயிற்றுக்குள்ளே தனித்தனியே பைகளில் மறைவாக வைத்திருக்கின்றான். சிறுநீர்ப்பையையும், மலப்பையையும் வெளிப் படையாக வைத்திருந்தால் நம்மால் அவற்றின் துர்நாற்றத்தைப் பொறுத்துக் கொண்டு இருக்க முடியுமா? மன நிம்மதியுடன் உணவு உண்ண முடியுமா? ஒரு வேளை அப்படியே இருந்து பழகிவிட்டால் சரியாகிவிடுமோ என்னவோ தெரியவில்லை. எனவேதான் இறைவன் இவை எல்லாவற்றையும் உள்ளே அடக்கமாக மறைவாக வைத்து மூடியிருக்கின்றான். இதுதான்மறைத்தல். நமக்கு எந்தவிதமான மனச்சுளுக்கும் ஏற்படாமல் இருக்க மறைவாகவும், அவற்றிலிருந்து எந்தவிதமான மணமும் வெளியே வராமல் பாதுகாப்பாகவும் வைத்திருக்கின்றான். இதனால் அவற்றைப் பற்றிய எண்ணமே நமக்கு இல்லாமல் இருக்கின்றது. அப்படியே இந்த உடலில் மலமும், சிறுநீரும் போன்ற கழிவுப் பொருட்களைப்

போல்பலவேறு கழிவுப் பொருள்கள் வெளிவருகின்றன. இன்னும் பல செய்திகள் உள்ளே இருக்கின்றன. இவற்றையெல்லாம் நாம் கண்ணால் பார்த்தால் நம்மால் சகித்துக் கொண்டு வாழவே முடியாது. இப்படியெல்லாம் மூடி வைத்திருப்பது இறைவனது பெருங்கொடை என்று உணர்தல் வேண்டும்.

அடுத்து, ஒவ்வொரு நாளும் நாம் செய்யும் தவறுகள் இருக்கின்றன. அவற்றையெல்லாம் நம் நெஞ்சத்திலிருந்து வெளிப்படாமல் மறைத்தே வைத்து இருக்கின்றான். 'நான் தவறே செய்வதில்லை' என்று சொல்லலாம். உண்மை அதுவன்று. நாம் இடைவிடாத தவறுகள் செய்து கொண்டேயிருக்கின்றோம். அப்படியே இடைவிடாது நன்மைகளும் செய்து கொண்டிருக்கின்றோம். ஆனால் செய்த நன்மை, தீமைகளை மறந்துவிடுகின்றோம். தவறுதலைப் பெரிய அளவில்செய்ய வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. சின்னச் சின்னத் தவறுகளைக் கூட நாம் செய்து கொண்டே இருக்கின்றோம். பின்னால் அவற்றைப் பற்றி எண்ணிப் பார்த்தால் நமக்கே நாணமாக இருக்கும். அந்த நாணம் வராமல் இருக்க அவற்றையெல்லாம் மறைத்து வைத்திருக்கின்றான். இதுவும் இறைவனது கருணையே.

இரண்டு நண்பர்கள் இன்றைக்கு ஒன்றாகப் பழகிக் கொண்டிருக்கின்றோம். முற்பிறவியில் இவர்கள் யார் என்று தெரிந்தால் இப்போது ஒருவருக்கொருவர் முகம்கொடுத்துப்பேசக்கூட மாட்டார்கள். ஒன்று கடன் கொடுத்தவராக இருப்பார். அல்லது கடன் வாங்கிவிட்டு ஏமாற்றிவிட்டு வந்திருப்பார். அல்லது வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க வந்திருப்பார். பல காரணங்களினால் இப்பிறவியில் இருவர் நண்பர்களாக இருப்பார்கள். அப்படியே இப்பிறவியில் வந்த மனைவி, மகன், மகள்,தாய், தந்தை முதலானோர். இப்பிறவியில் நம்மோடு தொடர்பு கொண்டவர்கள் அனைவரும் இப்பிறவியில் மட்டும் தொடர்பு கொண்டவர்கள் அல்ல. முற்பிறவியில் ஏற்பட்ட தொடர்பின் தொடர்ச்சியினாலேயே இப்பிறவியிலும் அவர்கள் நம்மோடு தொடர்பு கொண்டு வந்திருக்கின்றார்கள்.

வாரியார் சுவாமிகள் ஒரு கருத்தைச் சொல்வார்கள். ஒருவன், "எனக்கு வாய்த்திருக்கும் மனைவி யார் தெரியுமா? முன் ஜென்மத்துத் தேர்தல் எதிரி" என்று சொன்னானாம். கணவன் மனைவிக்குள் நடக்கும் போராட்டத்தின் காரணம் என்ன என்பதற்காக இக்கருத்தைச் சொன்னார்கள். இது வேடிக்கைக்காகச் சொன்னாலும் அதில் உண்மையும் இருக்கின்றது.

முற்பிறவியில் தொடர்பு கொண்டவர்கள் அதே முறையில் இப்பிறவியிலும் தொடர்பு கொள்ள வேண்டுமென்ற தேவையில்லை. உறவுகள் மாறி மாறி ஏற்படலாம். முற்பிறவியில் தாயாக இருந்தவர்கள் இப்போது தாரமாக வந்திருக்கலாம்; தாரமாக இருந்தவர்கள் தாயாக வந்திருக்கலாம். மகளாக வந்திருக்கலாம், மகனாக வந்திருக்கலாம்; நண்பனாக வந்திருக்கலாம். அச்சுகள் மாறியிருக்கலாம். ஆனால் இந்த முற்பிறவி நினைவை மட்டும் மறைத்து வைத்துவிடுகின்றான். ஏன். இப்போது தாரமாக வந்தவர்கள் முற்பிறவியில் தாயாக இருந்தவர்கள் என்ற நினைவு வந்துவிட்டால் நம்மால் வாழ்க்கையை நடத்த முடியுமா? முடியாது. இறைவன் ஏதோ நோக்கம் பற்றி இவர்களை உறவு முறையில் மாற்றியமைத்திருக்கின்றான். அந்த நோக்கத்தில்தான் இந்த உயிரும் செயல்பட வேண்டும். மாறாக முற்பிறவி வந்துவிட்டால் இப்பிறவியின் செயல்பாடுகள் தடைபட்டுப் போகும். எனவே தான் மறைப்பாற்றலைக் கொடுத்து நம்மை இயக்கிக் கொண்டிருக்கின்றான்.

திரோதானத்தை விளக்க வார இதழ், மற்றும் பத்திரிகைகளில் வந்த செய்தி ஒன்றைச் சொல்கின்றேன்.

ஜெர்மனியில் ஒரு பெண் தனக்குத் திருமணமே வேண்டாமென்று சொல்லிக் கொண்டிருந்தாள். பெற்றோர்கள் காரணம் கேட்டதற்குத் தனக்குத் திருமணம் ஆகிவிட்டது, கணவர் இருக்கின்றார், குழந்தைகள் இருக்கின்றார்கள், அவர்களையெல்லாம் விட்டுவிட்டு எப்படித் திருமணம் செய்து கொள்வது என்று பதில் சொன்னாள். பதினாறு வயதுப் பெண்ணுக்கு, தங்களுக்குத் தெரியாமல் எப்படித் திருமணம் ஆயிற்று

என்று பெற்றோர் வியந்தனர். பின்னர் அவளுக்கு மூளைக் கோளாறு என்று கருதி அவளைப் பல மருத்துவர்களிடம் அழைத்துச் சென்றுக் காட்டினர். இவளுக்கு உடல் அளவில் எந்தக் கோளாறும் இல்லையென்றும், மனக்கோளாறுதான் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று, மனநோய் வல்லுனர்களிடம் அவளை அழைத்துச் செல்லுமாறும் அறிவுரை சொன்னார்கள். மனநோய் வல்லுனர்கள் அவளைப் பல நாட்கள் ஆராய்ந்தும் எதையும் கண்டு பிடிக்க முடியவில்லை. பின்னர் அவளிடம் 'உன்னுடைய கணவர் எங்கிருக்கிறார்' என்று கேட்டார்கள். 'அவர் லண்டனில் இருக்கிறார்' என்று பதில் சொன்னாள். 'உன்னை அங்கே கூட்டிப் போனால் அவரைக் காட்டுவாயா' என்று கேட்டனர். 'முடியும்' என்று சொல்ல, அவ்ளை லண்டனுக்கு அழைத்துச் சென்றார்கள். லண்டனுக்குப் போனவுடன் அவள் யாரையும் வழியும் கேட்கவில்லை, நேராக ஒரு வீட்டிற்குப் போனாள். போனவுடன், 'இங்கே என் பெயர்ப்பலகை இருந்ததே, அதை யார் கழற்றினார்கள்? என்று கேட்டாள். வீட்டில் இருந்தவர்கள் அவள் பெயர்ப்பலகையைக் கொண்டு வந்து கொடுத்தும் அது முன்னே இருந்த இடத்தில் யாரையும் கேட்காமல் கொண்டு போய் மாட்டினாள். பின்னர் அங்கிருந்த ஒரு வயதானவரைக் கட்டிப் பிடித்துக் கொள்ளுகின்றாள். அவருக்கு முத்தம் கொடுக்கிறாள். தன்னுடைய ஆதங்கத்தை, அன்பை எப்படி எல்லாம் காட்ட வேண்டுமோ அப்படியெல்லாம் காட்டுகின்றாள். அவர் யார் என்று கேட்டால் தன் கணவர் என்கின்றாள். அவர் பெயரைச் சொல்லுகின்றாள். பின்னர் தனக்கு எத்தனை பிள்ளைகள், அவர்கள் பெயர் என்ன என்று சொல்லி அவர்களையெல்லாம் தயக்கமில்லாமல்பெயர் சொல்லிக் கூப்பிடுகின்றாள். அவர்களை நலம் விசாரிக்கின்றாள். 'இப்போதெல்லாம் என்னை நீங்கள் நினைப்பதே யில்லையா' என்று ஏக்கத்தோடு கேட்கின்றாள். இவளுடைய பிள்ளைகள் இவளைவிட வயதானவர்களாக இருக்கின்றார்கள். பெரியவரும், பிள்ளைகளும் இவளுடைய செய்ல்களைக் கண்டு விழிக்கின்றார்கள் இவளைப் பைத்தியம் என்று நினைக்கின்றார்கள். கடைசியில் அவளுக்கு சோகம் வந்துவிடுகின்றது.

அனைவரும் தன்னை மறந்துவிட்டார்கள் என்று வருந்துகின்றாள். பிறகு தன் நாட்டிற்கே திரும்பி வந்துவிடுகின்றாள். முற்பிறவியில் தனக்குக் கணவனாக இருந்தவர் உயிரோடு இருக்கின்றவரையில் தான் யாரையும் மணக்க முடியாது என்று மறுத்து கன்னியாகவே வாழ்ந்துவிடுகின்றாள். மறதி என்பது இல்லாததால் அவளுடைய வாழ்க்கையே தடம் மாறிப் போய்விடுகின்றதில்லையா? எனவேதான் திரோதானம் என்ற மறைப்பாற்றலை வழங்கி நாம் நம் வழியில் வாழ்ந்து கொண்டிருக்க இறைவன் அருள் புரிகின்றான்.

நாம் எந்த இடத்திற்குப் போகவேண்டுமோ அந்த இடத்திற்குப் போகின்ற வரையிலும் முன், பின் நினைவுகள் வரவே கூடாது. வந்தால் நாம் அந்த இடத்திற்குப் போய்ச் சேரவே மாட்டோம். இங்கேயே நின்றுவிடுவோம்; அல்லது வேறெங்கேனும் சென்றுவிடுவோம். அப்படித் தான் இறைவன்திருவடிக்கு நாம் போய் சேருகின்ற வரையிலும் முற்பிறவியின் நினைவோ, அல்லது தேவையற்ற நினைவோ வராமல் இருக்க வேண்டும், அதற்காகவே இந்த ஆற்றலை திருவருள் ஏற்படுத்தி வைத்திருக்கின்றது.

திரோதானம் அல்லது மறைப்பாற்றல் என்பதற்கு குலசை ப. இராமநாத அடிகளார் 'நடப்பாற்றல்' என்று பொருள் சொல்லுவார்கள். அவர் சொல்லுவதுதான் சரியான பொருள் என்று என்னுடைய எண்ணம். ஏனென்றால் நாம் போகின்ற, அல்லது போக வேண்டிய இடம் வரையிலும் எங்கே போகின்றோம், ஏன் போகின்றோம் என்பதையெல்லாம் மறைத்து வைத்து நம்மை வழி நடத்தி செல்கின்றதில்லையா? அதனால் தான் அவர்கள் சொன்ன பொருள் பொருத்தமானது என்று எண்ணுகின்றேன். மேலும் இந்த ஆற்றல் நாம் வழியில் சோர்ந்துவிடாமலிருக்கவும், வேறு வழி எதனையும் காட்டாமலும் நம்மை வழி நடத்திச் செல்லுகின்றது.

நடப்பாற்றல் அந்த இரு பணிகளை மட்டும் செய்யவில்லை. நமக்குச் சோர்வு ஏற்படுமானால் அப்போது பெரிதும் அறிவுரைகளைச் சொல்லி நம்மை

ஊக்குவித்துக் கொண்டேயிருக்கின்றது. அறிவுரை சொல்வதே அந்த மறைப்பு ஆற்றல்தான். இறைவனுடைய கருணையிலே திரோதானம் என்பது இன்றியமையாதது அந்த ஊன நடனம் என்று பெரியோர்கள் சொல்லியிருக்கின்றனர்.

இது சரியான கருத்தா? ஊன நடனம் என்றுதானே போட்டிருக்கின்றது ஆனால் நீங்கள் ஊனத்தைப் போக்கும் நடனம் என்று சொல்கின்றீர்களே; ஐந்து வகையான நடனமும் படைப்பு இயக்கமும் ஊனத்தைப் போக்குவதற்காக ஏற்பட்டது என்று சொல்லுகின்றீர்களே, அது பொருந்துமா? என்றெல்லாம் ஐயங்கள் எழக்கூடும். இப்படி வினாக்களை எழுப்பினால்தான் அதற்கு விடை சொல்ல முடியும். தெளிவும் ஏற்படும். உரைகளில் அப்படியெல்லாம் விரிவான விளக்கங்கள் வருவதில்லை. அதனால்தான் விரிவாகச் சொல்ல வேண்டியிருக்கின்றது.

இறைவன் படைக்கின்றான். ஏன் படைக்க வேண்டும்? இந்த உடம்பை அவன் படைத்தான். ஏன் படைக்க வேண்டும்? இந்த உயிருக்காக இந்த உடம்பைப் படைத்தான். ஏன்? இந்த உயிர் ஊனமுடையதாக இருக்கின்றது. அந்த ஊனத்தை நீக்குவதற்காகவே இந்த உடம்பைக் கொடுத்தான். உடம்பும் ஒரு ஊனம். உயிரும் ஊனம். ஊனத்தை நீக்க ஊனத்தைச் சேர்க்கின்றான். ஊனத்தையும் சேர்த்துவிட்டு அதனுள் இருந்து கொண்டு ஆட்டிவைக்கின்றான்.

ஆன்மாவில் இருக்கின்ற ஆணவம் என்ற அழுக்கை எடுக்க மாயை என்ற அழுக்கை அதனுடன் சேர்க்கின்றான். சேர்த்துவிட்டுத்தானும் அந்த அழுக்கினுள் இருந்து அவற்றை இயக்குகின்றான். எனவே ஆன்மாவில் இருக்கும் ஊனத்தைப் போக்க அவன் நடனம் செய்து கொண்டிருப்பதால் இதனை 'ஊன நடனம்' என்றனர். இதுதான்பொருத்தம். இந்த விளக்கத்தை ஏன் மற்றவர்கள் எழுதவில்லையென்று கேட்கக் கூடாது. அவர்கள்எழுதியிருந்தால் நமக்குச் சொல்வதற்கு வாய்ப்பிருக்காது. நமக்கு வாய்ப்பளிக்கவே அவர்கள் இதுபற்றிய விளக்கத்தை எழுதாமல் விட்டார்கள் என்பதே சிறப்பு.

ஐந்து கூறாய இந்தப் பேரியக்கம் பின்னர் மூன்றாகப் பிரிக்கப்பட்டது. இம்மூன்று இயக்கங்களும் முறையே, ஊன நடனம், (ஊனத்தைப் போக்கும் நடனம்) ஞான நடனம் (ஞானத்தைத் தேக்கும் நடனம்); ஞானானந்த நடனம் (ஆனந்தத்தை வழங்கும் நடனம்) எனப்படும். இந்த நடனங்கள் ஆணவம், நல்வினை, தீவினை என்று மூவகை அழுக்குகளையும் போக்க எழுந்த நடனங்கள். ஞானநடனம் என்று இவற்றைச் சொல்வார்கள். அழுக்கை நீக்குவதற்கான உபகரணங்களாகவே இந்த உடம்பு, இந்த உலகம், பண்டங்கள், இயக்கங்கள் யாவும் இருக்கின்றன.

## ஞான நடனம்

ஞான நடனம் என்றால் ஞானத்தால் ஆடுகின்ற நடனம் என்று சொல்லக் கூடாது. ஞானத்தைத் தேக்கும் நடனம் என்று கொள்ள வேண்டும்.

ஞான நடனத்தில் என்ன நடக்கின்றது? ஊனத்தைப் போக்க நடக்கும் நடனத்திலும் ஐவகைத் தொழில் நடக்கின்றது. ஞானத்தைத் தேக்குகின்ற நடனத்திலும் ஐவகைத் தொழிலே நடைபெறுகின்றது. அவை என்ன?

* * * *

36. மாயை தனை உதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கிஅருள் தான் எடுத்து – நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான் அழுத்தல்
தான்எந்தை யார் பரதம் தான்.

முதலில் நடந்த ஐந்தொழிலினால் உலகையும், பண்டங்களையும், உடல் கருவிகரணங்கள் யாவற்றையும் படைத்தான். அந்த மாயையிலிருந்து இந்த ஆன்மாவை எடுக்க வேண்டும். ஏன்? அது இந்த மாயையிலேயே ஆழ்ந்து கிடக்கும். ஏற்கனவே ஊனமான ஆன்மா, இன்னொரு ஊனம் கிடைத்ததும் அதையே பற்றிக் கொண்டு மயங்கிக் கிடக்கும். எனவே ஊனமுள்ள ஆன்மாவுக்கு இன்னொரு

ஊனத்தைக் கொடுத்து, பின்னர் ஊனத்தை எடுக்கின்றான். பின்பு ஞானத்தைத் தேக்குகின்றான்.

ஆணவம் அகன்றால் மாயை அகலும். மாயையும், மாயையால் விளைந்த கன்மமும் அகன்றால் ஞானம் (தெளிவு) பிறக்கும். ஞானம் பிறந்தால் ஆனந்தம் வரும்.

1. ஆணவம் என்பது நமக்குத் தெரியாமலேயே நம்முள் இருந்து கொண்டு, நம்மை முனைப்புடன் செயல்பட வைத்துக் கொண்டிருப்பது.

2. கன்மம் என்றால் செயல். செயல்கள் யாவும் தன்னலம் கருதியே நிகழும். செயல்கள் நல்வினை, தீவினையென விரியும்.

3. மாயை தோன்றி, இருந்து, மாய்வது, ஆன்மாவில் இருக்கும் அழுக்கை மாய்க்க வந்தது. ஆணவம் என்ற அழுக்கை ஆன்மாவில் இருந்து பிரித்தவுடன் மறைந்து போவது.

இந்த மூன்று பொருள்களைப் பற்றியும் சற்று விரிவாகக் காணலாம்.

## 1. ஆணவம்

ஆணவம் என்பது நித்தியமாக நம்மிடத்தே உள்ளது. அதற்கு மூல மலம் என்று பெயர். அது இந்த உயிர் எப்போது தோன்றியதோ அப்போதிருந்தே அதனுடன் கலந்திருப்பது. அதிலிருந்து பிரிக்க முடியாமல் கலந்திருப்பது. அதை யாரும் கொண்டு வந்து ஆன்மாவுடன் சேர்க்கவில்லை. ஆணவம் எப்படி இருக்கும்?

ஆணவம் என்பது அறியாமை, இருள், கறுமை வண்ணமானது. ஆணவம் இருக்கின்றதென்று எப்படித் தெரிந்து கொள்வது? ''எல்லாம் எனக்குத் தெரியும்'' என்பார்கள். தனக்குத் தெரியாததைத் தெரிந்ததாகச் சொல்வார்கள். இது ஆணவத்தின் செயல். ஆனால் இது

ஆணவத்தின் செயல் என்று தெரியாமலேயே ஆன்மா அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும். ஆணவத்திற்கு எதுவும் தெரியாது; எந்த வல்லமையும் கிடையாது. ஆனால் எல்லாம் தெரிந்தது போலவும், அனைத்து வல்லமையும் நிறைந்தது போலவும் ஆன்மாவை இயக்கிக் கொண்டிருக்கும். இறைவன் ஆன்மாவை நெருங்கும் போது அதன் வல்லமை குன்றி நிற்கும். அப்போதுதான் ஆன்மா தான் இதுவரையில் ஆணவத்தின் பிடியில் சிக்கிச்செயல்பட்டுக்கொண்டு இருந்ததை அறியும். அதுவரையில் ஆன்மாவும் எதையும் அறியாமலேயே செயல்பட்டுக் கொண்டு இருக்கும்.

ஆணவத்திற்காக ஒரு கதையைச் சொல்கின்றேன். இந்த நூலாசிரியருக்கு ஆசிரியரான மெய்கண்டார் மூன்று வயதுக் குழந்தையாக இருந்தபோது, திருவெண்ணெய் நல்லூர் திருக்கோயிலில் அமர்ந்து பதி, பசு, பாசம் என்ற முப்பொருள் உண்மையைப் பற்றி விளக்கிக் கொண்டிருந்தார்.

பெரியவர்கள் முப்பொருள் உண்மையைப் பற்றிச் சொன்னாலே விளங்க மாட்டேன் என்கின்றது. அதைக் கேட்பதற்கும் ஆட்கள் வரமாட்டேன் என்கின்றார்கள். அப்படியிருக்கக் குழந்தை பாடம் சொல்கின்றது. அதுவும் முப்பொருள் பற்றிப் பாடம் சொல்கின்றது என்றவுடன்படித்தவர்கள், படியாதவர்கள் என்ற பேதம் இன்றி அனைவரும் வந்து கூடிவிட்டனர். படித்தவர்கள் 'இவன் என்ன பேசப் போகின்றான்' என்ற எண்ணத்திலும், படிக்காதவர்கள், 'சின்ன குழந்தை ஏதோ பேசுகிறதே' என்ற ஆர்வத்தின் காரணமாகவும் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

படிக்காதவர்களுக்குப் புரிய வேண்டுமென்ற அவசிய மில்லை. குழந்தை பேசுவதைக் கேட்பதிலேயே அவர்களுக்கு மகிழ்ச்சி. குழந்தை பேசினால் அனைவருக்கும் மகிழ்ச்சியாகத்தான் இருக்கும்.

அக்காலத்தே, ஆதி சைவமரபில் தலைசிறந்தவராகக் கருதப்பட்டவர் அருணந்தி சிவாச்சாரியார். அவர் நடுநாட்டில் திருத்துறையூரில் தோன்றியவர். அவர் மெய்கண்டாருடைய தந்தைக்குக் குருவாக இருந்தவர்.

அவர் எங்கேனும் வெளியூர் சென்றால், அவர் செல்லும் வண்டிக்குப் பின்னால் 3, 4 வண்டிகள் நிறைய அவர் படித்த நூல்கள் வருமாம். யாரேனும் ஐயம் கேட்டால், அதைத் தெளிவிக்கத் தான் படித்த நூலை எடுத்துக் குறிப்பிட்ட பக்கத்தை விரித்துக் கொடுத்துவிடுவாராம். பெரிய காரியமில்லையா இது. அப்படிச் செய்ய வேண்டுமென்றால் அவருக்கு எத்துணை நினைவாற்றல், கல்வித் திறம் இருந்திருக்க வேண்டும். எத்தனை நூல்களைப் படித்திருக்க வேண்டும். எத்தனை காலம் அவற்றையெல்லாம் பயின்றிருக்க வேண்டும். அது சாதாரண செய்தியில்லை. இவ்வளவு உயர்ந்த கல்வியாளர் எப்படியிருக்க வேண்டும்? அடக்கமாக இருந்திருக்க வேண்டும். மாறாக இறுமாந்து வருகின்றாராம்.

நமக்குத் தெரிந்து பிறந்த குழந்தை நாம் திருமுறையில் கயிறுசார்த்திப் பார்த்து வெங்காட்டு முக்குளநீராடினால் குழந்தை பிறக்கும் என்று கூறியபடிப் பிறந்த குழந்தை, அந்தக் குழந்தை முப்பொருளைப் பற்றிப் பேசுகிறதா. மூன்று வயதுக் குழந்தைக்கு முப்பொருளைப் பற்றி என்ன தெரியும்?'' என்று சொல்லிக் கொண்டே வண்டியை விட்டிறங்கினார்; அந்தக் குழந்தை இருந்த இடத்திற்குச் சென்று, ''என்னமோ, முப்பொருளைப் பற்றிப் பேசுகின்றாயாமே, ஆணவம் என்றால் என்ன?'' என்று கேட்டாராம். அந்தக் குழந்தை வாயைத் திறந்து பதிலேதும் சொல்லாமல், கையை உயர்த்தி, சுட்டுவிரலால் அவரைச் சுட்டிக் காட்டி, ''ஆணவம் என்றால் இப்படித்தான் இருக்கும்'' என்று அவர் உணர்கின்ற வகையில் காட்டியதாம்.

வந்தவர் அக்குழந்தை என்ன சொல்கிறது என்றாவது கேட்டிருக்க வேண்டும். அல்லது கேள்வி எப்படிக் கேட்பது என்பதையாவது உணர்ந்து அதற்கு ஏற்றவாறு கேட்டிருக்க வேண்டும். இரண்டையும் செய்யாமல் நேரே வந்து கேள்வியை மட்டும் கேட்டார்.

கேள்வி கேட்பதற்கென்று ஒரு வரைமுறை இருக்கின்றது. ஒரு செய்தி தெரியவில்லையென்றால், ஐயா, எனக்கு இச்செய்தி விளங்கவில்லை; இதை எனக்குத் தெளிவியுங்கள் என்றோ, அமைதியான முறையில் கேட்க வேண்டும். அதை விடுத்து நேரே ஆணவத்துடன் வந்து கேள்வி கேட்டார். பதில் வாயால் சொல்லப்படவில்லை, உணர்த்தப்பட்டது. உணர்த்தப்பட்டவுடன் அவர் குழந்தையின் காலடியில் விழுந்து வணங்கி அவருடைய மாணவராகிவிட்டார். அத்துடன் மெய்கண்டார் இயற்றிய சிவஞானபோதம் என்ற நூலுக்கு விளக்கவுரையும் எழுதினார்.

ஆணவத்தைப் பற்றி இயற்கையிலிருந்து ஓர்உவமையைச் சொல்லலாம். நெல்லில் உமி, தவிடு, முளையைப் போலவும், செம்பில் களிம்பு சேர்த்து இருப்பது போலவும் ஆன்மாவில் ஆணவம் கலந்திருக்கின்றது. இது வெறும் உவமை மட்டுமன்று. இதில் ஆழமான, நுட்பமான கருத்தும் இருக்கின்றது. அது என்ன?

1. நெல்லில் இருக்கின்ற உமியை உரித்துவிடலாம். அப்படி ஆணவத்தையும் அகற்றிவிடலாம். '' பண்டு முளைப்ப தரிசியே யானாலும், விண்டுமி போனால் முளையாதாம் ... (வாக்குண்டாம்.11) என்ற ஔவையாரின் வாக்கின்படி உமியை நீக்கிவிட்டால் பிறகு முளைக்காது. அப்படியே ஆணவம் முழுமையாக நீங்கிவிட்டால் பிறப்பில்லை; இறப்பில்லை. இது பொதுக் கருத்து.

அடுத்து உமி போன பிறகு தவிடு இருக்கின்றது. அதையும் தேய்த்து எடுத்துவிடலாம். இந்த இரண்டும் போனால் நெல் முளைக்காது. உமி போனபிறகு நெல் முளைக்காது. தவிடு போன பிறகு உணவு சத்தானதாக இருக்காது. தவிட்டில்தான் சத்தே இருக்கின்றது. இப்போது அரிசி வெள்ளையாக இருக்க வேண்டுமே என்று தவிட்டையெல்லாம் நீக்கிவிடுகின்றார்கள். தவிட்டுச் சத்து இல்லாததால் மலச்சிக்கல் போன்ற பல சிக்கல்கள் உடலில் ஏற்படுகின்றன. இப்போது தவிட்டிலிருந்து எண்ணெய் எடுத்துவிட்டப் பிறகு பிஸ்கட் செய்கின்றார்கள். தவிட்டை

அரிசியுடன் கலந்து உண்டால் கண் பார்வை நன்றாக இருக்கும். மலச்சிக்கல் இருக்காது. மலச்சிக்கல் இருந்தால் பார்வை விரைந்து கெட்டுவிடும். அதனால்தான் நார்ப் பொருள்களை உணவில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று மருத்துவர்கள் சொல்கின்றார்கள் நாம் நாறுகின்ற பொருள்களைத் தாம் சாப்பிட்டுக் கொண்டிருக்கின்றோம்.

இன்னொரு கருத்து: மூல மலம் என்பது போகவே போகாது என்பதற்கு செம்பில் களிம்பு என்ற உதாரணத்தைக் காட்டியுள்ளார். இதை ஏதற்காகக் காட்டினார்கள் என்றால் செம்பு எப்போது இருக்கின்றதோ அப்போதே அதில் களிம்பும் இருக்கிறது. அப்படியே ஆன்மா எப்போது இருக்கின்றதோ அப்போதிருந்தே அதில் ஆணவமும் கலந்திருக்கின்றது என்பதை மிகத் தெளிவாகச் சொல்லி வைத்திருக்கின்றார்கள். செம்பைத் தேய்த்தால் களிம்பு போய்விடும். சிறிது நேரம் பொறுத்து மீண்டும் வந்துவிடும். ஆனால் களிம்பே இல்லாமல் செய்வதற்கு என்ன செய்வது?

நெல்லில் இருந்து உமியை எப்படி நீக்குகின்றார்கள்? முற்காலத்தில் எல்லாம் உரலில் போட்டுக் குத்தி அரிசியையும், உமியையும் நீக்குவார்கள். அப்படியே நம்மிடத்தில் முனைப்பு மிகுந்து காணப்படுகின்ற போதெல்லாம் யாராவது நம்மைக் குத்திக் காட்ட வேண்டும். இதனை.

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்.

நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு.

என்ற திருக்குறள் கருத்தினால் அறிந்து கொள்ளலாம்.

தவறு நடக்கும்போதும், குறைகள் நேரும்போதும் இடித்துச் சொல்லித் தான் திருத்த வேண்டும். அதற்குத்தான் நட்பு என்று பெயர். வெறும் பழக்கத்திற்காகவும், சிரிப்பதற்காகவும் நட்பு உரித்தன்று.

எனவே இடிப்பதற்கு ஒரு ஆள் இருந்தால் உமி எப்படிப் போகின்றதோ அப்படி நம்மை இடித்துக் காட்டினால் நம்மிடத்தில்இருக்கும்முனைப்பை அகற்றிவிடலாம். ஆசிரியர் மாணவனையும், மாணவன் ஆசிரியரையும் இடித்துச் சொல்லலாம் தவறு கண்டவிடத்து. கணவன் மனைவிக்கும், மனைவி கணவனுக்கும், நண்பன் நண்பனுக்கும் தவற்றைத் திருத்திக்கொள்ள இடித்துச்சொல்ல வேண்டும். அதற்குத்தயக்கம் காட்டக் கூடாது. அப்போது சொல்பவர் ஆசிரியராக ஆகிவிடுவார்கள்.

உதாரணத்திற்கு ஒன்று சொல்கின்றேன். நான் காபி சாப்பிடுகின்ற பழக்கமில்லை. என்னுடைய அமெரிக்க மாணவர் அடிக்கடி காபி அருந்துவார். அவருக்குக் காபிதான் முக்கியம். காபி இல்லாவிட்டால் கணவனைக்கூட கைவிட்டுவிடுவார்கள். அந்த அளவுக்கு அவர்களுக்குக் காபியின் மீது ஈடுபாடு. அவர்களுக்குக் காபி கொடுக்கும்போது எனக்கும் காபி கொடுக்க வருவார்கள். அப்போது, 'நான் காபி சாப்பிடுவதில்லை' என்று சொல்லிவிடுவேன். இப்படி அளவில்லாத முறைகள் சொல்லியிருக்கின்றேன். ஒருமுறை அந்த மாணவர் என்னைப் பார்த்துச் சிரித்தார். 'ஏன் சிரிக்கிறீர்கள்' என்று கேட்டேன். 'இல்லை, நீங்கள் எது நம்மைவிட்டுப் போக வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருக்கின்றீர்களோ அது உங்களை விட்டுப் போகவில்லையே' என்றார்கள். 'அது என்ன' என்று கேட்டேன். 'ஆணவம் நம்மைவிட்டு நீங்க வேண்டுமென்று' அடிக்கடி 'சொல்லிக் கொண்டிருக்கின்றீர்கள், ஆனால் அது உங்களை விட்டுப் போனதாகத் தெரியவில்லையே' என்றார்கள். 'எப்படிச்சொல்கிறீர்கள்' எனக் கேட்டேன். ''நான் காபி சாப்பிடுவதில்லை, நான் காபி சாப்பிடுவதில்லை' என்று எத்தனை முறை சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் காபி சாப்பிடுவதில்லை என்பது சரிதான், ஆனால் 'நான்' காபி சாப்பிடுவதில்லை என்று சொல்லும்போது ஒரு பெருமிதம் அதில் தெரிகிறது. அதுவும் ஒரு முனைப்பில்லையா? என்றார்கள். எனக்கும் அந்த உண்மை அப்போது தான் தெரிந்தது. எப்போது காபி வேண்டாமென்று சொன்னாலும் நான் காபி சாப்பிடாதது ஒரு பெருமிதமானதாகவும், காபி சாப்பிடுகின்றவர்கள்

ஏதோ தவறுசெய்வது போலவும் ஒரு கருத்துத் தோன்றுமாறுதான் சொல்லுவேன். இதைச் சுட்டிக் காட்டியபோது எனக்கு நாணமாகத்தான் இருந்தது. இப்படி இடித்துச் சொல்ல வேண்டியது மிகவும் அவசியம். அப்போதுதான் ஆணவம் கட்டாயம் நீங்கும். எனவே இடித்துச் சொல்லக்கூடிய ஒருவர் நமக்குக் கட்டாயம்தேவை. இடித்துச் சொல்வது என்பது அரிதான காலம் இது. அரிதான காரியமும் கூட.

மூலமலம் ஆன்மாவின் உடன்பிறப்பு என்பதனைக் காட்ட செம்பிலிருக்கும் களிம்பினை உதாரணமாகக் காட்டியுள்ளனர். செம்பிலிருக்கும் களிம்பை எப்படி நீக்குவது? செம்பைப் பொன்னாக்கும் இரசவாதம் தெரிந்தோர் அக்களிம்பை மாற்றிவிடுவர். அப்படி இந்தச் சீவனைப் பொன்னாக மாற்றிவிட வேண்டும். அதற்குரியவன் குருநாதன் ஒருவன்தான். அவனைச் சற்குரு என்றும், ஆசாரியன் என்றும் சொல்வர். அவனைச் சார்ந்து விட்டால் தன்முனைப்பு நீங்கிவிடும்.

ஆணவ மலம் இரண்டு வகையால் நீங்கும். பொது வகையால் பிறர் இடித்துரைக்கும்போதும், சிறப்பு வகையால் ஆசார்யனுடைய உபதேசத்தாலும் நீங்கும். அப்போது பிறப்பில்லை. இறப்பில்லை. பிறப்பு இறப்பைக் கடந்தவர்களாகிவிடுவார்கள்.

செம்பைப் பொன்னாக்குவதற்கு முன்னர் அதனைப் பலமுறை புடம்போட வேண்டும். புடம்போடுவதற்கு முன் அதில் மூலிகைச் சாறுகளை விட்டு விட்டுப் புடம் போட வேண்டும். அதில் மாற்றுத் தெரிகின்றதா என்று பார்த்து, மீண்டும், மீண்டும் புடம்போட வேண்டும். இது விதி.

எனக்குத் தெரிந்த அன்பர் ஒருவர் இப்படித்தான் பொன் செய்கிறேன் என்று இறங்கிப் பலகால் முயன்றார். இரண்டு வீடுகளை விற்று அப்பணத்தை அதில் போட்டார். இன்றைக்கு வீடும் இல்லை; பொன்னும் இல்லை அவரிடத்தில். வீட்டை விற்றவர் அப்பணத்தைக் கொண்டு தங்கம் வாங்கி வைத்திருந்தாலும் தங்கமாவது மிஞ்சியிருக்கும். குதிரைப் பந்தயத்துக்குப் போனவனும், இரசவாதத்தில் ஈடுபட்டவனும் உருப்பட மாட்டார்கள் என்பதற்கு இது ஓர் உதாரணம்.

உண்மையில் இரசவாதம் என்பது என்ன? செம்பு போன்று கிடக்கின்ற இந்த ஆன்மாவில் இயற்கையிலேயே ஆணவம் என்ற களிம்பு ஒட்டிக் கொண்டிருக்கின்றது. அக்களிம்பினை நீக்கி, ஆன்மாவைப் பொன்போன்று ஆக்குகின்றான் இறைவன். உண்மையில் இறைவன்தான் பெரிய சித்தம்; இரசவாதி. செம்பைப் பலமுறை பச்சிலைச் சாற்றை விட்டுப் விட்டு புடமிடுவது போன்று, பல பிறவிகளைக் கொடுத்து, பிறவிகள் தோறும் அனுபவத்தையும், அறிவையும் கொடுத்து அதில் முதிரச் செய்து ஆன்மாக்களை உயர்த்துகின்றான் இறைவன்.

மூலிகைச்சாறு இந்த ஆன்மாவில் பிழிந்ததற்கு அடையாளம் இந்த ஆன்மா அன்புமயமாக மாறிவிடும். அப்படி ஆகிவிட்ட பின்னர்அவன் கையில் வந்து இறைவன் நடனமாடுவான். ''அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே'' என்பது மணிவாசகம். இதுதான் உண்மையில் இரசவாதம். மற்றதெல்லாம் ஆசைவாதம். இப்படி நம்மை நாமே மாற்றிக் கொள்ளலாமா என்றால் அதற்கு அவன்தான் உதவ வேண்டுமே தவிர நம்மாலே அப்படிச் செய்து கொள்ள முடியாது.

அவன் நம்மைப் படிப்படியாக மாற்றிக் கொண்டே யிருக்கின்றான். சித்தர் பாடலில் 'இலிங்கம் மெழுகானால் தாமிரம் தங்கமாகும்' என்று ஒரு வரி. இலிங்கம் என்பது என்ன? இங்கே லிங்கம் என்பது பரிபாஷை. இலிங்கம் என்பது ஆன்மாவைக் குறிக்கும் சொல்.

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிவார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே
(1823)

என்பது திருமந்திரம். அப்போது, இந்தச் சீவனாகிய சிவலிங்கம் மெழுகாக வேண்டும். உருக வேண்டும். ''நெகிழ்ந்து நெகிழ்ந்து ஊற்றெழும் கண்ணீர் அதனால் உடம்பு நனைந்து நனைந்து ...'' என்றெல்லாம் உருகி

உருகிப் பாடுவார் வள்ளல் பெருமான். அப்படி உள்ளம் உருக வேண்டும். அப்போது தாமிரமாக இருக்கின்ற சீவன் தங்கமாக மாறிவிடும். அன்பு மிகுந்தால் பிறவி அறுந்துவிடும்.

அப்படியானால் நமக்கெல்லாம் அன்பு கிடையாதா? என்றால் கிடையாது என்பதுதான் தெளிவு. இதைக் கேட்டு யாரும் வருத்தப்படக் கூடாது. தாழ்வு மனப்பான்மையும் வரக்கூடாது. நாம் செலுத்துவது எல்லாம் 'மாதிரி அன்பு' தான். உண்மையான அன்பில்லை. உண்மையான அன்பைப் பற்றி நடைமுறையாகவும் சொல்லலாம்; நடந்துபோனவரலாற்றையும் சொல்லலாம்.

மெய்ப்பொருள் நாயனாரைக் குத்திவிடுகின்றான் முத்தநாதன். உயிர் ஊசலாடுகின்றது. அப்போது தத்தன் ஓடிவருகிறான். முத்தநாதனைக் கொல்ல எண்ணுகின்றான். மெய்ப்பொருள் நாயனார் அவனைத் தடுக்கின்றார். தன் உயிர் போனாலும், பிறன் உயிர் போகக்கூடாது என்று எண்ணுகின்றார். எத்துணை அன்புப் பிழம்பாக இருந்தால் இறக்கும் நேரத்திலும், தனக்குத் தீங்கிழைத்தவன் மீது இரக்கம் காட்டியிருப்பார்; இதுதான் பிறவா நிலையைத் தரக்கூடிய அன்பு. செம்பு தங்கமான நிலை.

அத்துடன் நிறுத்திவிடவில்லை அவர். ''தத்தா, இவர் நமர். இவரை நம்முடைய நாட்டின் எல்லையைக் கடந்து எந்தத் தீங்கும் நேராமல் கொண்டு விட்டுவிட்டு வா, யாராவது குடிமக்கள் தடுத்தால் இது அரசன் ஆணை என்று தெரிவி, நீ திரும்பி வந்து அவருக்கு எந்தத் தீங்குமின்றி விட்டு வந்தேன் என்று சொல்கின்றவரையில் என் உயிர் பிரியாது'' என்ற தெரிவிக்கின்றார். அப்படியே தத்தன் முத்தநாதனைத் தங்கள் நாட்டின் எல்லையில் கொண்டு சென்று விட்டுவிட்டு வந்த பின்பும் அவர் உயிர் பிரியவில்லை. மனைவி மக்கள், உறவின் முறையினர், அரசஆயத்தார் அனைவரையும் கூட்டி வைத்து, அன்பின் சிறப்பைப்பற்றியும், தான் வாழ்ந்த வாழ்க்கையைப் பற்றியும், அந்த அன்பு நெறியை நீங்கள் காப்பாற்ற வேண்டுமென்றும் உபதேசமாகச் சொல்லிவிட்டு உயிர் நீத்தார். கெடுதல் செய்தார்க்கு மீண்டும் நாம் கெடுதல் செய்வது என்பது அன்பன்று.

அன்பு செய்வதற்கு என்ன வரையறை என்று தெரியாமலேயே நாம் வாழ்ந்து கொண்டிருக்கின்றோம்.

அன்பும் சிவமும்இரண் டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.

மலம் நீங்கினால் அன்பு மலரும் என்பது இதன் கருத்து. அன்பு மலர்ந்த நெஞ்சத்தில் ஆன்மாவில் ஆணவக் களிம்பு இல்லை என்பது விளங்கும்.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

**கன்மம்:**

ஆணவத்தால் நிகழ்வது கன்மம்- கன்மம் என்றால் செயல் என்றே பொருள். நாளும் நாம் வினைகளைச்செய்து கொண்டுதான் இருக்கின்றோம். அவை, எண்ணத்தால், வார்த்தையால், உடலால் நிகழ்கின்றன. இவற்றை வல்வினை (அ) கொடிய வினை என்பர். இவற்றைச் சாதாரணமாக நீக்க முடியாது. சுட்டுத்தான் நீக்க வேண்டும்.

சுடுதல் என்றால் அழித்துவிடுதல் அன்று. பக்குவப்படுத்தல். பயன்படுமாறு பக்குவப்படுத்தல்.

இதனை வேறு வகையிலும் எண்ணிப் பார்க்கலாம். இரும்பு இருக்கின்றதே, அதில் துப்பு ஏறியிருக்கும். அதைச் சுத்தியால் தட்டினால் ஓரளவுக்கு துப்பு உதிர்ந்து போகும். அதிலும் போகாத துப்பை நெருப்பில்போட்டு நீக்குவார்கள். அப்போது துப்பெல்லாம் போய்விடும். அதிலும்போகாத துப்பைப் பக்கத்தில் வைத்திருக்கும் தண்ணீரில் போட்டு விடுவார்கள். அப்போது அனைத்துத்துப்பும் அகன்றிருக்கும். அதற்குப் பிறகுதான் அதை எடுத்துப் பயன்படுபொருளாகச் செய்வார்கள். அதற்குப் பின்னரும்அதனை இன்னொரு வகையில் பக்குவப் படுத்த வேண்டும். மீண்டும் அதனை நெருப்பிலிட்டு, உறுதியடையச்(டெம்பர்) செய்வார்கள். அதனைக் கிராமப்புறத்தில் 'தொயில்' போடுதல்

என்பார்கள். அப்படி உறுதியடைந்தால்தான் அது பயன்படும்.

வினைகள் விதைகள் போன்றவை. மீண்டும் மீண்டும் முளைத்துக்கொண்டு இருக்கும் தன்மையன. அதனால் அவை மீண்டும் அவற்றை முளைக்காதிருக்கும் வகையில் அவித்துவிட வேண்டும்; அல்லது வறுத்துவிட வேண்டும். வறுத்துவிட்டதை, அல்லது அவித்துவிட்டதைச் சாப்பிட்டுவிட வேண்டும். வறுத்துவிட்டால் வினைகள் கிளைக்காதே தவிர, அவற்றை அனுபவித்தே தீர வேண்டும். என்வே இந்தப்பிறவியிலேயே அனுபவித்துத் தீர்த்துவிட வேண்டும். வேர்க்கடலை, நெல், பனங்கிழங்கு போன்றவற்றை அவித்துவிட்டால் மீண்டும் அவை முளைக்காது.

∴ ∴ ∴ ∴ ∴ ∴

**மாயை:**

ஒரு நூலைப் படிக்கின்றோம். நன்றாகப் படித்துவிட்டோம் என்ற மயக்கம் வரும். ஒரு செயலைச்செய்கின்றோம். சிறப்பாகச் செய்து விட்டோம் என்ற மயக்கம்வரும். நம்முடைய செயல்களும், அறிவும் ஒரு காலத்தில் மறைந்து போய்விடும். மயங்கச் செய்வதற்கு மாயை என்று பெயர். மயக்கம் என்பது மனிதனுக்குத்தான் உண்டு. இறைவனுக்கு மயக்கம் என்பது கிடையாது. அவன் எதிலும் மயங்குவதில்லை.

ஒரு சிறு பிள்ளை. என்னை அறியாமலேயே என்னைப் பார்த்து ஓவியமாக வரைந்து, வண்ணம் கொடுத்து என்னிடம் காண்பித்தான். எனக்கு வியப்பாகப் போய்விட்டது. எப்படி இப்படி வரைந்தாய்? என்று கேட்டேன் அதற்கு அவன், ஓவியம் வரைவது எனக்கு இயற்கையாக வந்த கலை. நீங்கள் உட்கார்ந்திருக்கும் போது உங்களை வரிக்கோடுகளாகப் போட்டுப் பின்னர் வண்ணம் கொடுத்து விட்டேன் என்று சொன்னான். அத்துடன் நிறுத்தவில்லை. 'என்னுடைய ஓவியம் எப்படியிருக்கின்றது;' என்று வியந்து கொண்டான் இதைத்தான் மாயை என்பார்கள்.

அப்போது என்னுள் ஒரு சிந்தனை எழுந்தது. இந்தச் சின்னத் தாளில் வரைந்த ஓவியத்தைக் கண்டு இவனே

இப்படி மயங்குகின்றானே. இறைவன்என்ற ஓவியன் இந்த உலகத்தையே ஓவியக் கூடமாக வைத்துக் கொண்டு, அதில் பல்வேறு திரைச்சீலைகளை நிறுத்தி, அதில் என்னென்னமோ வண்ணங்களை கொண்டு பலவிதமான ஓவியங்களை வரைந்துவிட்டு மறைந்து நின்று கொண்டு மக்கள் இரசிக்கட்டும் என்று எண்ணுகின்றான். தன்னைக் காட்டிக் கொள்ளாமல் ஒதுங்கி நிற்கின்றான். உலகத்தில் பலவிதமான அற்புதங்களையெல்லாம் நிகழ்த்திவிட்டு அவன் ஒளிந்து கொள்கின்றான். காரணம்அவன் மயங்கவில்லை. ஆனால் நாமோ சின்னச் சின்னச் செயல்களைச் செய்துவிட்டு அதனைப் பார்த்துப் பெரிதாக மயங்கி கொண்டிருக்கின்றோம். காரணம் நாம் மாயைக்கு ஆட்பட்டிருக்கிறோம் என்பதுதான்.

இறைவன், 'ஏழிசையாய், இன்னமுதாய், இசைப்பயனாய்' இருந்தும் நான் இசையின் வடிவாய் இருக்கின்றேன் என்று சொல்வதில்லை. அதுவே மனிதன் சாதாரணமாக ஒரு பாடலைப் பாடிவிட்டால், தன் இசையில்தானே மயங்கிவிடுகின்றான். தன் செயலில், தன் திறமையில் தானே மயங்குவது மனித இயல்பு. எவ்வளவு செய்தாலும் அதில்மயங்காதிருப்பது இறைவன் இயல்பு. இத்தகைய மயக்கத்தை நீக்குவதற்காக ஒரு நடனத்தை இறைவன் ஆடிக்கொண்டு இருக்கின்றான்.

அது மட்டுமல்ல. இவ்வளவு பெரிய உலகத்தை (வீட்டை)க் கட்டிக் கொடுத்திருக்கின்றான். அதில் இரவும் பகலும் வெளிச்சத்திற்கு என இரண்டு விளக்குகளைக் கொடுத்திருக்கின்றான்; தண்ணீர் வசதி செய்து கொடுத்திருக்கின்றான். காற்று வசதி செய்து கொடுத்திருக்கின்றான். இவற்றிற்கெல்லாம் நாம் என்ன வரியா கட்டுகின்றோம்; வாடகையா கொடுக்கின்றோம். என்ன கொடுக்கின்றோம். எதுவுமில்லையே. மாறாக, நாம் ஒரு வீடு கட்டி விட்டால் அதைக் கண்டு மயங்குகின்றோம். எப்படிக் காட்டியிருக்கின்றேன் பார்த்தீர்களா? என்று நண்பர்களிடம் காட்டிப் பெருமைப்பட்டுக் கொள்கின்றோம். இதற்குத்தான் மாயை என்று பெயர். இந்த மாயை நீங்கவே நம்மைச் சிந்திக்க வைக்கின்றார்.

இறைவன் நமக்குத் தெரியாமலேயே நம்முள் கலந்திருக்கும் ஆணவத்தைப் போக்கவே நம்மோடு மாயை என்ற அழுக்கினைச் சேர்த்தான். ஆணவத்தோடு மாயையின் உறவும் சேர்கின்றபோது வினை தோன்றுகின்றது.

அழுக்குத் துணியோடு உவர்மண் முதலியனவற்றைச் சேர்த்து, அழுக்குப் போகத் துவைப்பது போல ஆணவ அழுக்கினை, மாயை, கன்மங்களால் போக்கிய இறைவன் இப்போது அந்த அழுக்குகள் முழுவதும் நீங்கச் செய்கின்றான். அதற்காக, இதுவரை பயன்பட்டு வந்த மாயையை உதறுகின்றான். வினைகளைச் சுடுகின்றான். மலங்களை அமுக்குகின்றான். ஊனம் நீங்கிய பின்னர் மாயையை உதற வேண்டும். அதற்கு ஒரு குறித்த காலம் வேண்டும். அக்காலத்தில் உதறினால்தான் மாயையை உதற முடியும். காலமல்லாத காலத்தில் உதறினால் மாயை போகாது. உதாரணமாக, மரத்தில் காய் காய்க்கின்றது. காயாக இருக்கின்ற போது மரத்தை அசைத்தால் காய் கொட்டாது. அதுவே பழுத்த் நிலையில் இருக்கும்போது அசைத்தால் பழமெல்லாம் கொட்டிவிடும். அதுபோலவே நேரம் பார்த்து மாயை நம்மிடமிருந்து உதறிப் பிரித்துவிடுகின்றான்.

அழுக்குகளை நீக்கிய பின்னர் அங்கே ஞானத்தைத் தேக்க வேண்டும். வீட்டைத் தூய்மை செய்கின்றோம். பின்னர் வீட்டை அழகு செய்யக்கோலம் போடுகின்றோம். அதன் பின்னர் விளக்கேற்றி வைக்கின்றோம். கோலம்போடுவது போன்றது ஞான நடனம். கோலமிட்டு அழகுபடுத்திய பின்னர்அங்கே விளக்கு ஏற்றுவது போன்றது ஆனந்த நடனம்.

வீட்டைத் தூய்மை செய்யாமலும், கோலமிடாமலும் விளக்கை ஏற்றினால் என்ன என்று கேட்கலாம். அது அவ்வளவு சிறப்பாக இருக்காது. வீடு நிறைய குப்பை இருக்கும்போது விளக்கை ஏற்றி வைத்தால்வீடும் அழகாக இருக்காது; மனதிற்கும் நிறைவு இருக்காது. அப்படி நிறைவில்லாத தன்மையிலே விளக்கை ஏற்றுவது நியாயமும் இல்லை.

## திரோதானம், மாமாயை:

ஆணவம், கன்மம், மாயை என்ற அழுக்குகளைப்போலவே மறதி என்ற அழுக்கும் நம்மிடத்தில் இருக்கின்றது. நமக்கு மேலே இறைவன் என்பவன் இருக்கின்றான் என்பதை மறந்திருக்கின்றோமே அதற்குப் பெயர் திரோதானம். அதையும் மறந்துவிட்டு, தம் முனைப்பிலேயே மூழ்கி விடுகின்றோமே அதற்கு மாமாயை என்று பெயர். இப்படி ஐவகையான மலங்கள் (குற்றங்கள்) நம்மிடத்தில் இருக்கின்றன. இந்த ஐவகையான குற்றங்களையும் நீக்க ஐவகையான நடனத்தை இறைவன் நடத்திக் கொண்டிருக்கின்றான். இந்தக் கூத்து எப்படி இருக்கின்றது? அதைக் கண்டவர்கள் மனோநிலை என்ன? இத்திருக்கூத்தைப் பார்த்தவர்கள் பெறுகின்ற பேறு என்ன என்பதை அடுத்த பாடலில் சொல்லுகின்றார்.

* * * * *

37. மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தான்அந்த மானிடத்தே தங்கியிடும் – ஆனந்தம்
மொண்டுஅருந்த நின்றாடல் காணும்அருள் மூர்த்தியாக்
கொண்டதிரு வம்பலத்தான் கூத்து.

## ஆனந்தக் கூத்து

இறைவனது திருக்கூத்தினை, அகத்திலும், புறத்திலும் ஞானிகள் காண்பார்கள். சராசரி மக்கள் அக்கூத்தினை அகத்தில் பார்ப்பதில்லை. எனவே புறத்தில் உருவமாகச் செய்து வைத்த திருவுருவத்தில் காண்கின்றார்கள்.

## மோனம்

மோனம் என்றால் மௌனம். மௌனம் என்றால் வாய் பேசாது இருத்தல் என்று பிழைபட எண்ணுகின்றார்கள். அது ஒரு வகையில் மௌனம்தான். இருப்பினும் அதுவே மௌனமாகாது. கண் பார்க்கின்றது; மனம் நினைக்கின்றது, செவி கேட்கின்றது; மூக்கு நுகர்கின்றது; சாப்பிடும்போது என்னென்ன சுவை என்று

தெரிகின்றது. இப்படி புலன்கள் ஐந்தும் செயல் பட்டுக்கொண்டிருக்கும் போது, வாய் மட்டும் பேசவில்லை என்பதற்காக அதனை மௌனம் என்று சொல்லிவிட முடியாது. அடக்கம் என்றும் சொல்லி விட முடியாது. உறங்குகின்றபோது கண்ணை மூடிக் கொண்டுதான் உறங்குகின்றோம். அது மௌனமா? இல்லை. இப்படியே சில நேரங்களில் பேசாமலிருப்பதால் அது மௌனமாகாது. பிறகு மௌனம் என்றால் என்ன?

மௌனம் என்றால் மனம் அடங்குதல். மனம் அடங்காத வழி மற்றயாவும் அடங்கா. மனம் எப்போது அடங்கும்? மலம் அடங்கினால்தான் அல்லது அகன்றால்தான் மனம் அடங்கும்.

ஒரு குளத்தில் நீர் இருக்கின்றது. அல்லது குடத்தில் நீர் இருக்கின்றது. இந்த நீர் அலைவில்லாமல் இருப்பது எப்போது? குடத்து நீரில் கையை வைத்தால் அதில் அலைவு இருக்கும். குளத்தில் கல்லைத் தொடர்ந்து போட்டுக் கொண்டிருந்தால் அலை உண்டாகிக் கொண்டேயிருக்கும். அப்படியே எண்ணங்கள் மனதில் எழுவதினால் மனம் அசைந்து கொண்டேயிருக்கும். எண்ணங்கள் ஆசையினால் விளைந்து கொண்டேயிருக்கும்.

ஆசையினால் எண்ணங்கள் எழ, மனம் அலைப்புக் கொண்டிருக்க, மன அலைவினால் புலன்கள் வேகமாக வெளியில் சென்று செயல்பட ஆரம்பித்துவிடும். அதனால் ஓடிக் கொண்டிருக்கின்ற மனம் அடங்கி நிற்கின்றபோது மௌனம் என்று சொன்னார்கள். மனம் அடங்க முதலில் எண்ணங்கள் அடங்க வேண்டும். எண்ணங்கள் அடங்க ஆசை அடங்கியிருக்க வேண்டும். எண்ணங்கள் அடங்கி விட்டால் மனம் கொஞ்சம் கூட அசைவின்றி நிற்கும். இதனை,

யாதனின் யாதனின் நீங்கியான நோதல்
அதனின் அதனின் இலன்
– என்பார் திருவள்ளுவர்.

ஆசைகளை ஒரேயடியாக விட்டுவிட முடியாது. ஒவ்வொரு ஆசையாக விட்டு நீங்கிக் கொண்டேயிருக்க வேண்டும். எண்ணங்களில் இருந்து மனம் விடுபட

வேண்டும். அப்போதுதான் மௌனம் சித்திக்கும். அப்போது ஒளி சிறக்கும். அந்த ஒளிக்கு ஞானம் என்று பெயர். 'மோனம் என்பது ஞான வரம்பு' என்பார் ஔவையார். இந்தக் கருத்தை மனதில் கொண்டு 'மோனந்த மாமுனிவர்' என்றார் ஆசிரியர்.

முனிவர்

முனிவர் என்றால் யார்? இறைவனுடைய அருள் ஆனந்தத்திலே மூழ்கி நின்று அதைப் பார்க்கின்றவர்கள் முனிவராகத்தான் இருக்க முடியும். அவர்கள் எப்படியிருப்பார்கள்? அவர்களுடைய அடையாளங்கள் என்ன? அவர்கள் தாடி வைத்திருப்பார்களா? சடைமுடி தரித்திருப்பார்களா? வெள்ளை ஆடை உடுத்தியிருப்பார்களா? என்றெல்லாம் நாம் கற்பனை செய்துக் கொள்ளக்கூடாது.

முனிவர் என்பவர் ஆகாரத்திலே மிகவும் குறைந்திருப்பர். உறக்கம் குறைந்திருப்பர். பேதாபேதங்களிலிருந்து விடுபட்டிருப்பர். எப்போதும் சிந்தனையில் இருப்பார். நூல் படிக்கவில்லையென்றாலும் எல்லா நூல் கருத்தும் அவர்கள் உள்ளத்தில் பதிந்திருக்கும். மனம் அடங்கியிருப்பர். கற்றவர்களுக்குத் தாம் எல்லையாக இருப்பர். புதுமைகளுக்கு ஆதாரமாக இருப்பர். இப்படிப்பட்ட பண்புகள் நிறைந்தவர்களே முனிவர்கள். இதுபற்றி, திருமுருகாற்றுப்படையில் குறிப்பு வருகின்றது

என்பு(பு) எழுந்து இயங்கும் யாக்கையர் நன்பகல்
பலஉடன் கழிந்த உண்டியர் இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தின ரியாவதும்
கற்றோர் அறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சியர் இடும்பை

யாவதும் அறியா இயல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்
(130 – 137)

இதுவே முனிவரின் இலக்கணம்.

இப்படி, எல்லாம் அற்ற முனிவர்கள் உள்ளத்திலும் மும்மலங்கள் உண்டு. அவர்களிடத்துக் கூடவா மும்மலம் இருக்கும் என்று வினா எழும். அவர்கள் உள்ளத்திலும் உண்டு. சிலருக்கு மலம் இருப்பது தெரியும்; சிலருக்கு மலம் இருப்பது வெளியில் தெரியாது.

முனிவர்கள் உள்ளத்தில் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலத்தின் வேகம் அடங்கிக் கிடக்கின்றது. இனிமேல் அதனை எடுத்துவிடலாம். அவர்கள் பக்குவப்படுவதற்கு முன்னர் மலங்களை எடுத்தால் அல்லது அகற்ற இறைவன் முயற்சித்தால் சீவனே அதனை ஒப்புக் கொள்ள மாட்டான். இதைப் பல வகையால் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

நம்மிடத்தில் ஒரே ஒரு ஆடைதான் இருக்கின்றது. அதில் இருக்கும் அழுக்கை நீக்க அதற்கு உரியவர்களிடத்தில் கொடுக்கின்றோம். கொடுக்கும் போதே, ''இதனை வேகமாக அடித்துத் துவைக்காதே, கிழிந்துவிடும்'' என்று சொல்லிக் கொடுக்கின்றோம். அதனை வாங்குகின்றவரோ, 'இதனை அடித்துத் துவைக்காவிட்டால் அழுக்குப் போகாதே' என்கின்றார். ''அப்படியானால் என்னிடத்தில் அதனைத் திருப்பிக் கொடுத்துவிடு'' என்று வாங்கிக் கொள்வோம். ஏன்? இருப்பதோ ஒரு ஆடை, அது கிழிந்துவிட்டால் அடுத்து உடுத்துவதற்கும் என்ன செய்வது என்ற அச்சத்தால்தான் அப்படிச் சொல்கின்றோம்.

அழுக்கேறிய ஆடையை அடித்துத் துவைத்தால் அது கிழிந்துவிடும் என்பதால் நீரில் அமுக்கி, பிழிந்து எடுத்து உலர்த்திவிடுவோம். அப்படியே ஆன்மாவில் இருக்கும் அழுக்கை நீக்க வேண்டுமென்று எண்ணுவாரும் கூட அதை அகற்றினால் நாம் உயிர் வாழ முடியாது என்ற காரணத்தினால், 'பெருமானே, என்னிடத்திலிருக்கும் மலத்தைக் கொஞ்சம் அடக்கு' என்று பிரார்த்தனை செய்து கொண்டு திரும்பிவிடுவர். இப்படிப் பிரார்த்தனை செய்வது என்பது, அழுக்குத் துணியைத் தண்ணீரில் போட்டு அலசி எடுப்பது போன்றது. அதனால் அழுக்குப் போகாது. அப்படியே வழிபாடு செய்கிறேன் என்பதனால் மட்டும் மும்மலங்களும் போகா.

மன அடக்கமும், மற்றும் முனிவருக்குச் சொன்ன குணங்கள் யாவும் நிறைகின்றபோது இறைவனே வந்து மலங்களை அகற்றுகின்றான். நாமாக அகற்றிக் கொள்ள முடியாது. அவனே வந்துதான் அகற்ற வேண்டும்.

**தானந்த மானிடத்தே தங்கியிடும்.**

அந்த மலங்கள் அகன்றுவிட்ட பின்பு அந்த மனித வடிவத்தில் இறைவன் வந்து தங்கிவிடுகின்றான். அவன் வந்து தங்குவதற்கு இத்துணை காரியங்கள் செய்ய வேண்டுமா? காரணம்: அவன் மலமற்றவன், ஆசையற்றவன், சினம் அற்றவன், காமமற்றவன், உணவு அற்றவன், உறக்கம் அற்றவன், அத்தனையும் அற்றவன். இப்படி அத்தனையும் அற்றாரிடந்தான் அவன் வந்து தங்குவான்.

அப்படியானால் கடவுள் உறங்குவதில்லையா? உறங்கிய்தாகச் செய்தி இல்லை. என்றோ ஆடத்தொடங்கிய அந்தத் திருப்பாதம் இன்றும் ஆடிக் கொண்டுதான் இருக்கின்றது. இப்படி ஆடிக் கொண்டேயிருக்கின்றாயே, பெருமானே! உன் திருப்பாதம் நோகாதா? என்று பாண்டியன் வருந்தினான். அப்போதும் ஆட்டத்தை நிறுத்தாமல், கால்மாறித்தான் ஆடினான். ஏன்? அவன் ஆட்டத்தை நிறுத்தினால் அனைத்து இயக்கங்களும் நின்றுவிடும். இந்த மாற்றமே அவனுக்கு ஓய்வாக அமைந்தது.

இந்த மனித வடிவத்திலே இறைவன் வந்து தங்கிவிடுகின்றான் என்பதற்கு ஒரு செய்தியைத் தெரிவிக்கின்றேன்.

சில பேர் மேல் இறைவன் வந்து ஆடுவதாகச் சொல்கின்றார்களே, அப்படி வருமா? அப்ப்டி வந்தால் சாமி ஆடுமா? அப்படி ஆடுவது சாமியல்ல.. எந்தச் சாமியும் வந்தால் ஆடாது. எப்போதும் மக்கள் இருப்பதுபோல இயல்பாகவே இறைவன் இருப்பான். மலம் நீங்கிய தன்மை எப்படி இருக்குமோ அப்படி இருக்குமே தவிர, அதற்காக ஆடாது. ஆடுவது சாமி என்றும் நினைக்க வேண்டாம். அப்படி நினைத்தால்

நீங்கள் ஏமாறுவதற்கு இடமளித்தவர்கள் ஆவீர்கள். ஏமாந்துவிடுவீர்கள். இன்னும், அருள்வாக்கு பல இடங்களில் சொல்கின்றார்களே என்று கேட்டால், அவற்றை அருள் வாக்கு என்று சொல்லக் கூடாது. அவை யாவும் மருள் வாக்கு என்று தான்சொல்லவேண்டும். மருள் என்றுதான் முன்னெல்லாம் வழங்கி வந்தது. மருள் என்பது தவறான பொருளில் இருக்கின்றதே என்று இப்போது அதனை அருள் வாக்கு என்று சொல்லிக் கொண்டிருக்கின்றார்கள். மருள் ஆடுகின்றவர்களால் அருள் வாக்குச் சொல்ல முடியாது. அருள் வாக்குச் சொல்லக் கூடியவர்கள் ஞானிகள்தாம். ஞானிகள் ஆடமாட்டார்கள், பாடமாட்டார்கள். ஆனால் அவர்களது வாக்கு வலிமையுடையதாக இருக்கும். நடந்துவிடும். திருஞானசம்பந்தர், அப்பர் சுவாமிகள் போன்றோர் அருள்வாக்குடையவர்கள். அவர்கள் சொன்னது இன்றைக்கும் நடந்துகொண்டுதான் இருக்கின்றது. ஆகவே மானிடத்தே தங்கியிடும் என்றார்.



## ஆனந்தம் மொண்டருந்த நின்றாடல் காணும்

ஆடல் கண்டு கொண்டிருப்பான், ஆடிக் கொண்டிருப்பான்; அந்த ஆட்டத்திலே அருளை முகந்து கொள்கின்ற தன்மையிலே அவன் ஆடிக்கொண்டு இருப்பான்.

நமக்குத்தானே விளையாட்டெல்லாம்; அவனுக்கு விளையாட்டு எல்லாம் தேவையா? தேவையில்லையே? என்றால் நம்முடைய விளையாட்டுக்கு விளையாட்டு என்று பெயர். அவனுடைய விளையாட்டுக்குத் திருவிளையாடல் என்று பெயர். இதற்குத் திருவுடைய விளையாட்டு, பெருமை உடைய விளையாட்டு என்றெல்லாம் பொருள் சொல்வார்கள். அது பொருளன்று.

'திரு' என்றால் ஞானம், 'விளை' என்றால் விளைதற்பொருட்டு, ஆடல் என்றால் ஆடுகின்ற ஆட்டம். இந்த ஆன்மாவில் ஞானம் விளைதற்பொருட்டு இறைவன் ஆடுகின்ற ஆட்டத்திற்குத் திருவிளையாடல் என்று பெயர்.

## அருள்மூர்த்தியாய் நின்றாடல் காணும்

அருள் மூர்த்தியாக அவன் நின்றாடல் காணும். யார் காணுவார்கள் மானுடம் காணும். எந்த மானுடம் காணும்? அவன் அமர்ந்த மானுடம் காணும் அவன் உள்ளேயிருந்து காட்ட மானுடம் காணும். அவன் காட்டக் காணும். உள்ளேயிருந்து அவன் காட்டினாலன்றி நம்மாலேயே அவன் ஆட்டத்தைக் காண முடியாது. அப்போது உள்ளேயிருப்பவன் வேறு, வெளியே இருப்பவன் வேறா? உள்ளே நின்று ஆடுகின்ற ஆட்டத்தை அவனே காட்டிக்கொண்டு இருப்பான்.

## அருள்மூர்த்தியாக கொண்ட திருஅம்பலத்தான் கூத்து

இறைவன் அருளே உருவாகக் கொண்டு ஆடுகின்றான் அவன் ஆடுகின்ற அம்பலம் என்பது ஞானவெளி. அங்கே ஆடுகின்ற இயக்கம் ஆனந்தம். ஆனந்தம்தான் ஆடுதல். ஆனந்தம் எங்கேயிருக்கின்றதோ அங்கே அவன் ஆடிக் கொண்டிருக்கின்றான். ஞானம் இருக்கின்ற இடம் அம்பலம். ஆனந்தம் என்பது ஆடல். அதை அவனே மகிழ்ந்து கொள்ளுமாறு உள்ளிருந்து ஆடிக் கொண்டிருக்கின்றான். மன அடக்கம் என்னும் வெளியிலே அந்த நடனம், ஞானமே மேடையாக அமைய, அந்த ஞான மேடையிலே அவன் நடம் நடைபெறுகின்றது. அப்போது ஆன்மாவில் இருக்கின்ற மும்மலங்கள் அகற்றப்படுகின்றன.

அவன் இப்படி உள்ளிருந்து ஆடி, ஆட்டத்தைக் காட்டுவித்து, நம்மைக் களிப்பித்துக் கொண்டிருக்கின்றான். அத்திருக்கூத்தைக் கண்டால் பெறுகின்ற பேறு என்ன?

* * * * *

38. பரைஇடமா நின்றுமிகு பஞ்சாக் கரத்தால்
உரைஉணர்வுக்கு எட்டா ஒருவன் – வரைமகள்தான்
காணும் படியே கருணையுருக் கொண்டாடல்
பேணும் அவர்க்கு உண்டோ பிறப்பு:

இறைவன் திருக்கூத்தைப் பார்த்தவர்களுக்குப் பிறப்பும் இல்லை; இறப்புமில்லை என்பதைத்தான் 'உண்டோ பிறப்பு' என்றார். அந்தக் கூத்து எப்படி நடக்கின்றது?

**<u>பரை இடமா நின்று மிகு பஞ்சாக் கரத்தால்</u>**

பரம் என்பது ஆண்தன்மை. பரை என்பது பெண் தன்மை. பரம் , பரை என்ற இரண்டையும் சேர்த்தால் பரம்பரை என்று ஆகும். அதைத்தான் 'நீங்கள் எந்த பரம்பரையைச் சேர்ந்தவர்கள்' என்று கேட்கின்றார்கள்.

நிலையாக இருந்தால் பரம். பரவியிருந்தால் பரை. இது விளக்கு போல. விளக்கு ஒரே இடத்தில் நிலையாக் இருக்கின்றது. அதிலிருந்து எழும் ஒளி எங்கும் பரவிநிற்கிறது. நின்ற விளக்கு பரம். பரவிய ஒளி பரை. அல்லது பாரசக்தி என்பர். ஓரிடத்திலிருந்த ஆற்றல் எங்கும் பரவி நின்றது. அதுவே பரம்பரை.

இந்த இருவகையான ஆற்றல்களும் ஒரே இயக்கத்தைத்தான் செய்து கொண்டிருக்கின்றன. எந்த மதத்தினராக இருந்தாலும், எச்சமயத்தவராக இருந்தாலும் இரண்டு பொருளைச் சுட்டியாக வேண்டும். ஒன்று சத்தி அல்லது வல்லமை. அந்தச் சத்திக்குள் நிலையாக ஒரு பொருள் இருக்கிறது. அதற்குப் பரம் அல்லது பரத்துவம் என்று பெயர். இதைத்தான் த மிழிலே 'கடவுள்' என்று சொல்லாக வைத்தார்கள். இங்கே சொல்லப்படுகின்ற விளக்கந்தான் கடவுள் என்ற சொல்லிலே இருக்கின்றது.

கட என்ற இரண்டு எழுத்தும் நிரையசை; உள் என்பதற்கு நேரசை என்றும் இலக்கணம் சொல்வர். நேர் என்றால் நிலைபெறுதல். நிரை எங்கும் பரவியிருத்தல். அசை என்ற இலக்கணத்தில் இதைப் பொருத்தி வைத்திருக்கிறார்கள்.

நிரையாக இருப்பது ஒலி. நேர் ஆக இருப்பது ஒளி. இந்த ஒளியும், ஒலியும்தான் உலக இயக்கத்திற்கு ஆதாரமாக இருக்கின்றது. இந்த நுட்பம் அடங்க அச்சொல் அமைந்திருக்கின்றது.

## பஞ்சாக்கரம்

பரை என்ற பராசக்தியை இடமாகக் கொண்டு விளங்குவது பஞ்சாக்கரம். பஞ்சாக்கரம் என்பதை பஞ்ச அக்கரம் என்று பிரிக்க வேண்டும். அக்கரம் என்பது ஒளி. பஞ்ச – ஐந்து வகையான, அக்கரம் ஒளி. ஐந்து வகையான ஒளிகள். இவை ஐவகையான எழுத்துக்களாக இருக்கின்றன. அவ்வெழுத்துகள் ஒலி வடிவமாக இருக்கின்றது. ஒளி ஒலியாக மாறும். ஒலி ஒளியாக மாறும். அவரவர் சமயத்துக்கு ஏற்ப இதனை வேறு வேறு வகையில் சொல்வார்கள்.

மிகு பஞ்சாக்கரம் என்றால் மந்திரங்களிலேயே தலைசிறந்து விளங்குவது. எத்தனையோ மந்திரங்கள் உண்டு. நமக்கும் மந்திரங்களைச் சொல்லிக் கொடுத்திருக்கின்றார்கள். அவற்றில் எல்லாம் தலையாயது பஞ்சாக்கரம்தான். அதற்குமேல் ஒன்றுமில்லை. அதை எப்படி வரையறுப்பது?

பெரியவர்கள் எல்லாம் இதைத்தான் சொல்கிறார்கள்; அதனால் நாமும் சொல்லுகிறோம் என்ற விளக்கம் போதாது. வேத மந்திரங்கள் இருக்கின்றன, ஆகம மந்திரங்கள் இருக்கின்றன; அதிலும் பலவேறு பிரிவுகள் இருக்கின்றன. அவற்றில் எல்லாம் தலை சிறந்தது பஞ்சாக்கரம்தான். அப்படியானால் நாராயாண மந்திரம்கூட இதற்குப் பிறகுதானா? என்ற ஐயம் எழும். எல்லா மந்திரங்களும் பஞ்சாக்கரத்துக்குப் பின்னால்தான். வைணவப் பெருமக்கள் இதில் கருத்து மாறுபடுவார்களே என்றால், கருத்து மாறுபட்டாலும் உண்மை இதுதான் உதாரணத்திற்கு ஒன்றைச் சொல்கின்றேன்.

திருஞானசம்பந்தப் பெருமானுக்கு உபதேசம் செய்து வைக்கின்ற காலம். அவர்களுடைய மரபுப்படி காயத்திரி மந்திரத்தை உபதேசம் சொல்ல வேண்டும். பூணூல் அணிவிக்க வேண்டும். அந்த முயற்சிகள் நடைபெறுகின்றபோது, 'திருநீற்றுக்குமேல் ஒரு காப்பில்லையே, பஞ்சாக்கரத்திற்கு மேல் ஒரு மந்திரம் இல்லையே' என்று அவர்கள் முயற்சி தேவையில்லாத ஒன்று என்று தெரிவிக்கின்றார். இருந்தாலும் பெரியவர்கள் எல்லாம் சேர்ந்து, இவற்றை நீ ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று சொன்னதால் அணிந்து கொண்டார்; மந்திரத்தைக் கேட்டுக் கொண்டார். அதற்குப் பிறகு அவர் மறுப்பு ஏதும் சொல்லவில்லை. தன்னுடைய கருத்துக்களைத் தெரிவித்தார். பிறகு பெற்றோரின் கருத்துக்கு ஒத்துப் போனார்.

நம்மில் பலரும் திருமணத்திற்கு முன்னே 'நான் அதற்கு ஒத்துக்கொள்ள மாட்டேன்; இதற்கு ஒத்துக் கொள்ள மாட்டேன்' என்று கொள்கைகளும், கருத்துக்களும் வைத்துக் கொண்டிருப்போம். அதில் பிடிவாதமாகவும் இருப்போம். ஆனால் மணமகனாக வந்து உட்கார்ந்துவிட்ட பிறகு; இவரைக் கும்பிடு என்றால் அவரைக் கும்பிடுவோம்; இதைச் செய் என்றால் செய்துவிடுவோம். ஏன்? அந்த நேரத்தில் எதையும் மறுத்துச் சொல்ல வேண்டாமே என்ற எண்ணந்தான்.

அப்படியானால் காயத்திரி போன்ற மந்திரங்கள் தவறானவையா? என்றால் தவறானவையல்ல. இவற்றிற்கெல்லாம் மேலாக இருப்பது பஞ்சாக்கரம் மட்டுமே. பஞ்சாட்சரம் என்பது பஞ்சாக்கரத்திலிருந்து விளைந்த் சொல். அக்கரம் என்பது ஒளி என்று கூறுகின்றோம். அந்த ஒளி எழுத்து அங்கே நின்று ஆடுகின்றதாம். மிகுபஞ்சாக்கரம் என்பது வேதமந்திரங்களுக்கெல்லாம் மிகவும் மேலானது என்ற கருத்தில்:

இறைவன் உரை, உணர்வுகளுக்கு எட்டாதவன். உரையினால் இறைவனைச் சொல்லிக் காட்ட முடியாது; நம்முடைய உணர்வுகளுக்கும் அவன் எட்டாதவன்.

உரைக்கும் உணர்வுக்கும் உட்பட்டுவிட்டால் அதற்கு அளவு என்று பொருள். அவன் அளவுகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவன். அளவுபடுகின்ற பொருள் அளவுபடாத பொருளாகவும் இருக்க வேண்டும். உரையும் உணர்வும் இல்லாத இடம் எது? உரை வாயிலிருந்து வருகின்றது. வருகின்ற உரைக்கு ஏற்றவாறு உள் உணர்வும் இருக்கின்றது. அந்த உணர்வுக்கு ஐயுணர்வு என்று பெயர்.

உரைக்கும், புலன்களால் வருகின்ற உணர்வுக்கும் எட்டாத ஒருவன். அவனை மெய்யுணர்வினால் மட்டுமே எட்டலாம் என்று பொருள்.

ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு.

என்பார் திருவள்ளுவர் சுருக்கமாக. மெய்யுணர்வு என்பது வேறு. ஐயுணர்வு என்பது வேறு.

## வரைமகள்தான் காணும்படியே கருணையுருக் கொண்டாடல்

வரைமகள்—மலைமகள். வரைந்து கொண்ட மகள். கருணையுருக் கொண்ட உமாதேவியார்காண ஆடிக் கொண்டிருக்கின்றான் என்பது பொருள். அவனால் வரையறுக்கப்பட்ட, வரைந்து கொள்ளப்பட்ட, மணந்து கொள்ளப்பட்ட உமாதேவியார். அவனால் வரைந்து கொள்ளப்பட்ட எல்லை, அவள் சரியென்று சொன்னால் அதுதான் சரி. இதில் வாழ்வியலுக்கும் ஒரு குறிப்பு இருக்கிறது, அருளியலுக்கும் ஒரு குறிப்பு இருக்கிறது.

பரமாகிய ஒரு பொருள் ஆடிக் கொண்டிருக்கின்றது. அதைக் கண்டு நிற்கின்ற பொருளுக்குப் பரை என்று பெயர். பரை என்பது கருணையின் வடிவம். செம்மையின் வடிவம் ஆடினால்தான் உயிர்கள் செம்மையுறும்; செழுமையுறும். அவன் ஆடுவது சரியாக இருக்கின்றதா என்று ஒருவர் கண்காணிக்க வேண்டும். இப்போது நான் பேசிக் கொண்டிருக்கின்றேன். அதைக் கேட்பதற்கு

யாராவது இருக்க வேண்டுமல்லவா? யாருமே கேட்காவிட்டால் பேசி என்ன பயன் இருக்கின்றது. தாய் பார்க்கின்றாள். ஏன் அவள் பார்க்க வேண்டும்? அவன் ஆட்டம் உயிர்களுக்குப் பயன்படுவது. உயிர்கள் வாழ வேண்டுமென்று எண்ணுபவள் தாய். சீவன்களாகிய குழந்தைகள் இனிமையாக வாழவேண்டுமென்று அந்த ஆட்டத்தைக் காணுகின்றாள் தாய்.

வாழ்வியலில், மிகப் பெரிய அறிஞர்களாக இருந்தாலும், அவர்களுடைய கலை நலத்தையும், அறிவுத் திறத்தையும் உலகமெல்லாம் பாராட்டிக்கொண்டு இருக்கின்றபோதும் அவரை அவருடைய மனைவி பாராட்டினால்தான் திருப்தியாக இருக்கும். மாறாக மனைவி அவர் பாராட்டுப் பெற்றதைப் பற்றி இகழ்ச்சியாகப் பேசிவிட்டால் அவரால் தாங்கிக் கொள்ள முடியாது. மனைவி பாராட்டுவதைத்தான் உலக அறிஞர்கள் அனைவரும் பாராட்டாகக் கருதியிருக்கிறார்கள். இதற்கு அடிப்படை இறைவன்தான் போலும்.

அவள் காணும்படியே என்றால் அவள் காணுகின்ற நடனம் என்று பொருளல்ல. அம்மை மனக்கண்ணால் எப்படி எப்படி நினைக்கின்றார்களோ உலகில் உயிர்களுக்கு என்னென்ன நிகழ வேண்டுமென்று வரைமகள் கருதுகின்றார்களோ அந்தந்த விதமாகக் கருணை உருக்கொண்டு அத்தன் ஆடிக் கொண்டிருக்கின்றான். தன் விருப்பப்படி ஆடிக் கொண்டிருக்கின்றான் என்று பொருளன்று.

வீட்டில் கூடக் கணவனைக் காய்கறி அரிந்து கொடுக்கும்படி மனைவி கேட்டுக் கொள்வாள். இவன்பாட்டுக்கு என்ன ஏது என்று கேட்காமல் குறுக்கும் நெடுக்குமாகக் காய்களை வெட்டிப் போட்டுவிட்டால் அது சமையலுக்கு ஏற்றதாக அமையாது. 'நான் இப்படியா வெட்டிப்போடச் சொன்னேன்' என்று கடிந்து கொள்வார்கள். காய்கறிகளை நறுக்குவதற்கு முன்னமே எப்படி, எதற்காக, நறுக்க வேண்டுமென்று கேட்டு அதற்குத் தக்கவாறு நறுக்கி வைக்க வேண்டும். அவர்கள் நினைக்கின்றவாறு நறுக்கினால்தான் சமையல் செய்ய ஏதுவாக இருக்கும்.

அப்படி உலகத்து உயிர்களைப் பராமரித்துக் கொண்டிருக்கின்ற அம்மையானவள் காணும்படி, அவர்கள் உள்ளத்தில் கருதிய வண்ணமே பெருமான் கருணையுடன் உருக்கொண்டு ஆடிக் கொண்டிருக்கின்றான்.

## பேணுமவர்க்குண்டோ பிறப்பு:

அம்மை நினைக்கும்படி அவள் காண ஆடுகின்ற ஆட்டத்தைக் காணுகின்ற பேறு ஒரு சீவனுக்குக் கிடைத்துவிட்டால் அதற்கு இனிப் பிறவியே இல்லை.

'உண்டோ' என்பதற்கு உண்டு என்றும் சொல்லலாம் இல்லையென்றும் சொல்லலலாம். ஆகையால் உண்டோ என்பதற்கு பிறப்பு இல்லையென்றும் முடிவு சொல்லலாம்; பிறப்பு உண்டானாலும் உண்டாகலாம். அதனால்தான் வினாவாகப் போட்டார்கள். இல்லையென்றிருந்தால் இல்லையென்றே தெளிவாகச் சொல்லியிருப்பார்கள். 'பேணுமவர்க்கு இல்லை பிறப்பு' என்றே போட்டிருக்கலாம். அது முற்றாகிவிடுகின்றது. ஆனால் உண்டோ பிறப்பு என்றதனால் ஒருக்கால் பிறப்பு வந்தாலும் வரலாம் என்ற பொருள் கொள்ளலாம். ஏன் தெரியமா? இந்த ஆட்டத்தைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருக்கின்ற இந்தச் சீவன். 'நாம் கண்டோம், நம்மவர்களும் இதனைக் காண வேண்டும் அவர்கள் காணவில்லையே' என்று ஏக்கப்பட்டால் அந்த ஏக்கத்த்தைத் தீர்த்து வைக்க அவர்களுக்குப் பிறப்பைப் பெருமான் கொடுத்துவிடுவான். எண்ணந்தான் பிறப்புக்குக் காரணமாக அமைந்து விடுகின்றது. 'அப்பா' உனக்கேன் இந்தக் கவலை; நீ கண்ட காட்சியை உன்னவர்களிடத்தே சென்று சொல்' என்று திருப்பி அனுப்பினாலும் அனுப்பலாம். அதனால்தான் 'உண்டோ பிறப்பு' என்று சொல்லி வைத்தார்கள்.

எனவே திருக்கூத்து பெற்றார் பெற்ற பேறு பிறப்பில்லாமலே அமைவதாம். எண்ணங்கள் எழுந்து தான் கண்ட காட்சியை மற்றவர்களுக்கும் சொல்ல வேண்டும் என்ற எண்ணம் வருகின்றபோது அவர்களும் பிறப்பார்கள். அதற்காகப் பிறவி வரும். 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே என்பது அப்பர் அடிகளாரின் ஆசைதானே.

கடவுளைப் பார்த்தால் பிறப்பில்லை என்பதற்கு ஒரு விளக்கம் சொல்லிவிட்டால் எளிதாகப் புரிந்துவிடும்.

நூலசிரியர்கள் சிலவற்றைச் சொல்லுவார்கள், சிலவற்றை உய்த்து உணரும்படி விட்டுவிடுவார்கள். ஒவ்வொன்றையும் சொல்லத் தொடங்கினால் பல நூல்கள் எழுதியாக வேண்டும். நூல் சிறிதாக இருக்காது. மிகுந்து போய்க் கொண்டேயிருக்கும். எனவே உய்த்துணரும்படி சுருக்கமாகச் சொல்லுவார்கள்.

'உண்டோ பிறப்பு' என்று கேட்பதால் பிறப்பு இல்லையென்றாகி விடுகின்றது. கருணையோடு நடம் செய்து கொண்டிக்கின்ற பெருமானையும், அவன் ஆட்டத்தைக் கண்டு கொண்டிருக்கின்ற பெருமாட்டியையும் காணுகின்றபோது பெற்ற சீவன்களுக்குப் பிறப்பு இல்லை. அப்படியானால் இப்போது பிறந்து கொண்டேயிருப்பவர்கள் எல்லாம் யார்?

பிறப்பு என்பது ஆசையினால் வருவது; இறைவன் ஆணையால் பிறப்பது என இருவகைப்படும். சாதாரணப் பிறப்பு ஆசையால் வருவது. இதனை,

அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து

என்பார் திருவள்ளுவர்.

இங்கே எந்த உயிரையும் பேதப் படுத்தவில்லை. எறும்பு முதல் யானை ஈறாக அனைத்து உயிர்களுக்கும் ஆசை உண்டு.

ஆசையில்லா விட்டால் எந்த உயிரும் வாழ முடியாது. அதனதன் அளவுக்கு ஏற்ப ஆசை இருக்குமே தவிர ஆசையே இல்லை என்று சொல்ல முடியாது. அப்படியானால் மனிதனுக்கு ஆசை இருக்கின்றதா? ஆசையல்லாத மனிதன் இல்லவேயில்லை. அப்படியானால் மனிதனுக்கு ஆசை இருக்கின்றதுபோல ஞானிகளுக்கும் ஆசையிருக்கின்றதா? ஞானிகளுக்கு ஆசை

இருக்கின்றது என்று சொல்லக் கூடாது. அன்பு இருக்கும். ஏதோ ஒருவகைக் கிளர்ச்சி இருக்கும். பிறருக்காக எதையும் செய்யவேண்டும் என்ற எண்ணம் இருக்கும். ஆனால் தன்னலமான ஆசை மட்டும் இருக்காது. ஆனால் எந்த வகையான எண்ணம் – தன்னலமோ, பிறர் நலமோ – இருக்குமானாலும் பிறப்பு நிச்சயம் உண்டு. நின்மலமாக இருந்தால் பிறப்பில்லை.

'உண்டோ பிறப்பு' என்றால் பிறப்பில்லை என்று சொல்லியிருக்கிறோம். பெருமானுடைய ஆட்டத்தைப் பெருமாட்டி பார்த்துக் கொண்டிருக்கின்றாள்; கருணை உருக்கொண்டு பெருமான் ஆடிக்கொண்டிருக்கின்றான். இந்தக் காட்சி எப்படித் தன்னை மகிழ்வித்தது என்று சொல்ல நினைக்கின்றார் இந்நூலாசிரியர். தான் பெற்ற மகிழ்ச்சியைப் பிறரிடம் சொல்ல வேண்டும் என்று நினைப்பது அனைவரது விருப்பமாக இருக்கும்.

தாயுமான சுவாமிகள், மக்கள் பசியும், பட்டினியுமாக இருப்பதைக் காண்கின்றார். ஏன் இப்படி இருக்கின்றார்கள் என்று தெரியவில்லை. அந்த ஊரில் ஒரு பெரிய மதில் சுவர் இருக்கின்றது. அதற்கப்பால் என்ன இருக்கிறது என்று கேட்கிறார். ஒருவருக்கும் தெரியவில்லை. மிகவும் முயன்று மேலே ஏறிப் பார்க்கின்றார். அப்பக்கத்தில், மா, பலா , வாழை மற்றும் பலவகையான பழங்கள் நிறைந்த தோட்டமேயிருக்கின்றது. அவற்றை உண்டால் மக்கள் பசியாறலாம். பல நாள்கள் உண்டாலும் தோட்டத்தில் பழம் குறையாது என்ற அளவுக்கு நிறைந்திருக்கின்றது. இதைக் கண்டவுடன் தோட்டத்தின் பக்கம் இறங்கித் தன் பசியைத் தீர்த்துக் கொள்ளும் விருப்பம் எழவில்லை. மக்களின் பசியைப் போக்க விரும்புகின்றார். அதனால் அங்கே உட்கார்ந்து கொண்டு.

பொங்கித் ததும்பிப் பூரணமாய்க் கிடக்குதய்யோ..
சேரவாரும் செகத்தீரே

என்று பசியால் வாடியிருக்கும் மக்களைப் பார்த்துக் கூவி அழைக்கின்றார். இப்போது இவருக்கு வந்த

ஆசையைப் பார்த்தீர்களா? இதை என்னவென்று அழைப்பது? அவர் பெரிய ஞானிதான். தான் நடந்து வந்த பாதையிலே ஏங்கிக் கிடக்கின்ற மக்களைப் பார்க்கின்றார். இந்தப் பக்கத்திலே பெரும் வளம் பூத்துக் காய்த்துக் கனிந்து கிடப்பதைப் பார்க்கின்றார். இதைக் கண்டவுடன் தான் மட்டும் அந்த வளத்தை அனுபவிக்க நினைக்கவில்லை. அனைவரையும் அழைக்கின்றார். 'காக்கை கரைந்துண்ணக் கண்டதில்லையா' என்பது போலக் கூவி அழைக்கின்றார். எனவே ஞானிகளுக்கும் ஆசை உண்டு. ஆனால் அதை ஆசை என்று சொல்லக் கூடாது. எண்ணக் கிளர்ச்சி என்றுதான் சொல்ல வேண்டும். ஆசையாக இருந்தாலும் எண்ணக் கிளர்ச்சியாக இருந்தாலும் மீண்டும் பிறந்துதான் ஆக வேண்டும். தாங்கள் கண்டதை வந்து சொல்ல வேண்டாமா? அதற்காகப் பிறப்பைக் கொடுத்துவிடுகின்றான் இறைவன்.

ஒருமைக் கல்வி என்பது இறைவன் திருவடியைச் சார்ந்து நின்று கற்பது. அது எல்லாப் பிறவயிலும் வரும். 'ஒருமைக்கண் தான் கற்ற கல்வி'என்பது திருவள்ளுவரின் வாக்கு. அது எல்லாப் பிறப்பிலும் உடன் வரும்.

முதல் வகுப்பில் படித்தது இரண்டாவது வகுப்பில் படித்துக்கொண்டு இருக்கும்போது மறந்துவிடுமா? இப்படியே மேல் வகுப்புக்களில் படித்துக் கொண்டிருக்கும்போது முன்பு படித்த யாவும் மறந்து விடுமா? மறக்கவே மறக்காது. எப்போதும் உடன் வரும். அப்படியே முற்பிறப்பில் படித்த யாவும் பின்வரும் பிறவிகள்தோறும் தொடர்ந்து வரும். இப்படிப் பிறவிகள் தோறும் படித்துத் தேறியவர்கள் தங்கள் படிப்பினைகளை அனுபவங்களைப் பிறர்க்கும் சொல்லியாக வேண்டும். அந்த ஆசை யாரையும் விடாது. அதனாலே திருவடியிலே சென்று சார்ந்துவிட்டாலும், திருவடி இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தாலும், தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்றே எண்ணுவர். திருவடிக்குப் போய்விட்டால் மட்டும் மீண்டும் பிறப்பு வாராது என்று எண்ணிக்கொள்ளக் கூடாது. அது, வெளிநாடு சென்ற ஒருவர் தாய்நாட்டுக்குத் திரும்பி வந்த பின்னர் தான் கண்ட காட்சிகள் அனுபவங்கள் ஆகியவற்றை அனைவருக்கும்

சொல்ல வேண்டுமென்று எண்ணுவார். அப்படிச் சொன்ன பின்னர்தான் அவர்களுக்கும் நிறைவு ஏற்படும். அப்படிச் சொல்லுவதை அவருக்கு நெருங்கியவர்கள்தான் கேட்டுக் கொள்ள முடியும். அதையே பயணக் கட்டுரையாக எழுதினால் பலரும் படித்துப் பயன்பெற முடியும். அது போலவே பயணக் கட்டுரைகள் போன்றவைதாம் திருமுறைகள், பிரபந்தங்கள்.

அவர்கள் எழுதி வைத்த இந்நூல்கள் எல்லாம் நமக்குக் கிடைக்கவில்லையென்று சொன்னால் நாம் இப்போது தெய்வத்தைப் பற்றியே சிந்திக்க மாட்டோம். தெய்வத்தின் பேரருளைப் பற்றி நினைக்கவே மாட்டோம். அவன் தருகின்ற பெரிய நிலையைப் பற்றி எண்ணவே மாட்டோம். ஆகவே ஞானிகள் பிறப்பற்ற நிலையை விரும்புவதேயில்லை ஏனென்றால் பிறப்பு இல்லாவிட்டால் அதில் என்ன சிறப்பு இருக்கின்றது? நாம் பெற்ற பெரிய அனுபவங்களைப் பிறருக்குக் கொடுப்பதில்தான் பேரின்பம் இருக்கின்றது. ஒரு வேளை நான்அதைக் கொடுக்க முடியாத காலம் வருகின்றபோது இறந்து விடவே எண்ணுவேன்.

ஆபுரத்திரன் என்பவன் இருந்தான். அவனிடத்தில் ஒரு ஓடு இருந்தது. அந்த ஓட்டிலிருந்து எடுக்க எடுக்கக் குறையாமல் உணவு கிடைத்துக் கொண்டே இருக்கும். அதைக் கொண்டு பசித்து வந்தார் அனைவருக்கும் பசி தீர்த்து வந்தான். இப்படி இவன் பசியைத் தீர்த்து வந்த காரணத்தினாலே மக்கள் மழையை மறந்தார்கள்; தெய்வத்தையும் மறந்தார்கள் மனிதனிடத்தில் பசி என்று ஒன்று இல்லையென்றால் பெற்றோரை நினைக்க மாட்டான், தெய்வத்தை நினைக்க மாட்டான்; வேறெதையும், யாரையும் நினைக்கவே மாட்டான். எனவேதான் மனிதனிடத்தே எரிக்கின்ற – இன்றியமையாத ஒன்றாக – பசியை வைத்து விட்டான் இறைவன். பசித்தீயில் அகப்பட்ட ஒருவன் துடித்துக் கொண்டு இருப்பான். அதிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளும்பொருட்டுப் பிறர் உதவியையும் நாடுவான்.

ஆபுத்திரனே அனைவரது பசியையும் தீர்த்துவிட்டதனால்

இந்திரன், மழைக் கடவுளை அழைத்து ஆபுத்திரனால் நம்முடைய பணிகள் எல்லாம் பாதிக்கப்பட்டுவிட்டதே இதற்கு என்ன செய்யலாம்? என்று ஆலோசனை கேட்டான். வருணன், ஆபுத்திரனை இந்திர உலகத்திற்கு அழைத்து வந்து போக போக்கியங்களைக் கொடுத்தால் அவன் இங்கேயே தங்கிவிடுவான், நம்முடைய பணிகளும் தொடர்ந்து இடர்ப்பாடில்லாமல் நடைபெறும் என்று ஆலோசனை கூறினான். வருணன் வந்து ஆபுத்திரனை இந்திர உலகிற்கு அழைக்கின்றான். அங்கே வந்தால் எனக்கு என்ன வேலை இருக்கும் என்று கேட்கின்றான் ஆபுத்திரன். அங்கே, அழகுடைய மங்கையர்கள் ஆடுவார்கள், அமுத பானங்கள் நிரம்பிக் கிடைக்கும். உண்டு மகிழ்ந்து கொண்டிருக்கலாம், அதனால் அங்கே வந்துவிடு என்கின்றான். அப்படியென்றால் நான் அங்கே வரமாட்டேன் என்று மறுத்துவிடுகின்றான் ஆபுத்திரன். ஈத்துவக்கும் இன்பம் அங்கே இல்லையல்லவா? இதைக் கேட்ட வருணன் கோபங் கொண்டு எல்லா மேகங்களையும் அழைத்து அனைத்துப் பகுதிகளிலும் மழையைப் பொழியச் செய்தான். நாடு வளம் பெற்றது; பயிர்கள் செழித்துவளர்ந்தன. மக்கள் பசி தீர்ந்தது. அதனால் ஆபுத்திரனிடத்தில் வந்து யாரும் உணவு கேட்கவில்லை. கொடுக்கும் சக்தியிருந்த அற ஓடு இருந்தும், கொடுக்கும் மனமிருக்கும் தான் இருந்தும் ஏற்போர் இல்லையே என ஏங்குகின்றான்.

அப்போது சாவகத் தீவிலே பசியும், பட்டினியும் நிரம்பிக் கிடக்கின்றது. அங்கே போனால் உனக்கு வேலை நிரம்பக் கிடைக்கும் என்று செய்தி வந்தது. அங்கே புறப்படுகின்றான். கப்பலில் போய்க் கொண்டிருக்கின்றான். இடையில் மணிபல்லவம் என்ற தீவு. அங்கே அனைவரும் இறங்கிச் சுற்றிப் பார்க்கப் போகின்றார்கள். இவனும் சுற்றிப் பார்க்கப் போகின்றான். திரும்ப வழி தெரியாமல் தடுமாறிக் கொண்டிருக்கும்போது, அனைவரும் திரும்பி வந்து கப்பலில் ஏறிப் போய்விட்டார்கள். அந்தத் தீவில் மக்களே இல்லை. அங்கு இருந்து எப்படி போவது என்றும் தெரியவில்லை. தன்னிடத்தே அற ஓடு இருந்தும், யாருக்கும் அதனால் பயன் இல்லையே என்று மனம்

வருந்தி, தான் இனி உயிர் வாழ்வதில் பயன் இல்லையென்று எண்ணி, மணிபல்லவ தெய்வம் என்ற தெய்வத்திடம் ஆணையிட்டுவிட்டு கோமுகிப் பொய்கையில் அற ஓட்டைப் போட்டுவிட்டு இறக்கிறான்

இறப்பதற்கு முன்னர், 'யாரேனும் அறம் முதலாகக் கொண்டு அருள் சுரந்த உள்ளம் உடையவர்களாக இருப்பின், இந்த அற ஓடு அவர்கள் கையகம் புகுந்து பிறர் பசி தீர்க்கக் கடவது' என்று சொல்லிவிட்டு உயிரை விட்டுவிடுகின்றான். பிறருக்குக் கொடுக்க முடியாத காலம் வருகின்றபோது இறந்துவிடுவது நல்லது என்பதை இதன் மூலம் அறியலாம்.

சாதலின் இன்னாதது இல்லை இனிதது உம்
ஈதல் இயையாக் கடை.

என்பார் திருவள்ளுவர். இந்தப் பண்பு நம்மிடத்தும் வரவேண்டும். இப்படிக் கொடுக்க வேண்டுமென்று எண்ணம் வந்துவிட்டால் நம்மிடம் உள்ளது அனைத்தையும் கொடுத்தவிடலாமா என்றால் 'ஆற்றின் அளவறிந்து ஈக' என்ற முதுமொழி நம்மை எச்சரிக்கின்றது. எதிலும் ஓர் அளவு வைத்துக் கொண்டு அதன்படி நடக்க வேண்டும் என்று நம் பெரியவர்கள் வலியுறுத்தியிருக்கின்றார்கள்.

இந்தக் கதையைச் சொன்னதன் நோக்கம் உங்களுக்குப் புரிந்திருக்கும் என்று எண்ணுகின்றேன். பிறப்பு என்பது ஞானிகளுக்கும் உண்டு. அந்த ஞானிகள் தாம் பெற்ற ஞான போதனைகளைப் பிறர்க்குச் சொல்ல முடியவில்லையெனில் மிகவும் வருத்தப்படுவார்கள். இறைவன் திருவடியிலே இன்பமிருந்தாலும், அந்த இன்பங்களையும், ஞான அனுபவங்களையும், தான் பெற்றதுபோல மக்களும் பெற வேண்டுமென்று எண்ணி, அவர்களிடம் வந்து சொல்லி, அவர்களை வழிநடத்திச் செல்லவே விரும்புவார்கள். அப்படி அவர்கள் விரும்புகின்றபோது அவர்களுக்குப் பிறப்பு வந்துவிடும். அவர்களுக்கு ஆசையேயில்லையென்று வைத்துக் கொண்டால், தான் பெற்ற அவ்வின்பத்தை மற்றவர்களுக்கு

ஏன் சொல்ல வேண்டும்மென்று அந்த இன்பத்தையே அனுபவித்துக் கொண்டு இருந்துவிட்டால் – இறைவன் சும்மாயிருக்க மாட்டான். 'நீ பெற்ற இவ்வின்பத்தை மற்றவர்களிடத்தே போய்ச் சொல்ல வேண்டாவா' என்று அவர்களிடத்தே தவறு நிகழுமாறு எண்ணத்தைத் தூண்டி மீண்டும் பிறப்புக்கு அவர்களை அனுப்பிவிடுவான்.

திருஞான சம்பந்தர், சுந்தர மூர்த்தி போன்றவர் இந்த உலகுக்கு வர விரும்பாதவர்கள். இறைவன் திருவடியிலேயே தோய்ந்து இருந்தவர். அவர்களை இவ்வுலகுக்கு எப்படி அனுப்பினான் என்பதை, 'மையல் செய்து இம்மண்ணின்மேல் பிறக்குமாறு காட்டினாய்' என்று அவர் வாயாலேயே சொல்ல வைத்தான். அப்படிப் பட்டவர்களையும், மாயையுள்படுத்தி இம்மண்மிசை அனுப்பிவிடுவான். அந்த நேரத்தில் அவர்களால்தான் அக்காரியம் நிறைவேற வேண்டுமென்னும் போது, இப்படிச் செய்வதைத்தவிர வேறு வழியில்லை எனவே, ஒரு காரியம் நிகழ வேண்டுமானால், அவர்களை – அவர்கள் எவ்வளவு பெரிய ஞானியாக இருந்தாலும் இம்மண்ணுலகுக்கு அனுப்பிடுவான். திருந்தாப் பிள்ளைகள் இருந்தால் அவர்கள் கையில் ஒரு பாத்திரத்தை இவர்களே கொடுத்து 'இவன்தான் இதைத் திருடினான்' என்று ஒரு புகாரும் கொடுத்துச் சீர்திருத்தப் பள்ளியில் கொண்டு போய் இவர்களே சேர்த்துவிடுவார்கள். அப்படித்தான் இறைவனும் செய்கின்றான். நம்மைச்சீர்திருத்த, தக்க ஞானிகளை அவனே ஏதோ ஒரு வகையில் தவறுகள் புரியவைத்து அனுப்பிவிடுகின்றான்.

எனவே ஞானிகளுக்குப் பிறப்பில்லை என்று சொல்வதைவிட, மாயப் பிறப்பில்லை; இன்னல் பிறப்பில்லை; அல்லல் பிறப்பில்லை என்று தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். ''மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடி போற்றி'' என்னும் ''அல்லல் பிறவி ஒறுப்பானே என்று'' என்ற மணிவாசகரின் மணிமொழிகளை இங்கே உன்னுதல் வேண்டும். ஞானிகள் பிறவி நேயப் பிறவி. அவர்களால்தான் நேயத்தைப் பற்றிப் பேச முடியும்.

'உண்டோ பிறப்பு' என்று 'ஓ' காரம் போட்டுச் சொன்னதால் வந்ததே இந்த விளக்கங்கள் யாவும். உண்டோ என்ற சொல்லுக்கும், இல்லையென்ற சொல்லுக்கும் ஒரே வாய்ப்பாடுதான். உண்டோ பிறப்பு என்றால் பிறப்பு இல்லை என்றுதான் பொருள். அதற்குப் பதில் இல்லை பிறப்பு என்று சொல்லியிருக்கலாம். தவறில்லை. 'உண்டோ' என்றது எதிர்மறையினாலே உண்டு என்பதையும், ஒருக்கால் பிறப்பு வந்தாலும் வரும் என்பதையும் இதன் வாயிலாக விளக்கினார்.

'ஈத்துவக்கும் இன்பம்' என்று சொல்லு கின்றார்களே, அந்த இன்பத்தை விட நாமே மகிழ்கின்ற மகிழ்ச்சி பெரிதாக இருக்காதா என்றால் இருக்காது என்பதை ஓர் உதாரணத்தின் மூலம் விளக்க விரும்புகின்றேன்.

வீட்டில் தாய்மார்கள் அடுப்படியில் நின்று பலவேறு சிரமங்கள் பட்டுச் சுவையாகச் சமைக்கின்றார்கள். சமைத்துவிட்ட பிறகு சமையல் மிகவும் சுவையாக இருக்கின்றதென்றும் மகிழ்வார்கள். ஆனால் இந்த மகிழ்ச்சியைவிட சமைத்ததைப் பிறருக்குப் போட்டு மகிழ்வதிலும், அதைவிட சமைத்ததைச் சாப்பிட்டவர்கள் மிகவும் சுவையாக இருக்கின்றதென்று மிகவும் விரும்பி அந்த உணவைச் சாப்பிடுவதைப் பார்த்தும், பாராட்டு வதையும் தான் மிகவும் மகிழ்ச்சியாக ஏற்றுக் கொள்வார்கள்.

குழந்தையை வயிற்றில் சுமப்பது கடினந்தான்; துன்பந்தான். அதை ஈன்று எடுப்பது அதனினும் துன்பந்தான். ஆனால் குழந்தை பிறந்தபோதும் மகிழ்ச்சிதான். ஆனால் அக்குழந்தையைப் பிறர் சான்றோன் எனக் கேட்ட போது வருகின்றதே மகிழ்ச்சி, அதற்கு ஈடு இணையில்லை.

> ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
> சான்றோன் எனக்கேட்ட தாய்.

என்ற திருக்குறளின் கருத்துக்கிணங்க, ஞானிகளுக்குத் தாம் பெற்ற திருவடி இன்பம் பெரிதாக இருப்பினும், அதனை மீண்டும் இந்த மண்ணுலகத்திற்கு வந்து

மக்களுக்கு உபதேசிக்கின்ற போது அந்த இன்பம் அதைவிடப் பெரிதாக இருக்கும்.

நான் படித்ததும், உணர்ந்ததும் எனக்கு மகிழ்ச்சிதான். இருப்பினும் நான் படித்ததையும், உணர்ந்ததையும் உங்களுக்குச் சொல்லும்போதும், அதைக் கேட்டு நீங்கள் மகிழ்கின்ற போதும் என் மகிழ்ச்சி அளவுகடந்ததாக இருக்கின்றது. எனவே ஈத்துவக்கும் இன்பம் என்று ஒரு பண்பாட்டைச் சுட்டிக் காட்டுவது ஞானிகளின் பிறப்பு.

ஞானிகளுக்கும் ஆசை உண்டு; பிறப்பு உண்டு என்பதைப் பார்த்தோம். ஆனால் அவர்களுக்கு நமக்கிருப்பது போன்ற ஆசையோ, பிறப்போ வாரா. பிறர்நலம் கருதியே இவையாவும் நிகழும் என்பதை உணர்த்தவே இதைச்சொன்னோம்.

இக்கருத்தைச் சொல்வதைக் கேட்கின்ற சித்தாந்தம் படித்தவர்களுக்கும், இறை பத்தி அதிகம் உடையார்க்கும், இறைவனிடம் சென்றவர்கள் மீண்டும் பிறவிக்கு வருவார்கள் என்று சொல்லலாமா என்ற சில சில் ஐயப்பாடுகள் எழக்கூடும். கோபங்கூட வரும். அதற்கு என்ன காரணம்? தெளிவின்மைதான் காரணம். பற்றுதான் காரணம்.

உலகத்திலேயே வளர்ச்சியில்லாத ஒரு சமயம் உண்டென்றால் அது சைவ சமயந்தான். அதற்கு என்ன காரணம் என்று கேட்டால், சிவஞான முனிவர் ஒரு கருத்தைச் சொல்லிவிட்டால் அதற்குமேல் ஒன்றும் சொல்லக்கூடாது என்பார்கள்.

வைணவம் பரவாயில்லை. வைணவ பிரபந்தங்களைப் பார்த்தால் அவற்றைக் கண்ணில் ஒத்திக் கொள்ளலாம் போலிருக்கின்றது. அந்த அளவுக்கு அவற்றிற்கு வியாக்கியானங்கள் எழுதி எழுதி வைணவத்திற்குப் பெருமை சேர்த்து இருக்கின்றார்கள். இங்கே சைவ சமயத்தில் வியாக்கியானமே எழுதக்கூடாது என்று தடுத்துத் தடுத்து எதுவும் யாருக்கும் தெரியாமலே இருக்குமாறு செய்து விட்டார்கள். 'இண்டியன் பிலாஸஃபி' எழுதிய இராதாகிருஷ்ணன் கூட சைவ சமயத்தைப் பற்றிக்

குறிப்பிடுகின்றபோது அரைப்பக்கத்தில் விளக்கம் எழுதி முடித்துவிட்டார். மற்றதற்கெல்லாம் பக்கம் பக்கமாக விளக்கம் எழுதி இருக்கின்றார். காரணம் அவருக்குச் சைவ சமயத்தைப் பற்றித் தெரியவில்லை. எனவே இப்படி வளர்ச்சியில்லாமல் சைவ சமயம் போனதற்குக் காரணம் சைவர்களே.

இப்படி வேண்டாம், வேண்டாம் என்று குறுகிக் குறுகிச் சொல்லிவிட்டதால் சைவம் வளர வாய்ப்பில்லாமல் போய்விட்டது. இதை நீங்கள் எப்படிச் சொல்லலாம் என்று கேட்பீர்கள். மணிவாசகர் கொள்கைக்கும், உணர்ச்சிகளுக்கும் இவர்கள் போக்கு மாறாக இருக்கின்ற தென்பதால்தான் சொல்லுகின்றேன்.

முன்னைப்பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே''

என்கிறார் திருவெம்பாவையில். ''பேர்த்துமப் பெற்றியனே'' என்றால் பின்னால் வரும் வளர்ச்சிகளுக்கெல்லாம் அவன் காரணமாக இருக்கின்றான். அதை மறந்து சுருக்கிக் கொண்டுவிட்டார்கள். அதனால்தான் சைவ சமயத்தில் வளர்ச்சியில்லை.

இன்னொரு காரணமும் சொல்வார்கள். ''சைவ சித்தாந்தம் முடிந்த முடிவைச் சொல்கின்றது; இனிமேல் சைவ சித்தாந்தம் வளர வேண்டிய அவசியம் இல்லை'' என்று சொல்வார்கள். இப்படிச் சொல்லிக் கொண்டே அதைக் கவனிப்பாரற்று விட்டுவிட்டார்கள். சைவ சித்தாந்தத்தின் உட்கிடக்கைகள் என்ன? அது மனித சமுதாயத்திற்கு எப்படிப் பயன்பட வந்தது? எப்படிப் பயன்படுகின்றது? வாழ்க்கைக்குப் பயன்படுகின்றது என்றெல்லாம் சிந்திக்க மாட்டேன் என்கின்றார்கள்.

ஒரு பையில் நிறைய காகிதம், குறிப்புக்கள், பொருட்கள் எல்லாம் சேர்த்து வைத்திருக்கின்றோம். ஒரு நாளைக்கு அவற்றையெல்லாம் ஆராய்ந்து பார்க்கின்றோம். அப்போது தேவை எனப்பட்டதை எடுத்துக்

கொள்கின்றோம். தேவையில்லாததை எடுத்து வெளியே போட்டுவிடுகின்றோம். எல்லாவற்றையும் எடுத்து வைத்துக்கொள்வதுமில்லை; எல்லாவற்றையும் எடுத்துப் போட்டுவிடுவதும் இல்லை. அதுபோன்று சைவ சித்தாந்தத்தில் என்னென்ன இருக்கின்றது; எதெது இப்போது மக்களுக்குத் தேவை, அவற்றை எப்படியெல்லாம் அவர்கள் பயன்படும் வகையில் சொல்லலாம் என்று ஆராய்ந்து மக்களுக்குத் தெளிவுபடுத்த வேண்டும். தேவையில்லாததை ஒதுக்கிவிட வேண்டும். இந்த எண்ணம் வந்தால்தான் சைவத்திற்கு வளர்ச்சி வரும்.

**அஞ்செழுத்தின் தன்மை:**

39. *நாதாந்த நாடகத்தை நன்றா அருள்செய்தீர்*
*ஓதீர் எழுத்துஅஞ்சும் உள்ளபடி – தீது அறவே*
*அஞ்சுஎழுத்து ஈதுஆகில் அழியும்எழுத்துஆய்விடுமோ*
*தஞ்ச அருட்குருவே சாற்று.*

நாத வெளியிலே இறைவன் ஆடிய மூவகை நடனத்தையும் அதைக் கண்டாருடைய நிலையையும், அவர்களது பிறப்பற்ற நிலையையும், பிறப்புண்டேல் அதன் காரணத்தையும் விளக்கினீர்கள். நன்றாக எனக்கு எடுத்துச் சொன்னீர்கள். மகிழ்ச்சி. இப்போது ஐந்தெழுத்தை ஓதுவது எப்படி என்று எனக்கு உரைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். என்றார் மாணவர்.

'நமசிவய' என்று நகரத்தை முன் வைத்துச் சொல்லுவதா? 'சிவயநம' என்று சிகரத்தை முன் வைத்துச் சொல்லுவதா? 'ய' கரத்தை முன் வைத்துச் சொல்வதா? அன்றி 'ம' கரத்தை முன் வைத்துச் சொல்வதா? எப்படிச் சொல்வது என்று எனக்கு உள்ளபடி சொல்லுங்கள். எப்படியாவது சொல்லுங்கள் என்று கேட்டுக் கொள்ளவில்லை. ஒரு நியாய உணர்ச்சியோடு 'உள்ளபடி ஓதுங்கள்' என்று கேட்டுக் கொள்கின்றார்.

நாதாந்த் நாடகத்தை, அதன் மூலத்தை நான் நன்றாக உணர்ந்து கொண்டேன். பக்குவப் பட்டுள்ளேன். எனக்கு ஐந்தெழுத்தை ஓதி அருள் செய்ய மாட்டீர்களா? என்று

கேட்கின்றார். அதை உள்ளபடியே எனக்குச் சொல்ல மாட்டீர்களா? என்று ஒரு பொருள். நீங்கள் முன்னே சொன்னதை நான் பக்குவமாக அறிந்து கொண்டு இருக்கின்றபடியால் எனக்கு ஐந்தெழுத்தைச் சொல்லலாமே என்றும் ஒரு பொருள்.

உணர்ந்து கொண்ட எனக்குச் சொல்ல மாட்டீர்களா என்ற ஏக்கம்; உணர்ந்து கொண்ட எனக்குச் சொல்ல மாட்டீர்களா என்று ஒரு கட்டளை; இந்த இரண்டையும் உணர்த்த 'ஓதீர்' என்ற ஒரே வார்த்தையில் மூலம் மாணாக்கர் தன் தகுதியை ஆசார்யனுக்கு எடுத்துக் காட்டுகின்றார். அதன் மூலம் தன்னிடம் இரக்கம் கொள்ளும்படியும், தன் பணிவையும் காட்டுகின்றார்.

உரைப்பார்க்கும், கேட்பார்க்கும், உள்ளார்க்கும் தீங்கு வாராத வகையில் எனக்கு இதைப்பற்றி உரையுங்கள் என்று கேட்டுக் கொள்கின்றார்.

ஓதீர் என்றால் ஓதுக என்று பொருள். இச்சொல்லை ஓதுக என்ற பொருளிலேயே இந்த இடத்தில் கையாண்டிருக்கலாம். அதில் ஒன்றும் பிழை வந்துவிடாது. 'ஓது எழுத்தஞ்சும் உள்ளபடி' என்றும் சொல்லலாம். 'ஓத எழுத்தஞ்சும் உள்ளபடி' என்றும் சொல்லலாம். எப்படி வேண்டுமானாலும் சொல்லிச் சரியாக்கலாம். ஆனால் ஓதிர் என்று இங்கே சொல்வதன் பொருள் என்ன? ஓதீர் – ஓதுக, ஓதுவீராக, ஓத மாட்டீர்களா?

**ஐந்தெழுத்தை ஓதும் முறைமை:**

உபதேசம் என்பது வேறு. பாடம் என்பது வேறு. உபதேசம் என்பது ஆசார்யன் தன் மாணவன் தகுதி அறிந்து சொல்லுதல். அது இன்னதுதான் சொல்ல வேண்டுமென்ற கணக்கில்லை. எதை வேண்டுமானாலும் சொல்லலாம். ஏதேனுமொரு சொல்லைச் சொல்லி அதை உபதேசமாக்கிவிடலாம். ஐந்தெழுத்தைச் சொல்ல வேண்டும், ஆறெழுத்தைச் சொல்ல வேண்டும்; எட்டெழுத்தைச் சொல்ல வேண்டும் என்றெல்லாம்

கட்டாயம் கிடையாது. இந்த மந்திரத்தைத்தான் சொல்ல வேண்டுமென்று யாராவது சொன்னால் அது பிழையாகும். சில நேரங்களில் யாருடைய பெயரை யேனும் சொன்னால்கூட அது மந்திரமாகிவிடும். அப்பூதியடிகளுக்குத் திருநாவுக்கரசு நாயனாரின் பெயரே மந்திரமாக அமைந்துவிட்டது. அது ஐந்தெழுத்தில்லையே, அல்லது மற்ற மற்ற மந்திரங்களில்லையே; அவர் பெயரைச் சொல்லியே பெரும் பேறு பெற்றார். மந்திரம் என்பது ஒரு சீவனை ஆட்கொள்ளுகின்ற சொல். அந்தச் சொல்லிலே எந்த அளவு நம்பிக்கை இருக்கிறதோ, அறிவுடையதாக இருக்கின்றதோ அந்த அளவுக்கு அது ஆட்கொள்ளும்.

°°° °°° °°° °°° °°° °°°

நாதம் என்றால் ஓசை. நாதத்தை எப்படிச் சொல்ல வேண்டும்? குழல், மற்றும் எந்த இசைக் கருவியை எடுத்து இசைத்தாலும் அதில் வருவது நாதந்தான். இது கருவியிலிருந்தா பிறக்கின்றது? நான் பேசுவதும் நாதந்தான். ஆனால் நாதத்தின் வடிவம் எது? நாதத்தின் வடிவம் இறைவன்தான். அது அந்தரமாய் எழுகின்ற நாதம். இப்போது நான் 'ஓ' என்று சொல்லும்போது அது என் வாயில் இருந்து எழுவதைத் தெரிந்து கொள்வீர்கள். அதுவே ஏதும் உபகரணம் இல்லாமல் அந்தரமாய் எழுந்தால், அந்த நாதம் எங்கிருந்து வருகின்றதென்ற தெரிந்து கொள்வீர்கள்.

கருவிகளின் துணையின்றி அந்தரமாய் எழுகின்ற நாதத்திற்கு அதீத நாதம், என்றும், சுகாதீத வெளியில் எழுகின்ற நாதத்ததிற்குத் துரியாதீத நாதம் என்றும் பெயர். அதுவே மூல நாதம். மற்ற நாதங்கள் யாவும் ஒவ்வொன்றைப் பற்றிக் கொண்டுதான் எழும். சுருக்கமாகச் சொன்னால் கருவிகள் இல்லாமல் எழுவதற்குத்தான் நாதம் என்று பெயர். முடிவான நிலையில் உள்ள நாதம் என்றும், பரையென்றும் பெயர். பரத்திலிருந்து எழுகின்ற ஒலிக்கு பரையென்று பெயர்.

ஒளியிலிருந்துதான் ஒலிஎழும். ஒளியிலிருந்து

ஒளிதானே வரவேண்டும்; நீங்கள் ஒளியிலிருந்து ஒலி வருகின்றதென்று சொல்கின்றீர்களே, இது சரியா? என்றால், இருப்பது ஒளிதான். ஆனால் நம்மை ஈர்ப்பது ஒலி. ஒளி முன்னது. ஒலிபிந்தயதாகும். ஆனால் நம்மை முதலில் கவருவது, அல்லது ஈர்ப்பது ஒலிதான். பின்னால்தான் ஒளி கவரும்.

இயற்கையில் உள்ளது ஒளி. பின்னால் நம்மைக் கவர்வதும் ஒளிதான் ஆனால் நமக்கு முதலில் கிடைப்பது ஒலிதான். ஒளி இரண்டாவதாகத்தான் இருக்கும்.

விளங்கிக் கொள்வதற்காக ஒரு உதாரணத்தைச் சொல்கின்றேன். நான் முன்னால்போய்க் கொண்டிருக்கின்றேன் பின்னால் நீங்கள் வந்து கொண்டு இருக்கின்றீர்கள். நீங்கள் வருவது தெரியாமல் நான் போய்கொண்டு இருக்கின்றேன். நீங்கள் என்னை அழைக்க வேண்டும், உங்களைப் பார்க்க வேண்டும் என்று நினைக்கின்றீர்கள் அதற்கு என்ன செய்வீர்கள்? என் பெயரைச் சொல்லிக் கூப்பிடுவீர்கள். அப்போது உங்கள் குரல் (ஒலி) என்னைத் திரும்பிப் பார்க்க செய்யும் நீங்கள் ஒளியாக இருக்கின்றீர்கள்; நான் உங்களைத் திரும்பிப் பார்க்க வேண்டுமென்பதற்காக ஒலியை எழுப்புகின்றீர்கள் நீங்கள் ஒளியாக இருந்தாலும், ஒலியின்றி நான் உங்களைத் திரும்பிப் பார்க்க மாட்டேன். எனவே இங்கே ஒலி முந்தியது. ஒளி பிந்தியது.

தானே ஒளியைக் கண்டு கொள்ளத் தகுதியில்லாதது ஆன்மா. அதைத் தன் பக்கம் திரும்பிப் பார்க்கச் செய்வதற்கு எழுவதுதான் ஒலி. அது பறை. பறையன் என்ற சொல் அதிலிருந்து வந்ததுதான். அவன்தான் சமுதாயத்திற்குச் செய்திகளை அறிவிப்பவன். (ஒலியின் மூலமாக). அவன் பறையை அறிவித்துச் செய்திகளைச் சொல்வதால் பறையன், பறையறையன் என்ற சொற்கள் வந்தன. இது நல்ல தமிழ்ச் சொல். பொருள் பொதிந்த சொல். பின்னால் இதன் பொருள் திரிந்து, இன்றைக்கு அந்தப் பெயரையே சொல்லக் கூடாது என்ற நிலை வந்துவிட்டது சொற்களின் பொருள் எப்படியெல்லாம் திரிந்து ஒலிக்கின்றது. வழங்கி

வருகின்றது பார்த்தீர்களா?

## தீதறவே

இந்த ஐந்தெழுத்தை ஏன் சொல்ல வேண்டும்? தீதறவே என்றால்என்ன தீது? அன்றாடக் கவலைகள், மற்றும் துன்பங்கள் அறுவதற்காகச் சொல்ல வேண்டுமா? இவற்றை அறுப்பதற்காகச் சொல்லப்பட்டதல்ல ஐந்தெழுத்து. இந்த ஆன்மாவுக்குத் தீங்கு ஒன்று உள்ளது. அது பிறப்பும் இறப்பும்தான். 'வேண்டேன் பிறவி, வேண்டேன் மாடு, மனை, மனைவி, மக்கள்' என்று ஒவ்வொன்றாக வேண்டேன், வேண்டேன் என்று பெரியவர்கள் சொல்லுகின்றார்கள். மேலும், 'யான் ஏதும் பிறப்பஞ்சேன், இறப்பதனுக்கு என்கடவேன்' என்று சாவதற்கு மட்டும் பயப்படுகின்றார்கள். பிறப்புக்கும், இறப்புக்கும் அஞ்சாதவர்கள் யாருமே கிடையாது. அதிலும் குறிப்பாக ஞானிகள் அஞ்சுவர். அஞ்ஞானிகள் பிறப்பு, இறப்புக்கு அஞ்ச மாட்டார்கள். ஆனால் சாவு நெருங்கியதும் அச்சம் வந்துவிடும். அப்போது துடிப்பார்கள்.

## அஞ்செழுத்தில் ஈதாகில் அழியும் எழுத்தாய் விடுமோ

மாணவர் எழுப்பிய வினாக்களுக்கு ஆசிரியர் விடை சொல்லும் முகமாக ஐந்தெழுத்தை விளக்க எண்ணி, அதைக் கரும்பலகையில் நமசிவய என்று எழுதிக் காட்டினார். அப்பா, இதுதான் ஐந்தெழுத்து என்று சொல்ல மாணவர் இதுவா ஐந்தெழுத்து என்றார். பின்னர் எழுந்து போய் அந்த எழுத்துக்களை அழித்துவிட்டார். ஐந்தெழுத்து என்பது ஒளியானது, அழியாதது என்றெல்லாம் சொன்னீர்களே இப்போது அந்த எழுத்துக்கள் அழிந்துவிட்டனவே இந்த ஐயத்தைப் போக்கியருளுங்கள் என்று ஆசாரியரிடத்தில் மாணவன் தஞ்சம் புகுந்து வேண்டிக் கொண்டார். இந்த அழியும் எழுத்தால் ஆன்மாவில் இருக்கும் தீமைகள் எப்படி அழியும்?

சாற்று என்பதற்கு முன்னமே பொருள் சொல்லியிருக்கின்றேன். இருப்பினும் அதனைச் சற்று விரிவாகக் காணலாம். சாற்று என்பதற்கு விடை சொல், பதில் சொல் என்றே மாணவர் சொல்லியிருக்கலாம். இரண்டுக்கும் இலக்கண மரபுப்படி வேறுபாடு கிடையாது. சாற்று என்பதற்குப் பலகால் எடுத்துச் சொல்லுதல் என்று பொருள்.

ஒரு பொருளைப் பற்றி ஒருமுறை சொல்லி விளக்கினால் எல்லோராலும் விளங்கிக் கொள்ள முடியாது. அதனால்தான் ஒருமுறைக்குப் பலமுறை கேட்க வேண்டுமென்று சொன்னார்கள். இங்கே சொற்பொழிவைக் கேட்டுக் கொண்டு இருக்கின்றவர்கள் ஒரு கருத்தைச் சொல்லுகிறார்கள். 'நீங்கள் சொன்ன கருத்தையே திரும்பவும் சொல்கிறீர்கள், அப்படி நேராமல் பார்த்துக் கொள்ளுங்கள்' என்று கேட்டுக் கொள்கின்றார்கள். அப்படிச் சொல்லி விடலாம் ஆனால் எத்தனை பேரால் அதனைக் கேட்டு உணர்ந்து கொள்ள முடியும் என்று எனக்குத் தெரியவில்லை.

ஒவ்வொரு செய்தியையும் திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டும்: கேட்போரும் திரும்பத் திரும்பக் கேட்க வேண்டும். அதுபோதுதான் கேட்போர் உள்ளத்தில் சொல்லப்பட்ட கருத்துப் பதியும். மனதில் பதியும். இக்கருத்தை உள்ளடக்கியே மாணவர் ஆசார்யனை வேண்டிக் கொள்கின்றார்.

'தஞ்சம் அருட் குருவே சாற்று' என்று சொல்கின்ற அந்தச் செற்களிலேயே பலவிதமான குறிப்புக்களை உள்ளடக்கி மாணவர் சொல்லுகின்றார். மாணவன் ஆசார்யரிடம் பாடம் கேட்க வரும்போது, தான் என்ன கேட்க விரும்புகின்றான் என்பதைச் சொல்ல வேண்டும்; அவர் என்ன மாதிரியான விளக்கம் தர வேண்டும் என்பதையும் தெளிவுபடுத்த வேண்டும். இப்படி இருவரிடையேயும் இரு வகைப் பரிமாற்றங்கள் உண்டு.

இதற்குப் பரிசில் கடா நிலை அல்லது பரிசில் துறை என்று சங்க காலத்தில் சொல்லுவார்கள். சங்க

இலக்கியங்களில், ஒரு அரசனிடம் சென்று ஒரு புலவன் கவிதை புனைந்து பாடுவான். அப்படிப் பாடுகின்றபோது தான் இன்ன பொருளை நாடி வந்திருக்கின்றேன் என்ற கருத்தை உள்ளடக்கிப் பாடுகின்றபோது அதற்குப் பரிசில் கடா நிலை என்று பெயர். இன்ன பொருளை நீ கொடுக்க வேண்டுமென்று அந்தப் பொருளைச் சுட்டிக் காட்டிப் பாராட்டுவது; கேட்காமல் கேட்பது; இன்னின்ன பரிசுகளை புலவர்களுக்குக் கொடுத்திருக்கிறாய். அதைக் கேள்விப்பட்டு நான் இங்கே வந்திருக்கின்றனேன், எனவே உன்னிடத்தில் அத்தகைய பொருள் இருப்பின் அதனை எனக்குக் கொடு என்று கேட்காமல் கேட்பது பரிசில் கடாநிலை.

பரிசில் துறை என்றால் எனக்கு இன்னின்னது தேவை, அப்பொருளை நாடி நான் இங்கே வந்திருக்கிறேன் என்று உணர்த்துவது. இந்த இரண்டு நிலைகளையும் இந்தப் பாடலில் மாணவர் ஆசாரியரிடம் கேட்பது போல அமைத்து இருக்கிறார்.

°°° °°° °°° °°° °°° °°°

ஆசிரியர், ''இதை கரும்பலகையில் எழுதியது உனக்கு ஒவ்வொரு எழுத்தும் எப்படியிருக்கும்என்று எழுதிக் காட்டி, அதற்குரிய ஓசைகளை எழுப்பிக் காட்டினேன். எழுத்தை எழுதிக் காட்டாமல் ஓசையை மட்டும் எழுப்பினால் அதை உன்னால் புரிந்து கொள்ள முடியாது. வரிவடிவங்களைப் போட்டு அதற்குண்டான ஒலிகளை உடன் நிகழ்ச்சியாக எழுப்பினால்தான் உனக்கு விளங்கும் என்பதற்காகத்தான் அப்படிச் செய்தேனே தவிர, கரும்பலகையில் எழுதியதே ஐந்தெழுத்தன்று.

கோடுகள் ஏன் போட வேண்டும் ஒலி எழும்பும்போது அதன் வடிவம் தெரியவேண்டும். ஏன்? உருவமில்லாமல் நம்மால் எதையும் பற்றிக் கொள்ள முடியாது. அதனால்தான் உருவமில்லா இறைவனுக்கும் உருவத்தை அமைத்து காட்டினார்கள். உருவமில்லா இறைவனை

அப்படியே நம்மால் பற்றிக் கொள்ள முடியாது. உருவமற்ற இறைவனை உருவத்தை வைத்துத்தான் பற்ற வேண்டும்.

இறைவன் ஒருவன்தான். ஆனால் அவனுக்குப் பல உருவங்களை ஏன் வைத்தார்கள்? இதெல்லாம் தேவைதானா? மக்கள் அனைவரும் ஒரே நிலையில், ஒரே பக்குவத்தில் இல்லை. வெவ்வேறு பக்குவ நிலையில் இருக்கிறார்கள். எனவே அந்தந்த பக்குவ நிலைக்கு ஏற்ற வடிவத்தைக் கற்பித்து, அவர்கள் மனதில் பதியுமாறு செய்தார்கள். எந்த நிலையில் இருப்பவராயினும் ஏதேனும் ஓர் உருவத்தை பற்றியே ஆகவேண்டும். நான் எந்த உருவத்தையும் வணங்கப் போவதில்லை; உருவம் இல்லாமலே என்னால் வணங்கிக் கொள்ள வேண்டுமென்று சொல்வாரும் உண்டு. அவர்களும் ஏதோ ஒரு வகையில் ஏதோ ஒரு உருவத்தை முன்னிறுத்தியே வணங்கிக் கொண்டிருப்பார்கள். ஒரு உருவம் இல்லாமல் இறைவனை மனதினால் பற்றவே முடியாது. நிறுத்தவும் முடியாது.

எனவே, நான் பலகையில் எழுதிக் காட்டியது ஒரு குறியீடுதான் அதை முறைமைக்காகத்தான் எழுதினேன். எழுதிய எழுத்து அழித்தால் அழிந்துவிடும். இங்கே எழுதிய எழுத்துக்களைக் கண்ணால் பார்த்தபின். காதினால் அதன் ஒலியைக் கேட்டபின், எழுத்தை அழித்தாலும் அது உன் மனக்கண்ணின் முன்னால் எப்போதும் தெரிந்து கொண்டேயிருக்கும். அப்போது வெளிக்குறியீடின்றி நீயே ஓதலாம்.

எழுதிய எழுத்துக்களை அழித்துவிட்டதால் பொருள் ஒன்றும் குறைந்து விடாது. குறிதான் அழியுமே தவிர மொழியின் பொருள் குறையாது. இப்போது இந்தப் பாடலின் பொருளைச் சொல்லிவிட்டால் அது உங்கள் மனதில் பதிந்திருக்கும். அப்படிப் பதிந்த கருந்து ஒன்றானாலும் பின்னால் அது பல கருத்துக்களாக விரியும். எப்போதும் அழிந்து போகாது.

ஐந்தெழுத்தின் பொருள் என்னவென்று சொல்கின்றேன் கேள்: சி – சிவன், வ – அருள், ய – ஆவி, ந – திரோதம், ம – மாயை, நமசிவய என்பதைச் சிவயநம என்று சொல்லுங்கள்.

இவற்றை ஐந்தெழுத்து என்று சொல்வதா? அல்லது அஞ்செழுத்து என்று சொல்வதா? அஞ்சு எழுத்த என்றுதான் சொல்ல வேண்டும். ஏன்? ஐந்து என்பது எண்ணிக்கை. அஞ்சு என்றால், இயமன், பிணி இவை யாவும் அதைக் கண்டு அஞ்சும். மரணத்தையும் அஞ்சுமாறு செய்யக்கூடிய எழுத்து. 'நமன் தூதரும் அஞ்சுவர் என்பதால் நாதன் நாமம் நமச்சிவாயவே' என்பார் திருஞானசம்பந்தர். 'முன் அயன்தன் அஞ்செழுத்தெல்லாம் கேட்கில் அஞ்செழுத்தாம் எம்பொருமான் அஞ்செழுத்து' என்பார் வள்ளல் பெருமான் (நெஞ்சறிவுறுத்தல்.671)

∴ ∴ ∴ ∴ ∴ ∴

40. உற்ற குறிஅழியும் ஓதுங்கால் பாடைகளில்
சற்றும் பொருள்தான் சலியாது – மற்றது கேள்
ஈசன் அருள் ஆவி எழிலார் திரோதம்மலம்
ஆகில் எழுத்து அஞ்சின்அடை வாம்.

பாடை – பாஷை என்பதைத் தற்பவத்தால் சொல்லியிருக்கிறார்கள். மொழிகளைக் குறிக்கும் குறி அழியும். சொல்லுகின்றபோதே குறி அழிந்துவிடும். ஆனால் சொல்லப்பட்ட பொருளின் பண்பு அழியாது. பண்டம் அழியும். பண்பு அழியாது. இதை எப்படி விளங்கிக் கொள்வது?

அஞ்சு எழுத்துக்கு அடைவாக இருப்பது ஈசன், அருள், ஆவி, எழிலார் திரோதம் மலம் என்ற ஐந்தாம். இதைச் சொல்வதற்கு முன்னே, இன்னொரு விளக்கத்தைப் பார்க்கலாம்.

'அ' என்று சொன்னோம். அதை எழுதிக் காட்டினால் நான் எழுதுவதைப் போல் நீங்கள் எழுத மாட்டீர்கள்; நீங்கள் எழுதுவதுபோல் நான் எழுதமாட்டேன். அச்சில் வேண்டுமானால் ஒரேபோல் இருக்கலாம். இருந்தாலும், எழுத்து மாற்றம் இருந்தாலும், 'அகரம்' என்பது என்ன? அது எங்கேயிருக்கின்றது? சற்று விளக்கம் தேவை.

எழுதிக் காட்டினால் எழுத்து (குறி) அழிந்துவிடும்; ஒலித்துக் காட்டும் போது வாய் மூடியதும் ஒலியும் ஒழிந்தது. ஒலிக்கக் காரணமாக இருப்பது எண்ணம். அதுவும் மறைந்தது. எண்ணத்திற்குக் காரணமாக இருப்பது மாயை. மாயையும் அகன்றது. மாயையிலிருந்துதான் அது ஒலித்துக் கொண்டிருந்தது. மாயை அகன்றதும் அந்த இடத்தில் ஒளி நின்றது.

வரி வடிவம் போய், ஒலி வடிவம் போய், எண்ண வடிவம் போய், எழுச்சி வடிவம் போய், ஒளி வடிவம் மட்டுமே நிற்கும். அதுதான் 'அ' நாம் சொல்லிக் கொண்டிருக்கும், அல்லது எண்ணிக் கொண்டிருக்கும் 'அ' இதுவன்று.

எந்த எழுத்திற்கும் மூலம் உந்தி. உந்தியிலிருந்து வளியினாலே உந்தப் பட்டு 'அ', 'க', 'ங்' என்றெல்லாம் ஒலிக்கின்றது. இவை பிறக்கின்ற இடங்கள் வேறாக இருப்பினும் உந்திதான் ஆதாரமாக இருக்கின்றது. அங்கு இருக்கும் வளியினால் (காற்றினால்) துரத்தப்படுகின்றது. அதற்கு முன்னே மாயையால் திரட்டப்படுகின்றது. மாயையால் திரட்டப்படுவதற்கு முன்னே ஒளி நிலையாக இருக்கின்றது. அது எப்போதும் சலியாது. அதில் அலைவு இருக்காது. அணு, திரள், ஒலி என்பது இலக்கணம், அணு என்றால் ஒளி.

எழுதிக் காட்டுகின்றபோது 'உந்தியில்தான் எழுத்து இருக்கின்றது என்று மாணவனுக்குச் சொன்னால் புரியாது. அது ஒளி வடிவாக இருக்கின்றதென்றால் அதுவும் புரியாது. அது ஒளி வடிவாக இருக்கிறதென்றால். அதுவும் புரியாது. எழுத்து ஒளி

வடிவாக இருக்கின்றது, பிறகு ஒலி வடிவாக ஒலிக்கின்றது. என்பதையெல்லாம் ஆரம்பத்திலேயே விளக்கினால் விளங்காது என்பதற்காகத்தான் பிள்ளைகளுக்கு முதலில் வரிவடிவத்தை எழுதிக் காட்டிப் பின்னால் ஒலித்துக் காட்டி, பின்னர் அதன் நுட்பங்களைப் படிப்படியாக விளக்கிச் சொன்னார்கள்.

## சற்றும் பொருள்தான் சலியாது

அதனால் ஆசிரியர் மாணவனிடம், அப்பா, முதலில் உனக்கு வரிவடிவினில் எழுதிக்காட்டினேன்; பின்பு ஒலித்துக் காட்டினேன்; இது குறிதான். குறியும், ஒலியும் அழிந்து விடும். ஆனால் அது குறிக்கின்ற பொருள் இருக்கின்றதே அது சற்றும் மாறாது. இதற்குப் பல உதாரணங்களைச் சொல்லலாம். கவனமாகக் கேள் என்கிறார்.

வெள்ளை என்று ஒன்று இருக்கின்றது. இதனை எங்கே நாம் பார்த்தோம். துணியில் வெண்மையைப் பார்த்தோம். இந்தத் துணி கிழிந்துவிடும். ஆனால் வெண்மை அழியாது.

கரவல்மாடு என்று சொல்லுகின்றோம். இதில், கரவல் மாடு எப்போதும் கரக்காது. கரவலை நிறுத்திவிடும். அல்லது அந்த மாடே அழிந்துவிடும். ஆனால் கறக்கின்றதொழில் இருக்கின்றதே, அந்தத் தொழில் எப்போதும் இருந்து கொண்டேயிருக்கும்.

அதைப்போலப் பண்டங்கள் அழிந்துவிடும். பண்புகள் அழியாது. பண்புகள் மிக நுட்பமாக இருப்பதால் அவை ஒரு பண்டத்தை ஆதாரமாகக் கொண்டு எழும். அதேபோல பொருள் தெரியாது விளங்குகின்ற ஒளியாகிய மந்திரம் ஒலியாகி குறியீட்டைப் பற்றித்தான் வெளி வரும்.

பண்டங்களைப் பற்றிக் கொண்டு பண்பு வருவதுபோல, மொழியைப் பற்றிக் கொண்டுதான் ஒரு பொருளை உனக்கு உணர்த்த முடியும்.

மந்திரங்களாகச் சொல்லுகின்ற போது குற்றெழுத்துக்களாகத்தான் சொல்ல வேண்டும். நெட்டெழுத்துக்களாகச் சொல்லக் கூடாது. நெட்டெழுத்தானால் பெயராகும். நமசிவாயம் என்றால் ஒருவரைக் கூப்பிடுவது போல் ஆகும் நமசிவ்ய என்று யாரையும் கூப்பிடமாட்டார்கள். 'சிவ' என்றால் மந்திரம். 'சிவா' என்றால் பெயர். இந்த இரண்டுக்கும் மாறாக மாணிக்கவாசகர், 'நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க'

என்று சொல்கின்றார். இங்கே நமச்சிவாய என்று வருகின்றதே, இது மந்திரமா? அல்லது இறைவனது பெயரா? இறைவனுடைய பெயர் என்றால் நீண்டு ஒலிக்கின்றதே? என்றால்

இறைவனுக்குப் பெயர் ஏது? அவன் ஓர் உருவம், ஒரு நாமம், ஒரு வண்ணம், ஒரு வடிவம் இல்லாதவனாயிற்றே; உருவமற்ற, சுட்டி அறியமுடியாத இறைவனுக்குப் பெயருமில்லை, பெயரற்ற இறைவனுக்கு வடிவமுமில்லை. அப்போது அவனுக்கு ஏது பெயர்? ஏது வடிவம்?

இறைவன் ஐந்தெழுத்து வடிவானவன். அதனால் அவனை அந்த எழுத்துக்களாலேயே அழைக்கலாம் என்று அழைத்தார்கள்.

அவன் பெயர் நமக்குத் தெரியவில்லை. ஆனால் அவன் வடிவம் இதுதான், இன்னதால் அமைந்தது என்று மட்டும் தெரிகின்றது. இப்போது, ஒரு ஆளின் பெயர் நமக்குத் தெரியவில்லை. என்ன செய்வோம்? நமக்குத் தெரிந்ததைக் கொண்டு அவனை அழைப்போம். அவன் நிறம் கறுப்பு. அதைக் கொண்டு அவனை 'கறுப்பா' என்று அழைப்போம். அல்லது அவன் சிவப்பாக இருப்பின் 'வெள்ளையா' என்று அழைப்போம். இதனால் நிறத்தையும், பண்பையும் பார்த்துப் பெயராக்கி விடுகின்றோம். இங்கே இறைவன் ஐந்தெழுத்தின் வடிவமாக இருப்பதால் நமச்சிவாய வாழ்க என்றார். எனவே அவனது வடிவம் மந்திர வடிவம் அந்த மந்திர வடிவமாக இருக்கின்ற பெருமானை அந்த மந்திரத்தையே ஒரு பெயராக்கி அழைக்கின்றோம்.

மந்திரங்களை உச்சரிக்கும் போது வார்த்தைகளை உச்சரிப்பதுபோல உச்சரிக்கக் கூடாது. சிவய நம என்று சொன்னால் அது குற்றெழுத்தாக இருந்தாலும் மந்திரமாகாது. அதைச் சொல்லுகின்றபோது எப்படிச் சொல்ல வேண்டும் தெரியுமா? 'நாவியல் மருங்கில் நவிலப்பாடி' என்றதுபோல நாவினாலே மட்டுமே அசைக்க வேண்டுமே தவிர ஒலிக்கக் கூடாது. ஒலிகள் வரக்கூடாது. அப்படி ஒலியில்லாமல் நாவினாலே மட்டும் அசைத்துச் சொல்லப் படுகின்ற குற்றெழுத்துக்களால் அமைந்திருப்பனவற்றிற்கு மந்திரங்கள் என்று பெயர்.

நமச்சிவாய வாழ்க என்று ஏன் அவனைக் கூப்பிட்டு வாழ்த்த வேண்டும்? இந்த ஐந்தெழுத்து நடனத்தாலே நம் புலன்கள் ஐந்தையும் அடக்கி ஆண்டான். நம்முடைய புலன்கள் தறி கெட்டு ஓடும் நிலையுடையன. அவற்றை, ஐந்து எழுத்தின் உருக்கொண்டு, அதனால் ஆடுகின்ற ஆட்டத்தினாலே அடக்கி நிறுத்தி விட்டான். நாம் எத்துணை முயன்றும் அடக்க முடியாத நம் வெறித்த புலன்களை அவன் சுலபமாக அடக்கிவிட்டான். அதனால் அவனை வாழ்த்தாது என்ன சொல்வது? எனவே ஐந்து முறை அவனை வாழ்த்தினார் சிவபுராணத்தில்.

<u>சலியாது – மற்றது கேள்:</u>

சலியாப் பொருள் எது தெரியுமா? சிவன், அருள், ஆவி, எழிலார் திரோதம், மலம் என ஐந்து. இவை குற்றமில்லா எழுத்துக்கள். அப்படியானால் குற்றமுள்ள எழுத்துக்கள் உள்ளனவா? அவை யாவை? என்றால் நாம் எழுதி, அழித்து விடுகின்றோமே அந்த எழுத்துக்கள் எழுத்துக்களாக வந்த போது அதில் குற்றம் இருக்கின்றது. குற்றமில்லாத எழுத்து எது? குற்றமே இல்லாதது எது? ஒளிதான் குற்றமேயில்லாதது. மற்றதெல்லாம் குற்றம் உடையது. அதனால்தான் குற்றமில்லா ஐந்தெழுத்தை 'ஆசில் அஞ்சு எழுத்து' என்றார்.

குற்றமில்லாத ஒளி வடிவத்திலிருக்கின்ற ஐந்தெழுத்துக்கு அடைவாக இருப்பது சிவம். சிவத்திலிருந்து வெளிப்படுவது அருள். அதனை அடுத்திருப்பது ஆவி. அதற்கு அடுத்திருப்பது எழிலார் திரோதம். அதற்கு அடுத்திருப்பது மலம். இங்கே திரோதத்திற்கு மட்டும் 'எழிலார்' என்றொரு அடைமொழி கொடுத்திருக்கின்றார். இவற்றின் தன்மைகள் சற்றும் அழியா; குறையா ஐந்தெழுத்தின் பொருள் இது.

இறைவன் ஐந்தெழுத்தாக நின்று ஆடிக்கொண்டிருக்கின்றான் என்று முன்னர் பார்த்தோம். அந்த ஐந்தெழுத்து இப்படிப் பலவாகப் பிரிந்து செயல்பட்டுக் கொண்டிருக்கின்றது என்பதையும் பார்த்தோம். இது எப்படிப் பிரிகின்றது?

°°° °°° °°° °°° °°° °°°

41. சிவன்அருள் ஆவி திரோதமலம் ஐந்தும்
அவன்எழுத்து அஞ்சின் அடைவாம் – இவனின்று
'நம்முதலா ஓதில்அருள் நாடாது நாடும்அருள்
'சிம்முதலா ஓதுநீ சென்று.

ஐந்தெழுத்தை நாமே ஓதிக் கொண்டிருக்கலாமா? கூடாது. யாராவது அதனை ஒலியினால் நம் காதில் சொல்லி உணர்த்த வேண்டும். அது விதி. ஏன் காதில் சொல்ல வேண்டும்? மூக்கில் சொல்லக் கூடாதா? மூக்கில்தான் காற்று வருகின்றதே? காதில் சொல்வதற்கு என்ன காரணம்? காது ஓங்கார வடிவம். எனவே காதில் சொன்னால்தான் ஒளி பெற முடியும்.

'ந' கரத்தை முதலாக வைத்து 'நமசிவய' என்று ஓதினால் அருள் கூடாது. 'சி' கரத்தை முதலாக வைத்து 'சிவயநம' என்று ஓதினால்தான் அருள் உன்னை நாடும். ஏன்? 'ந' என்பது திரோதானம். மறைக்கும் சக்தி. அதை முதலில் வைத்து ஓதினால் அருளை மறைத்துக் கொண்டேயிருக்கும். அருள் கூடாது. அதுவே, 'சி' கரத்தை முன் வைத்தால், ('சி' – சிவம்) அருள் கூடும். எனவே 'சி' கரத்தை முன் வைத்து ஓதுக என ஆசாரியர் மாணவருக்கு உபதேசிக்கின்றார்.

இப்போது நமக்குள் ஒரு குழப்பம் உண்டாகிவிடும்.

ஞானமும் கல்வியும் நமச்சிவாயவே; நானறிவிச்சையும் நமச்சிவாயவே; என்று, நாவுக்கரசுப் பெருமான் பாடியிருக்கின்றார். 'போற்றியோ நமச்சிவாய' என்று மாணிக்க வாசகர் பாடியிருக்கின்றார். (இதனைப் போற்றி ஓம் நமச்சிவாய என்றுதான் ஓத வேண்டும்) இவர்கள் எல்லாம் 'ந' கரத்தை முன்னே வைத்துத்தானே பாடியிருக்கின்றார்கள்; இதற்கு என்ன காரணம்? அவர்கள் எல்லாம் நமச்சிவாய என்று போற்றியிருக்க, இவர் மட்டும் அப்படிச் சொல்லக்கூடாது என்று சொல்வதற்கு என்ன காரணம்? அது அறிவு. இவர் சொல்வது அனுபவம்.

'ஓம் நமச்சிவாய' என்று ஓதும்போது அது விளியாக அமைகின்றது. சிவயநம என்று ஓதும்போது மந்திரமாகின்றது.

'ந' கரத்தை முன் வைத்து ஓதினால் புலன்கள் அடங்கும். 'சி' கரத்தை முன் வைத்து ஓதினால் உயிர் அடங்கும். உயிர் அடக்கம் வேறு; புலனடக்கம் வேறு. இந்த இரண்டு கருத்தையும் விளக்கவே இங்கே தெளிவுபடுத்தினார்.

மணிவாசகர் எடுத்தவுடனே 'நமச்சிவாய வாழ்க, நாதன்தாள் வாழ்க' என்று சொல்லுகின்றார். மந்திரச் சொல்லாக வைத்து இப்படி ஆரம்பித்தாரா என்றால் இல்லை; பெயர்ச் சொல்லை வைத்துத்தான் ஆரம்பித்தார். 'ந' கரத்தை முதலாக வைத்து அவனுடைய வடிவத்தை எண்ணப்பட்டது இங்கே.

இன்னொரு இடத்தில் 'நானேயோ தவம் செய்தேன்; சிவாயநம எனப் பெற்றேன்' என்பார். தவம் செய்து பெற வேண்டியது சிவாயநம. தவம் செய்யாமலே பெறுவது நமசிவய.

அப்படியானால் இந்த இரண்டுக்கும் உள்ள வேறுபாடு என்ன? நமசிவய என்று ஓதும்போது அருள் உங்களை நாடாது. சிவயநம என்று ஓதும் போது அருள் நம்மை நாடி வரும்.

புலன்களை அடக்க வருகின்றபோது 'ந' கரத்தை முதலாக வைத்து வருகின்றான். தோற்றமளிக்கின்றான். சீவனின் மலங்களை அகற்ற வருகின்ற போது 'சி' கரத்தை முதலாக வைத்துத் தோற்றமளிக்கின்றான்.

'ந' கரத்திற்கும், 'சி' கரத்திற்கும் உள்ள வேறுபாடு என்ன? எனப் பார்ப்போம்.

ஐந்தெழுத்திலே 'சி' என்பது சிவன், 'வ' என்பது அருள், 'ய' என்பது ஆவி (உயிர்) 'ந' என்பது திரோதானம், 'ம' என்பது மலம்.

'ந' கரத்தை முதலாக வைத்து ஓதுகின்றபோது இறைவன் எதிர்ப்படுகின்றான்; எல்லா நலங்களையும் தருகின்றான்; ஆனால் எதை மறைத்தான் என்று நமக்குத் தெரியாமல் செய்துவிடுவாம். நம் தன்மைகளை, நாம் யார்

என்பதையெல்லாம் மறைத்துவிடுவான். தன்னையும்மறைத்துக் கொள்ளுகின்றான்; என்னையும் மறைத்துக் கொள்ளுகின்றான். இரண்டு நிலைகளையும் மறைத்துவிட்டு, நமக்கு போதிக்க வேண்டியதைப் போதித்துக் கொண்டு இருக்கின்றான்.

உதாரணமாக, ஆசிரியர்வந்தார். மாணவனைப் பார்த்துப் புலனை அடக்கு என்கின்றார். மாணவன் புலன்களை அடக்க மாட்டான். அடங்கவும் மாட்டான். அதனால் அதற்கோர் உபாயம் செய்கின்றார்.

தம்பி, இன்றைக்கு நிறைநிலா. அதனால் இன்றைக்கு நீ விரதம் இருக்க வேண்டும்; உப்பு முதலானவற்றை எடுத்துக் கொள்ளக்கூடாது. காரம், புளி முதலானவற்றை எடுத்துக் கொள்ளக் கூடாது. தேவையற்றதைப் பேசக்கூடாது; பார்க்கக்கூடாது – என்று இப்படியெல்லாம் உபதேசிக்கின்றார். இது ஒரு நாளைக்கு மட்டும் மேற்கொள்கின்ற விரதம் அல்லது பழக்கம். முதலில் ஒரு நாளைக்கு இந்தப் பழக்கத்தை மேற்கொள்ளச் சொல்லிவிட்டுப் பின்னர் படிப்படியாகப் பல நாட்கள் இப்படி விரதத்தைமேற் கொள்ளச் சொல்லுவார். இப்படிக் கொஞ்சங் கொஞ்சமாகத் தவத்திலே உயர்த்திவிட்டு, மாணவனைத் தவநிலையிலே உயர்த்தி, உணர்த்தி, உணர உணர மேலே ஏற்றுகின்றார். 'இப்படி இருப்பது நல்லது' என்று விரதங்களை மேற் கொள்ளச் சொல்லிப் புலன்களுக்குப் பயிற்சி கொடுத்துப் புலன்களை மெள்ள மெள்ள அடக்கி விடுகின்றார். பயிற்சியினாலும், கால வெள்ளத்தாலும் அவை அடங்கி விடும்.

இப்போது ஆசிரியர் மாணவனுக்கு 'விரதம் இருப்பது நல்லது'' என்று சொன்னாரே தவிர, விரதம் இருந்தால் புலன்கள் அடங்கும் என்று முதலிலேயே சொல்லவில்லை. இப்படியே இறைவனும் தன்னை இன்னான் என்று காட்டிக் கொள்ளாமலும், நம்மை ஏன் இந்த வழியில் செலுத்துகின்றான் என்பதையும் உணர்த்தாமல், இந்த ஆன்மாவுக்குள் மறைந்து நின்று நன்மையைச் செய்து கொண்டிருக்கின்றான். அப்படி மறைந்து

நின்று செயல்படத் திரோதானத்தை – 'ந' கரத்தை, முன் நிறுத்திச் செயல்பட்டுக் கொண்டிருப்பான். இப்படி நன்மைக்குத் திரோதானம் பயன்படுவதால் அதனை 'எழிலார் திரோதம்' என்று குறிப்பிடுவார் ஆசிரியர்.

இந்தக் கருத்தை விளக்கத்தான் சிவபுராணத்தில் மணிவாசகர் ஐந்துமுறை 'வாழ்க' என்று சொன்னார். ஐந்து புலன்களின் ஓட்டத்தையும் அடக்கியதால் ஐந்து முறை 'வாழ்க' என்று சொன்னார். அதற்கு அவன் என்ன செய்தான்? 'ந' கரமாகிய திரோதான ஆற்றலை முன் வைத்து, தான் திரோதானம் என்பதையும் காட்டாமல், தன்னையும் காட்டாமல், தான் இந்த ஆன்மாவை மறைக்க வந்தவன் என்று காட்டாமல், 'ந' கரத்தின் வடிவாக இருந்து புலன்களை விரதம் முதலானவற்றில் அழுத்திப் பயிற்சி கொடுத்து அடக்கிவிட்டதனால் அவனை அந்தப் பெயராலேயே அழைக்க நினைத்து, 'நமச்சிவாய வாழ்க' 'நாதன்தாள் வாழ்க' என்று ஆரம்பித்து ஐந்து முறை வாழ்க, வாழ்க என்று வாழ்த்தினார்.

நாம் படிப்படியாகத் தத்துவங்களைக் கடந்து ஏறி வர உதவுவது யார்? கடவுளா? உலகத்தாரா? ஆணவம் என்ற முனைப்புச் சக்திதான் நாம் உயருவதற்கு உபகாரமாக இருந்து வருகின்றது. ஒரு கால எல்லை வரையில் நம்மை அலைக்கழித்துக் கொண்டிருக்கும். ஆனால் அதனைத் அடக்கத் தெரிந்து கொண்டுவிட்டால் நமக்குப் பணி செய்து கொண்டு இருக்கும். அதனுடைய போக்கில் விட்டுவிட்டால் நம்மை அலைக்கழித்துக் கொண்டேயிருக்கும். ஓர் உபாயம் செய்து அதை நம் பக்கம் இழுத்து நிறுத்திவிட்டால் நமக்கு அது பணி செய்து கொண்டிருக்கும். இதற்கு உதாரணம் சூரபத்மன் கதை. சூரபத்மன் ஆணவம். அந்த ஆணவத்தை முருகன் ஞானம் என்ற வேல் கொண்டு வெற்றி கொண்டு அடக்கியபின் அது சேவலாகவும், மயிலாகவும் மாறிவிடுகின்றது. இறைவனைத் தாங்கியது ஒன்று. இறைவன் வருகையை அறிவித்தது மற்றொன்று. சேவல் கொக்கரக்கோ என ஒலி எழுப்பும். அதற்கு என்ன பொருள்? கொக்கு – மாயை. அறு – அறப்பவன் – கோ – தலைவன். மாயையை அறுத்து தலைவன் வருகின்றான் என அவன் வருகையை

அறிவிக்கின்றது. மயில் நாதத்தின் நிலைக்களம். அது ஞான போதம். சேவல் – நாதம்.

'சென்று ஓது' என்றால், வீட்டில் போய் உட்கார்ந்துகொண்டு ஓதுதல் என்று பொருளல்ல. நாதாந்த வெளிக்குச் இராப்பகல் அற்ற இடத்திற்குச் சென்று ஓதுக என்று பொருள். ஏன் அதை இங்கே இருந்து ஓதக்கூடாதா? என்றால் ஓதுவதற்கு என்று ஓர் இடம் வேண்டும். இங்கே ஓதுவது வேறு. அங்கே போய் ஓதுவது என்பது வேறு. எந்த ஒரு செய்தியையும் அதற்குரிய இடத்திலிருந்துதான் சொல்ல வேண்டும்; செய்ய வேண்டும்.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

42. அண்ணல் முதலா அழகுஆர் எழுத்து ஐந்தும்
எண்ணில் இராப்பகல் அற்று இன்பத்தே – நண்ணி
அருள் ஆனது சிவத்தே ஆக்கும் அணுவை
இருளா னதுதீர இன்று.

எண்ணில் – எண்ணிக்கை, எண்ணம் என்று இரண்டு பொருள். எண்ணிக் கொண்டே இருத்தல்; எண்ணிலடங்கா முறைகள் இறைவன் நாமத்தை உச்சரித்துக் கொண்டே இருத்தல். அப்படி உச்சரிக்கும் போது கணக்குப் பார்த்து உச்சரித்துக் கொண்டிருக்காதீர்கள். சதா அவனை நினைத்துக் கொண்டே இருங்கள். அப்படி எண்ணிக் கொண்டிருந்தால் இரவு பகல் இல்லாத இன்பத்தே உங்களைக் கொண்டு போய்ச் சேர்த்துவிடும். அங்கே பேரின்பம் நமக்காகக் காத்திருக்கின்றது. அணுவாகிய சிவன் இறைவனது திருநாமமான ஐந்தெழுத்தைச் சதா உச்சரித்துக் கொண்டிருந்தால் இரவு, பகல் என்ற இரண்டுமிலா இடமான பேரின்பத்தில் கொண்டுபோய்ச் சேர்த்துவிடும்.

இரவு என்பது அறியாமை, பகல் என்பது மாயை. அறியாமை ஆணவத்தால் விளைகின்றது. பகல் மாயையால் விளைகின்றது. மாயையும், அறியாமையும் அற்றுப் போனால் அருள் அங்கேயிருக்கும். அணுவானது ஐந்தெழுத்தை உச்சரித்துக் கொண்டிருந்தால் அறியாமையும், மாயையும் அகன்று, அருள்வெளியிலே ஆனந்தமாகிய பேரின்பத்தைத் துய்க்குமாறு செய்து விடும்.

எனவே ஐந்தெழுத்தை அளவிலா முறைகள் சித்திக்கக் கொண்டிருங்கள்.

இதுவரையிலும் ஆணவமானது நமக்குத் துணை செய்து கொண்டிருந்தது. இறைவனைக் காணுமாறு ஊக்குவித்தது ஆணவம். இதற்குமேல் அதற்கு வேலை கிடையாது. பேரின்பத்தைத் துய்க்குமாறு, அதில் திளைக்குமாறு செய்வது ஐந்தெழுத்து. இந்த எல்லை வரையில்தான் ஆணவத்தால் வரமுடியும். அதற்கு அப்புறம் அதனால் வர முடியாது. இதை எண்ணிப் பார்த்து உணர்ந்து கொள்ளுங்கள்.

சிலர் மணியை வைத்து உருட்டிக் கொண்டிருப்பார்கள் – எதற்கு? எண்ணிக்கைக்காக. இறைவனை எண்ணுங்கள் என்றால் மணியை எண்ணிக் கொண்டிருக்கின்றீர்கள். அப்படி உருட்டும்போது இறைவன்மேல் கவனம் இருக்காது. மணியின் மேல் தான் கவனம் இருக்கும். ஒரு பழக்கத்திற்காக அதை வைத்தார்களே தவிர, அதையே பிடித்துக் கொண்டிருக்கக் கூடாது. இதை ஏதோ அவர்களைக் குறையாகச் சொல்வதாக எண்ணிக் கொள்ளக் கூடாது. நாம் கடைப்பிடிக்க வேண்டிய முறை எது என்பதையும், உபாயமாகச் சொன்னதையே உபதேசமாக எண்ணிக் கொண்டு செய்து கொண்டு இருக்கக் கூடாது. என்பதைச் சுட்டிக் காட்டவே இதைச் சொன்னோம்.

எண்ணிக்கையில்லாமல் நாம் மந்திரங்களைச் சொல்லிக் கொண்டேயிருந்தால் நேரம் போவது தெரியாமல் சொல்லிக் கொண்டேயிருப்போம். அப்படி நேரம் ஆகிவிட்டால் அடுத்துச் செய்ய வேண்டிய பணிகள் நின்றுபோய்விடுமே, காலம் தாழ்த்தி மற்ற பணிகளைச் செய்து கொண்டிருப்போமே, இதற்கென்ன செய்வது? என்று ஒரு வினா.

இந்தப் பெரிய கேள்விக்குச் சுருக்கமாக விடை சொல்ல வேண்டுமென்றால் திருஞானசம்பந்தர் பாடலை நினைவு படுத்தி விட்டால் போதுமென்று நினைக்கின்றேன்.

இடரினும் தளரினும் எனதுறுநோய் தொடரினும்
உன்கழல் தொழுதெழுவேன்...

இப்பாடலின் பொருள் என்ன? எனக்குத் தளர்வு வந்தபோதும், துன்பங்கள் நேர்கின்றபோதும், எனக்கே உரித்தான நோய் (எஞ்சுவினை) என்னைத் தொடரும்போதும், உன் கழல்களைத் தொழுதெழு வேன் என்கின்றார். அப்படியானால் நமக்குத் துன்பமில்லா நேரமெது? எப்போதும் நமக்குத் துன்பந்தான். எனவே இடைவிடாது இறைவன் திருநாமத்தை நினைத்துக் கொண்டே இருப்பேன் என்கின்றார்.

நாம் நினைப்பது ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை வரை இறைவன் திருநாமத்தை நினைத்துவிட்டு அத்தோடு மறந்துவிட வேண்டும் என்று எண்ணுகின்றோம். இது பிழைபட உணர்ந்த ஒன்று.

திருக்கோயில்களுக்குச் செல்கின்றோம். அங்கே பிரசாதம் கொடுக்கின்றார்கள். அதைப் பயபக்தியோடு வாங்கிக் கொண்டு வந்து வீட்டில் உள்ள அனைவருக்கும் கொடுக்கின்றோம். நாமும் மகிழ்ந்து உண்ணுகின்றோம். திருக்கோயில்களில் செய்வது மட்டும் எப்படிப் பிரசாதமாகின்றது; நம் விட்டில் செய்வது ஏன் பிரசாதமாக ஆகமாட்டேன் என்கின்றது. நம் வீட்டில் செய்வது போலத்தானே அவர்களும் செய்கின்றார்கள். இரண்டுக்கும் என்ன வித்தியாசம்?

சாதத்தைச் செய்து இறைவன் திருமுன்னர் வைத்துவிட்டு, இறைவனது திருநாமத்தைச் சொல்லி அர்ச்சனை செய்கின்றார்கள். இதை இறைவன் உண்ட எச்சிலாக, இறைவனது பிரசாதமாக எண்ணி அனைவருக்கும் பகிர்ந்து அளிக்கின்றார்கள். ஆனால் நம் வீட்டில் செய்தால் அதை வெறும் சாதமாகத் தான் எண்ணிக் கொள்கின்றோம். ஏன் அதையே பிரசாதமாக மாற்றிக் கொள்ளக்கூடாதா? அதற்கேதும் வழியில்லையா? என்றால் மிகச் சுலபமான வழி உண்டு. இதுவரையில் கடைப்பிடிக்காதவர்கள் இனியேனும் அப்படிக் கடைப்பிடித்தால் சிறப்பு என்பதற்காக இதைச் சொல்கின்றேன்.

நம் வீட்டில் சமைக்கும்போது நாம் பல்வேறு உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டுச்சமையலை நடத்து கின்றோம். அப்படியே பல்வேறு உணர்ச்சிகளுடனேயே அனைவருக்கும் பரிமாறுகின்றோம். பல்வேறு உணர்ச்சிகளுடனேயே நாமும் உணவை உண்ணுகின்றோம். அப்படிச் செய்யாமல், உலை வைக்கும்போதே 'சிவ சிவ' என்று சொல்லிக் கொண்டே உலையை ஏற்ற வேண்டும். அரிசியைக் களையும் போது, 'நமச்சிவாய வாழ்க, நாதன்தாள் வாழ்க' என்று சிவ புராணத்தையோ, அல்லது 'சிவசிவ' என்ற மந்திரத்தையோ, அன்றி தேவார திருவாசகப் பாடல்களையோ சொல்லிக் கொண்டோ களைந்த அரிசியை உலையில் போட வேண்டும். இப்படியே காய்கறிக்களைத் திருத்தும்போதும் இறைவன் திருநாமத்தைச் சொல்லிக் கொண்டே செய்யுங்கள். சமைத்து முடித்து, எல்லா உணவுப் பண்டங்களையும் இறைவன் திருமுன்னர் வைத்து, மந்திரங்களைச் சொல்லி, இறைவனுக்கு நிவேதனமாக்கிவிட்டுப் பின்னர் இலையில் மரிமாறுங்கள். பரிமாறும்போதும் இறைவன் திருநாமத்தைச் சொல்லிக் கொண்டே பரிமாறுங்கள். இதனால் பரிமாறப்படுகின்ற உணவு பிரசாதமாக மாறுவதோடு, அதனை உண்பார்க்கும் உணர்வுத் தூய்மையை நல்கும்.

திருவருள்தான் ஆசாரியன், ஞானகுரு. ஞானகுருதான் கடைசியில் இந்த ஆன்மாவை இறைவனோடு கொண்டு போய் ஐக்கியப் படுத்துபவர். அதனால் 'சி' கரத்தை முதலாக வைத்து ஓதுங்கள். அதனை ஓதுவதற்குரிய இடம் இராப்பகல் அற்ற இடம். அதனை ஓதிக் கொண்டேயிருந்தால் திருவருள் உங்கள் முன்னே வந்து நிற்கும். பின்னர் அது சிவத்திடம் கொண்டு போய்ச் சேர்க்கும். அப்படிச் சேர்க்கும்போது ஆணவமே அற்றுவிடும்.

(அணு – உயிர். இருள் – ஆணவம். இரவு – துன்பம். பகல் – இன்பம்.)

ஆரும் அறியாமல் இங்கே வெண்ணிலாவே – அரு
ளாளர் வருவாரோ சொல்வாய் வெண்ணிலாவே
அந்தரங்க சேவை செய்ய வெண்ணிலாவே – எங்கள்
ஐயர்வரு வாரோ சொல்லாய் வெண்ணிலாவே

என்றும், 'இரவு பகல் இலா இடத்து வெண்ணிலாவே'– நானும் இருக்க எண்ணி வாடுகின்றேன் வெண்ணிலாவே என்றும் வள்ளல் பெருமான் வேண்டிக் கொள்கின்றார்.

ஆணவமும், மாயமும் அற்ற இடமே இரவு பகல் அற்ற இடம். அந்த இடத்திலே நின்று ஐந்தெழுத்தை ஓத வேண்டும். ஆணவமும், மாயையும் அற்ற இடம் இன்ப வெளி. இதனை, 'வரு சகல கேவலமிலாத இடமும்பெற்று வாழ்கின்ற வாழ்வு அருள்வாய்' என்பார் தெய்வமணிமாலையில். கேவலம் என்றால் இரவு, ஆணவம். சகலம்'என்றால் பகல், மாயை.

மூல மலத்திற்கும் இருள் என்று பெயர். மூலமலத்திற்கு மேல் விளைகின்ற மலத்திற்குச் சாதாரணமாக ஆணவ மலம் என்பர்.

இங்கே இரண்டு மலங்களைப் பற்றிச் சொல்லியிருக்கின்றதே, அது பற்றி விளக்கம் சொல்ல வேண்டும். இதைச் சுலபமாக விளங்கிக் கொள்ளலாம். ஒளிக்கு எதிராகக் கையை நீட்டுகிறோம். அப்போது சுவற்றில் கையில் நிழல் தெரியும். அதுவும் கையைப் போலவே இருக்கும். இப்போது இரண்டு கைகள் இருப்பதுபோலத் தெரியும். ஆனால் அங்கே இரண்டு கைகளா இருக்கின்றது? ஒரு கைதானே இருக்கின்றது. ஒன்று நிழல்; ஒன்று அசல். உண்மையான கை போகாது. ஆனால் நிழல் போய்விடும். உண்மையான கை என்பது ஆணவம். இருள் என்பது நிழல். ஆணவம் அகன்றால் மாயை என்ற இருளும் அகன்றுவிடும்.

மலம் என்று சொல்லுகின்ற ஆணவம் இருக்கின்றதே அது செயலை விட்டு எப்போதும் அகலாது. நாம் என்ன செயல் செய்தாலும் அது அகலாது. அதற்கும் மூலமாக ஒரு மலம் இருக்கின்றது. அதுவும் அகல வேண்டும். அதற்கு அநாதி மலம் என்று பெயர். அந்த அநாதிமலம் நீங்க நீங்கள் அறியாமை என்ற இருளிலிருந்து நீங்கியிருக்க வேண்டும். மயக்கத்திலிருந்து விலகியிருக்க வேண்டும்.

இது எப்போத நிகழும்? மிகவும் சுலபமாக இதைச் சாதிக்கலாம். எப்படியென்றால், நாம் எந்தச் செயலைச் செய்தாலும் அதில் மயங்காமல் இருக்கப் பழக வேண்டும். அப்படி மயங்காமல் இருந்தால் அது பகல் இல்லாத இடம்.

ஏந்தச் செயலைச் செய்தாலும், 'நான் இந்தச் செயலைச் செய்தேன்' என்று எண்ணாமல் இருக்கின்றோமே, அது இரவு (நான்) அற்ற இடம். சுவை, வண்ணம் அல்லது எதையேனும் கண்டு மயங்கினால் அதற்கு மாயை என்று பெயர். இதனைப் பகல் என்பர். மயக்கத்திலிருந்து விடுபட்டால் பகல் அகன்ற இடம். அப்படியே, 'நாம் தான் இதைச் செய்தோம்; அதைச் செய்தோம்' என்ற உணர்வுடன் செயல்படாமல், பணிகளைச் செய்துகொண்டிந்தால் அது இரவு அற்ற இடம். இந்த இரண்டும் அற்ற இடத்திலிருந்து 'சிவாயநம' என்று சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். அதற்குப் பயிற்சி வேண்டும்.

இயற்கையில் எத்தனையோ வண்ணங்கள் இருக்கின்றன. வண்ணங்களில் அவன் ஆற்றலைப் பார்த்தல், வடிவங்களில் அவன் ஆடலைப்பார்த்தல், இப்படி எல்லாவற்றிலும் அவனைப் பார்த்தால் 'நாம்' அற்றுவிடுவோம். 'நான்' அற்று, 'எனது' அற்று நின்ற இடமே 'சிவாயநம' என்று ஓதுதற்குச் சிறந்த இடம். அதைத்தான் இங்கே சொல்லுகின்றார். அப்போது இருள் தீர்ந்த, ஒளியில் உங்களைக் கொண்டு சேர்த்துவிடும். சிவத்தில் ஆன்மாவைக் கொண்டுபோய்ச்சேர்க்கும் உபாயத்தை இந்தப் பாடலில் சொல்லியிருக்கின்றார்.

இரவு பகல் அற்ற இடம் எது? அங்கே எப்படி அவன் நாமத்தை ஓதுவது என்பதையும் இப்பாடல் விளக்கியது.

∴ ∴ ∴ ∴ ∴ ∴ ∴

43. ஆதி மலம்இரண்டும் ஆதியா ஓதினால்
சேதியா மும்மலமும் தீர்வுஆகா – போதம்
மதிப்புஅரிதாம் இன்பத்தே வாழலாம் மாறி
விதிப்படிஓது அஞ்செழுத்து மே.

ஆன்மாவில் இருள் என்ற ஆணவம் இருக்கின்றது. அதைத் தீர்த்து அண்ணல் திருவடியாகிய ஞானத்தில் கொண்டு போய்ச் சேர்த்துவிடும் ஐந்தெழுத்து. இந்த அஞ்செழுத்தாகிய பஞ்சாட்சரம் எல்லா, மந்திரங்களுக்கும், கலைகளுக்கும், புராணங்களுக்கும் ஆதாரமாக இருப்பது. அதை எப்படி ஓதுவது என்றும், அதன் நிலைகளைப் பற்றியும், எண்ணங்களையும் நினைவுக்குக் கொண்டு வந்து விளக்குகின்றார்.

விதிப்படி என்பது ஒரு முக்கியமான குறிப்பு. உங்களுக்கு விதித்த விதிப்படி ஓதுக என்று பொருள். நாமாக ஒரு விதியை வைத்துக் கொள்ளக் கூடாது. நம்முடைய பக்குவங்களுக்கு ஏற்ப நமக்கு ஒரு விதியை விதிப்பார்கள். உதாரணமாக மாணவனுடைய பக்குவத்தை ஆசிரியன் அறிதல் வேண்டும். அப்படி அறிந்து அவனுக்கு ஓதுவிப்பது தான் ஓதுவித்தல் ஆகும்.

முறையாகக் கற்பிப்பது எப்படி?

'அ' கரம் முதலாக எழுத்துக்களைத் தனித்தனியே படிக்கின்றோம். பின்னர் இரண்டு எழுத்துக்கள் உள்ள பதங்களாகச் சொல்லிக் கொடுப்பார்கள். இப்படிச் சொல்லிக் கொடுத்த பின்பு, கு, சு, டு, து, பு, று என்று எழுதச் சொல்வார்கள். இவற்றில் ஏதேனும் ஒரு எழுத்தை எழுதச் சொல்லிவிட்டு அதற்கு முன் உங்களுக்கு தெரிந்த வேறு எழுத்துக்களை எழுதி ஒரு சொல்லாக ஆக்க வேண்டும் என்பார்கள். உதாரணமாக, 'டு' என்ற எழுத்தை எழுதச் சொல்லிவிட்டு அதற்கு முன் 'அ' என்று எழுதிக் காட்டி, அதனைச் சுட்டிப் படிக்கச் சொல்லி, அதற்குண்டான பொருளையும் சொல்லிக் கொடுப்பார்கள். இப்படிச் செய்தால் 'அடு', 'ஆடு', 'இடு', 'ஈடு' எனப் பல சொற்களை உருவாக்கலாம். இப்படிச் சொல்லிக் கொடுப்பதால் மாணவர்கள் எளிதில் எழுத்துக்களையும், அதன் பொருளையும், பதம் சேர்க்க வேண்டிய முறைகளையும் தெரிந்து கொள்வர்.

எனக்கு ஆங்கிலம் பயிற்றுவிக்கும்போது நினைவில் வைத்துக்கொள்ளும் விதத்தில் சொல்லிக் கொடுத்தார்கள். 'ஷீ' (She) என்று எழுதச் சொல்வார்கள். அதன் முன்னே

உள்ள ஒரு எழுத்தை எடுத்துவிட்டால் 'ஹீ' (He) என ஆகும். மற்றும், ஆண்பால், பெண்பாலுக்கு ஒரு எழுத்தை நீக்கியும், கூட்டியும் போட்டால் போதும் என்றும் சொல்லிக் கொடுத்தார்கள். ஆனால் போதிக்கின்ற முறை இதுவன்று. எந்த மாணவனுக்கு எப்படிச் சொல்லிக் கொடுத்தால் அவன் புரிந்து கொள்வானோ அந்த விதத்தில் சொல்லிக் கொடுப்பது ஆசாரியனுடைய கடமை. அதைத்தான் விதி என்பர்.

விதி எல்லோர்க்கும் ஒரே மாதிரி அமைவது கிடையாது.

உதாரணமாக, ஒரு சாமியாரிடம் சென்று இன்னொரு சாமியார் உபதேசம் கேட்டார். உபதேசம் கேட்ட சாமியார் தாழ்ந்த இனத்தைச் சேர்ந்தவர் என்று எண்ணி 'ஈ காடிதக்கு உபதேசம் காவல்னா' (இந்தக் கழுதைக்கு உபதேசம் தேவையா) என்று தெலுங்கில் சொன்னார். உபதேசம் கேட்க வந்த சாமியாரோ அதையே குருவின் உபதேசமாக ஏற்றுக் கொண்டு சதா அந்த வார்த்தைகளையே உச்சரித்துக் கொண்டு மிகவும் உயர்ந்த நிலைக்குப் போய்விட்டார். இங்கே பிரணவம் முன்னே நிற்கவில்லை.

இதை எதற்காகச் சொல்கின்றேன் என்றால், நூல் சொல்ல வருகின்ற போது உள்ள முறை வேறு. வாழ்க்கையில் கடைப்பிடிக்க வருகின்ற முறை வேறு. நூல் சொல்ல வருகின்றபோது, முறையாகத்தான் சொல்ல வேண்டும். ஆனால் வாழ்க்கையில் கடைப்பிடிக்க நேர்கின்றபோது, ஆசார்யன் என்ன உபதேசிக்கின்றாரோ, அதைத்தான் கடைப்பிடியாகப் பிடித்து ஒழுக வேண்டும் என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும். ஆசார்யன் உபதேசித்தபடி ஒழுகினால் இன்பத்தில் வாழலாம்.

**ஆதி மலமிரண்டும் ஆதியா ஓதினால்:**

ஆதி மலம் என்பது முதன்மையாக இருக்கின்ற மலங்கள். ஏன் மீண்டும் இங்கே மலத்தைப் பற்றிச் சொல்லுகின்றார் என்றால் நமக்கு ஒரு துணிவு வர வேண்டுமில்லையா? அதற்காகச் சொல்லுகின்றார்.

மலத்தை முன் வைத்து ஓதினால் அது மலத்தை எப்படித் தீர்க்கும்? கல்லாத ஒருவனோடு பழகிக் கொண்டிருந்தால் நமக்குக் கல்வி வருமா? அப்படிக் கல்வி வரும் என்று சொன்னால் அதை நம்பலாமா? கூடாது. 'நம' என்ற மல எழுத்துக்களை முன் வைத்து ஓதுதல் கூடாது.

ஆதி என்பது முதல் சக்தி. இந்த ஆதிசக்தி நம்முள் வேலை செய்கின்ற போது திரோதானமாக வேலை செய்யும். திரோதானம் என்பதற்கு மறதி, மறைப்பு நடப்பாற்றல் என்றெல்லாம் முன்னமே பொருள் சொன்னோம். இவையெல்லாம் சமயக் கலைச் சொற்கள். 'ந' திரோதானம்: 'ம' மலம். மாயை. இவ்விரண்டு எழுத்துக்களையும் முதலில் வைத்து ஓதக் கூடாது. அப்படி ஓதினால் நம்மிடமுள்ள ஆணவத்தை அவை போக்கா. ஞானமாகிய தன்மை (போதம்) கிட்டாது. மலங்களும் போகாது. மலங்களால் வருகின்ற துன்பங்களும் போகா. எனவே 'நமசிவாய' என்று ஓதாமல் அதை மாற்றி 'சிவாயநம' என்று ஓதுக. இதை ஔவைபிராட்டி, 'சிவாயநம எனச் சிந்திப்பார்க்கு அபாயம் ஒருநாளுமில்லை' என்று உபதேசம் செய்து வைத்தார்கள்.

விதிப்படி என்பது ஆசார்யனிடத்தில் இரந்து இதைக் கேட்டு ஓத வேண்டும். விதி என்று சொன்னதில் இன்னொரு குறிப்பும் இருக்கின்றது. ஆசார்யன் சொன்ன விதி மாத்திரமல்ல. அந்த ஆசார்யனும் எப்படி இருக்க வேண்டுமென்ற விதி இருக்கின்றது. அந்த விதியையும் சேர்த்துப் பார்க்க வேண்டும். அந்த விதியை அறிந்து ஓதுதல் வேண்டும். அதைக் கடைப்பிடிக்காமல் நம் விருப்பப்படி ஓதக்கூடாது.

இதற்கு நடந்த நிகழ்ச்சியைச் சொன்னால் தெளிவாகும். சுமார் இரண்டு மாதத்திற்கு முன்னே திருநின்றவூரிலே ஒரு நிகழ்ச்சிக்கு அழைத்து இருந்தனர். அங்கே சென்று சொற்பொழிவை முடித்துக் கொண்டு, கடைசியாக விளக்கம் சொல்லுகின்றபோது, 'வாழ்க்கையில் நாம் எண்ணுகின்ற எண்ணத்தின் அளவுக்கு உயர வேண்டுமென்றால் அதற்கேற்றவாறு சில விதிகளைக் கடைப்பிடிக்க வேண்டும்; ஆன்மீக வாழ்க்கையில் உயர நினைப்பவர்கள் எதை எதைக் கடைப்பிடிக்க வேண்டும்; ஆகாரத்தை எப்படி எப்படி எல்லாம் முறைப் படுத்திக் கொள்ள வேண்டும் என்றெல்லாம் விளக்கிவிட்டு முடித்தேன்.

நிகழ்ச்சி முடிந்த பின்பு அன்பர்கள் பலரும் நிகழ்ச்சி மிகவும் பயன் உள்ளதாக இருந்தது என்று சொன்னார்கள். பின்னர் அவர்கள், 'நாங்கள் அனைவரும் குண்டலினி யோகம் பயின்று கொண்டிருக்கின்றோம்; ஆனால் உணவில் எந்த விதமான கட்டுப்பாட்டையும் மேற் கொள்ளவதில்லை; நீங்கள் இப்போது சொன்னதை வைத்துக் கொண்டு பார்க்கின்றபோது, உணவில் கட்டுப்பாடு எந்த அளவுக்குத் தேவை என்பதை உணர்ந்து கொண்டோம் என்றார்கள். உணவு உணர்வைக் கொடுப்பதனால் அதனை முறைப்படுத்திக் கொண்டு வாழ்ந்தால் தான் வாழ்க்கையில் உயர முடியும்.

மரத்தில் இருந்து இறக்கப்படும் கள்ளை உண்டால் மயக்கம் வருகிறது. ஆனால் அதே மரத்தில் உள்ள இளநீரை உண்டால் மயக்கம் வருவதில்லையே; ஏன்? கள்ளை உண்டு மயங்கியபோது, தாரம் என்றும், தாய் என்றும், தமக்கை என்றும் புரிவதில்லை. அதுவே மயக்கமற்ற நிலையில் அவர்களை யார் எவர் என்று உணர்ந்து கொள்ள முடிகின்றதே; ஏன்? இதனை, 'களித்தானைக் காரணம் காட்டாதே' என்றும், 'தாயின் முகத்திலும் இன்னாதே' என்றும் தெளிவாகக் குறிப்பிடுகின்றார் திருவள்ளுவர். ஆகவே உணவினாலே உணர்வுகள் மாறுகின்றன என்பதுதெளிவாகின்றது. உணர்வுகள் நன்னிலையில் இருந்தால்தான் நன்னிலையை அடைய முடியும். எனவே நல்வினையை அடைய உணவும் ஒரு காரணம் என்பதைத் தெரிந்து கொண்டால் அதையும் ஒரு விதியாகக் கடைப் பிடிப்பர். இந்த உணவைத் தான் நாம் சாப்பிட வேண்டும்; இப்படித்தான் நாம் உண்ண வேண்டும் என்று விதித்துக் கொள்ள வேண்டும்.

பெரும்பகுதியான மக்கள் சேர வேண்டு மென்றால் உணவைப் பற்றிச் சொல்லக் கூடாது என்றும், அத்துடன் வாழ்க்கை விதிமுறைகளையும் சொல்லக் கூடாது என்றும், அப்படி விதிமுறைகளைப் பற்றிச் சொன்னால் யாரும் நம்மிடத்தில் வந்து சேரமாட்டார்கள் என்ற காரணத்தால் பலரும் அவற்றைப்பற்றிச் சொல்லாமல் பொதுப்படையாகவே பேசி விட்டுப் போய் விடுகின்றார்கள் இதனால் மக்களுக்கும் பயன் இல்லை அவர்கள் வந்ததற்கும் பயனில்லை.

இன்னொர் உதாரணத்தையும் எடுத்துக் காட்டலாம். ஆங்கில மருத்துவர்களிடத்தில் நோய்க்கு மருந்து கேட்டால், ஒரு மாத்திரையைக் கொடுத்து, இதைச் சாப்பிட்டு வாருங்கள்; நோய் தீரும் வரையில் ரொட்டி, பால் மட்டும் சாப்பிட்டு வாருங்கள் என்று சொல்லுவார்கள். வேறு ஏதேனும் ஆகாரம் சாப்பிடலாமா என்று கேட்டால் அவற்றையெல்லாம் அப்புறம் சாப்பிடுங்கள், இப்போது ரொட்டியும் பாலும் மாத்திரம் சாப்பிடுங்கள் என்பர். ஆங்கில மருத்துவத்தில் பத்தியம் இல்லையென்று பலரும் நினைத்துக் கொண்டு இருக்கின்றார்கள். எந்த வைத்தியத்திற்கும் பத்தியம், ஆகார நியமம் மிகவும் இன்றியமையாதது.

சித்த மருத்துவர்களிடம் சென்றால் நோய்க்கு மருந்து கொடுப்பர். அதற்குப் பத்தியமாக, சாப்பிடக் கூடாத பண்டங்களையெல்லாம் ஒரு பட்டியல் போட்டுச் சொல்லிவிடுவார்கள். இவற்றைக் கேட்கின்ற நோயாளி, சித்த மருத்தவம் மிகவும் தொல்லை என்று எண்ணி அங்கே போகமாட்டார். ஆங்கில மருத்துவம்தான் மிகவும் எளிமையானது என்று எண்ணிக் கொண்டு அங்கேதான் போவார்கள். ஆங்கில மருத்துவத்திலும் பத்தியம் உண்டு. அவர்கள் இதை விளக்கமாகச் சொல்வதில்லை. சொன்னாலும் நோயாளி அதனைக் கடைப்பிடிக்காமல் விட்டுவிட்டு, நோய் முற்றிய பிறகு, 'டையட் கண்ட்ரோல்' இருக்க வேண்டுமென்றும், இல்லாவிட்டால் உயிருக்கே ஆபத்து என்றதும்தான் இவர்களுக்குப் புத்தி வரும். எனவே விதி என்பது எல்லா இடத்திலும் உண்டு. விதிகளைக் கடைப் பிடித்தால் நோய் விரைவில் தீரும். கடைப்பிடிக்காவிட்டால் நோய் முதிர்ந்து மிகவும் ஆபத்தான நிலைக்குக் கொண்டுபோய்விடும்.

இதைப்போலவே அஞ்செழுத்தை ஓதுவதற்கும் விதிகள் உண்டு. அந்த விதிகளை ஆசார்யன் சொல்லித் தருவார். இப்படி இப்படி இருக்க வேண்டும் என்று சொல்வார்கள். இந்த உபதேசங்களைப் பெற்றுக் கடைப்பிடிப்பதற்குச் சில விதிமுறைகளை நானும் வைத்திருக்கின்றேன்.

பொய் கூறாமை; புலால் உண்ணாமை; சினம் கொள்ளாமை என்ற இந்த மூன்றும் முக்கியமான விதிமுறைகள். உபதேசம் செய்யும்போது இந்த விதிமுறைகளை விதித்த பின்புதான் உபதேசம் செய்கின்றேன். உபதேசம் கேட்டுக் கொள்கின்றவர்களும் இவற்றை உறுதியாகக் கடைப்பிடிப்போம் என்று உறுதி மொழி கொடுக்கின்றார்கள். ஆனால் எத்தனைபேர் கடைப்படிக்கின்றார்கள்? மிகவும் கடினமானது தான். இந்த விதிமுறைகளை ஏன் விதிக்கின்றேன்?

சீவகாருண்யத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதற்காகப் புலால் மறுத்தலைச் சொன்னேன். முத்தி வீட்டின் திறவுகோலாக இருப்பதே சீவ காருண்ய ஒழுக்கம். அப்படிச் சொல்லாமல் புலால் மறுத்தல் வேண்டும் என்று சொல்லுகின்றோம். ஏன்? உணவிலே கட்டுப்பாடு வந்துவிட்டால் உள்ளத்தில் அமைதி வந்துவிடும். சினம் கொள்ள மாட்டார்கள். சினத்தை விடுங்கள் என்று சொன்னதற்குக் காரணம், 'சினம் சேர்ந்தாரைக் கொல்லி' எனப்படுவது. பலநூறு ஆண்டுகள் சேர்த்து வைத்த தவத்தை ஒரு நொடியில் போக்கிவிடும் இந்தச் சினம். எனவே தவ நிலையில் உயர்வதற்குப் பொறுமையோடு இருக்க வேண்டியது அவசியம். ஆனால் இதனைக் கடைப்பிடிப்பது மிகவும் சிரமம். ஆனால் கடைப்பிடித்துவிட்டால் அதுவே ஆன்மாவுக்கு நிறைவு. அருள் நிறைவை உண்டாக்கக் கூடியது பொறுமை. இதனை, ''நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை, போற்றி ஒழுகப் படும்'' என்பார் திருவள்ளுவநாயனார். இதைப் போற்றி ஒழுகுவார்களேயானால் நீண்ட நாட்கள் வாழ்வார்கள். எனவே விதியே கூடாது என்று சொன்னால் நம்முடைய தலைவிதியும் அப்படித்தான் கட்டுப்பாடில்லாமல் போய்விடும் என்று தெரிந்து கொள்ளலாம்.

°°° °°° °°° °°° °°° °°°

44. அஞ்சுஎழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுரா ணம்அனைத்தும் – அஞ்செழுத்தே
ஆனந்தத் தாண்டவமும் ஆறாறுக் கப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும்.

36 தத்துவங்களைப் பற்றி முன்னமே விளக்கமாகப் பார்த்து இருக்கின்றோம். அந்த 36 தத்துவங்களுக்கு ஆட்பட்டவர்கள் பேறு என்ற முத்தி நிலையை அடையமாட்டார்கள். முத்தி நிலையை அடைவது என்பது மிகவும் சிரமமான காரியம். முத்தி கூடப் பெரிதல்ல. முத்தி என்பது மோன நிலையை அடைவதற்குரிய வாயில்தான். 'முத்தி என்பது முன்னுறு சாதனம்' என்பார் வள்ளல் பெருமான். இறைவனை அடைவதற்கு அது ஒரு சாதனமாக இருக்கின்றது. வழியாக இருக்கின்றது. அவ்வளவுதான். அந்த வழியைக் கொண்டு அடைகின்ற பொருளை அடைந்தால், அடைவித்ததனால் அதற்கு முத்தி என்று பெயர். முத்தி இங்கே ஆகுபெயராகின்றது.

முத்தி என்பதற்குப் பேறு என்றே விளக்கம் எழுதியிருக்கின்றார்கள். முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனை – என்பார் மணிவாசகர். முத்தி என்பது ஒரு நெறிதான். அதுவே முடிவன்று.

முத்தி என்பதற்கு முதிர்ச்சி, மூன்று தீ, அல்லது முத்தீ என்றும் பொருள் கொள்ளலாம். 'முத்தீ விளக்கில் துஞ்சும் பொற்கோட்டு இமயமும் பொதியமும் போன்றே' என்பது புறநானூற்றுப் பாடல்.

முத்தீ என்பது மூன்று வகையாக எரிகின்ற தீயிலே மான்கள் கூட்டமாக வாழ்ந்து கொண்டிருக்கும். முனிவர்கள் வேள்விகளைச் செய்து யோகநிலையில் இருப்பார்கள்.

மூன்று தீ என்பது என்ன?

சூரியன், சந்திரன், நெருப்பு என்பதே மூன்று தீ. சூரியன் வலநாடி. சந்திரன் இடநாடி. நெருப்பு நடுநாடி. இம்மூன்று நிலையும் ஒன்றுகூடிச் செல்கின்ற நிலையை நீ அடையலாம். அந்தப் பேறு பெறுவதற்கு நீ 36 தத்துவங்களைக் கடந்து செல்ல வேண்டும். அப்படிக் கடந்து செல்கின்ற வழியே, நெறியே முத்தி நெறியெனப்படும்.

**அஞ்செழுத்து:**

ஆகமம், மறை, ஆதிபுராணம், ஆனந்தத் தாண்டவம், முப்பத்தாறு தத்துவங்களுக்கு அப்பால் விளங்கும் மோனந்த முத்தி ஆகிய அனைத்தும் ஐந்தெழுத்தே.

**ஆகமம்:**

ஆகமம் என்பது நூல். வேதம் என்றால் அது நூல் அல்ல. இரண்டையும் சேர்த்து வேதாகமம் என்பார்கள். வேதத்தைச் சான்றுக்கு எடுத்துக் கொள்ள மாட்டார்கள். காரணம் அது ஒரு நூலல்ல. அது ஒரு முன்னுரை. ஆகமம் என்ற நூலுக்கு முன்னுரை. முன்னுரையைச் சான்றாக எடுத்துக் காட்ட மாட்டார்கள் யாரும். நூலில் உள்ள கருத்தைத்தான் சான்றாக எடுத்துக் காட்டுவார்கள்.

**அண்ணல் அருமறையும்:**

மறை என்றால் வேதம். மறைகளும், ஆகமங்களும், புராணங்களும் இறைவனால் செய்யப்பட்டவையே. 'வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமச்சிவாயவே' என்று ஐந்தெழுத்துதான் வேதத்தின் மையமாக இருக்கிறது என்று சொன்னார்கள். ஆகமமாகப் பரந்து காணப்படுவதும் ஐந்தெழுத்துத்தான்.

**ஆதிபுராணம்:**

பழமையான, முதன்முதலில் தோன்றிய புராணம், நமக்குத் துணிவு சொல்கின்ற புராணம் – அதுவும் ஐந்தெழுத்தே.

உலகத்தில் எதை எடுத்தக் கொண்டாலும் அவையாவும் ஐந்தெழுத்தே. வேறு எதையும் நம்மால் பார்க்க முடியாது. ''ஞானமும் கல்வியும் நமச்சிவாயவே, நானறி விச்சையும் நமச்சிவாயவே'' என்று நமச்சிவாயப் பதிகத்தில் பல பொருள்பற்றிய விளக்கங்களைச் சொல்லியிருக்கின்றார்.

இனி, ஆகமம், மறை, புராணம் இவற்றைப் பற்றிய விரிவான விளக்கத்தைப் பார்க்கலாம்.

விதி, விதிப்படி நடத்தல், விதிப்படி நடந்தோர் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள் முறையே வேதம், ஆகமம், புராணம் எனப்படும்.

வேதகாலம், வேதகாலம் என்று சொல்லிக் கொண்டிருப்பவர்கள் இதைப்பற்றிச்சிந்திப்பதில்லை. ஆனால் இராமலிங்க அடிகளார் இதைப் பற்றிய சிந்தனையை வெளியிட்டிருக்கின்றார். ஆகமம் என்ற நூலுக்கு முன்னுரையாக அமைந்ததே வேதம். பெரிய புராணம் என்பது பெரியவர்களின் வரலாறு.

இப்போது நான் சொல்லிக் கொண்டிருக்கின்றேன்; நீங்கள் கேட்டுக் கொண்டிருக்கின்றீர்கள். இதற்கு முன்னுரை அல்லது வேதம் என்று பெயர். நான் சொன்னதைக் கேட்டுக் கடைப்பிடிக்க ஆரம்பித்தால் அதற்கு ஆகமம் என்று பெயர்.

விதிகள் வேதம். ஒழுகலாறுகள் அல்லது ஒழுக்கமாக இருப்பது ஆகமம். அந்த ஒழுகலாற்றைக் குறித்து வைப்பது புராணம்.

பதினான்கு சாத்திரங்களும் ஆகமம் அல்லது நூல். பனிரெண்டு திருமுறைகளும் அந்த (ஆகமம் என்ற) நூலுக்கு முன்னுரை. சில நேரங்களில் நூலை விட முன்னுரை பெரிதாக அமைந்துவிடும்.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

இங்கே ஆகமத்தை முன் வைத்து வேதத்தைப் பின் வைத்துள்ளார். பொதுவாக வேதத்தை முன் வைத்து ஓதுவதுதான் மரபு. இங்கே அதை மாற்றி சொல்லுகின்றார். ஆகமம் என்ற சொல் எப்படி வந்தது. இது தமிழ்ச் சொல்லா? வேற்று மொழிச் சொல்லா? இது பற்றி விரிவான விளக்கத்தைத் 'தேனருவி' என்ற நூலில் சொல்லியிருக்கின்றேன். இங்கே சற்றுச் சுருக்கமாகப் பார்க்கலாம்.

சங்க காலத்தில் ஆகமம் என்ற சொல் இல்லை. இது சமய காலத்தில் தோன்றி வழங்கி வருகின்றதொரு சொல். மிகப் பழமையான நூல்களிலும், நிகண்டு என்ற சொல் அகராதியிலும் 'ஆகமம்' என்ற சொல் காணப்படவில்லை.

பின்னால் வந்த புலவர்கள் இச்சொல்லைப் பயன்படுத்தியிருக்கலாம். அப்படி அவர்கள் சொற்களைப் படைக்கலாமா? அதற்கு ஏது என்ன? என்றால், புலவர்கள் தாங்கள் எண்ணிய கருத்துக்களைச் சொல்லுவதற்கு, முன்னால் உள்ள தொரு சொல்லை எடுத்துக் கொண்டு அதனை விரிவாக்கி, ஒரு சொல்லாகப் படைத்துக் கொள்ள அல்லது ஆக்கிக் கொள்ள, 'படைத்து மொழிதல்' என்ற விதியின்படி உரிமை உள்ளவர்கள். அப்படிப் படைத்து மொழிகின்ற போது, அது தூய்மையாக இருக்க வேண்டும்; செப்பமாக இருக்க வேண்டும்; கலப்பில்லாமல் இருக்க வேண்டும். அப்படிச் செய்யலாம் என்று ஒரு விதியைத் தொல்காப்பியனார் சொல்கின்றார். இதனைக் கிளவி ஆக்கம் என்ற பகுதியில் சொல்கின்றார்.

கிளவி என்றால் சொல், கிளறுதல், உள்ள உணர்ச்சியைக் கிளறுதல். உள்ளத்து உணர்ச்சி கிளர்ந்து வருகின்றபோது என்ன சொல்லைச் சொல்லலாம் என்ற திண்டாட்டம் வரும். அப்போது ஏதேனும் ஒரு சொல் அல்லது மொழியைப் போட்டு அதனைப் படைக்க வேண்டும். தானே (புலவர்கள்) படைக்கும் இப்படிப்பட்டச் சொற்களுக்குக் கிளவிஆக்கம் என்று பெயர். மேலும், ''நொய்யும் நுறுங்கும் களைந்து அரிசியாக்கினாற்போல'' என்று, சொல்லை எப்படிச் சொல்ல வேண்டுமென்று சொல்லுகின்றார். இனி அதில் களைய வேண்டியது ஒன்றுமில்லை என்கின்றாற் போல் அச்சொல் அமைதல் வேண்டும். அதுபோன்ற தூய சொற்களைப் படைத்துக் கொள்ள புலவர் பெருமக்களுக்கு உரிமை உண்டு.

அந்த வகையிலே ஞானிகளும், நன்கு கற்றறிந்த புலவர் பெருமக்களும் சொற்களைப் படைத்து மொழிவார்கள். அப்படி படைத்து மொழிந்த சொல்தான் ஆகமம் என்ற சொல். அதனைப் படைத்து மொழிந்தது புலவரா,

ஞானியா? ஞானிகளும் படைத்து மொழியலாம்; புலவர்களும் படைத்து மொழியலாம். சரி, இனி அச்சொல்லின் பொருள் என்ன என்று பார்க்கலாம்.

கமம் என்ற சொல்லுக்கு நிறைவு என்று பொருள். இது தொல்காப்பிய விதி. கமம்– நிறைதற்பொருட்டு. ஆ–ஆன்மா. ஆன்மாவில் நிறைவைத் தருவது எதுவோ அதற்கு ஆகமம் என்று பெயர். ஆன்மா எதனால் நிறைவுறும்? ஆசையினால் நிறைவு வராது. அன்பினால்தான் நிறைவு வரும். ஏன்?

'ஆரா இயற்கை அவா' என்பார் திருவள்ளுவர். எவ்வளவு கொடுப்பினும் பொருள்மேல் இருக்கும் அவா நிறைவுறாது. இன்னும் கொஞ்சம் கிடைத்தால் நல்லது என்று எண்ணுவார்களே தவிர போதும் என்ற எண்ணமே வராது. கிடைத்ததைக் கொண்டு எக்காலத்தும் நிறைவு பெற்றவர்கள் யாருமே கிடையாது.

உணவுபோட்டால் மட்டும் நிறைவுபட்டுவிடும் என்று சொல்கிறார்கள். ஆனால் அதுவும் நிறைவானது என்று சொல்ல முடியாது. அந்த நேரத்தில் நிறைவாகிவிட்டதுபோலத் தோன்றும். சிறிது நேரம் கழித்துக் கேட்டால், கொஞ்சம் பாயசம் இருந்தால் கொடுங்கள் என்பார்கள். பாயசம் கொடுத்தால், இரண்டு வடை இருந்தால் கொடுங்களேன் என்பார்கள். இது இயற்கை. இப்படி யாரும் கேட்காமல் இருந்தால், இப்படிக் கேட்டால் நம்மைத் தவறாக நினைத்துக் கொள்வார்களோ என்ற அச்சத்தின் காரணமாக இருக்குமே தவிர அது இயற்கையல்ல. வேண்டாம் என்று சொல்பவர்கள் வயிற்றில் இடம் இல்லாமை யால்தான்அப்படிச் சொல்வார்களே தவிர, உணவின் மேல் ஆசை இல்லை; அல்லது போதும் என்ற நிறைவு வந்துவிட்டது என்று சொல்லிவிட முடியாது. வயிற்றில் பசி இருக்கின்ற வரையில் யாரும் உணவைப் போதும் என்று சொன்னதில்லை. இதுதான் இயற்றை. இதைக் குற்றமென்றும் சொல்ல முடியாது. குறையாகவும் எடுத்துக் கொள்ளவும் கூடாது. அதுதான் ஆன்மாவின் இயல்பு என்று புரிந்து கொள்ள வேண்டும்.

அப்படியானால் மனதில் நிறைவு என்பது எப்போதுதான் வரும்? தனக்குக் கிடைத்ததைப் பிறருக்குக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் வரும் போதுதான் நிறைவு வரும். இதனை, 'ஈத்துவக்கும் இன்பம்' என்பார் திருவள்ளுவர். எப்போது கொடுக்கும் தன்மை வரும்? ஆசை அற்ற இடத்தில் தான் கொடுக்கின்ற இயல்பு மலரும். அப்படியானால் ஆன்மா நிறைவு பெறுவதென்பது எப்போது? அன்பினால்தான் ஆன்மா நிறைவு பெறும். ஆசையினால் நிறைவு வராது. அன்பினால்தான் நிறைவு வரும்.

ஆசை அற்ற இடத்தில் அன்பு மலரும். அன்பு மலர்ந்தால் நிறைவு வரும். அன்பின் வழியே ஒழுகி வந்தால், ஒழுகி நின்று பெற்ற அனுபவம் எதுவோ அதற்கு, அந்த அனுபவ நிறைவுக்கு ஆகமம் என்று பெயர். எனவே ஆகமத்தை அனுபவ நூல் அன்பு நூல் என்றும், வேதத்தை அறிவு நூல் அல்லது விதி நூல் என்றும் சொல்வர். இப்படி நட, இப்படி நடக்காதே என்று விதிப்பது வேதம். இது அறிவினால் விளைந்தது. அன்பின் மலர்ச்சிக்கும், அறிவின் வளர்ச்சிக்கும் அவனே காரணம்.

அறிவு இருந்தால் எதிலும் ஓர் ஒழுங்கு இருக்கும். அறிவில்லாவிட்டால் எதிலும் ஒழுங்கு இருக்காது. அறிவு என்பது ஒரு முறையை வகுத்துத் தருவது.

இயற்கை, அறிவாகவும் இருக்கிறது; நிறைவாகவும் இருக்கிறது. ஒன்றின்றி ஒன்று இல்லை. இவை அனைத்துமே ஐந்தெழுத்தின் வடிவாக இருக்கின்றது. ஐந்து எழுத்தின் வடிவாக இருந்து இறைவனே இயக்குகின்றான், இயங்குகின்றான், விளங்குகின்றான். விதிமுறை விளங்கவும் அவனே இயங்குகின்றான். அன்பால்? விளைவுகள், நிறைவுகள் நிலைபெற அவனே இயங்குகின்றான். ஒரு முறை இப்படி ஆடினால் ஒரு விளைவு; அப்படி ஆடினால் மற்றொரு விளைவு. அவன் ஆட்டம் இரண்டு வகையாகவும் இருக்கும் எனவே நிறைவு மலர விதிகள் தேவை. அதனால் விதி என்பது இன்றியமையாதது. விதிப்படி ஓது என இதனால்தான் சொல்லி வைத்தார்கள். விதி இருந்தால்தான் ஆன்மாவில் நிறைவு வரும். விதியில்லாமல் இருக்கக் கூடாது. ஒன்றில்லாமல் மற்றொன்றில்லை.

ஐந்தெழுத்தே அனைத்து விதியாகவும், அனைதது அனுபவமாகவும் இருக்கின்றதெனப் பார்த்தோம். அதுவே ஆதி புராணமாகவும் இருக்கின்றது. எப்படி?

புராணம் என்றால் வரலாறு. வரலாறு என்றால் காக்க வேண்டியது; காக்கப்படவேண்டியது; பாதுகாக்கப்பட வேண்டியது; புரத்தலாகிய வரலாறு; புரவலர் என்றால் காப்பாளர். புறவலர் என்றால் வெளியே போகின்றவர். புராணம் என்பதில் புர - புரத்தலாகிய (எதைக் காக்க வேண்டுமோ அதைப் புரந்து காத்தலாகிய) தன்மை. ஆதிபுராணம் என்பது நமக்குத் தெரியாமல் இருக்கின்ற இறைவனைப் பற்றிய செய்திகளைச் சொல்வது. ஆதி என்றால் திரோதம் என்று பொருள். இறைவன் நமக்குத் தெரியாமல் மறைந்திருக்கின்றான். அவனைப் பற்றிய செய்திகளைச்சொல்வது ஆதிபுராணம். அது ஐந்தெழுத்தைப் பற்றிச் சொல்வதுதான். இதில் எத்தனையோ செய்திகள் மறைந்து கிடக்கின்றன. மறைப்பாற்றலை முன் வைத்து இயங்கிக் கொண்டிருக்கின்றது. அது எப்படி மறைந்து கிடக்கின்றது என்பதைப் பார்க்கலாம்.

ஒருவர் அன்பு நெறியில் அல்லது கடமை நெறியிலிருந்து வாழ்ந்து கொண்டு இருக்கின்றார். அதனைக் கடமை அல்லது அன்பு அல்லது முறைமை நெறி என்று சொல்லுகின்றோமே தவிர, இதுதான் தெய்வீக வாழ்க்கை என்று சொல்லுவதில்லை. ஆகையால் தெய்வம் செயலாக இயங்குன்றது அல்லது செயலில் மறைந்து இருக்கின்றது என்பதைத் தெரிவிப்பதே ஆதிபுராணம்.

பெரிய புராணம்தான் புராணம். விதிப்படி ஒழுகி, மதிப்படி வாழ்ந்து, நிறை நிதியாக வாழ்ந்தவர்கள் பெரியவர்கள். அவர்களின் வாழ்க்கையைப் பற்றிச் சொல்வதே (பெரிய) புராணம். அவர்கள் வாழ்கின்ற போது அவர்கள் வாழவில்லை; அவர்கள் உள்ளத்தில் இறைவன் அறிவாக விளங்குகின்றான். அன்பாக விளங்குகின்றான்; தொண்டாக விளங்குகின்றான்; வாழ்வில் தூய்மையாக விளங்குகின்றான். இவர்களிடத்தில் விளங்கும் அனைத்துமே இறைவன். அந்த இறைவனின் வடிவாக விளங்குவதே ஐந்தெழுத்து. அதனாலே அதற்கு ஆதிபுராணம் என்றே பெயர்.

தொண்டைக் கடவுள் என்றா சொல்லுகின்றோம்; அன்பைக் கடவுள் என்றா சொல்லுகின்றோம்; இல்லையே; அன்பு, அறிவு, ஆன்ம நிறைவு, மதி நலம் இவையெல்லாம் ஆன்மாவுக்கு இல்லாத பண்புகள். இறை பண்புகள். ஆன்மாவில் இவையெல்லாம் இயங்குகின்றபோது அந்த வடிவிலே அவன் இருக்கின்றான். ஆனால் மறைந்து இருக்கின்றான். அவன் மறைந்து, அவன் வழி ஆன்மா இயங்குகின்றது. அப்படி வாழ்கின்றோர் வாழ்க்கை வரலாற்றைச் சொல்லுவதற்குப் புராணம் என்று பெயர். அப்படிப்பட்ட வரலாற்றைச் சொல்வது பெரிய புராணம் ஒன்றுதான். மற்றவையெல்லாம் புராணமல்ல.

இப்படிச் சொல்வது பொருந்துமா. என்ற ஐயம் எழக்கூடும்: திருவிளையாடற்புராணம் என்று இருக்கின்றதே அது புராணமில்லையா? என்றால் அதற்கும் புராணம் என்று உபசார பழக்காகப் பெயரே தவிர அது புராணமன்று. அது தத்துவ இதிகாசம். பதினெண் புராணங்கள் என்று இருக்கின்றனவே; அவையும் புராணமில்லையா என்றால் அவையாவும் உலகியல் புராணங்கள்; அல்லது உயிரின் இயற்கையைச் சொல்லுகின்ற இதிகாசங்கள் எனலாம்.

பெரிய புராணம் வரலாற்றின் அடிப்படையில் எழுந்த அற்புதமான நூல்; மற்றவை தத்துவத்தின் அடிப்படையில் எழுந்த கற்பனைக் களஞ்சியங்கள்.

இதிகாசங்கள் என்றால் ஒரு நெறி, முறை இல்லாமல் போகின்ற சீவ வாழ்க்கையைப் பற்றிப் பேசுவது. ஒரு நெறிமுறையும் அதிலிருக்காது. பளிச்சென்று தெரிகின்ற மாதிரி ஒரு கருத்தைச் சொல்லிவிட்டால் உங்களுக்குப் புரிந்துவிடும் தெரிந்ததைச் சொல்லுவதுதான் நியாயம்.

இதிகாசத்தில் ஒரு முறையே இருக்காது என்பதற்கு ஓர் உதாரணம். தேவி பாகவதம் என்பதும் இதிகாசத்தில் சேர்ந்ததுதான். அதை யாராவது படித்துவிட்டால் சிவபெருமானையும், தேவியையும் மதிக்கவே மாட்டார்கள். தேவியின் பெயராலே அந்த இதிகாசம் எழுந்தது. முழுமுதல் பரம்பொருளையோ, முழுமுதற்

பரம்பொருளுக்கு உறுதுணையாக எழுந்த ஆதிபராசக்தியையோ காறி உமிழ்ந்துவிடுகின்ற அளவுக்கு அசிங்கமாக எழுதப்பட்டிருக்கும் இதிகாசம் அது.

இன்னும் சுருக்கமாகச்சொன்னால் - இதிகாசம் என்ன சொல்லும் என்றால் தந்தையென்றோ, மகன் என்றோ, மைத்துனர் என்றோ எண்ணாமல் அனைவரையும் கலந்து கொள்ள நினைக்கும் பெண்ணைப் பற்றியும், தாய், தாரம், உடன்பிறப்பு என்றெல்லாம் எண்ணாமல் கலந்து கொள்ள நினைக்கும் ஆண்மகனைப் பற்றியும், இன்னும் இதுபோன்ற செய்திகளையும் கூறுவதுதான் இதிகாசம். ஆடு, மாடு, கோழி போன்ற விலங்கினங்கள் அண்ணன், தம்பி, அக்காள், தங்கை, தாய், தந்தை என்ற முறைமையையெல்லாம் பார்க்காமல் கலந்து கொள்வதைப்போலவே மனித மனமும் கலந்து கொள்ள எண்ணும். இப்படிப்பட்ட செய்திகள்தான் அவற்றில் நிரம்பிக் கிடக்கும். உதாரணமாக, என் அப்பா தன் அக்கா பெண்ணைக் கட்டிக் கொண்டார். எங்கள் பெரியப்பா பையன் அத்தை பெண் என்று அப்பெண்ணின் தங்கையைக் கட்டிக்கொண்டார். இப்போது உறவு முறை என்ன? சின்னம்மாவைத்தானே கட்டிக் கொண்டார். இதுதான் இதிகாசத்தில் உள்ள செய்திகள். இவற்றை யெல்லாம் விரிவாக அலசிப் பார்க்கக்கூடாது என்பார்கள்.

இப்படிப்பட்ட செய்திகளை விரிவாகச் சொன்னவை இதிகாசங்கள் மற்றும் புராணங்கள். ஆனால் முறைகளை வகுத்ததும், நெறிகளை ஊட்டியதும், வாழ்வை உயர்த்தியதும் அண்ணல் அருமறைகள்தாம்; மற்றதெல்லாம் இருளால் விளைந்தவை. இதிகாசங்கள் எல்லாம் இருள் என்ற ஆணவத்தில் விளைந்தவை. நான் (ஆசாரியார்) சொல்லுகின்ற வேதமும், ஆகமங்களும், புராணமும், முத்தி நெறியும் ஐந்தெழுத்தால் விளைந்தவை.

ஒளியில் குற்றமில்லை. குற்றமில்லாத நிலையில் விளைந்தவை அவை அனைத்தும். குற்றங்களோடு விளைந்த தன்மையைக் காட்டுவது இதிகாசங்கள். தெளிவாகத் தெரிந்து கொள்வதற்காக இச்செய்திகளைச் சொன்னேன். இதிகாசங்களின் மேல் எனக்கு ஒன்றும்

கோபமில்லை. இதிகாசங்களைப் பெரிதாகச் சொல்லிக் கொண்டிருப்பார்கள். அவையெல்லாம் மனிதனின் குற்றங் குறைகளைச் சொல்லி, அவன் (மனிதன்) தெய்வ நிலையில் உயர வேண்டும் என்பதற்காகச் சொல்லி வைத்தவை.

எனவே ஐந்தெழுத்துத்தான் அனைத்தும் என்று சொல்லி வைத்திருக்கின்றார்கள். ஐந்தெழுத்தை முறைப்படி கேட்டு, ஓதி ஒழுகினவர்களுக்கு அனுபவ விளக்கங்கள் கிடைக்கும். ஐந்தெழுத்தை முறைப்படி ஓதக் கேட்டது விதியாக அமையும். வேதமாக அமையும். வேதம் ஓதினால் மனம் தூய்மையாகும். ஆகமம் ஓதினால் கருங்கல் போன்றிருந்த ஆன்மா கரைந்துருகும். இதுதான் இவை இரண்டிற்கும் உள்ள வேறுபாடு.

அதனால்தான் வேதத்தை விட்ட அறமில்லை என்றார் திருமூலர்.

வேதாந்தம் கேட்க விரும்பி வேதியர்
வேதாந்தம் கேட்கும் வேட்கை ஒழிந்திலர்
வேதாந்த மாவது வேட்கை ஒழிந்திடல்
வேதாந்தம் கேட்டவர் வேட்கைவிட் டாரே.

என்பதனால் வேதாந்தமாவது அறம் என்பதனை உணரலாம்.

வேதத்தைக் கேட்டு ஆசை ஒழிய வேண்டும். ஆசையற்ற இடம் அறம் மிளிர்கின்ற இடம். வேதத்தின் பயன் அறம் மிளிர்தல். ஆகமத்தின் பயன் அன்பு உருக்கம். அறம் இருந்தால் தூய்மை ஏற்படும். ஆகமத்தை ஓதினால் உருக்கம் மிகுந்து நெஞ்சம் நெகிழும். நெகிழ்ந்த உள்ளத்தில் இறைவன் குடிகொள்ளுவான். இவ்வாறு அஞ்செழுத்து அனுபவத்தைக் கூட்டும். இப்படி ஓதி வர, ஓதவைத்த பொருளும், ஓதிய சீவனும் ஒன்று கலக்கும் காலம் வரும்.

நினைவுக்காக ஒன்றைச் சொல்கிறேன். ''ஏன் இவர் மிகவும் கேவலமாக இருக்கின்றார்'' என்றும், ''கேவலமாக நடந்து கொள்கின்றாரே'' என்றும் சொல்லக்

கேட்டிருக்கலாம். கேவல நிலை என்பது என்ன? 'நான்' என்ற முனைப்போடு இருப்பதற்குக் கேவல நிலை அல்லது இருள் நிலை என்று பெயர். எனவே ஆணவத்தோடு வாழ்வது கேவல நிலை. ஆனால் ஒரு மனிதன் சுத்த கேவலத்தில் வாழலாம். கேவலத்தில் வாழக்கூடாது. மாயையோடு பழகக் கூடாது. சுத்தமாயையோடு பழகலாம்.

ஒரு பழம் இருக்கிறது. அதில் மாயை, சுத்தமாயை என இரண்டு இருக்கின்றது. அந்தப் பழத்தில் இருக்கின்ற சக்கையெல்லாம் மாயைதான். அதனுள் இருக்கின்ற சாறும், அதன் சுவைவும் சுத்த மாயையாகும். சாற்றைச் சாப்பிட்டே தீர வேண்டும். அதனால் பயனுண்டு. ஆனால் சக்கையைச் சாப்பிடக் கூடாது. எனவே சுத்த மாயையோடு பழகலாம். ஆனால் அசுத்த மாயையோடு பழகக் கூடாது.

உடம்பு பருமாயை. சீவ உணர்வு சுத்த மாயை. இந்த உடம்பிலே ஐந்து கருவிகளிருக்கின்றன. அவற்றில் மாயையால் ஏற்படுவதற்கு ஆசை என்று பெயர். சீவனில் விளைவதற்கு அன்பு என்று பெயர். அதனால்தான் ''ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயனின்றே, மெய்யுணர்வு இல்லாதவர்க்கு'' என்றார் திருவள்ளுவர். மெய்யுணர்வு என்பது சீவ உணர்வு. உடம்பிலே என்றும் அன்பு மலராது. உயிரில் தான் அன்பு மலரும்.

வள்ளல் பெருமான் ஒரு விளக்கம் சொல்வார். அன்பு நெறி, பத்தி நெறி என்று விளங்கும். மனதால் நிகழ்வது பத்தி நெறி. மனதில் விளையும் உருக்கமும், நெகிழ்ச்சியும் விளைவிப்பது பத்தி நெறி, உயிரில் நிகழ்வது அன்பு நெறி, ஆன்ம உருக்கமும், ஆன்ம நெகிழ்ச்சியும் அன்பு நெறி. ஆன்ம உருக்கமும், ஆன்ம நெகிழ்ச்சியும் சுத்தமாயை. அதனுடன் பழகலாம். அதனுடன் கட்டாயம் பழக வேண்டும். இல்லாவிட்டால் சீவன் உய்யாது. மாறாகப் பரு மாயையில் ஆன்மா பழகவே விழையும். அப்படிப் பழகக் கூடாது. பழகினால் ஆன்மா உய்யாது. தாழ்ந்துவிடும்.

உடம்பின் மேல் ஒருவன் ஆசை வைத்துப் பழகுவானேயானால் தாழ்ந்த நிலைக்குப்

போய்விடுவான். ஒரு பெண் ஆண் உடம்பின்மேல் ஆசை வைப்பதும், ஒருஆண் பெண் உடம்பின்மேல் ஆசை வைப்பதும் தாழ்வான நிலைக்கு காரணமாக அமைந்துவிடும். எப்படித் தாழ்வார்கள்? இம்மையில் நோய்த் துன்பம் தாக்கும். மறுமைக்கு வேண்டிய ஆன்ம நெருக்கம், நெகிழ்ச்சி ஏற்படாது. உயிரில் அன்பு வைத்துப் பழகினால் உயிரில் நெகிழ்ச்சி வந்தால் ஆன்மா உயரும்; ஒளி பெரும். அது சுத்த மாயையினால் நிகழும். ஆகவேதான் இறைவன் சுத்த மாயையில் இறங்கி நின்றுகொண்டு உலகத்திற்கு நன்மை செய்து கொண்டிருக்கின்றான். அவனுடைய முதல் வருகையே சுத்த மாயையில்தான்.

சுத்த மாயையை தாரகமாகக் கொண்டு உலகத்தை, பண்டங்களை, உடலை, கருவிகளை, கரணங்களைப் படைத்தலாகிய செயல்களைச் செய்து கொண்டிருக்கின்றான். எனவே நாம் எதில் ஆசை வைக்க வேண்டும்; எதில் ஆசை வைக்கக் கூடாது என்று அறிந்து ஒழுகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

**கேவலம்:**

ஒரு சீவன் பெரிதும் கேவல நிலையில்தான் இருப்பான். அப்படி இருப்பது இயற்கை. ஆனால் இறைவன் அந்தச் சீவன் எப்போது சுத்த கேவல நிலைக்கு வருவான் என்று ஏங்கிக் கொண்டிருக்கின்றான்.

கேவலத்தில் இருப்பவர் யார்? சுத்த கேவலத்தில் இருப்பவர் யார்? என்பது பற்றித் தெரிந்து கொண்டால் இச்செய்தி தெளிவாகிவிடும். சமயத்தில் இருப்பவர்கள் இதைப் பற்றித் தவறாக எடுத்தக் கொள்ளவில்லை யென்றால் விளக்கம் சொல்லலாம்.

திருஞானசம்பந்தப் பெருமான், மற்றும் அவரைப்போன்றவர்கள் யாவரும் சுத்த கேவலத்தில் இருப்பவர்களே. நம்மைப் போன்றோர் அனைவரும் கேவலத்தில் இருப்பவர்களே. இதில் என்ன வேறுபாடு என்றால், 'நான்' இந்தக் காரியங்களைச் செய்து முடித்தேன்; 'நான்' இந்த நல்ல செயல்களைச் செய்து

முடித்தேன்; என்று இருவகையான வினைகளைச் செய்து கொண்டேயிருப்பார்கள். வினை செய்பவர்கள் கேவலத்தில் இருப்பவர்கள். அது நல்வினையாக இருக்கலாம், அல்லது அல்வினை யாகவும் இருக்கலாம். இப்படி வினை செய்வார் ஆணவத்தின் வசப்பட்டவர்கள்.

**சுத்த கேவலம்:**

யாரிடத்தும் எந்தவிதமான பேதமும் இன்றி 'அவன் செயல்' என்று எண்ணிப் பணி செய்தல் (தொண்டு செய்தல்) சுத்த கேவல நிலை எனப்படும். திருஞானசம்பந்தப் பெருமான் கையில் தாளத்தைக் கொடுக்க, அதைத் தாங்கி, உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்று பார்க்காமல் நாடு முழுதும் சுற்றிப் பணி செய்தார். அப்படியே அப்பர் பெருமானும் தொண்டு செய்து வந்தார். அப்படிச் செய்வதுதான் சுத்த கேவல நிலை. இந்த நிலைக்கு வந்த பிறகுதான் இறைவன் அவர்களைத் தன்னோடு சேர்த்துக் கொள்ளுவான். எடுத்து ஆட்கொள்ளுவான். ஒரு ஆன்மாவானது பக்குவப்பட்டிருந்தபோதும், சுத்த கேவல நிலைக்கு வராமல் கேவல நிலையிலேயே இருக்கின்றதே என்று இறைவன் ஏங்குவான். அவன் ஏங்குவது நமக்குத் தெரியாது.

வினை செய்தலாகிய தன்மை கேவலம். பணி செய்தலாகிய தன்மை சுத்த கேவலம். கைம்மாறு கருதாப் பணி, கைம்மாறு கருதிய பணி எனப் பணியில் இருவகை உண்டு. கைம்மாறு கருதிச் செய்வது கேவலம். கைம்மாறு கருதாமல் பணி செய்வது சுத்த கேவலம். இந்த இரண்டு நிலையிலும் ஆன்மா வாழ்ந்து கொண்டிருக்கின்றது.

°°° °°° °°° °°° °°° °°° °°°

நினைவிற்கு வந்து ஒரு செய்தியை உங்களுக்குச் சொல்கின்றேன். இப்படித் தத்துவங்களிலும் பல செய்திகள் உண்டு. பலரும் நூல் செய்கின்றார்கள். அந்தச் செய்திகள் யாவும் சரிதானா? என்று ஒரு முறை ஆய்வு செய்து பார்ப்பது நல்லது. ஏன் இதைச் சொல்கின்றேன் என்றால், இன்றைக்கு ஆதிசங்கரரைப் பற்றி ஒரு

செய்தியைப் படித்தேன். அதைப் படித்தவுடன் எனக்குள்ளேயே பலப்பல எண்ணங்கள் ஏற்பட்டது. எப்போதுமே நான் ஆதிசங்கரரின் கருத்துக்களை மறுத்து வந்திருக்கின்றேன். ஏனென்றால் அவர் 'நான் அதுவாகின்றேன்' (நான் கடவுளாகின்றேன்) என்று கருத்துச் சொல்கின்றார். இது சைவ சித்தாந்தக் கொள்கைக்கு மாறுபட்ட கொள்கை. இந்த மாயா வாதத்தை அறிஞர்கள் பலரும் மறுத்திருக்கின்றார்கள். எனக்கும் இந்தக் கருத்தில் உடன்பாடு கிடையாது.

ஆனால் இன்றைக்குப் படித்த அந்தச் செய்தியில் 'நான் அதுவாகின்றேன்' என்பதையும், 'நான் அது' என்ற கருத்துக்களை தவறானது என்று ஆதிசங்கரரே மறுத்திருக்கின்றார் அவரிடத்திலும் சைவக் கருத்துக்கு மாறான கருத்து இல்லை. இந்தச் செய்தியைப் படித்ததும் எனக்குள்ளேயே அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன். என் இருகைகளினாலும் என் இரண்டு கன்னங்களிலும் போட்டுக் கொண்டேன். என் கண்களில் நீர் மல்கியது. ஏன்? ஆதிசங்கரரை நாம் தவறாகப் புரிந்து கொண்டோமே என்ற வருத்தம்மேலிட்டது.

அத்தவற்றிற்கு முழுப் பொறுப்பும் என்னுடையதல்ல. மாயாவாதக் கொள்கைகளைப் பற்றி எனக்குச் சொன்னவர்களும் சரியாகச் சொல்லவில்லை; ஆதிசங்கரரின் கருத்துக்களை விளக்கியவர்களும் ஆதிசங்கரரையும், அவர் சொன்ன கருத்துக்களையும் உணர்ந்து உரை செய்யவில்லை என்பதைப் புரிந்து கொண்டேன். பின்னால் வந்த சங்கரர்கள் எல்லாம் ஆதிசங்கரர் சொன்னதை விளக்குவதுபோல் 'நான் அதுவாகின்றேன்' என்று தவறாக விளக்கி வைத்திருக்கின்றார்கள். அதற்குத்தான் சைவ சித்தாந்திகள், மறுப்புத் தெரிவித்திருக்கின்றார்கள். நானும் அக்கருத்தையே கொண்டிருந்தேன். ஆனால் இன்று படித்த செய்தி, எல்லோருமே பிழையாக ஒரு செய்தியை விளக்கியும், பரப்பியும் வந்திருக்கின்றார்கள் என்பதை உணர வைத்தது.

குறிப்பிட்ட சில காலங்களிலேதான் நம்மால் சில கருத்துக்களை உணர்ந்து கொள்ள முடிகின்றது. எல்லாக் காலங்கிளலும் எல்லாக்கருத்துக்களையும் நம்மால் தெரிந்து கொள்ள முடிவதில்லை. காரணம் எல்லா நூல்களும் நமக்கு

ஒரே காலகட்டத்தில் கிடைப்பதும் இல்லை; அவை அனைத்தையும் நம்மால் ஒருங்கே படிக்கவும், ஆ ய்வு செய்யவும் முடிவதில்லை. நமக்கும்இவற்றையெல்லாம் தெரிந்து கொள்வதற்கு ஒரு காலம் தேவைப் படுகின்றது. அதனால் கிடைக்கின்ற நூல்களையும், அவற்றுக்கு வந்த மறுப்பு நூல்களையும் படிக்கின்றோம்; அல்லது கருத்துக்களைக் கேட்கின்றோம். பிறகு அந்தக் கருத்துக்களைச் சொல்லுகின்றபோது அவர்கள் சொன்னவர்களின் கருத்துக்களுக்குத் தவறாகப் பொருள் கண்டிருக்கக்கூடும் என்று எண்ணத் தோன்றுகின்றது.

இன்னொரு கருத்து: பெரிய புராணத்தை யாரேனும் உண்மை நேயத்தோடு படிக்கிறேன்; அல்லது மதிக்கிறேன் என்று சொன்னால் அவர்களுக்கு சாதி அபிமானம் இருக்கவே இருக்காது. ஆனால் இப்போது பெரும் பகுதியும் பார்த்தால் தங்கள் சாதிப் பெயரைத் தங்கள் பெயரோடு போட்டுக் கொள்வதைப் பார்க்கலாம். ஏன் இப்படிப்போட்டுக் கொள்கின்றீர்கள் என்று கேட்டால், மற்றவர்கள் எல்லாம் தங்கள் தங்கள்சாதிப் பெயரைப்போட்டுக் கொள்ளும்போது நாங்கள் மட்டும் போட்டுக் கொள்ளக் கூடாதா என்று மாற்றுக் கேள்வி போடுகின்றார்கள்.

இன்னும் சிலர் சபைகளை நடத்துகின்றார்கள். ஆனால்அதில் தங்கள் இனத்தவரைத் தவிர மற்றவர்களைச் சேர்த்துக் கொள்வதில்லை; யாரும் அப்படி உள்ளே நுழைவதையும் விரும்புவதில்லை.

உண்மையாகப் பெரிய புராணத்தை மதிக்கின்றவர்கள் சாதிகளையும், குறுகிய நோக்கங்களையும கொண்டவர்களாக இருக்கவே மாட்டார்கள். ஏன்? பெரிய புராணத்தில் சாதிகளின் அடிப்படையில் எதுவும் சொல்லப்படவில்லை. அடியவர்களில் உயர்வு தாழ்வு கற்பிக்கப்படவில்லை. அடியவர்கள் அனைவரையும் ஒரு கோட்டில் வைத்து வணங்கினார்களே தவிர, சாதிப் பிரச்சனையோ, உயர்வு தாழ்வோ கற்பிக்கவில்லை. எனவே பெரிய புராணத்தைப் படிக்கின்றவர்கள்; அதன்மேல் பத்தி பூண்டவர்கள்சாதிகளையும், மற்ற செய்திகளையும் கருதக் கூடாது. வெளி வேடம் போடுகின்றவர்கள் பெரிய புராணத்தைத் தொடவே கூடாது.

இப்படிச் சொல்வதற்கு ஒரு முக்கியமான காரணம் உண்டு. ஆதிபுராணம் என்றால் அது பெரிய புராணந்தான். ஏனெனில் நமக்குக் கிடைத்த முதல் புராணமே பெரிய புராணந்தான். அதில் வரும் அடியவர்கள் அனைவரும் விதியை உணர்ந்து, விதியின் (நெறியின்) வழி நின்று, அன்பு பெருக, ஆகமத்தில் நின்று ஆகம வழியில் நின்று, ஆகமத்துக் ஓர் எடுத்துக் காட்டாக வாழ்ந்து காட்டியவர்கள். அவர்களுடைய வரலாற்றைச் சொல்வதே பெரிய புராணம். அதுவே ஆதிபுராணம். அதுவே நமக்குத் தேவையான புராணம்.

அவர்கள் கண்ட முடிவு என்ன? அவர்களுக்கும் கடவுளுக்கும் தொடர்பு உண்டா? இதற்குண்டான விடையை வள்ளல் பெருமானே சொல்கின்றார்.

''சாதிசமயச் சழக்கை விட்டேன் அருட்
சோதியைக் கண்டேனடி அக்கச்சி
சோதியைக் கண்டேனடி''

என்பார். சாதி, சழக்குகளை விட்டவர்கள் அடியவர்கள். அதனால் அவர்கள் கடவுளைக் கண்டவர்கள். அப்படியானால் நமக்கும் கடவுளுக்கும் தொடர்பு ஏற்படாதா? என்று கேட்கலாம். அத்தொடர்பு நமக்கு ஏற்படாது. ஏன்? நம்மிடத்தில் சாதி, சமயம் என்ற சழக்குகள் இருக்கின்றன. அவை எப்போது நம்மைவிட்டு நீங்குகின்றதோ அப்போதுதான் நாம் கடவுளைக் காண்போம்.

அப்பர் பெருமான், 'சாத்திரம்பல பேசும் சழக்கர்காள்' என்று ஏசுவார். அவ்வளவு பெரியவர் ஏன் கோபப்படுகின்றார்? சழக்கர்கள் என்ன செய்வார்கள் என்றால் சாத்திரத்தைக் கைக்கொண்டு, வம்பு பேசிக் கொண்டு இருப்பார்கள். 'சாத்திரத்தில் இப்படிச் சொல்லியிருக்கின்றது; சாத்திரத்தில் அப்படிச் சொல்லியிருக்கின்றது; சாத்திரத்தை இன்னார்தான் ஓத வேண்டும்; மந்திரங்களை இன்னார்தான் சொல்ல வேண்டும்' என்றெல்லாம் வம்பு பேசுவர். வாதம் புரிவர். சாத்திரத்தைப் பற்றிப் பேசிக் கொண்டு இருப்பார்களே தவிர, சாத்திரத்தில் சொல்லப்பட்ட கருத்துக்களைக் கடைப் பிடிக்க மாட்டார்கள்.

சாத்திரத்தில் சொல்லப்பட்டுள்ள விதிமுறைகளுக்குக் கட்டுப்பட்டவர்கள் எந்த இனத்தவராக இருந்தாலும் ஓதத் தகுந்தவர்கள். இறைவன் அருளுக்குப் பாத்திரமானவர்கள். சாத்திரத்தை ஓதுதலைவிட, ஓதி ஒழுக வேண்டும் என்ற உள்ளப் பாங்குடையவர்களாக இருப்பார்கள். உதாரணமாக, நந்தனாருக்கு ஒரு சாத்திரமும் தெரியாது; கண்ணப்பருக்கும் சாத்திரம் ஏதும் தெரியாது; இன்னும் பல அடியார்களுக்கு சாத்திரத்தைப் பற்றியே தெரியாது. பின்னர் அவர்கள் எப்படி இந்த உயர்ந்த நிலைக்கு வந்தார்கள் என்றால் அவர்கள் சாத்திரம் சொன்ன நெறிமுறைகளில் ஒழுகிக் கொண்டேயிருந்தார்களே தவிர, இறைவன் காட்டிய வழியில் நின்று தொண்டு செய்து கொண்டிருந்தார்களே தவிர, மற்றவர்களை மருட்டிக் கொண்டு வாழ்க்கையை நடத்தவில்லை. அதனால்தான் அவர்கள் எல்லாம் ஆண்டவன் திருவடிக்குச் சென்றார்கள்.

இதையெல்லாம் விட்டுவிட்டுச் சாத்திரம், சாத்திரம் என்று சொல்லிக் சாத்திரத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தால், அந்தச் சாத்திரமா இறைவன் திருவடிக்குப் போகப் போகின்றது; இல்லையே. சாத்திர விதிகளில், நெறிமுறைகளில் வாழ்க்கையை அமைத்துக் கொண்டு அந்த விதிகளை கடைப்பிடிக்கின்றவர்கள் தாம் இறைவன் திருவடிக்குப் போகின்றார்கள் என்பதை உணர்ந்து வாழ்வை செம்மை நெறியில் செலுத்துதல் வேண்டும். நெறிமுறைகளில் வாழ்கின்றவர் தாம் இறைவன் திருவடிக்குப் போவார்களே தவிர, சாத்திரங்கள் இறைவன் திருவடிக்குப் போவதில்லையே.

இப்படிச் சொன்னவுடன், சாத்திரங்கள் வேண்டாம்; கோயில் வேண்டாம், புராணங்கள் வேண்டாம் என்றெல்லாம் சொல்லக் கூடாது. எண்ணக் கூடாது. இவற்றையெல்லாம் ஏன் நம் பெரியவர்கள் வைத்தார்கள் என்பதைக் கற்று, கேட்டு, உணர்ந்து வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும். அவற்றில் கற்பிக்கப்பட்ட நுட்பங்களை அறிய முயல வேண்டுமே தவிர, மேம்போக்காகக் கடைப்பிடித்தல் கூடாது என்பதே நம்முடைய நோக்கம்.

கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்
பாத்திரம் சிவம் என்று பணிந்தீரேல்
மாத்திரைக்குள் அருளும்...

என்று வாக்கினாலும் அறியலாம். சிவம்தான் பாத்திரம் என்று நினைத்துக் கொள்ளுங்கள். அவனைப் பாத்திரமாகக் கொண்டு பணியத் தொடங்கினால் உங்களுக்குக் கோத்திரமும் கிடையாது; குலமும் கிடையாது, வேறெதுவும் கிடையாது. அப்படி முதிர்ந்து, ஒரு நிலையில் நின்று, முதிர்ந்து இறைவனை அடைந்து ஒன்றானவர்கள், 'நான் அது ஆதல்' என்பதனைத் தெரிந்து ஒழுகுவார்கள்.

நான் அதுவாதல் என்பது எப்படி?

காலையில் சூரியன் உதித்தது. மலையில் பனி உறைந்து வெண்மையாகக் காணப்பட்டது. சூரியனின் செம்மையான கதிர்கள் அப்பனிமலையின் மேல்பட்டு, மலை முழுதும் பொன்மயமாகக் காட்சியளித்தது. அந்த நேரத்தில் அங்கே ஒரு கருங்காக்கை வந்து அந்த மலைமேல் அமர்ந்தது. மலையின் பொன்னிறமும், காலைச் சூரியனின் பொன்னிறமும் அதன்மேல் பட்டுக் காக்கையும் பொன்னிறமானது போன்றதே நான் அதுவாதல் என்பதற்குச் சான்று.

ஓர் ஆசார்யரிடம் ஒரு மாணவன் நீண்ட நாட்கள் படித்துக் கொண்டு இருந்தான். இப்போது அவன் ஆசார்யனா? அன்றி மாணவனா? ஆசார்யர் இடத்தில் என்ன உணர்வு இருந்ததோ அதே உணர்வு மாணவனிடத்திலும் பதிந்து இருக்கும். அப்போது அவன் ஆசார்யனாகவே ஆகிவிடுவான். உதாரணமாக;

விவேகானந்தர் அமெரிக்காவில் பலநாள்கள் சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டிருந்தார். ஆனால் அச்சொற்பொழிவுகளின் போது எப்போதுமே தன் ஆசிரியரைப் பற்றிச் சொல்லவில்லை. இந்தச் செய்தியைச் சிறிது திரித்து இராமகிருஷ்ணரிடம் அவருடைய மாணவர்கள் சொன்னபோது, அவர் சிரித்துக் கொண்டே, 'அவன் எங்கே பேசுகின்றான்; நானல்லவா அங்கேயிருந்து பேசிக் கொண்டிருக்கின்றனே; நானே என்னைப் பற்றி எப்படிப் புகழ்ந்து கொள்ள முடியும்' என்றாராம். என்று

பதில் சொன்னாராம். ஒரு நிலைக்குப் போன பிறகு மாணவன் ஆசார்யனின் தன்மையை அடைந்துவிடுகின்றான். அவன் (மாணவனின்) தன்மை மறைந்து விடகின்றது. அப்படியே நெறிமுறைகளில் சென்று கொண்டிருக்கும் சீவன் ஒரு நிலையை அடைகின்றபோது அவனிடத்தில இறைவனது தன்மைகளின் பதிவு ஏற்பட்டுவிடுகின்றது. அதற்குப் பின்னர் அவன் பேசுவது, நடப்பது, செயல்கள் யாவும் இறைவனது செயலாகவே அமைந்துவிடுகின்றது. இதைத்தான் நானாதல் என்றார். இதனை 'எனதுரை தனதுரை' என்பார். நெருப்பைச் சார்ந்த இரும்பு, நெருப்பாவது போன்றதே ஆசார்யனைச் சார்ந்த மாணவன்; இறைவனைச் சார்ந்த அடியவன் நிலை. இதைத்தான் 'நானாதல்' என்றார்கள்.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

45. முத்தி தனைஅடைந்தோர் முந்துபழம் போதுஅங்கி
வித்தகமாம் வீணை இவையிற்றின் – ஒத்த
இரதம்மணம் வெம்மை எழில்நாதம் போல
விரவுர் என்று ஓதும் விதி.

**முத்தி:**

முத்தி என்பதற்குப் பரமுத்தி என்று பொருள் வருவித்துக் கொள்ளும் வகையில் சொல்லியிருக்கின்றார். ஏன் அப்படிச் சொல்ல வேண்டும்? முத்தியைப் பலவகையாகப் பல சமயத்தவரும் சொல்லியிருக்கின்றனர்.

பாடாண முத்தி என்றார் ஒருவர். கல்லைப்போல அசையாதிருத்தல் பாடாண முத்தி எனப்படும். அது முத்தியல்ல.

அரிவையர் இன்புறும் முத்தி என்றார் உலகாயதர். பெண்களோடு மகிழ்ந்திருத்தலே முத்தி என்பது அவர்களது கருத்து.

இப்படியாகப் பலரும் பலவகையான முத்திகளைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இவையெல்லாம்

முத்தியல்ல. இவற்றையெல்லாம் கடந்து, இதற்குமேல் ஒன்றும் இல்லையென்ற பொருளோடு கலந்து இன்புறுவதே முத்தி என்றார். அதனால் அதற்குப் பரமுத்தி என்று பெயர். முத்தி என்பது முதிர்ந்த நிலை.

சீவனுக்கு முத்தி என்பது முடிவானதா? உபசார வழக்கில் முத்தி முடிவானது. ஆனால் முத்தி முடிவானதன்று. இதனை நான் சொல்லவில்லை. வள்ளல் பெருமான் சொல்லுகின்றார். 'முத்தி என்பது முன்னுறு சாதனம்' என்று. இறைவனை அடைவதற்கு முன்னுறு சாதனம் – அது ஒரு வழி – அவ்வளவுதான். அந்த வழியைக் கொண்டு அடைகின்ற பொருளை அடைவிப்பதனாலே இதை முத்தி என்று சொன்னார்கள். இங்கே ஆகு பெராகிவிடுகின்றது இச்சொல்.

பல பண்டங்களைச் சாப்பிடுகின்றோம். ஒவ்வொரு பண்டத்தைச் சாப்பிடும் போதும் ஒரு சுவை தெரிகின்றது. ஆனால் அந்தச் சுவை சுவைத்ததும் மறைந்து போகின்றது. ஆனால் ஒரு சுவையைச் சுவைத்ததன் பின்னும் மறையாமல் இருக்கும். அதுவே மேலான சுவை. அதற்குப் பரம் என்று பெயர்.

முத்தி அடைந்தோர் அனுபவிக்கும் சுவை எப்படியிருக்கும் என்றால் பழத்தின் சுவையைப் போலிருக்குமாம். அவனை அடைந்தோர் பழத்தின் சுவையைப் போல் இருப்பார்கள். நெருப்பில் வெம்மையைப் போலிருப்பார்கள். மலரின் மணம் போலிருப்பார்கள்; வீணையில் இசைபோலிருப்பார்கள். மிகவும் அருமையான உவமை இது. வேறெதைச் சொன்னாலும்புரியாது. ஒரு சீவன் முத்தி அடைந்தான். முத்தி அடைதல் என்பது பரம்பொருளோடு கலந்து பழகும் நிலை. அவனுடைய மொழி, பார்வை, இணக்கம் ஆகிய அனைத்தும் பழத்தின் சுவை ஒருவருக்கு அளிக்கும் நன்மையைப்போல் பிறருக்கு அளித்துக் கொண்டிருக்கும்.

பழத்தின் சுவை பலவேறு நன்மைகளைச் செய்து கொண்டிருக்கும். ஆனால் தீங்கு செய்யாது. ஆகவே பழத்தின் சுவையை உவமையாகச் சொன்னார்.

சீவன் மலராகவும், இறைவன் அதில் எழும் மணமாகவும் இருப்பார்கள். சீவன் பழமாக இருப்பான். இறைவன் அதனுள் இருக்கும் சுவையைப்போல் இருப்பான். சீவன் நெருப்பாக இருப்பான்; இறைவன் அவனுள் இருக்கும் வெம்மையாக இருப்பான். சீவன் வீணையாக இருப்பான். இறைவன் அவனுள் எழுகின்ற நாதமாக இருப்பான்.

இதற்கு மேலும் ஒரு விளக்கம் இருக்கின்றது. பழத்தின் சுவை தீங்கு செய்யாது; மலரின் மணம் முகத்தைச் சுளிக்கச் செய்யாது; இவன் தூய்மையாக இருப்பதனால் இவனுள் எழுகின்ற வெம்மையும் இவனோடு சேர்ந்தாரையும் தூய்மை செய்து கொண்டிருக்கின்றது. இவனிடத்தில் எழுகின்ற வெம்மை, விடுகின்ற மூச்சு – அது பிறரைத் தூய்மை செய்து கொண்டிருக்கும். இப்படி நிகழுமா? மூச்சு கூட பிறரைத் தூய்மையாக்குமா? இதற்கு விடையாக, ''தந்தையர்நாடென்ற பேச்சினிலே, ஒரு சக்தி பிறக்குதுமூச்சினிலே'' என்று பாடியிருக்கின்றார் பாரதியார். மூச்சில் ஒரு சக்தி இருக்கின்றது. மூச்சில் வெம்மையும் இருக்கின்றது. உதாரணமாக –

எலிகள் யாவும் கடலெனத் திரண்டு ஆரவாரத்தோடு ஒரு பாம்பை அழிக்கப் புறப்பட்டன. எலிகளைப் பார்த்துப் பாம்பு படமெடுத்துக் கொண்டு ஒரு மூச்சு விட்டவுடன் அனைத்தும் இறந்து விழுந்துவிடும். ''உவரி எலிப்பகை நாகம் உயிர்ப்பக் கெடும்'' என்பார் திருவள்ளுவர். உவரி என்றால் கடல். கடல்போன்று அளவில்லாத எலிகள் வந்தாலும் நாகம் மூச்சு விட்டதும் இறந்துவிட்டதாம். அப்போது நாகத்தின் மூச்சின் வல்லமை எவ்வளவு என்று பார்த்தீர்களா?

முத்திதனை அடைந்த சீவனின் மூச்சினில் ஒரு சக்தி பிறந்து அவனோடு இணக்கம் கொண்டவனுடைய மலங்கள் எல்லாம் தீய்ந்து கருகிப்போய் அவனுக்கு நன்மை பயக்கும். எனவே மூச்சும் நன்மை பயக்கும் என்பதனைத் தெரிவித்தார்.

வீணையில் எழுந்த நாதம் துன்பத்தில் ஆழ்ந்தாருடைய உள்ளத்தை எப்படி மகிழ்விக்குமோ அப்படியே

இவனுடைய பேச்சைக் கேட்டார் துன்பத்தை மறந்து, மனநிறைவு கொள்வர். வீணையைப் பற்றிப் பாரதிதாசன், "துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ பாடமாட்டாயா..." என்று பாடுவார். எனவே துன்பத்தைப் போக்குவதும், உள்ளத்தை மகிழச் செய்வதும் வீணையின் நாதம் என்பதை உணரலாம். பிறவித் துன்பத்தையும், பிறவாப் பேரின்பத்தையும் தரவல்லது முத்திதனை அடைந்தோர் மொழி – அது நாதமாகப் பயன்படும்.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

இங்கே பழம், போது, அங்கி, வித்தகமாம் வீணை என நான்கைச் சொல்லி இருக்கின்றார். நிறைவை அடைந்துவிட்டார், அனைவருக்கும் (அவர்களைச் சார்ந்து விட்ட) அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் தர வல்லவர்கள், வழங்கத் தக்கவர்கள். இவற்றை எல்லோர்க்கும் வழங்கிவிடுவார்களா? என்றால் எல்லோர்க்கும் வழங்கிவிடுவார்கள். அதில் எந்தச் சந்தேகமும் வேண்டாம். அப்படியானால் நாங்களும் அவற்றைப் பெற்றுக் கொள்ளலாமா என்றால் அவர்களும் வழங்கலாம்; நீங்களும் பெற்றுக் கொள்ளலாம். ஆனால் அதற்கு நேரம், காலம் கனிந்திருக்க வேண்டும். இதற்கோர் உதாரணம் சொன்னால் விளங்கிவிடும்.

சூர்யோதயம் நாளும் நிகழ்கின்றது. தாமரைக் குளத்தில் இருக்கும் அனைத்துத் தாமரைகளும் மலர்ந்துவிடுவதில்லை. சில தாமரைகளே மலர்கின்றன. இன்னும் சில அரும்பாகவும், மொட்டாகவும், போதாகவும் இப்படிப் பல நிலைகளில் இருக்கின்றன. சூரியனைக் கண்டவுடனே அனைத்தும் மலர்ந்துவிடுவதில்லை. அரும்பாக இருந்தது மறுநாள் மொட்டாகின்றது; அதற்கும் மறுநாள் போதாகின்றது; பின்புதான் அது மலர்கின்றது. சூரியன் நாளும் வந்தாலும், தன் கதிர்களைப் பரப்பினாலும், அனைத்தும் ஒரே நாளில் மலர்வதில்லை. அவற்றிற்குப் பக்குவம் ஏற்பட்டு, முதிர்ந்த நிலையில்தான் மலர்கின்றது.

இப்படியே முத்தி நிலை அடைந்த ஆசான் வந்தார் என்றால் எல்லோர்க்கும் முத்தியைக் கொடுத்துவிடுவார் என்று எதிர்பார்க்கக் கூடாது. நாளும் நாளும் அரும்புக்குப் போதாகும்பக்குவமும், போதுக்கு மலராகும் பக்குவம்

வந்ததுபோல மாணவனும் முத்தி நிலையை ஏற்கும் பக்குவம் வந்தாலன்றி ஆசான் வழங்கும் முத்தி உடனே பலனளிக்காது.

காலங்கள் தோறும் அரும்பை உண்டாக்குவதும், அரும்பைப் போதாக்குவதும், போதிலிருந்து மலரை உண்டாக்குவதும் கதிரவனின் இயற்கை. அப்படியே அருளாசிரியர்கள் உலகம் என்ற குளத்தில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற சீவன்களாகிய நமக்கு – நம் மனம் மலர, கீழ்வானத்தில் நாளும் எழுகின்ற கதிரவனைப்போல உதவி நிற்கின்றார்கள். அவர்களுடைய தரிசனம் நாளும் நாளும் நம்மை மலரச் செய்யும்.

சென்ற பாடலில் 'நான்' என்பது எப்படி ஆகின்றது? நான் என்று சொல்வது என்ன? அப்படி ஆகின்ற நிலை எது என்பதைப் பற்றிச் சொன்னார்.

இறைவனை அடைந்து நான் அவனாதல் என்ற நிலையைத்தான் 'ஆதல்' என்று சொன்னார். மனிதனுடைய நிலை கீழேயிருந்தாலும் மேலே இருந்தாலும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். சுகங்கள் வேறு வேறே தவிர, துன்பங்கள் அனைத்து நிலையிலும் ஒன்று தான். அதன் நிலைகளும் ஒன்றுதான்.

உதாரணமாகச் சொன்னால் மனிதன் அறியாமை என்ற இருளில் இருக்கின்றான். ஆனால் அறியாமை இருளில் தான் இருப்பது அவனுக்குத் தெரிவதில்லை. அப்படியே மேலே போய் அருள் நிலையில் இருக்கின்றபோதும் தன்னிடத்தில் அருள் பதிந்திருப்பதும் அவனுக்குத் தெரிவதில்லை. இரண்டு நிலையும் கட்டுண்ட நிலைதான். அருள் நிலையில் உயர்ந்து, மலர்ந்த நிலையில் இருந்தாலும், தான் அப்படிப்பட்ட நிலையில் இருப்பதாகத் தெரியவில்லையே என்றுதான் நினைப்பான். இதுவும் கட்டுண்ட நிலைதான். கீழே அறியாமையில், ஆணவத்தில் அழுந்திக் கிடந்தபோதும் தனக்கு ஆணவம் இருக்கின்றது என்ற நினைப்பதில்லை; ஆனால் ஆணவம் தன்னிடத்தில் இருக்கிறது என்பதை எப்போது உணர்கின்றான் என்றால் இஷ்டப்பட்ட காலத்தில்தான் தெரிந்து கொள்கின்றான்.

ஆணவத்தோடு கலந்து, அறியாமையில் தான் திகழ்கின்றபோது, தன்னிடத்தில் ஆணவமும், அறியாமையும் இருப்பதாக அவன் அறிவதேயில்லை. அருளில் கலந்து நின்றபோதும் தன்னுள் அருள் பதிந்திடுகின்றதென்று அறிவதேயில்லை. இரண்டுக்கும் இடைப்பட்ட நிலையில் இருக்கும் போதுதான் தன்னிடத்தில் ஆணவமும், அறியாமையும் இருக்கின்ற தென்றும், இதனினும் வேறாக அருள் இருக்கின்றதென்றும் உணருகின்றான்.

இதனை, அறியாத நிலை, அறிந்த நிலை; அறிந்தும் அறியாத நிலை எனச் சொல்லலாம்.

அறிந்தும் அறியாத நிலையில்தான் சில பாகுபாடுகளை உணர்ந்து மனிதன் ஒழுக முடியும். அந்த நிலையை விட்டு மேலே நிலைக்குப் போய்விட்டவர்கள் நமக்கு உரை நிகழ்த்தினார்கள். அவர்கள் ஏதேனும் நமக்கு உபதேசம் செய்ய வந்தால் அவர்கள் எந்த நிலையில் இருப்பார்கள் என்றால் அப்போதும் சாதாரணமாக இருப்பார்களே தவிர, தாம் சொல்லும், உரை அருளுரை என்று நினைக்க மாட்டார்கள். சொல்லிக் கொண்டேயிருப்பார்கள். எழுதிக் கொண்டேயிருப்பார்கள்; பேசிக் கொண்டேயிருப்பார்கள்; வாழ்த்திக் கொண்டே யிருப்பார்கள். அவ்வளவுதான். அதில் அவர்களுக்கு நிறைவு இருக்கின்றதா? அது நிறைமொழியா? அதனால்நன்மை விளையுமா? என்று கேட்டால் அவர்களுக்குச் சொல்லத் தெரியாது.

மேலும், நிறை அறிவாகிய அருள் நிலையில் உயர்ந்தவர்கள், கல்வியாளரைப்பார்த்தால் கலங்கு வார்கள்; தர்க்கவாதியைப் பார்த்தால் நடுங்குவார்கள். ஏன்? அவர்கள் ஏதேனும் கேட்டால் நம்மால் எப்படிப் பதில் சொல்ல முடியுமா என்று தவிப்பார்கள். ஆனால் அதையும் கடந்து அவர்கள் வந்து ஏதேனும் கேட்கத் தொடங்கினால், ''இறைவா; நீ தான் எனக்குச் சொல்லித் தரவேண்டும்; எனக்கு ஒன்றும் தெரியா'' என்று வேண்டிக் கொள்வார்கள். அப்படி நின்ற நிலையில் அவர்களோடு அவனாகி உரை நிகழும். இறுமாந்து வந்த கல்வியாளன், தர்க்கவாதி ஓடிப்போவான். அப்போது 'நான்' என்ற நிலை அங்கே அற்றிருக்கும்.

"முத்தி நிலையில் மூன்றும் மொழியக் கேள்" என்கின்றார். நான் ஆதல் ஆகிய தன்மை அவனாகும் தன்மை. அந்த நிலையில் அவர்கள் எப்படியிருப்பார்கள்? அந்த நிலையில் தாம் இருப்பதாகவே அவர்கள் அறிய மாட்டார்கள். பழத்தில் இருக்கும் சுவை, தான் சுவையாக இருப்பதைப் பழத்திடம் சொல்லுமா? நெருப்பில் இருக்கின்ற சூடு, நெருப்புக்குச் சொல்வதில்லை. வீணையில் எழுகின்ற நாதமும் வீணையே நான் நாதமாக இருக்கின்றேன் என்று சொல்வதில்லை. அது போலவே அவனோடு கலந்திருக்கின்றபோது, 'பெருமானே, உன்னுடைய வார்த்தைகளை நான் பேசுகின்றேன்; எண்ணுகின்றேன்' என்று சொல்லுவதில்லை.

ஓர் ஐயம். அப்படிக் கலந்து நின்றவர்கள், 'எனதுரை, தனதுரை' என்று சொல்லியிருக்கின்றார்களே, என்றால் அவர்களை அப்படிச் சொல்லுமாறு அவர்களை இயக்கினான் இறைவன். அவர்கள் வாயினால் அவ்வார்த்தைகள் வந்ததே தவிர அவர்கள் வார்த்தையன்று.

சீவன் வீணை; இறைவன் நாதம். சீவன் பழம். இறைவன் அதன் சுவை சீவன் நெருப்பு. இறைவன் அதன் வெம்மை. சீவன் மலர். இறைவன் அதில் உள்ள மணம். இப்படி நிலைப்பொருளாகச் சீவனும, அதனுள்ளிருந்து வெளிப்படும் பொருளாக இறைவனும் கலந்திருக்கும் நிலை இது. இவற்றைப் பிரித்துவிட முடியாது.

அப்படியானால் இதுவரையில் இருந்த தத்துவங்கள் என்னவாயிற்று?

46. தத்துவங்கள் எல்லாம் சகசமாய் ஆன்மாவில்
பெத்தத்தில் நிற்கின்ற பெற்றிபோல் – முத்திதனில்
சித்தமலம் அற்றார் செறிந்திடுவர் என்றுமறை
சத்தியமா ஓதியிடுந் தான்

பெத்தம் என்பது கட்டுண்ட நிலை, பிறப்பு நிலை.

36 தத்துவங்கள், 60 தாத்துவீகங்கள். ஆக 96 தத்துவங்கள். தத்துவங்கள் பருமையானவை. தாத்வீகங்கள் நுண்மையானவை. தத்துவம் என்பது பருப்பொருளாகிய இந்த உலகம். தாத்துவீகம் என்பது அந்த மலர்ச்சியில்

வருகின்ற விளைவு. தத்துவம் பூப்போன்றது. தாத்வீகம் அதில் விளையும் மணம்போன்றது. சில மலர்களில் விளைவு இல்லை; சிலவற்றில் விளைவு இருக்கின்றது. அதனால்தான் 60 தாத்துவீகங்கள். இவற்றை நுண் விளைவு; மிகுநுண்விளைவு என்று கொள்ளலாம். இவை எல்லாவற்றையும் தத்துவங்கள் என்று பொதுப்படையாகச் சொன்னார்கள். முத்தி நிலை அடைந்த பின்பு இவையெல்லாம் எப்படியிருக்கும்? நாம் பிறந்தபோது எப்படியிருந்தனவோ அப்படிச் செயல்படாமல் இருக்கும். அது எப்படி?

அவனாதலாகிய நிலையில் நின்று வாழ்கின்றவன் உலகியலி ஈர்ப்பில்லாமல் இருப்பான். அத்தன்மையை எப்படி விளங்கிக் கொள்வது? தத்துவங்கள் எப்படிச் செயல்படாது என்பதை எப்படித் தெரிந்து கொள்வது? கடினந்தான். இருப்பினும் ஓர் உதாரணத்தால் விளக்கலாம் என்று எண்ணுகின்றேன்.

புளியைப் பார்த்தவுடன் நாவில் நீர் ஊறக்கூடாது. மாங்காயைப் பார்த்தால் நாவில் நீர் ஊரக்கூடாது. உணவைப் பார்த்தவுடன் நாவில் நீர் ஊறக்கூடாது. இப்படிப்பட்டவர்கள் தத்துவங்கள் அடங்கப் பெற்றவர்கள். பிறந்த நிலையில் நமக்கு எதுவும் தெரியாமல் இருந்ததே அப்படிப்பட்ட நிலைதான் இதுவும்.

**முத்திதனில் சித்தமலம் அற்றார் செறிந்திடுவர்:**

சித்தமலம் என்பதனைச் சித்தம், மலம் என்று பிரித்துக் கொள்க.

சித்த மலத்தை நாமாகத் தெரிந்து கொள்ள முடியாது. இறைவனே 'இதுதான் சித்த மலம்' என்று அறிவித்த பின்புதான் அறிய முடியும். எல்லா மலமும் அகன்றாலும் சித்த மலம் மட்டும் அறுவது கடினம். அது மட்டும் இருந்து கொண்டே இருக்கும். அதனை இறைவன்தான் அறிவிக்க வேண்டும்; அறுக்க வேண்டும்; பின்பிர் தான் ஆட்கொள்வான். 'சித்தமலம் அறிவித்துச் சிவமாக்கி எனையாண்ட, அத்தன் எனக்கருளியவாறு ஆர்அறிவார் அச்சோவே' என்பார் மணிவாசகர்.

**சகசம்:**

இருளில் இருப்போர்க்குத் தாங்கள் இருளில் இருப்பது தெரிவதில்லை. ஒவ்வொருவரிடத்தும் அறியாமை இருக்கின்றது. படிப்படியாக அறிவு பெறுகின்றார்கள். அப்படி அறிவு பெற்றவர்கள் யாராவது, தங்களிடத்தில் அறியாமை இருந்தது என்று ஒத்துக் கொள்வார்களா? மாட்டார்கள். அறிவு வந்துவிட்ட பின்னும் எல்லாவற்றையும் அறிந்து கொண்டார்கள் என்று சொல்லிவிட முடியாது.

உதாரணமாக, ஒரு கைப்பிடி மண்ணை எடுத்துக் கொடுத்து இதில் என்ன என்ன இருக்கின்றது என்று சொல்லுங்கள் என்று கேட்டால் சொல்ல முடியுமா? ஒரு இலையைக் கையில் கொடுத்து இதில் என்னென்ன இருக்கின்றது; இதனால் என்ன பயன்? என்று கேட்டால் சொல்லிவிடமுடியமா? ஆனால் இந்த மண்ணும், மலரும், மற்ற மற்ற பொருள்களும் நமக்குத் தெரிந்துதான் இருக்கின்றது. அவற்றின் பயன், விளைவு இன்னதென்று கேட்டால் அனைவராலும் சொல்லிவிட முடியாது. அப்போது அந்த நிலை வரையில் நம்மிடத்தில் அறியாமை இருக்கின்றதென்பதை உணர்ந்து கொள்ள வேண்டும். இப்படிச் சொல்லி, விளக்கினால்தான் யாரும் தங்களிடத்தில் அறியாமை இருக்கின்றதென்று ஒத்துக் கொள்வார்கள். பொதுவாக யாரும் அறியாமை இருப்பதாகச் சொல்லிக் கொள்வதில்லை. அதனால்தான் இதற்குச் சகசமலம் என்றார்கள்.

சித்த மலம் எப்போது அறும்?

முத்தி வந்தால் சித்த மலம் அறும். சீவன் முத்திப் (முதிர்ந்து) போனால் அறுந்துவிடும். காய் முதிர்ந்தால் துவர்ப்பு அற்று இனிப்பு ஏறிவிடுவதுபோல, சித்தமலம் என்ற காய் முதிர்ந்த நிலையாகிய முத்தி நிலையை அடைந்ததும் சித்தமலமும் அற்றுவிடும்.

சித்து என்பது அறிவு. சித்த மலம் – அறிவான மலம் என்றும் ஒரு பொருள் உண்டு. மலத்திலும் அறிவான மலம் இருக்கின்றதா என்றால் உண்டு. மலமே அறிவிக்கின்றது. அப்படி அறிவிப்பதனாலே அதனை அறிவிக்கின்ற மலம் என்றார்கள்.

'அதுவா எனக்குத் தெரியாது? வாங்க நான் காட்டுகிறேன்' என்பார்கள். 'நான் காட்டுகிறேன்' என்று ஆணவம் சொன்னதாலே அதற்கு அறிவிக்கின்ற மலம் உண்டு என்பதை அறியலாம். மலத்தால் அறிவிக்க இயலாத அறிவு ஒன்றுண்டு. அதனை ஆணவத்தால் அறிவிக்க முடியாது. ஆணவத்தால் அறிய முடியாத அறிவு என்று உண்டு. அது இறைவனது அறிவு. அது, 'இதுவரையிலும் எல்லாவற்றையும் உனக்கு அறிவித்தது அறிவு மலம் (சித்தமலம்); அது என்னை அறிவிக்காது. என்னை நீ அறிய வேண்டுமென்றால், நீ சித்த மலத்தை அகற்றிவிட வேண்டும்' எனச் சித்த மலத்தை அறிவித்து, அறுத்து, ஆன்மாவைத் தனதாக்கிக் கொள்ளுவான்.

**முத்திதனில் செறிந்திடுவர் என்றுமறை சத்தியமா ஓதியிடுந் தான்:**

பிறவி நிலையில் மலம் எப்படி இருந்ததோ, அதேபோல முத்தி நிலையில் தத்துவங்கள் இருக்கின்றன.

பிறவி நிலை என்பதற்கும், பெத்த நிலை என்பதற்கும் என்ன வேறுபாடு? இரண்டும் ஒன்றுதான். பிறந்த குழந்தையிடத்தில் தத்துவ அறிவு இருக்குமா? இருக்காது. பிறந்து, வளர்ந்து கொண்டிருக்கின்ற குழந்தையிடத்தில் தன்பால் எத்தனை தத்துவங்கள் உண்டு என்பதை அறிகின்ற அறிவு இல்லை. அதேபோல முதிர்ந்த நிலையிலும் தன்பால் எது எது அகன்றது? எது எது இருக்கின்றது என்று அறிகின்ற அறிவும் இல்லை. ஏன்? அவற்றையெல்லாம் அறிய வேண்டிய அவசியமில்லை. அந்த இடத்தில். அகல வேண்டிய இடம் உண்டு; ஆனால் அறிய வேண்டிய அறிவு இல்லை அங்கே. குழந்தையிடத்தில் அறிய வேண்டிய அறிவு இல்லை. எது எது அகன்றது என்று அறிகின்ற தன்மை முதிர்ந்த நிலையில் இல்லை. எனவே இரண்டும் ஒரே நிலைதான். பிறகு இரண்டுக்கும் என்ன வேறுபாடு?

பெத்த நிலையில் துன்பம் இருக்கின்றது; முத்தி நிலையில் இன்பம் இருக்கின்றது. அதுதான் இரண்டுக்கும் உள்ள வேறுபாடு. இந்த இரண்டிலே எது வேண்டுமோ அதை நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இதை உண்மையாக மறைகள் எடுத்து ஓதுகின்றன. அவை ஆதி மறை, அநாதி மறை.

மறையை ஓதியது இறைவன் என்று ஒரு வழக்கு இருக்கின்றது. வேதகாலத்தில் வேதம் வந்தது; அந்த வேதங்களை இறைவனே ஓதினான் என்று வழக்கமாகச் சொல்லுவார்கள். நமக்கு அதில் எந்தவிதமான இடர்ப்பாடும் இல்லை. ஆனால் அது மட்டுமே மறை, அதற்குப் பிறகு மறைகளே தோன்றவில்லை; அல்லது வேறு மறைகளே கிடையாது என்று சொல்வதுதான் பொருந்தாக் கூற்றாகின்றது.

ஒரு குறிப்பைச் சொன்னால் உங்களுக்குப் புரிந்துவிடும். ரிக்கு, யஜுர், சாமம் அதர்வணம் என்ற நான்கு வேதங்களும் சமஸ்கிருத மொழியில் இருக்கின்றது என்பர். அதிலே பிழையில்லை. அது அம்மொழியில்தான் இருக்கின்றது. ஆனால் அதைத்தவிர மறை ஏதும் இல்லை என்பதே பிழையான கருத்து.

அந்த மொழியைத் தெரிந்து ஓதுவோர் எத்தனை ஆயிரம் மக்கள் உள்ளனர். 80 கோடி மக்கள் உள்ள இந்தியாவில், எத்தனை ஆயிரம் பேர் அந்த மொழி தெரிந்தவர்கள் இருக்கின்றார்கள். ஐயாயிரம் பேர் இருப்பார்கள்? ஐம்பதாயிரம் பேர் இருப்பார்களா? அல்லது ஐந்து லட்சம் பேர் இருப்பார்களா? சரி, ஐந்து லட்சம் பேருக்கு அம்மொழி தெரிந்திருப்பதாக ஒரு வாதத்திற்காக வைத்துக் கொள்வோம். அதில் எத்தனைபேர் அதன் பொருள் தெரிந்து ஓதத் தெரிந்தவர்களாக இருப்பார்கள். இப்படிச் சில ஆயிரம்பேர் இருக்க, மற்றவர்கள் எல்லாம் அதுபற்றித் தெரியாதிருக்க, அம்மொழி தெரிந்தவர்கள் தாம் முத்திக்குப் போவார்கள் என்றால் மற்றவர்கள் எல்லாம் நரகத்திற்கா போவார்கள்; எனவே அந்த மொழி தெரிந்து, பொருள் தெரிந்து அந்த வேதத்தை ஓதினால் அனைவருமே முத்திக்குப் போகலாம். அப்படிச் சொல்லாமல், 'இதைத்தான் ஓத வேண்டும்' என்றும், 'இது மட்டுமே மறை' என்றும் சொல்வது பயனற்ற மொழி; பற்றுள்ள மொழி எனக் கொள்ள வேண்டும். இதை அவர்களும் சிந்திக்கலாம். சிந்திக்காவிட்டால் ஏதோ ஒருவிதப் பற்றுதான் அப்படிச் சிந்திக்காமலிருப்பதற்குக் காரணம் என்று தெரிந்து கொள்ளலாம். பற்றுகளை விட்டால் சிந்தனைகள் தெளிவாகிவிடும்.

அந்த மறைகளை மற்றவர்கள் ஓதக்கூடாது என்று சொல்கிறார்களே, ஏன்? அப்படிச் சொல்வது தவறு. மொழி தெரியாத யாரும் அவற்றை உச்சரிக்கும்போது தவறாகத்தான் உச்சரிப்பார்கள். ஆனால் அதைப் பலகால் பக்கத்தில் இருந்து உச்சரிக்கும்போது கேட்டுப் பழகினால் யாரும் எளிதில் எந்த மொழியையும் பயின்று விடலாம். அப்படிப் பயில்வதற்கு 'ஓதுதல்' என்று பெயர். 'ஓதாதார்க்கில்லை உணர்வொடு ஒழுக்கம்' என்பது ஔவையாரின் வாக்கு. எதையும் ஓதவில்லை யென்றால் உணர்வு கலந்த ஒழுக்கம் நிலைபெறாது.

எல்லா மக்களும் ஒழுக்க சீலர்களாக இருக்க வேண்டுமென்பது ஔவைப்பிராட்டியின் கருத்து. ''நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை'' என்பார். அப்போதுதான் நாட்டின் ஒழுக்கம் நிலைபெறும். தவறுகள் நடவாது.

அவர்கள் சொல்கின்ற வேதம் ஒழுக்கத்தைப் போதிக்கின்றது என்று சொன்னால் அதைப் பிறருக்கும் ஓதுவிக்க வேண்டும்; நாமும் ஓத வேண்டும். இது பரந்த நோக்கம். உலகம் வாழ வேண்டுமென்ற உயர்ந்த நோக்கத்தைக் குறிக்கும். அதனை விடுத்து இது ஒரு சாரார்க்குத்தான் உரியது என்றும், மற்றவர்கள் அதை ஓதக்கூடாது என்றால் உயர்வு தாழ்வு கற்பிப்பதற்காக இப்படிச் சொல்கின்றார்கள் என்றும், கருதலாம். அல்லது அதில் குற்றம் குறைகள் இருப்பதனால் அதைப் பிறர் யாரும் தெரிந்து கொள்ளக்கூடாது என்று நினைக்கின்றார்கள் என்றும் கொள்ளலாம்.

உயர்வு தாழ்வு என்ற கொள்கையினால் தங்களை உயர்ந்தவர்கள் என்று கருதிக் கொள்கின்றவர்களுக்குத்தான் ஆபத்து. அது எப்படியென்றால் ஆயிரம்பேர் வாழ்கின்ற ஒரு ஊரில் பஞ்சமும், பசியும் தலைவிரித்து ஆடுகின்றது. அப்போது ஒருவர் வீட்டில் 100 மூட்டை நெல் இருக்கின்றதெனறால் அவர் என்ன செய்ய வேணடும்? பசித்தவர்களைக் கூப்பிட்டு அனைவருக்கும் பகிர்ந்து கொடுத்துத் தானும் உண்ண வேண்டும். இல்லாவிட்டால் வலுக்கட்டாயமாக அதனை அவரிடமிருந்து பறித்துக் கொள்வார்கள். தடுத்தால் அவருக்கும் ஆபத்து ஏற்படும். நாட்டில் மக்கள் பசியற்று வாழ வேண்டும்; ஒரிருவர்

மட்டும் நன்றாக வாழ்ந்து கொண்டு மற்றர்கள் வறுமையில் இருப்பதைக் கண்கொண்டும் பார்க்காமல் இருந்தால் நாடு கெடுவதுடன் நலமாக இருக்கின்ற மற்றவர்களும் கெட்டுவிடுவார்கள்.

எனவே நாட்டு மக்கள் ஒழுக்க சீலர்களாக இருக்க வேண்டுமென்றால் ஒழுக்கத்தைப் போதிக்கும் வேதத்தை (அவர்கள் உயர்வாகச் சொல்லிக் கொள்ளும் வேதத்தை) எல்லோருக்கும் ஓதக் கற்றுத் தர வேண்டும். அதன் வழியில் நின்று ஒழுக வேண்டும். அதை விடுத்து, மற்றவர்கள் அதனை ஓதக்கூடாது என்று சொல்லி உயர்வு தாழ்வு கற்பிப்பது தவறான செயல்.

எந்த மறையிலும் சில குறைகள் இருக்கத்தான் செய்யும். ஆகவே ஓதக்கூடாது என்று சொல்லக் கூடாது. அந்த மறையை ஒரு சிலரே ஓத, அவர்களே மேல் நிலையை அடைவர் என்றும், மற்றவர்கள் மேல்நிலையை அடையக்கூடாது என்ற எண்ணம் வந்துவிடும். அதை விடுத்துத் தங்கள் மொழியில் இருக்கின்றதென்றும், அது உயர்வான கொள்கைகளைச் சொல்கின்றதென்றும், விரும்புவோர் அதனைத் தெரிந்து கொள்ளலாம் என்று சொல்லலாமே தவிர, தங்களை மறையைத் தவிர மறையே இல்லை என்றும், அந்த மறையை ஓதினால்தான் முத்தி நிலை அடைய முடியும் என்பதும் பற்று வைத்த நிலையாகும்.

காலத்தால் சில வேதங்கள் மறைந்து கொண்டே யிருக்கும்; அப்படியே காலத்தால் சில மறைகள் பாதுகாக்கப்பட்டு நிற்கும். புராதனப் பொருளைப் போற்றி வைப்பது போல சில பொருட்களைப் போற்றி வைத்துத்தான் ஆக வேண்டும். அப்படிப் போற்றி பாதுகாக்கப்பட்டவையே மறைகளும்.

மறை என்பது வெளிப்படையாக எதுவும் தெரியாமல் ஓதுவாருடைய உள்ளத்தை தூய்மை செய்வதற்காக அமைந்த மந்திரங்கள். அதனால்தான் 'மறை' என்று பெயர் வைத்தனர். மந்திரங்கள் பொதிந்த மொழிக்கு மறை என்று பெயர். 'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரம் என்ப'' என்று இலக்கணம். வெளிப்படையாகச் சொல்லாமல் இந்த மந்திரத்தைச்

சொல்லிக் கொண்டே இருந்தால் உங்களுக்கு நன்மை பயக்கும் என்று சொல்லிவிடுவார்கள். திருமுறைகள் யாவும் ஏறக்குறைய இப்படித்தான் இருக்கும்.

திருமுறைகளைச்சுரம் போட்டுப் பாடக்கூடாது என்று ஒரு விதி வைத்து இருக்கிறார்க்ள. அப்படியானால் திருமுறைகளைச்சுரம் போட்டு பாட முடியாதா என்றால் பாடலாம். ஏழுசுரங்களைப் போட்டுப் பாடலாம். ஒருமுறை மறைந்த சீர்காழி கோவிந்தராஜன் அவர்கள் திருமுறைப்பாடல்களைச் சுரம்போட்டு உடனே பாடிக் காட்டினார். பாடி முடித்தவுடனே, 'திருமுறையைச் சுரம்போட்டுப் பாடக்கூடாது என்று விதி இருக்கின்றது; ஆனால் விதியை மீறி நான் சுரம்போட்டுப் பாடிவிட்டேன், அதனால் எல்லோரும் என்னை மன்னிக்க வேண்டும்' என்ற வேண்டிக் கொண்டார். ஏன் சுரம் போட்டுப் பாடக்கூடாது என்றார்கள்?

நான் சொன்ன கருத்து: திருமுறைகளை ஓதுகின்றவர்கள் திருக்கோயில்களில் ஓதும்போது பண் முறையாகப் பாடவேண்டும்; மக்களிடத்தே திருமுறைகளைக் கொண்டு செல்லுகின்ற போது இசைமுறையாகப் பாடவேண்டும் என்பதே. ஏன் இப்படிச் சொன்னேன் என்றால், இசை முறையில் பாடும்போது மக்களை அந்த இசை கவரும். அப்போது திருமுறைகளில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்களும் மக்கள் மனதில் பதியும். திருக்கோயில்களில் பாடுகின்றபோது பண் முறையில் பாடுதல் வேண்டுமென்றது, நம்முடைய பழமையான இசையின் புராதனத் தன்மையைப் பாதுகாப்பதாக அமையும் என்பதற்காகச் சொன்னேன்.

பண் முறையில் பாடுவதில் என்ன சிறப்பு? பண்முறையில் ஐந்து சுரங்கள்தான் உண்டு. இராகம் என்று வருகின்ற போது ஏழு சுரங்கள் உண்டு அதற்கு. பண்முறையில் ஐந்து சுரங்களை வைத்ததன் நோக்கம் என்ன? பண் பஞ்சாக்கரத்தை உள்ளீடாக, மந்திரமாக, வைத்து இயற்றப்பட்டதாகும். இந்த உண்மையைத் தெரிந்து கொண்டால் போதும்.

மறை என்றால் இந்த உண்மையைச் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் அவை மறை அல்ல.

மறைகள் இறைவனால் சொல்லப்பட்டது என்று சொல்கின்றார்கள் அல்லவா? அந்த மறை என்ன சொல்கின்றதென்பதற்கு ஓர் உதாரணம்: அதில், 'ஏ, இந்திரனே, என் மனைவி மக்களைக் காப்பாற்றிக் கொள்ளுகின்ற வல்லமையை எனக்குக் கொடு, என் பகைவர்களை அழிக்கவல்ல கருவிகளைக் கொடு' என்று சொல்கின்றது; முறையிடுகின்றது இந்திரனை நோக்கி.

மறைகளைச் சொன்னவன் எல்லாம் வல்ல பரம்பொருள். இந்திரன் என்பான் அந்த இறைவனை நோக்கித் தவம் செய்து அவனிடத்திலிருந்து அதிகாரம் பெற்று வாழ்பவன். இப்போது வரம் தந்த வரம்பில்லா ஆற்றல் வாய்ந்த இறைவன் பெரியவனா? வரம் பெற்ற வரம்புக்குட்பட்டு வாழ்கின்ற இந்திரன் பெரியவனா? இந்த அடிப்படையில் பார்க்கின்ற போது அந்த மறை இறைவனால் சொல்லப்பட்டதன்று என்று பெரியவர்கள் முடிவு சொல்கின்றார்கள். அதனால்தான் சிவப்பிரகாச சுவாமிகள் ஒரு பாடலில்,

விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரணன் உரையெனும் ஆரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூர் அண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ

என்பார். வேதங்களை மூலகாரணனாகிய சிவபெருமான் சொல்லியதாகச் சொல்லுகிறார்கள் (சிவப்பிரகாசர் இதை ஒத்துக் கொள்ளவில்லை); மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத்தை வேதமாக சொல்கின்றார்கள். இரண்டையும் ஒத்திட்டுக் காட்டுகின்றார். அதிலுள்ள வேறுபாட்டையும் சுட்டிக் காட்டுகின்றார். அவர் சமஸ்கிருத வேதங்களை நன்கு பயின்றவர். அவற்றை ஓதும்போது ஒலிகளைச் சரியாக உச்சரிக்க வேண்டுமென்ற எச்சரிக்கையும் விடுகின்றார்.

எனவே மறை என்பது இப்படித்தான் இருக்க வேண்டுமென்று சொல்லிவிட்டார்கள். அதில் எந்தக் குழப்பமும் வேண்டாம். எந்த வேதத்திலும் நிறை, குறை இருக்கத்தான் செய்யும். அதை ஒப்புக் கொண்டால் போதும். ஆனால் பிடிவாதமாக எங்கள் வேதத்தில்

குறையே இல்லை என்று சொல்வதுதான் பிழை. மேலும் அந்த வேதந்தான் வேதம்: மற்றதெல்லாம் வேதமல்ல; அந்த வேதத்தை ஓதினால்தான் முத்தி கிடைக்கும் என்றெல்லாம் சொல்வதுதான் பொருந்தாது என்பதை விளக்கவே இவ்வளவும் சொன்னேன்.

அந்தந்த காலத்தில் மக்களுக்கு நல்வழியைக் காட்ட மகான்கள் தோன்றி வழிகாட்டினார்கள். அவர்கள் வழி நின்றவர்கள் நற்கதியை அடைந்தார்கள் என்று கொள்ள வேண்டுமேயன்றி, இன்னார்தான் வழி காட்ட முடியும், அவர் வழி நிற்காவிட்டால் யாரும் முத்தியடைய முடியாது என்று சொல்லுவது பிடிவாதமான கூற்று மட்டுமன்று பொருந்தாக் கூற்றுமாகும். இது என்னுடைய கருத்து, நீங்கள் இவற்றைப் பற்றிச் சிந்தித்து தெளிவடையுங்கள்.

இப்போதுகூட யாரேனும் தன்னலம் சிறிது மின்றி வந்து வாழ்ந்து வழிகாட்டலாம். அவர்கள் வழி நின்றால் நாமும் ஈடேறலாம். அப்படி யானாலம் யாரேனும் ஒருவர் வழிகாட்டியாக வேண்டும். அவ்வழி நின்றால் நாம் ஈடேறலாம். அதில் குன்ற இருக்கலாம். இருப்பினும் அக்குறையை நிறையாக்கி ஆன்மாவைத் தனதாக்கிக் கொள்வான் இறைவன். ஆகவே எந்நிலையிலும் முன்னேற வாய்ப்பிருக்கின்றது. குறை மட்டும் இருக்கும் என்பதை மட்டும் உணர்ந்தால் போதும்.

° ° ° ° ° °

47. ஆத்வன்றன் சந்நிதியில் அம்புலியின் ஆர்சோதி
பேதம் அற நிற்கின்ற பெற்றிபோல் – நர்தாந்தத்து
அண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்து இன்பக்
கண்ணில் அழுந்தியிடும் காண்.

பெத்த நிலையிலும், முத்தி நிலையிலும் இறைவன் வேறு வேறாக இருக்கின்றான் என்றால், இறைவன் 'அங்கிங்கு எனாதபடி எங்கும் பிகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி' விளங்குகின்றான் என்ற கருத்து பிழைபடுகிறதே. பெத்த நிலையில் இல்லையென்றாகி விடுகின்றதே என்று மாணவர் வினா எழுப்புகின்றார்.

முத்தி நிலையில் அவன் இருந்தான் என்றால் பெத்த நிலையில் இல்லை என்று ஆகின்றது. எங்கும் இறைவன் நிறைந்து விளங்குகின்றான் என்ற கருத்தும், இந்தக் கருத்தும் முன்னுக்குப் பின் முரணாகக் காட்சியளிக்கின்றது. ஏன் இப்படி வினா எழுப்புகின்றார் என்றால், கதிரவன் ஒளி எங்கும் பரந்து கிடக்கின்றது போல இறைவன் எங்கும் நிறைந்திருக்கின்றான் என்று சொன்னவுடன் இந்த வினாவை எழுப்புகின்றார்.

இறைவன் இங்கே இருக்கின்றான்; அங்கே இல்லை என்று எப்படி விளக்கம் சொல்கின்றீர்கள்? என்ற வினா எழும். வினா சரியானதுதான். ஆனால் சரியாக விளங்கிக் கொண்டால் அந்த வினா எழாது. இறைவன் எங்கும் நிறைந்திருப்பவன்தான். ஆனால் நாம் பெத்த நிலையில் இருக்கின்றபோது நமக்கு விளங்குவது இல்லை. முத்தி நிலையில் இருக்கும் போது விளங்குகின்றான். இது எது போல என்றால், கதிரவன் எங்கும் தன் ஒளியைப் பரப்பிக் கொண்டிருக்கின்றான் என்பது உண்மை. ஆனால் ஒரு பிறவிக் குருடனிடத்தே கதிரவன் ஒளியைக் காண்கின்றாயா என்றால் அவனால் காண முடியுமா? கண் இருந்தும் அவனிடத்தில் பார்வையில்லை. அதனால் கதிரவனின் ஒளியைக் காண முடியாது. இதற்கு என்ன செய்வது? மருத்துவர் அவன் விழியில் இருந்த படலத்தை நீக்கியக் கண்ணைச் சரிப்படுத்திய பின் அவன் கண்ணில் ஒளி கிடைத்தபின் அந்த ஒளியினால் கதிரவனைக் காண்கின்றான். அதனால் கதிரவனை இவன் காணாத போது கதிரவன் இல்லையென்றும், இவன் காண்கின்றபோது கதிரவன் தெரிவதால் உண்டென்றும் சொல்லுதல் கூடாது. இது கதிரவனின் குற்றமன்று. இவன் கண்ணில் ஏற்பட்ட குற்றம்.

கண்ணில் உள்ள குற்றம் நீங்கியபின் கதிரவன் தெரிகின்றதைப்போல் ஆன்மாவை அறியாமை என்ற படலம் மூடியிருப்பதனால் எங்கும் நிறைந்திருக்கின்ற இறைவனைக் காண முடிவதில்லை. அறியாமை நீங்கியவுடன் இறைவன் தெரிகின்றான். இக்கருத்தை மணிவாசகப் பெருமான் ஒரே வார்த்தையில் சொல்லிவிடுகின்றார். ''ஓர்தார் உள்ளத்துள் ஒளிக்கும் ஒளியானே'' என்பார். ஒளியானே என்பதற்கு ஒளிக்க

மாட்டானே என்றும், ஒளியாக உள்ளவனே என்றும் ஒரு சொல் இருபொருள் தருவதாக அமைத்திருக்கின்றார். அவன் எப்போதும் ஒளிவதில்லை. ஆன்மாவில் உள்ள அறியாமை என்ற படலம் அவனைக் காண முடியாமல் தடுக்கின்றது. அதனால் அவனைக் காண முடிவதில்லை.

இந்த அறியாமையை நீக்க வல்லார் யார்? மருத்துவர் கண் படலத்தை நீக்குவதுபோல, ஞானாசிரியன் ஆன்மாவில் உள்ள அறியாமையை அகற்ற வல்லவன். உயிரில் ஆணவம் என்ற ஒரே ஒரு திரை மட்டும் இருந்தால் அதனை எளிதாக நீக்கி விடலாம். ஆனால் ஆன்மாவை மறைக்கும் திரைகள் பல. ஆணவம் வேலை செய்கின்றபோது அது தன்னிலையில் மறைக்கும்; வேற்று நிலைகளோடு கலந்து மறைக்கும். அந்தந்த நிலையில் கலந்து கலந்து மறைத்துக் கொண்டிருக்கும். அறிவில் கலந்தும், அன்பில் கலந்தும், அருளில் கலந்தும், தெருளில் கலந்தும் மறைத்துக் கொண்டேயிருக்கும்.

ஆணவம் தனித்து நின்று மறைத்தால் அதற்குக் கருந்திரை என்று பெயர். பிறவற்றில் கலந்து மறைத்தால் அதற்குக் கலப்புத் திரை என்று பெயர். இவற்றையெல்லாம் தெளிவாக விளக்கவே வள்ளல் பெருமான் ஏழு திரைகளைப் போட்டுக் காட்டினார். ஒவ்வொரு வண்ணத்திற்கும் (திரைக்கும்) ஒவ்வொரு பொருள் உண்டு. ஆனால் நாம் இப்போது திரையை மட்டும் போட்டும், நீக்கியும் காட்டிக் கொண்டு இருக்கின்றோமே தவிர, அதன் உட்பொருளை உணர்ந்தோமில்லை. மக்கள் இப்படி எதையும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கின்றார்களே தவிர உண்மையை உணர்வதற்கு உரியவர்களாய் இல்லை. இதைக் கண்டு வேதனையாகத்தான் இருக்கின்றது.

திரைகளை ஏன் போட வேண்டும்? பின்னர் அவற்றை ஏன் 'நீக்க வேண்டும்? திரைகளில் உள்ள வண்ணங்கள் எதைக் குறிக்கின்றது? இவற்றின் உண்மை நிலை என்ன? நம்முடைய நிலை என்ன? நாம் எங்கே சார வேண்டும்? என்ற உணர்ச்சிகள் மக்களிடத்தில் வரவேண்டும். வள்ளலாரின் உணர்வு என்ன? ஏன் அவர் இவ்வாறு எல்லாம் நமக்குச் சுட்டிக் காட்டினார் என்று வினா எழுப்பி விடை தெரிந்து கொள்ள முயல வேண்டும். அதை

விடுத்து வேடிக்கை பார்க்கும் உணர்ச்சியை மட்டும் வைத்துக் கொண்டிருப்பதால் யாது பயன்? ஞானிகள் இவ்வுலகத்தில் வந்து நமக்குப் பல செய்திகளைச் சொல்லிவிட்டுச் சென்றுள்ளார்கள். அவற்றை எல்லாம் தக்காரிடத்தில் சென்று இருந்து கேட்டுப் பயின்று, பயன் பெற வேண்டும்.

இறைவனும் நாமும் வேறு வேறு திசையில் இருக்கின்றோம். வேறு வேறு நிலையில் இருக்கின்றோம். இரண்டும் ஒன்றாகுமா? ஆகும். நிலவும் கதிரவனும் ஒரே தன்மையுடையன அல்ல. கதிரவன் கடுமையான வெம்மையுடைவன். சந்திரன் கடுமையான குளிர்ச்சித் தனமை உடையவன். இதுவும் அதுவும் ஒன்றாகச் சேருமா? சேரும். சேருகின்றபோது ஒன்றில் ஒன்றாய் ஒடுங்கிவிடும். நிலவின் ஒளி சூரியனுடைய ஒளியிலே ஒடுங்கிவிடும். இது எப்படியெனில், பகலில் ஒரு விளக்கை ஏற்றி வைத்தால் ஒளிவிட்டு பிரகாசிக்குமா? மங்கித்தானே காணப்படும். இருளாய் இருக்கும் இடத்தில்தான் ஒளி அதிகமாகத் தெரியும். அப்படியே சூரியன் இருக்கும் இடத்தில் வேறு எந்த விளக்கும் பிரகாசிக்காது.

அதுபோல சீவனுடைய தன்மை எதுவாக இருந்தாலும் இறைவன் தன்மையோடு கலக்கின்ற போது அதில் இது அடங்கிவிடும். இதன்தன்மை வெளிப்படாது. நிலவுக்குக் கிடைக்கின்ற ஒளி சூரியனுடைய ஒளிதான். அந்த ஒளியை வாங்கித்தான் பிரதிபலித்துக் கொண்டிருக்கின்றது. அப்படியே உலகத்தில் வாழ்கின்றவர்களும் சித்த மலம் அகன்று தெளிகின்ற போது நம்மில் அவன் ஒளி தெரிய ஆரம்பித்துவிடும். அதுவரையிலும் அவன் ஒளியை வாங்கிப் பிரதிபலிப்பவர்களாகத்தான் இருப்போம்.

கதிரவன் ஒளியும், நிலவின் ஒளியும் பேதமற ஒன்றாகிவிட்டதுபோல இரண்டும் ஒன்றான பெற்றியைப் போல் ஆன்மா இறைவன் திருவடியில் ஒன்றிவிட்டபோது பேதம் தெரியாது. இரண்டும் ஒன்றாகும் அந்தக் காலம் தான் அமாவாசை. அப்போது அவையிரண்டும் ஒன்றையொன்று சந்தித்துக் கொள்கின்றன. அப்போது பேதமில்லை. ஒரே ஒளியாகிவிடுகின்றது.

அப்படியானால் நிறை நிலா என்றபோது எப்படி இருக்கும் என்றால் கதிரவனில் இருந்து பிரிந்து, அவன் ஒளியைத்தான் ஏற்று நிற்கின்ற நிலையே நிறை நிலாக்காலம். அப்படியே சீவனும் அவன் அருளை ஏற்று உலாவும் காலம் நிறை நலம் பெற்றவர்களாகவும், நிறைமதியாளர்களாகவும் மக்கள் இருப்பார்கள். இறைவனைச்சென்று அடைந்துவிட்ட பிறகு பேதம் அற நின்றுவிடுவார்கள். அவன் ஒளியும், அவர்கள் ஒளியும் ஒன்றாகக் கலந்துவிடும். அவர்கள் ஒளியை அவனே வாங்கிக் கொள்வான். அவர்களைத் தன்னோடு இணைத்துக் கொள்ளுவான். அப்படிப் பேதமற நின்ற பெற்றிபோல் ஆன்மா முத்தி நிலையில் நிற்கின்றது. அப்போது அது இன்பத்தில் அழுந்திவிடும். பிறகு பேசாது. எந்த தனித்தன்மையும் அதற்கு இருக்காது.

அந்த இன்பத்தைவிட உலகிடையே, அடியவர்களுடன் கலந்து நிற்பதே பேரின்பம். இதைவிட வேறு இன்பம் கிடையாது. அதனால்தான் மிகப்பெரிய ஞானிகள் இறைவனுடைய திருவடியில் போய்க் கலந்து கொள்ள விரும்புவதில்லை. 'வீடும் வேண்டேன்' என்பார்கள். ஏன்? எங்கே இன்பம் இருந்தாலும், அதில் பிறருக்கு அந்த இன்பத்தைப் பகிர்ந்து கொடுத்துக் கலந்து மகிழ்கின்ற இன்பம் கிடையாது. இன்பத்தைப் பிறரோடு பகிர்ந்து கொண்டால்தான் மகிழ்ச்சி. 'ஈத்துவக்கும் இன்பம்' என்பார் திருவள்ளுவர்.

அவன் என்ன கொடுத்தான் என்றும் தெரியாது; நாம் என்ன கொண்டோம் என்றும் தெரியாது. ஏதுமறியாத நிலையில் நாம் மகிழ்ந்து இருந்துகொண்டிருப்போம். அப்படிப்பட்டவர்கள் எப்படியிருப்பார்கள் என்றால் ஒருபைத்தியம் எப்படி இருக்குமோ அப்படி இருப்பார்கள். ஆன்மா மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்திருக்கும். அது அடியவர்களுக்குப் பெருமையில்லை.

இவ்வளவு சிரமப்பட்டுத் திருவடியில் கலந்துவிட்டுப் பிறகு அதை வேண்டாம் என்று ஏன் சொல்லுகின்றார்கள் என்றால், 'கூடும் அன்பினில் கும்பிடுதலேயன்றி வீடும் வேண்டா' என்பதற்கு ஒப்ப, அன்பர்களின் கூட்டமே மகிழ்ச்சி; வீட்டில் அத்தனை மகிழ்ச்சியில்லை. தொண்டு செய்ய வேண்டும். அதில் மகிழ வேண்டும் என்றே அடியவர்கள் விரும்புவார்கள்.

கடைசி நிலையைச் சொல்ல வேண்டுமே என்பதற்காகத்தான் இந்தப் பாடல் சொல்லப் பட்டுள்ளது. இந்தப் பாடலைப் படிக்கின்ற போத பலவேறு ஐயங்கள் எழ வேண்டும். பின்பு தெளிய வேண்டும்.

ஆன்மாவுக்கு இயற்கை நிலை முத்தி நிலைதான். ஆணவத்தோடு இயற்கையாகக் கலந்து நிற்பதுதான் அதன் இயல்பு நிலை. ''ஆணவத்தோடு அத்துவிதமான படி'' என்ற நிலை மாறி, 'ஆனந்தத் தாணுவினோடு அத்துவிதம் சாருநாள் எந்நாளோ' என்று ஏக்கத்தோடு பாடுவார் தாயுமானார். இந்த இரண்டில் ஆன்மாவின் இயற்கை நிலை எது?

அநாதி நிலையில் ஆன்மாவுக்கு இயற்கையாக அமைந்திருந்தது ஆணவமாகிய அறியாமை. அதுதான் அதன் இயற்கை. அதிலிருந்து அது முயன்று முத்திநிலையை அடைகின்றது. அப்படியானால் முத்தி நிலை இயற்கை நிலையா? செயற்கை நிலையா? இயற்கை என்று பொருள் கொண்டால் ஐயம் தீராது. செயற்கை என்றால் தவறாகிவிடும். மிகவும் இடர்ப்பாடான இடம் இது. எதுவும் முடிகின்ற நேரத்தில்தான் இடர்ப்பாடாக இருக்கும். வீட்டைக்கூட கட்டி முடிக்கின்ற போதுதான் செலவுக்குமேல் செலவாக இருக்கும். பலரும் இடர்ப்பட்டு இதுதான், இதுதான் என்று முடித்துவிட்டுப்போய்விடுவார்கள். ஆனால் சைவத்தில் இந்த முடியாத நிலையை, இடர்ப்பட்டாலும் முடித்து வைக்கின்றார்க்ள. முடிக்காது முடிக்கின்ற நிலை – முடியாத ஒன்றை முடியாது முடிக்கின்ற நிலை.

ஆழமான கருத்துக்கள் பொதிந்த சொற்கள் பல நம் மொழியில் நிரம்பி உள்ளன. எனவே அவற்றை மிகவும் விரிவாக ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

இயற்கை என்பதே இறைவன். இயவுள் என்றொரு சொல் தமிழில் உண்டு. என்றும் இயங்கிக் கொண்டிருக்கின்ற பொருள் எதுவோ அதற்கு இயவுள் என்று பெயர். இய, இயவுள். இயவுள் என்றால் எல்லாவற்றிலும் இயங்கி; உள் நிற்பது, உள்ளிருந்து இயக்குவது என்று திரு.வி.க. போன்ற பெரியவர்களும்

பொருள் சொல்லியிருக்கின்றார்கள். அதை ஏன் மாற்றிக் கொள்ள வேண்டும்? நேராகவே கொள்ள வில்லை? 'இயக்கி அதனுள் இருப்பது' என்று திருமுருகாற்றுப் படையில் வரும்.

இயக்கம் கொள்ளுவது எதுவோ அது இயற்கை. இடைவிடாது இயக்கம் கொண்டிருப்பது இயற்கை தான். அந்த இயற்கையின் உள்ளீடாக இருப்பவன் இறைவன் தான். எனவே இயற்கையை இறைவன் என்று கொள்ளுதல் வேண்டும். பண்டைத் தமிழர்கள் இயற்கையைப் பார்த்து வணங்கினார்கள். மரம், செடி, கொடி, மழை, மேகம், தீ அனைத்தையும் இறைவானகவே எண்ணி வணங்கினார்கள். அதை நாம் இப்போது செயற்கைப்படுத்திக் கொண்டோம். அந்தச் செயற்கை நமக்கு உரியதல்ல. இயற்கைதான் நமக்குரியது. இந்த இரண்டுக்கும் உள்ள வேறுபாடு என்ன?

இறைவன்தான் நித்தியமான இன்பத்தைத் தரக்கூடியவன். அதனால் இயற்கை நமக்குரியது. மற்றதெல்லாம் செயற்கை. செயற்கை நிலையான இன்பத்தைத் தராது. இடையில் வந்த இன்பம் இடையில் போய்விடும். நிலையாக உள்ள அநாதியின்பம் என்றும் நிலையாகவே இருந்து இன்பம்பயக்கும்.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

இதுவரையில் பல செய்திகளைப் பற்றிச் சொல்லிக் கொண்டு வந்தோம். நிலையாக இருப்பன மூன்று பொருள்கள். அவை பதி, பசு, பாசம் என்பன. முத்தி நிலையில் இம்மூன்று பொருள்களின் நிலை என்ன? இம்மூன்று பொருள்களும் முத்தி நிலையில் ஒன்றாக இருக்குமா? அல்லது தனித்தனியாக இருக்குமா? அப்படியிருந்தால் அவற்றின் நிலை என்ன?

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

48. சென்றுஇவன்தான் ஒன்றில் சிவபூரணம் சிதையும்
அன்று அவன்தான் ஒன்றும் எனின் அந்நியமாம் – இன்று
இரண்டும்
அற்றநிலை எதுஎன்னின் ஆதித்தன் அந்தன்விழிக்
குற்றம்அற நின்றதுபோல் கொள்.

முத்தி நிலையே ஆன்மாவுக்கு இயற்கை நிலை என்பதனைத் தன் மாணவருக்கு ஆசாரியர் உணர்த்துகின்றார்.

இந்த முத்தி நிலைக்கு ஆன்மாவே செல்லுமா? அல்லது அந்த நிலையே சீவனை வந்து அடையுமா ? இப்படி ஒரு வினாவ்வ எழுப்பி அதற்கு விளக்கம் தருகின்றார்.

சீவன் போய் இறைவனோடு ஒன்றுவான் என்று சொன்னால் இறைவன் எங்கும் நிறைந்து விளங்குகின்றான் என்ற கருத்துக்கு முரணாகும். சென்று இவன் ஒன்றினால் சிவம் பூரணம் என்பது சிதையும். சிவத்துக்குப் பூரணம், குறையில்லாதது, எங்கும் நிறைந்தது என்று பொருள். எங்கும் நிறைந்திருக்கின்ற இறைவனை இவன் போய்ச் சேர்தல் கூடாது. அப்படிச் சேர்ந்தால் இறைவன் இங்கே இல்லை என்று பொருளாகிவிடும். அதுவும் ஒரு குற்றமாகும். அன்றி இறைவனே சென்று சீவனுடன் ஒன்றுவான் என்றால் அவன் நமக்கு அந்நியமாகி விடுகின்றான்.

'இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான்' என்று மணிவாசகர் சொன்னதும், அந்நிய மின்மையின் அரன்கழல் செலுமே' என்ற சிவஞானபோத வாக்கியமும்; அந்நியமில்லாத தெய்வம் அருட்சோதி தெய்வம்' என்ற வள்ளல் பெருமானின் வாக்கும் பொருந்தாமல் போய்விடும்.

இங்கே ஒரு கருத்தைத் தெளிவுபடுத்த வேண்டும். இறைவன் நமக்கு அந்நியம் இல்லை; அணுக்கமானவன்தான். ஆனால் நாம் இறைவனை அந்நியன் என்று எண்ணிக் கொண்டிருக்கின்றோம். எண்ணத்தில்தான் தவறு இருக்கின்றது. இறைவனது அந்நியமில்லாத் தன்மையை ஒருவர் நமக்கு உணர்த்த வேண்டும். அப்படி உணர்த்தினால் இறைவனும்,

ஆன்மாவும் நெருக்கமானவர்கள் என்பதும் தெளிவாகிவிடும். அறியாமையினால்தான் நாம் இப்படி எண்ணிக் கொண்டு இருக்கின்றோம். அந்த அறியாமையை அகற்றக் கூடியவர் குருநாதன் தான்.

உலகியல் செய்தி ஒன்றைச் சொன்னால் தெளிவாக விளங்கிவிடும். தாய், தந்தை, உடன்பிறந்தார் அனைவரும் அணுக்கமானவர்கள் தாமே. ஆனால் இவர்கள் எல்லாம் உடன் இருக்கும்போதே ஒரு பெண் அவனுக்கு வாழ்க்கைத் துணையாக ஆகிவிட்டால் இவர்கள் எல்லாம் அந்நியமாகிவிடுகின்றார்களே; அவன் பிறந்தது முதலே உடனிருந்தவர்கள் அனைவரும் இப்போது தூரமாகப் போய்விடுகின்றார்கள்.

தாய் வயிற்றிலேயே பிள்ளையை வைத்து வளர்க்கின்றாள். அவளுடைய உறவும், குழந்தை பிறந்தது, தொப்புள் கொடியை அறுத்ததும் போய்விடுகின்றது. 'தாயும் பிள்ளையு மானாலும் வாயும் வயிறும் வேறு' என்பது முதுமொழி. இனிமேல் எக்காரணம் கொண்டும் இருவரும் ஒன்றாக முடியாது. ஆனால் எங்கோ பிறந்த பெண் இவன் வாழ்க்கையில் இணைந்து நெருக்கமாகி விடுகின்றாள். இறைவனும் அந்நியனைப் போலிருந்தாலும் அவன் அந்நியன் இல்லை. இதனைத் திருக்கோவையாரில், மேலைக்கடலில் போட்ட தடியும், கீழைக்கடலில் போட்ட நுகத்தடியும் ஒரு காலத்தில் ஒன்றாகச் சேருவது என்று குறிப்பிடுவார். அப்படிச் சேர்ப்பிப்பதுதான் காலம் விளைக்கின்ற விளைவு; அப்படியே தலைவனும் தலைவியுமாகச் சேர்கின்றார்கள். எனவே அந்நியம் என்பது நெருக்கத்தினாலும் இல்லை; தூரத்தினாலும் இல்லை. முறைமையினாலேதான் அமைகின்றது. எனவே நம் பெரியவர்கள் 'அந்நியமில்லாத தெய்வம்' என்று குறிப்பிட்டார்கள்.

இங்ஙனம்சொல்லப்படும் இரண்டு நிலையும் அற்ற நிலை ஏதென்னில் ஆதித்தன் அந்தன் விழிக் குற்றமற நின்றது போலக் கொள்ளுதல் வேண்டும். ஆதித்தனின் குற்றமன்று ஒளி தெரியாதது. குற்றம் இவன் கண்ணில்தான் இருக்கின்றது. கண்ணில் இருந்த குற்றம் நீங்கியதும் ஒளி

தெரிவதுபோல ஆன்மாவில் இருக்கும் அறியாமை நீங்கினால் இறைவனை அடைதல் எளிது.

இந்தக் குற்றம் ஆன்மாவுக்கு எப்படி வந்தது? இயற்றையாக வந்ததா? செயற்கையாக வந்ததா?

அநாதி என்ற காலத்தில் பதி, பசு, பாசம் என்ற மூன்றும் ஒன்றாக இருந்தன. இந்த உரையில் இல்லாத செய்தியை இப்போது சொல்லுகின்றேன். "மூன்று பொருள் உண்டென்பார் வெண்ணிலாவே, மூன்றும் ஒன்றாவதென்ன வெண்ணிலாவே'' என்பார் வள்ளல்பெருமான். பதி, பசு, பாசம் என்பன மூன்று பொருள்கள். இவை மூன்றும் பிரிவதற்கு முன்னே ஒன்றாகவே இருந்தன. பிரிந்த மூன்றும் பின்னர் ஒன்றாகின்றது. மூன்று பொருள்களும் ஒன்றாக இருப்பதே இயற்றை. அந்த நிலையில் ஆன்மாவில் ஆணவம் இல்லை. பிரிந்த போதுதான் ஆன்மாவோடு இருள் கலக்கின்றது.

எப்போது இம்மூன்றும் பிரிந்தன? மகாப்பிரளயம் என்று சொல்லப்படுகின்ற நேரத்தில் எல்லாம் ஒடுங்கி ஒன்றாக நின்றன. ஒடுங்கி நின்ற நிலையில் நானெனறும் நீயென்றும், அது என்றும் பேதமில்லாமல் இருந்தன. மீண்டும் உலகம்தோன்றுகின்ற போது பிரிந்துதான் ஆக வேண்டும்.

ஏன் பிரிக்கின்றது என்று கேட்டால், சித்தாந்திகள் இதற்குத் தெளிவாக ஒரு விளக்கம் சொல்லிவிடுகின்றார்கள். ''தூய்மை பெறும் பொருட்டுப் பிரிகின்றது' என்பதுதான் அவர்கள் தரும் விளக்கம். அப்படியானால் முன்னம் ஆன்மாவில் தூய்மை இல்லையா? என்றால் ஆன்மாவில் ஒரு சலனம் மட்டுமே இருந்தது. அது எப்படிஎனில் நீங்கள் இங்கே வந்து பாடம் கேட்டுக் கொண்டிருக்கின்றீர்கள். குறித்த நேரம் வந்ததும், பாடம் முடிந்ததும் வீட்டிற்குப் போய்விடுகின்றீர்கள். அதுவே பாடம் நீண்டு கொண்டே போனால், 'எத்தனை நேரம்தான் இப்படிக் கேட்டுக் கொண்டேயிருப்பது' என்ற சலனம் வரும்.

அப்படி மகாப்பிரளயத்தோடு ஆன்மா ஒன்றி நின்ற நிலையில் ஆன்மாவுக்குச் சலனம் ஏற்பட்டது. அந்தச் சலனம் பிறவிக்குக் காரணமாக அமைந்தது. பிறவிக்கு வந்த பிறகு, சார்ந்ததின் வண்ணமாகும் இயல்புடைய ஆன்மா, சார்ந்த ஆணவத்தின் வண்ணமாகிப் பல குறைகளுக்கு ஆளாகி, அந்தக் குறைகளின் வண்ணமாக நிற்கிறது. அந்தக் குறைகளைப் போக்கிக் கொள்வதற்காக மேலும் மேலும் பிறவிகளைத் தரவேண்டிய கட்டாயம் இறைவனுக்கு ஏற்படுகின்றது.

ஆதிநிலையில் ஒன்றுமில்லை. சலனத்தால் பிறவி வந்தது. பிறவி வந்தபின் மேலும் மேலும் குறைகளைத் தேடிக் கொண்டது ஆன்மா. அந்தத் துன்பத்தைத் தீர்த்து இன்பத்தைத் தேக்குவதற்குப் பல பிறவிகள் எடுக்க நேர்ந்தது. துன்பம் தீர்ந்து இன்பம் அடைகின்றபோது மீண்டு ஒன்றாகியது. அதுவே முத்தி நிலை. அந்த முத்தி நிலையே ஆன்மாவுக்கு இயற்கை நிலை என்று முடித்தார்.

சரி இந்த குற்றத்தை எப்படி நீக்குவது? நாமே முயன்று குற்றத்தை நீக்கிக் கொள்ள முடியுமா? அல்லது வேறு யாரேனும் இதற்கு உதவ வேண்டுமா? என்றால் உய்த்துணர்தல் என்ற உத்தியினால் இதற்குண்டான தெளிவைத் தருகின்றார். ஆசிரியர். கண்ணும் இருக்கின்றது; ஒளியும் இருக்கின்றது. ஆனால் ஒளியைக் கண்ணால் காண முடியாமல் இருக்கின்றது. அதற்கு என்ன காரணம்? கண்ணுக்கும் ஒளிக்கும் இடையில் ஏதோ ஒன்று மறைத்துக் கொண்டிருக்கின்றது. அதை ஒரு படலம் என்று வைத்துக் கொள்வோம். அந்தப் படலத்தை எப்படி நீக்குவது? யார் நீக்குவது? கண்ணில் குற்றம் இருந்தால் மருத்துவன் அறுவை சிகிச்சையின் மூலம் நீக்கிவிடுவான். கண்ணில் ஒளிபெறச் செய்வான். அப்படி ஆன்மாவிலே அறிவென்ற கண் பார்வையிழந்திருந்தால் ஆசாரியன் அறியாமை என்ற படலத்தை நீக்கிப் பார்வை பெறச் செய்கின்றான்.

ஆன்மாவுக்கு இயற்கை இதுதான். ஆன்மாவுக்கும், இறைவனுக்கும் இடையில் எதுவோ மறைத்துக் கொண்டிருக்கின்றது; இரண்டும் கலந்து கொள்ள முடியாமல் ஏதோ தடை செய்து கொண்டே இருக்கின்றது.

அத்தடை நீங்க வேண்டும். அதை சீவனால் நீக்கிக் கொள்ள முடியாது. ஆசார்யனின் துணை கொண்டுதான் அதனை நீக்கிக் கொள்ள வேண்டும். நீங்கியபின் இறைவனோடு கலந்துவிடலாம். அதுவே முத்தி நிலை. அதுவே ஆன்மாவின் இயற்கை நிலை. அங்கே மூன்று பொருளும் ஒன்றாகவே இருக்கின்றன.

இந்த இடத்தில்தான் வேதாந்திகள் எல்லாம் போட்டுக் குழப்பிக் கொண்டு இருக்கின்றார்கள். அறியாமை நீங்கினால் நாமே இறைவன், நாமே சிவம்; நாமே சைதன்யம் என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள். இத்தகைய குழப்பங்கள் எல்லாம் இல்லாமல் தெளிவாக்குகின்றது இந்நூல்.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

49. வாக்கு மனம்இறந்த வான்கருணை யாளன்உருத்
தாக்கு அறவே நிற்கும் தனிமுதல்வா; – நீக்காப்
பதியினைப்போல் நித்தம் பசுபாசம் என்றாய்
கதிஇடத்து மூன்றினையும் காட்டு.

பதி, பசு, பாசம் என்ற மூன்று பொருள்களும் முத்தி நிலையிலும் எப்படி இருக்கின்றன என்று சொல்ல முடியுமா? என்று கேட்கின்றார் மாணவர். மாணவர் மிகவும் அறிவாளி. ஆசிரியரை வாட்டியெடுத்து விடுகின்றார். அவர் கேட்கின்ற கேள்விக்கெல்லாம் எவ்வளவு நுட்பமாகப் பதில் சொல்ல வேண்டும் தெரியுமா? ஆசாரியனிடம் விளங்காத விளக்கங்களுக்கு விளக்கம் தருமாறு வினா எழுப்புகின்றார். அப்போது ஆசிரியன் வளக்கி, விளங்கிச் சொல்ல வேண்டும். இல்லையென்றால் ஆசாரியர் என்ற தகுதி அவருக்கு இல்லை. மாணவர் வினா எழுப்பிவிட்டால் விடை நிச்சயமாக வந்துவிடும். எப்போது வினா எழுந்ததோ, அப்போது விடையும் நிச்சயம் உண்டு. வினா எழுவில்லை யென்றால் ஆசிரியர்பால் விடை எழாது. ஆசிரியர் அறியாமை உடையவராக இருந்தாலும் சரி, மாணவர் வினா எழுப்பிவிட்டால் அவனிடத்தில் விடை எழும். இவன் அறியாமை உடையவன்தான். ஆனால்

மாணவன் மாட்சி பெறவேண்டுமென எண்ணி, இறைவனே ஆசார்யரிடத்திலிந்து விடையாக வெளிப்படுவான். ஏன்? மாணவர் ஆசார்யனிடத்திலிருந்து விடை வரும் என்ற நம்பிக்கையுடன் வினாவை எழுப்புகின்றான். அந்த நம்பிக்கை வீண் போகக் கூடாது. அதனால் ஆசார்யர் உள்ளத்தில் இறைவனே எழுந்தருளி விளக்கம் சொல்லுகின்றார். அதனால் ஆசார்யருக்கு அந்த இடத்தில் எந்தவிதமான பெருமையும் கிடையாது. என்ன சிறப்பு எனில் மாணவரால் ஆசார்யர் உள்ளத்தில் இறைவன் எழுந்தருளும் பேறு பெறுகின்றான். அது ஒன்றுதான் சிறப்பு.

அந்த நிலையில், மாணவரிடத்தில் மட்டும் மிகவும் நுட்பமான வினாக்கள் எழ வேண்டும். அவற்றைப் பொருளற்ற விளக்கங்கள் என்று ஆசாரியர் புறக்கணிக்கக் கூடாது. பொருளற்றவை, சொல்ல முடியாதவை என்று ஒன்றும் இல்லை. வேதாந்திகள் இதனை 'அநிர்வசனீயம்' என்று சொல்லிக் கொண்டிருக்கின்றார்கள். ஆனால் சித்தாந்திகளுக்கு இந்தச் சங்கடம் இல்லை.

ஏனென்றால் சித்தாந்ததில் அகற்கென்று ஒரு சொல் இருக்கின்றது; விளக்கமும் இருக்கின்றது. இல்லாத பொருளைப் பற்றி யாரும் வினா எழுப்ப முடியாது; இல்லாத பொருளுக்கு ஒரு பெயரும் இடமாட்டார்கள்; இல்லாத பொருளை யாரும் தேடவும் மாட்டார்கள். தேடுவார்களேயானால் ஒரு பொருள் உண்டு; அந்தப் பொருளுக்கென்று ஒரு பெயரும் உண்டு; அந்தப் பொருள் எத்தகையது என்ற வினாவும் உண்டு; அதற்கொரு விடையும் உண்டு. இதற்குத்தான் சற்காரிய வாதம் என்று பெயர். அவ்வளவு அழுத்தமாகவும், திருத்தமாகவும் சிந்தித்தவர்கள் சித்தாந்தவாதிகள். அதனாலே அதையும் மனதில் வைத்துக் கொண்டு இங்கே மாணவன் எழுப்பிய வினாவுக்கு விடை சொல்லுகின்றார் ஆசிரியர்.

இப்பாடலில் மாணவருடைய வினா எவ்வளவு பயபக்தியோடு எழுகின்றது பாருங்கள். அந்த வினாவில் ஒரு விளி வருகின்றது. ஆசார்யருடைய தகுதியை நான் உணர்ந்திருக்கின்றேன் என்று சொல்ல வேண்டும;

ஆசார்யரின் தகுதியை உணராமல் வினாவை எழுப்பக் கூடாது. செய்திகளை அறியாமல் வினா எழுப்பலாம்; ஆனால் ஆசார்யர் தகுதியை அறியாமல் வினா எழுப்பக் கூடாது. இதற்கு அடிப்படையாக ஆசார்யனை உணருகின்ற தகுதி மாணவனிடத்தில் இருக்க வேண்டும். உரைத்ததை உணருகின்ற தகுதி மாணவனிடத்தில் இருக்க வேண்டும். அப்படி உரைத்ததைத்தான் உணர்ந்து கொண்டான் என்பதை மாணவன் குறிப்பினால் ஆசார்யனுக்கு உணர்த்த வேண்டும்.

வாக்கு, மனம் இறந்தவன் இறைவன். வான் கருணையாளன் இறைவன். அந்த இறைவன் ஒளி வடிவாக இருக்கின்றான். அந்த ஒளித் தாக்குதலினாலே உருவான ஆசார்யரே என்று ஆசார்யரை விளக்கின்றார் மாணவர். ஏன்? நான் எழுப்பிய வினாக்களுக்கு எல்லாம் இவ்வளவு தெளிவாகப் பதில் சொல்ல வேண்டுமென்றால் அது உன்னால் முடியாது. நீ அப்படி ஒரு பொருளாலே உருவாக்கப்பட்டிருக்கின்றாய். அந்தப் பொருள்தான் ஒளி. அது வாக்கு, மனம், கடந்து நிற்பது. கருணை வடிவமானது. எனவே ஆசார்யரைத் 'தனி முதல்வா' என்று விளிக்கின்றார்.

**தனி முதல்வா:**

முதல்வா என்றோ, தலைவா என்றோ சொல்லியிருக்கலாம். ஆனால் தனி முதல்வா என்று சொல்லியிருக்கின்றார். அதற்கு என்ன காரணம்? 'தனித் தலைவர் வருகின்ற தருணமிது தோழி' என்பார் வள்ளல் பெருமான். எத்தனையோ தலைவர்கள் இருக்கின்றார்கள், எத்தனையோ முதல்வர்கள் இருக்கின்றார்கள். ஆனால் பெருமான் மெய்கண்டாருக்குத் தனித்தலைவனாக வந்தான்.

அவன் வாக்கு மனம் கடந்த வான் கருணையாளன். அவனுக்க வாக்கு, மனம் இருக்கின்றதா? இல்லையா? என்பது வேறு செய்தி. அவன் நம் வாக்கு, மனம் இரண்டுக்கும் அடங்காதவன். வான் என்றால் பெரிய, அருள் என்றெல்லாம் பொருள். வான் கருணையாளன் என்றால் பெரிய கருணையாளன் என்று பொருள். உரு

என்றால் ஒளி. இறைவனது ஒலியினைத் தாங்கிக் கொண்டிருக்கின்ற ஆசார்யனே, என்றார். இறைவன் வேறு, ஆசார்யன் வேறு அன்று. இந்த வரிகளைச் சொல்லும்போது திருவாசகத்தில், 'அருபரத்தொருவன் அவனியில் வந்து குருபரனாகி அருளிய பெருமையை சிறுமை என்று இகழாதே' என்ற வரிகள் நினைவுக்கு வர வேண்டும். இந்த மாணவன் சிறுமையாக நினைக்காத வண்ணம் இந்த உண்மையை அருபரத்தொருவனின் ஒளியைத் தாங்கி நிற்கின்ற ஆசார்யனே நீ உணர்த்த வந்தாய் என்கின்றார்.

**நீங்காப் பதியினைப்போல் நித்தம் பசுபாசம் என்றாய்:**

நீங்கள் எனக்கு முன்னமே நீங்காப் பதியினைப் பற்றி உணர்த்தியிருக்கின்றீர்கள். பதி நின்ற இடத்தில் நிற்பவன்; எங்கும் பெயர்ந்து போகாதவன். அதனால் நீங்கா என்ற அடைமொழி கொடுத்தார். அப்படியானால் பதியும் அநாதி, பசுவும் அநாதி, பாசமும் அநாதி என்று சொன்னீர்களே. மகாப்பிரளயத்தில் மூன்று பொருள்களும் ஒன்றாக இருக்கின்ற போது அவற்றின் வடிவம் என்ன? வண்ணம் என்ன? தன்மை என்ன? இயக்கம் என்ன? இவற்றைப் பற்றி எனக்கு விளக்கம்சொல்லுவும் என்கின்றார் மாணவர். நான் பட்ட துன்பங்கள் யாவும் போதும், இனி எனக்கு யாரும் கதியில்லை என்று ஆசார்யனிடத்தில் சரண் புகுகின்றார் மாணவர். சரண் புகுந்த இடந்தான் கதி. கதி – கலந்த இடம். இதற்கு மேல் இதனை விளக்க முடியாது.

இப்படி மாணவர் கேட்ட நுட்பமான கேள்விகளுக்க ஆசார்யர் எப்படிப் பதில் சொல்கின்றார் என்று பார்க்கலாம்.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

50. முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅணு போகத்தைத் துய்த்தல் அணு, – மெத்தவே
இன்பங் கொடுத்தல் இறைஇத்தைவிளை வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொள் அப் பா.

அணு என்றால் உயிர். இது ஒரு மரபுச் சொல். இறைவனையும் அணு என்றே சொல்லலாம். அணு

என்றால் ஒளித்தன்மை உடையது நுட்பமானது. இயங்குவது என்று பொருள். இயங்குவது என்றால் ஒன்றை இயக்குவது என்றும் பொருள் கொள்ளலாம். ஆகையால், 'அணு அணுவில் இறந்தாய் என்று அங்கு இமையோர் கூட்டம் எண்ணந்தான் தடுமாறும்' என்பார்.

உயிருக்குள் உயிராக இறைவன் இருக்கின்றான். உயிரா, இறைவனா என்று பிரித்துப் பார்க்கமுடியாத அளவுக்கு நெருக்கமாக இருக்கின்றதாம். இதனை அத்வைத நிலை அல்லது கதி நிலை என்பர்.

இப்படி இறைவன் நெருக்கமாக இருக்கின்றானே என்ன செய்து கொண்டிருக்கின்றான் என்றால் இந்த உயிர் இன்பத்தைத் துய்க்குமாறு செய்து கொண்டிருக்கின்றான். அதுவும் ஒரேயடியாக இன்பத்தைக் கொடுத்து விடுவதில்லை. மெத்தனமாக, கடினமில்லாமல், ஆன்மா துய்க்கத் துய்க்கத் இன்பம் ஊறுமாறு செய்து கொண்டிருக்கின்றான். ஒரேயடியாகக் கொடுத்தால் துய்க்க முடியாது. சாப்பாடு போடுகின்றபோது, சாப்பிடச் சாப்பிடப் போடுவது போன்றது இது. அப்படியே துய்க்கத் துய்க்க இன்பம் பெருகிக் கொண்டே இருக்கின்றது.

அப்படியானால் ஆன்மா துய்க்கின்றதா? இறைவன் இன்பத்தைத் துய்க்குமாறு செய்கின்றானா? என்றால், இறைவன் இன்பமாகவே இருக்கின்றான். ஆன்மா கருவி கரணங்கள் இல்லாமல் அந்த இன்பத்தில் மகிழ்ந்து கொண்டிருக்கின்றது.

**இத்தை விளைவித்தல் மலம்**

இந்த இன்பத்தைக் கூட்டுவிப்பது மூலமலம். மிகவும் முக்கியமான குறிப்பு இது. மலமில்லாவிட்டால் நம்மால் எந்தவிதமான அனுபவத்தையும் பெற முடியாது. 'இந்த நூலை நான் பாடமாகச் சொல்லுவேன்' என்ற முனைப்பில்லாவிட்டால் என்னால் இதைச் சொல்ல முடியாது. 'நாங்கள் இந்த நூலைப் பாடம் கேட்போம்' என்ற முனைப்பில்லாவிட்டால் உங்களாலும் கேட்க முடியாது. அந்த அளவுக்கு 'நான்' என்பது உபகாரமாக இருக்கின்றது.

முத்தி நிலையில் பதி, பசு, பாசம் என்ற இம்மூன்றும் இருக்கின்ற நிலை எதுவெனில் இறைவன் இன்பத்தைக் கொடுக்க, பசு அந்த இன்பத்தைத் துய்க்கும். கொடுப்பதையும், கொள்வதையும் கூட்டு விப்பது மூலமலம். இதுதான் முத்தி நிலையில் மூன்று பொருள்களின் நிலை. பாசந்தான் இறைவனையும், ஆன்மாவையும் சேர்த்து இன்பத்தைக் கொடுக்கவும், துய்க்கவும் உபகாரமாக இருக்கின்றது. ஓர் இயைபு சொன்னால் இது விளங்கிவிடும்.

பாசம் என்றால் வழுக்கிவிடும் பொருள் என்றும், கயிறு என்றும் பொருள். பாசக்கயிறு என்றால் ஒருபொருட் பன்மொழி. கயிறு என்பது தொடர்பு படுத்துவது. கயிற்றின் இருமுனைகளைப் பற்றிக் கொண்டால்தானே இருவருக்கும் ஒரு தொடர்பு இருக்கும். தேவைப்படும் போது கிட்டே இழுத்துக் கொள்ளலாம். தேவைப்படாத போது எட்டியிருக்கச் செய்யலாம். எந்தப் பாசமானது இந்த உலகப் பண்டங்களோடு தொடர்பு ஏற்படுத்தியதோ, அதே பாசந்தான் நமக்கும், இறைவனுக்கும் தொடர்பை ஏற்படுத்தும். எனவே பாசமென்பது பயனற்றது அல்ல. 'ஆசை அறுமின்கள், ஆசை அறுமின்கள்' என்றது உலகத்தோடு உள்ள பாசத்தை விடுங்கள் என்று சொன்னார்களே தவிர அது அருளியலுக்கன்று. பெரிதும் இந்தப் பாசம் உலகியல் தொடர்புகளை ஏற்படுத்தும் தன்மையுடையது. அதனால் அதனை அறுங்கள் என்றார்கள். பாசம் இல்லையென்றால் இறைவனை அடையவே முடியாது.

முத்தி நிலையில் மூன்றும் ஒன்றாகி விடுவதில்லை. வேறு வேறாகத்தான் இருக்கும். துய்ப்பதற்குரிய இன்பத்தைக் கொடுப்பது ஒன்று; இந்த இன்பத்தைத் துய்ப்பது ஒன்று. இவ்விரண்டும் இந்த நெருக்கமான நிலைக்கு வருவதற்குரிய உபாயத்தைச் செய்தது ஒன்று என இம்மூன்றம் விளங்குகின்றன.

இந்தச் செய்திகளையெல்லாம் ஆராய்ச்சியினாலும், நூல்களைப் படிப்பதனாலும் தெரிந்து கொள்ளலாம் என்று எண்ணிக் கொள்ளாதே. கருவி கரணங்கள் எல்லாம் விடுத்து அன்பு என்ற பண்பை அடைகின்றபோது, பண்பியாக

இருக்கின்ற அவனுடைய தன்மையை அறியலாம். அன்பினால் மட்டுமே உன் தன்மையையும், இறைவன் தன்மையையும், பாசத்தின் தன்மையையும் அறியலாம். இவையாவும் அன்பின் மிகுதியினாலே அறிகின்ற ஒன்றே தவிர, அறிவின் மிகுதியினால் அறிவதில்லை.

அப்பா என்று மாணவனை அழைத்தது அன்பின் மிகுதியினால் என்று உணர்க.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

**வீட்டிற்கு வாயில் எது?**

கதியாகிய நிலைக்கு வீடு என்று பெயர். அந்த வீட்டிற்கு வாயில் ஒன்று உண்டு. முத்தி என்ற – கதி என்ற – வீட்டுக்குப் போக வேண்டும்; அதற்கு வாயிற்படி நீங்களே கொடுத்துவிடுங்கள் என்று நம்மைப்போல் அந்த மாணவர் கேட்கவில்லை.

சிவப்பிரகாசர், 'வீட்டிற்கு வாயில் எனும் தொடை சாத்து சொல் வேந்த' என்று அப்பர் பெருமானைப் பற்றிச் சொல்கின்றார். வீட்டுக்கு (வீடு என்ற நிலைக்கு) வாயிலாக இருந்தது அப்பர் சுவாமிகளின் பாடல். அப்பாடல்களைப் பாடினால் வீட்டின் வாயில் உங்களுக்குத் தெரியும் என்று உறுதி சொல்லுகின்றார். அந்தக் கருத்தைக் கீழ்வரும் பாடலில் இவரும் சொல்லுகின்றார்.

51. அப்பாஇம்முத்திக்கு அழியாத காரணந்தான்
செப்பாய் அருளாலே; செப்பக்கேள்; – ஒப்பில்
குருலிங்க வேடம் எனக் கூறில் இவை கொண்டார்
கருஒன்றி நில்லார்கள் காண்.

இந்த முத்திக்கு அழியாத காரணம் – நிலையான காரணம் எது? அதனை எனக்குச் செப்பாய் என்று கேட்கின்றார். செப்பாய் என்றால்ஆணை. ஆனால் ஆசாரியனைக் கேட்கும் போது ஆணையாக இருக்கக்கூடாது. செப்பமாட்டாயா என்ற ஏக்கமாக ஒலிக்கின்றது.எனவே இது ஆணையாகவும் இருக்கின்றது;

அதே சமயத்தில் அதில் ஒரு ஏக்கமும் தொனிக்கின்றது. ஏக்கமாகக் கேட்டால் தப்பு; ஆணையாக இருந்தாலும் சரியில்லை. மாணவனுடைய தகுதி கற்பதில் ஏக்கமும் இருக்க வேண்டும்; தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆர்வமும் இருக்க வேண்டும். ஆனால் ஆர்வத்தை ஆணைபோலக் காட்டுகின்றான். ஏக்கத்தை ஏக்கமாகவே வெளிப்படுத்துகின்றான். இந்த இரண்டு வகையான உணர்ச்சிகளுக்கும் ஒரே சொல்லைப் பயன்படுத்துகின்றான்.

வீட்டிற்கு வாயில் எது என் அருளினாலே சொல் என்ற ஏக்கமும், ஆர்வமும் தொனிக்கக் கேட்கின்றார் மாணவர். அப்படிக் கேட்டால்தான் வினாவுக்குரிய விடை வரும்.

**செப்பக் கேள்:**

செப்புதல் என்பது ஒரு நல்ல வார்த்தை. வரையறுத்துச் சொல்லுதற்கும்; என்றும் மாறாத நிலை உடையதற்கும் செப்புதல் என்று பொருள். தெலுங்கில் 'செப்பு' என்பதற்குச் சொல்லுதல் என்று பொருள்.

பத்துப்பாட்டிலே ஒரு வரி, ''சேமச் செப்பு'' என்று வரும். பாடிவீடு என்று போர்க்களத்திலே வீடு அமைப்பார்கள். காடும் மேடுமாக இருக்கின்ற இடத்தில்தான் அப்படி அமைத்திருப்பார்கள். நாட்டில் இருக்கின்ற வசதிகளை அங்கே பெற முடியாது. பால், நீர் போன்றவற்றைச் சூடாக வைத்திருக்க வேண்டும் என்றால் அவற்றை ஒரு முறை சுட வைத்துவிட்டு, அதனைச் சேமச்செப்பு என்ற பாத்திரத்தில் போட்டு வைப்பார்கள். அப்படி வைத்தால் எந்த நிலையில் ஒரு பொருளை வைத்தார்களோ அந்த நிலையிலேயே அது இருக்கும். ஆங்கிலத்தில் இதனை தெர்மாஸ் ஃபிளாஸ்க் என்றும், அதனைத் தமிழ்ப்படுத்து வோர் 'தட்பவெப்பக் குப்பி' என்றும் சொல்வர்.

இங்கே செப்புதல் என்றால் 'நான் சொல்வது மீண்டும் திரியாமல் அப்படியே இருக்கும் என்று பொருள். அதனால் செப்பக் கேள் என்றார். குரு, லிங்கம், வேடம் மூன்றும்தான் வீட்டில் வாயில். இதற்கு மேல் வேறொன்றும் இல்லை.

இதனை நான் அருளினால் கூறுகின்றேன். 'நான்' என்ற முனைப்பினால் சொல்லவில்லை. அருள் என்னிடத்தில் பதிந்திருப்பதன் காரணமாக உனக்கு சொல்கின்றேன். ஏனெனில் சொல்வதற்கு என்னிடத்தில் ஒன்றும் இல்லை. நான் இருக்கின்றவரையில் நல்வினை, தீவினை என்ற இருவினைகளும் இருக்கும். இவை எல்லாம் என்னிடத்தில் எப்போதோ முடிந்துவிட்ட செய்தி. இருவினைகளும் துய்த்துத் தீருகின்றபோது திருவருட் பதிவு ஏற்படும். திருவருட்பதிவுக்குச் சத்தினிபாதம் என்று பெயர். இந்தச் சத்தினிபாதம் என்ற நிலையிலிருந்து உனக்குச் சொல்லுகின்றேன். அருட்பதிவின் துணைக்கொண்டு உனக்குச் சொல்லுகின்றேன் என்று ஆசிரியர் கூறுகின்றார்.

**குருலிங்கவேடம் எனக்கூறில் இவை கொண்டார்:**

ஒரு குருவைக் கொள்ள வேண்டும்; ஒரு மூர்த்தத்தைக் கொள்ள வேண்டும்; ஒரு தோற்றத்தைக் கொள்ள வேண்டும். இதனைக் குருலிங்க வேடம் என்பர். குருலிங்க சங்கமம் என்றும் சொல்வர். சங்கமம் என்றால் அடியார் கூட்டம். அடியார் திருக்கோலத்தைத்தான் வேடம் என்று சொன்னார். குருலிங்க சங்கமத்தைக் கொண்டவர்கள் மீண்டும் கரு ஒன்றில் நில்லார். எனவே இந்த மூன்றுமே வீட்டின் வாயில். இதற்கு மேல் வேறு ஒன்றுமில்லை.

**குரு:**

குரு என்றால் ஒளி. குருவைக் காணும் போது அவர் ஒளி பொருந்தியவர் என்று எண்ண வேண்டும். அவரிடத்தே சந்தேகம் கொள்ளக்கூடாது. குரு மிகத் தெளிந்தவர் என்று நினைக்க வேண்டும். அப்படி நினைத்தால் இறைவனே அவர் வடிவில் நின்று நமக்குத் தெளிவூட்டுவான். குரு தெளிவானவராக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை.

*மாணவன் குருவைக் கண்டால் என்ன நடக்கும்?*

கண்ட அளவிலே என்னென்னவோ நடக்கும். 'குருவின் திருமேனி காண்டல்' என்பது பற்றிப் பேரின்ப

உரையாசிரியர் திருக்கோவையாரில் 'காட்சி' என்ற தலைப்புக்கு விளக்கம் சொல்லியிருக்கின்றார். குருவைக் காண்பதால் நால்வகையான தெளிவு ஏற்படும் என்று தெளிவுபடுத்துகின்றார் திருமூலர்.

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே.

காண்டல் அறத்தின் விளைவு. கேட்டல் பொருளின் விளைவு. நாமம் செப்பல் இன்பத்தின் தன்மை. சிந்தித்தல் வீடு. அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கும் குருவைப் பார்ப்பதால் உடனடியாகக் கிடைத்துவிடுகின்றது. இவைதாம் முத்திக்கு அழியாத வாயில்கள்.

**இலிங்கம்:**

ஒருவருக்குகக் குரு கிடைக்கவில்லை. என்ன செய்வது? குரு வடிவத்திலே இருக்கின்ற இலிங்கத்தைக் குருவாகக் கொள்ள வேண்டும். ஏன்? அது அருஉருவம். நெருப்பு வடிவம். எனவே நெருப்பு வடிவத்தைப் பார்த்து குரு என்று பாவனையோடு இருக்க வேண்டும். அது தூய்மையானது. நமக்குத் தூய நிலையை உண்டாக்கும். தூய நிலையைக் காட்டும் எனக் கொள்ள வேண்டும்.

**வேடம்:**

தூயோர்கள் அணிந்த சின்னம் வேடம். 'சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பார்கள்' என்பர். சிவச் சின்னங்களைப் பார்க்கின்றபோது சிவ சிவ என்கின்றோமில்லையா!

வேடம் ஒரு குணத்தைத் தரும். எந்த வேடம் போடுகின்றோமோ அதற்கு ஏற்றவாறு குணமும் மாறும். சாதாரணமாக, தேவாரம் பாடிக் கொண்டு ஓர் அடியார் வந்தால்அவர்காலில்விழுந்து வணங்குகின்றோம். ஏன்? அந்த நேரத்தில் அவர் சிவமணியும், திருநீற்றையும் அணிந்து

தேவாரத்தைப் பாடிக் கொண்டு வருவதால் அவர் காலில் விழுந்து வணங்குகின்றோம் . அதுவே அவர் வீட்டிற்குச் சென்றதும் அக்கோலங்களைக் களைந்து விடுவார். அப்போது அவர்காலில் யாரும் விழுவதில்லை. அதனால்தான் சிவமணி, சிவச்சின்னங்கள், திருநீறு ஆகியவற்றைக் கண்டவுடன் சிவம் என்றே கருதுகின்றனர். அப்படி வேடமிடும்போது நம்மிடத்திலும் அதற்கேற்ற குணங்கள் வளரும்.

இந்தகுரு, லிங்க, வேடத்தை மேற்கொண்டு நின்றார் கருவுக்குப் போக மாட்டார்கள். மேற்கொள்ளாதவர்கள் கருவுக்குச் செல்வார்கள். இவற்றைக் கடைப்பிடிக்க முடியவில்லையென்றார், 'இறைவா; உன்னை எப்படிக் காண்பேன்;நீ எங்கே இருக்கின்றாய்' என்று கதறினாலும் இறைவனைக் கண்டுவிடலாம், என்று ஒரு விதியையும் அதற்கு விலக்கையும் சொல்லுகின்றார்.

**52.** கற்றா மனம்போல் கசிந்துகசிந் தேஉருகி
உற்றுஆசான் லிங்கம் உயர்வேடம் – பற்று ஆக
முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்
பத்திதனில் நின்றிடுவார் பார்.

மணிவாசகப் பெருமான் இதனை மிகவும் தெளிவாகச் சொல்லுவார்

உற்றாரை யான்வேண்டேன் ஊர் வேண்டேன்
பேர் வேண்டேன்
கற்றாரை யான் வேண்டேன் கற்பனவும்
இனிமையுங்
குற்றாலத் தமர்ந்துறையும் கூத்தாஉன்
குரைகழற்கே
கற்றாவின் மனம் போலக் கசிந்துருக
வேண்டுவனே.

கன்றைப் பிரிந்த பசுவைப்போலவும், தாயைப் பிரிந்த கன்றைப் போலவும் கதறத் தெரிந்து கொண்டால் போதும். மற்றதெல்லாம் வேண்டாம். அந்த நெகிழ்ச்சி வந்துவிட்டால் இறைவனைக் கண்டுவிடலாம். ஆனால் அந்த நெகிழ்ச்சி அவ்வளவு எளிதில் வந்துவிடாது.

இத்தகைய நெகிழ்ச்சி குருவினிடத்திலும் ஏற்பட வேண்டும். குருவைக் காணாத நேரத்திலும் அவரைப் பற்றி எண்ணி நெகிழ வேண்டும். அவர் மேல் உருக்கம் வரவேண்டும். ஒரு வேளை லிங்கத்தை வழிபடவில்லையென்றாலும் நெகிழ்ந்து விட வேண்டும்.

மகாத்மா காந்தி ஒரு நாள்நேரம் கடந்துவிட்டதால் வழிபாடு செய்யாமலேயே உணவை முடித்துக் கொண்டார். 'அதற்காக வருந்தி உண்ணாவிரதம் இருந்தார். வழிபாடு செய்யாமல் சாப்பிட்டு விட்டால் கடவுள் வந்து அடிப்பாரா? அல்லது இங்கிருப்பவர்கள்தான் யாராவது அவரைத் தண்டிப்பார்களா? எதற்காக இந்த உண்ணா விரதத்தை மேற்கொள்ள வேண்டும்? தான் எடுத்துக் கொண்ட அந்த அறுதியிலிருந்து வழுவி விட்டதால் அந்த உண்ணாவிரதத்தை மேற்கொண்டார். அப்படிப்பட்ட உள்ளம் இந்த நூற்றாண்டில் வாழ்ந்தது. இதைப் பற்றியெல்லாம் சட்டை செய்யாமல் நாம் வாழ்ந்து கொண்டிருக்கின்றோம்.

பெரிதும் பெண்களுக்குக் குருலிங்க சங்கம வழிபாடு தேவையில்லை என்று வைத்தார்கள். ஏனென்றால் இயல்பாகவே அவர்கள் இந்தக் கோட்பாட்டில் தான் வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள். எப்போதும் ஒரு கோலத்தில் இருக்கின்றார்கள்; இயல்பாகவே ஒருவரைத் தனக்குரியவராக நினைக்கின்றார்கள்; அப்படி நினைத்தவர்களிடத்தில் நெகிழ்ச்சி கொள்கின்றார்கள். அதனால் இந்தக் கோட்பாடு அவர்களுக்குத் தேவையில்லை. எல்லோர்க்கும் இது பொருந்தும் என்று எண்ணக் கூடாது. அந்த நிலையில் உள்ளார்க்குத் தனியே இந்தக் கோட்பாடு தேவையில்லை. அவர்களே குருலிங்கமாகவும், வேடமாகவும், ஒளியாகவும், குருவாகவும் இருக்கின்றனர். அப்படி ஒரு ஆசார்யன் உணர்ந்திருந்தால் அவனுக்கும் கோலங்கள் அவசியமில்லை. ஆனால் வாயில் தேடுகின்றவர்கள் மட்டும் குருலிங்கவேடம் கொண்டிருக்க வேண்டும். வாயில் கண்டார்க்கு, கண்டு முதிர்ந்தார்க்கு இந்த விதி பொருந்தாது. அவர்கள் கற்றாவின் மனம்போல் எப்போதும் நெகிழ்ந்த நிலையிலேயே இருப்பார்கள். இத்தனை 'நினைந்து நினைந்து' என்பார் வள்ளல் பெருமான். 'நெக்கு நெக்குள் உருகி' என்பார் மணிவாசகர்.

இப்படி இரண்டு முறை சொல்வது தான் சொல்ல வந்த கருத்தை வலியுறுத்துவதற்காக. ஒரு முறை உருகினால் மீண்டும் இறுகிவிடும். ஆனால் மெழுகு உருகுவதுபோல மனம் நெகிழ்ந்து நெகிழ்ந்து உருக வேண்டும். அப்படி நெகிழ்ந்து உருகினால் அவர்கள் மும்மலங்களும் மோசிக்கும். அவர்கள் பத்திமயமாக இருப்பார்கள். பத்தியைத் தவிர வேறொன்றும் அவர்களிடத்தில் இருக்காது.

குருலிங்க வேடங்களை வணங்குவேன் என்று பற்றாக நின்றுவிட்டால் முத்திக்குத் தலைவரானவர் முழுமலத்தையும் கழுவிவிடுவார். மும்மலங்களும் போய்விட்டாலும் வாசனா மலம் என்று ஒன்று இருக்கும். அது அகலுவது கடினம். மலமிருந்த இடத்தை கழுவிவிட்டாலும் ஒரு வாசனை இருந்து கொண்டேயிருக்கும். அந்த வாசனையையும் அவர் கழுவிவிடுவார்.

இந்த நூல் விதியும், விலக்குமாக இறைவனை அடைகின்ற வாயிலை பிறவா நெறியைப் பெறுகின்ற பேற்றினைச் சொல்லி நிறைவு செய்தது. மாணாக்கருக்கும் நிறைவைக் காட்டியது. இவ்வளவும் செய்த ஆசிரியருக்கு மாணவர் என்ன செய்யலாம்? பணம் காசு கொடுக்கலாமா? அது அவருக்கு ஒரு பெரிய காணிக்கையாகாது. வாழாது வாழ்ந்து கொண்டிருந்த மாணவன் இனி வாழத் தொடங்கிவிட்டேன் என்ற கருத்தைத் தெரிவிக்க வேண்டும். 'ஐயா, நீங்கள் சொன்ன நெறியிலே நின்றேன்; என் வாழ்க்கை மலர்ந்தது, என்று சொன்னால் அந்த ஆசிரியருக்கு ஏற்படும் நிறைவு ஒரு கோடி பொன் கொடுத்தாலும் ஏற்படாது. அதனால்தான் இந்த மாணவர் பொன் கொடுக்க முயலவில்லை.

**53.** வாழ்ந்தேன் அருட்கடலே வற்றாப் பவக்கடலில்
வீழ்ந்தே அலையாமல் மேதினியில் – சூழ்ந்துவிடா
வெண்ணைச் சுவேதவன மெய்கண்ட நாதனே;
உண்மைத் தவப்பயனே உற்று.

உங்களுடைய அருள் உபதேசத்தினால் நான் வாழ்ந்தேன் என்று வாழ்த்துகின்றார். ஏன் அப்படி அவர்

வாழ்த்தினார்? நாமெல்லாம் வாழாமல் வாழ்ந்துகொண்டு இருக்கிறோம். இதை நம் மணிவாசகப் பெருமான்.

வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே
வல்வினைப்பட்டு
ஆழ்கின்றாய் ஆழாமற் காப்பானை
ஏத்தாதே
சூழ்கின்றாய் கேடுனக்குச் சொல்கின்றேன்
பல்காலும்
வீழ்கின்றாய் நீஅவலக் கடலாய
வெள்ளத்தே.

என்பார்.

அதே சொற்களை எடுத்து வைத்துக் கொண்டாற்போல இப்பாடலைச் சொல்கின்றார் இந்த மாணவரும்.

நம்முடைய பிறவிக் கடல் பெருங்கடல். அது என்றும் வற்றாத ஒன்று. அந்தப் பிறவிக் கடலில் விழாமல் நான் வாழ்ந்தேன் என்று நன்றி தெரிவிக்கின்றார். இதற்கு நான் முன் செய்த உண்மையான தவப்பயனும் காரணம். தவம் என்பது பூர்வ புண்ணியத்தால் பெற்ற சிவபுண்ணியம்.

ஆசார்யனை வாழ்த்தி, அவர் திருவடியில் பணிந்து இந்நூலைச் சமர்ப்பித்தார். இனிமேலும் வினா எழுப்புவதை நிறுத்தித் தன்னையும் நிறைவு செய்து கொண்டார். ஆசிரியரும் நிறைவு செய்தார்.

திருச்சிற்றம்பலம்.

